ஆசிரியர்: B. குப்புசாமி
தமிழாக்கம்: நா. சந்தானகிருஷ்ணன்

# சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம்

(பாகம் I)

(AN INTRODUCTION TO SOCIAL PSYCHOLOGY)
(PART I)



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த். பா. நி. (க.வெ.) வரிசை எண் — 797

# சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம்-I

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்
பி. குப்புசாமி

தமிழாக்கம்
நா. சந்தானகிருஷ்ணன், M.A., Dip. Anth.,
உளவியல் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—November, 1978
Number of Copies—2000

T.N.T.B.S. (C.P.) No. 797



**AN INTRODUCTION TO SOCIAL PSYCHOLOGY-I**

B. KUPPUSWAMY

*Translated by*:

N. SANTHANAKRISHNAN

**Price Rs. 7-65**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
SANKAR PRINTERS,
MADRAS-600018.

# அணிந்துரை

*(திரு. செ அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)*

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் போராசிரியர்கள், கலை, அறிவியல் பாடங்கள் மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம்-I** என்னும் இந்நூல் தமிழ்நாட்டுப்பாடநூல்நிறுவனத்தின் **797** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **832** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்' தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

**செ. அரங்கநாயகம்**

# நூன்முகம்

இந் நூல் தொடக்கநிலைச் சமூக உளவியல் வகுப்புகளுக்கென்று உருவாக்கப்பட்டதாகும். ஆங்கில மொழியிலுள்ள பெரும்பான்மையான சமூக உளவியல் நூல்கள் அமெரிக்கர்களால் எழுதப்பெற்றவை. இவை அமெரிக்கர்களின் வாழ்க்கை விவரங்களைத் தருவனவாகவே அமைந்துள்ளன. நான் பதினைந்து ஆண்டுகட்கு மேலாகச் சமூக உளவியல் வகுப்புகளை நடத்தி வந்துள்ளேன். இதன் கொள்கைகளை எளிதாகவும் பொருளுடனும் மாணவர்கள் புரிந்துகொள்ள இந்தியச் சமூக வாழ்க்கை விளக்கங்கள் உறுதுணையாக அமையும் என்பது என் அனுபவ அறிவாகும்.

இந் நூல் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் முதற்பகுதி அறிமுகப் பகுதியாகும். இரண்டாம் பகுதி சமூக இடைவினைப் (Social interaction) பிரச்சினைகளைப்பற்றி ஆராய்கிறது. இப் பகுதி சமூகப் புலன்காட்சி (Social Perception), சமூகத் தரங்கள் (Social Norms), மொழி ஆகிய அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. மூன்றாம் பகுதி சமூகமயமாதல் பற்றிய (Socialization) பிரச்சினைகளைக் (problems) கொண்டுள்ளதுடன் ஊக்குவித்தல்பற்றிய (motivation) பல்வேறு வெளிப்பாடுகளையும், மனப்பான்மைகள் (attitudes), கருத்துகள் (opinions), சார்பெண்ணங்கள் (prejudices) ஆகியவற்றின் வளர்ச்சிபற்றியும் செய்திகளைத் தருகின்றது. இதில் ஓர் அத்தியாயம், 'தான்' என்ற எண்ண வளர்ச்சியைப் பற்றிக் (Development of self) கூறுகிறது. நான்காம் பகுதி, குழு நடத்தையைப்பற்றியது (Group Behaviour). இது திரள் நடத்தை பற்றிய (Mass behaviour) அம்சங்களைத் (aspects) தருவதோடன்றிச் சிறு குழுக்களின் (small groups) ஆய்வுகளின் (studies) முடிவுகளையும், குழு அமைத்தல் பற்றிய (group formation) செய்திகளையும் தருகிறது. சில உடனடியானதும் எளிதில் அடைய முடியாததுமாகிய சமூகப் பிரச்சினைகளைப்பற்றிய கொள்கைகளின் பயன் முறைகளை (applications) ஐந்தாவதும், இறுதியானதுமான பகுதி அளிக்கின்றது. இவ்வாறுகத் தொடக்க வகுப்புகளுக்கு உரியவகையில் சமூக உளவியலின் இன்றியமையாத நியதிகளையும் அம்சங்களையும் ஒன்றுகூட்டி அமைத்துள்ளதாக இந் நூலை நான் கருதுகின்றேன்.

ஒன்பதாம் அத்தியாயத்தில் இந்தியச் சமூக மரபு வழக்குகள் (Indian Social Traditions) பற்றியும், இந்தியச் சமூகவயச் செயன்முறைகளின் (processes) சில அம்சங்களைப்பற்றியும் சுருக்கமான மேலோட்டமான ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. மேலும், இந்திய ஆராய்வுகளின் முடிவுகளும் தரப்பட்டுள்ளன. பற்பல ஆராய்வுகள் சேர்க்கப்பட்டிருக்கக்கூடும். இந்திய அறிவிதழ்கள் (journals) இன்னமும் சீராக அமையாதிருப்பதால் அவற்றினின்று அதிகமான குறிப்புகளைத் (references) தர இயலாமல் போயிற்று. ஒருபடி வார்ப்பெண்ணங்கள் பற்றிய (Stereotypes) அத்தியாயம் முடிவுற்ற பின்னர்க் கட்டாக்கிலுள்ள டாக்டர் ஆர். என். ராத் (R. N. Rath) என்பாரின் ஒருபடி வார்ப்பெண்ணங்கள்பற்றிய சுவைமிக்க ஆராய்வுகள் வெளியாயின. எனவே, அவ் ஆராய்வின் சில முடிவுகளைத் தர இயலாமைக்கு நான் மிகவும் வருந்துகிறேன். இந் நூலின் மறுபதிப்பு வெளிவரும்போது இந்திய ஆராய்வுகளினின்றும் அதிகமான செய்திகளைச் சேர்க்க நான் உளமார நினைக்கிறேன்.

இந் நூல் சமூக உளவியலின் இன்றியமையாத கொள்கைகள், ஆராய்வு வழிமுறைகள்பற்றியும், வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும், சமூகத்தின் பிரச்சினைகளுக்கும் இக் கொள்கைகளின் பயன்முறைகளைப்பற்றியும் கூறுவதோடன்றி இந்திய வாசகர்களுக்கும் பிறநாட்டு வாசகர்களுக்கும் இந்தியச் சமூக வாழ்க்கை, சமூகப் பிரச்சினைகள்பற்றிய உட்காட்சியையும் அளிக்கிறது.

நான் பல ஆராய்வாளர்களுக்கும் நூலாசிரியர்களுக்கும் (authors) கடமைப்பட்டுள்ளேன். நான் ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும் கொடுத்துள்ள தெரிவுசெய் நூற்பட்டியல் (references) என் கடப்பாட்டுடைமையைக் காட்டுகின்றது. என் நண்பர்களில் பலரும், கூட்டாளிகளும் கருத்துகள் பல கொடுத்து உதவினார்கள். திரு.எம். பரசிவமூர்த்தி தட்டெழுத்துப் பிரதியைப் படித்து உயர்வான சில கருத்துகளைக் கொடுத்தார். இவரும் திரு. கே. எம். சீனிவாசும் இந் நூலின் கலைச்சொல் அகராதியைத் தயாரித்துக் கொடுத்தனர். திருவாளர்கள் ஏ.வி. சண்முகம், டி. ஹுசெய்ன் அலிகான், எச்.டி. வசந்தராஜா ஆகியோரும் திருமதி எம். சரோஜாபாயும் சில அத்தியாயங்களைப் படித்துப் பார்த்துச் சில முன்னேற்றக் கருத்துகளைத் தெரிவித்தனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் டொபேகாவிலுள்ள (Topeka) மெனிங்கர் நிறுவனத்தின் (Menninger Foundation) பேராசிரியர் கார்ட்னர் மர்பி (Gardner Murphy) என்பார் இந்தியாவுக்கு வருகைதந்த காலையில் 1960ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்க

ளில் இரண்டொருநாள் பெங்களூரில் தங்கியிருந்தார். அவர் இந் நூலின் பல அத்தியாயங்களைப் புரட்டிப் பார்த்துப் பல உயர்வான கருத்துகளை அளித்தார். கல்கத்தாப் பல்கலைக்கழக டாக்டர் எஸ்.சி. மித்ரா, அண்ணுமலைப் பல்கலைக்கழக டாக்டர் எஸ்.பி. ஆதி நாராயணன், பூனுப் பல்கலைக்கழக டாக்டர் கே. கொதர்கர் ஆகியோர் அன்புடன் இந் நூலின் சில அத்தியாயங்களைப் படித்துப் பார்த்தனர். இவர்கள் யாவருக்கும் நான் நன்றியுடையவனுவேன்.

இந் நூலின் பல பகுதிகளுக்குக் கருத்து விளக்கங்கள் (comments) கொடுத்து நிலையாக உற்சாகமும் அளித்த என் மனைவி காமேஸ்வரம்மா குப்புசாமிக்கும், என் குமாரிகள் கீதா தேவிக்கும், கமலாதேவிக்கும் எனது மனமுவந்த நன்றி. எனது சுருக்கெழுத்தாளர் திரு. கே. ராமு பல மணி நேரம் பொறுமையான பணியின் மூலம் தட்டெழுத்துப் பிரதியைத் தயார் செய்து கொடுத்தார். பல கருத்துகளை வழங்கிய ஆசியப் பிரசுர நிலையத்தின் பதிப்பீட்டுத் துறைக்கு (editorial department) என் நன்றி கலந்த வணக்கம்.

**பி. குப்புசாமி**
மைசூர்.

# பொருளடக்கம்

## பகுதி 1—அறிமுகம்

## பகுதி II— சமூக இடைவினை



## பகுதி III—சமூகத் தன்மைபெறல்

# 1. சமூக உளவியலின் பரப்பும் பிரச்சினைகளும்

## THE FIELD AND PROBLEMS OF SOCIAL PSYCHOLOGY

### சமூக உளவியலின் வரம்பு
### (The Scope of Social Psychology)

சமூக உளவியல், சமூக நடத்தையின் தன்மையை நிருணயிக்க முயல்கின்றது. விரிவாகக் கூறப்போனால், சமூக நடத்தையென்பது (social behaviour) கீழ்க்கண்ட நான்கு அடிப்படை எதிர் வினைகளில்(reaction) ஒன்றினைச் சார்ந்ததாகும். ஒரு தனியன் மற்றொரு தனியனைச் சந்திக்கும்போது சமூக எதிர்வினை (social reaction) ஏற்படுகின்றது. ஒவ்வொரு தனியனும் அவன் தொடர்புகொள்ளும் மற்றத் தனியன்களைப் பாதிக்கிறான். பின், தானும் அவர்களால் பாதிக்கப்படுகின்றான். இரண்டாவதாக, ஒரு தனியன் குழுவிற்கேற்ப எதிர்வினையளிக்கலாம். ஒரு தனியன் ஒரு குழுவைச் சந்திக்கும்பொழுது அவன் நடத்தைப் பாதிக்கப்படுகின்றது. இதற்கு இணையாக ஒரு தனியனுக்குப் பலர் சேர்ந்து எதிர் வினையளிப்பதைக் காணலாம். சான்றாக, தலைவனுக்குக் குழு முழுதும் அளிக்கின்ற எதிர்வினையைக் குறிப்பிடலாம். இறுதியாக ஒரு குழு மற்றொரு குழுவுக்கு எதிர்வினையளிப்பதையும் காணலாம். சமூக உளவியல், சமூக நடத்தையின் பல்வேறு வகைகளான சிறப்பியல்புகளை ஆராய முயல்கின்றது. சமூக உளவியல் தனியனைக் குறித்துத்தான் ஆய்வுகளை நடத்துகின்றதேயன்றிக் குழுவினைக் குறித்தன்று என்பதை மனத்தில் கொள்ளல் வேண்டும். குழுக்களின் வகைகளையும் அதன் சிறப்பியல்புகளையும்பற்றி ஆய்வது சமூக வியலின் (Sociology) கடமையாகும். சமூக உளவியல், ஒரு தனியன் தன் சக மனிதர்களிடம் கொண்டுள்ள உறவை ஆய் கின்றது.

உலக மக்கள் பல தவறான கருத்துகளைக் கொண்டுள்ளனர். இவை ஆளிடைத் தொடர்புகளின் (interpersonal relationships) இடர்ப்பாடுகளினால் விளைகின்றன. சாதிச் சார்பெண்ணம் (caste

prejudice), தொழிலியல் அமைதியின்மை (industrial unrest), குற்றமும் அறநெறிப் பிறழ்வும் (crime and delinquency) ஆகியவை பெரும் சமூகப் பிரச்சினைகளுள் (major social problems) சிலவாகும். இப் பிரச்சினைகள் எவ்வாறு எழுகின்றன? இவற்றை எவ்வாறு கட்டுப்படுத்த முடியும்? முன்னறிவிக்க முடியும்(predicted) என்பதை நமக்கு அறிய உதவுவது சமூக உளவியலின் கடமையாகும். நாம் இவற்றை அறிய முடிந்தால் நம்மால் திறம்பட இந் நிகழ்ச்சிகளைக் (phenomena) கட்டுப்படுத்த முடியும். அண்டத்தின் நிகழ்ச்சிகளை அறிந்துகொள்ள நமக்கு உதவுவதே தனி அறிவியலின் (pure science) குறிக்கோள் ஆகும். ஆளிடை நடத்தையின் (interpersonal behaviour) உண்மைகளை முதலில் பயில்வதின் மூலம் இதைப் பெறலாம். இவ்வுண்மைகளை ஒழுங்குமுறையாக்குதலினுல் நாம் ஒரு கோர்வையான அடிப்படைப் கொள்கைகளைப் பெறுகிறோம். இக் கொள்கைகளைப் பயன்படுத்துவதன் மூலம் திட்டவட்டமான (concrete) சமூகப் பிரச்சினைகளை அறியவும், கட்டுப்படுத்தவும், முன்னறிவிக்கவும் முடிகிறது. எனவே, சமூக உளவியல் தனித்த அம்சங்களையும், பயன்முறை அம்சங்களையும் ஒருங்கே கொண்டது. இந் நூலில் சமூக நடத்தைக்கான அடிப்படைக் கொள்கைகள்பற்றி முதலில் கற்க வேண்டியது நம் கடமையாகும். இந் நூலின் இறுதிப் பகுதியில் திட்டவட்டமான சமூக நடத்தைகள் (concrete social behaviour) பாகுபடுப்புக்கு உட்படுகின்றன. இதன்மூலம் நம்மை எதிர்நோக்கியுள்ள மிகவும் கடினமானதும், நிலையானதுமான சமூகப் பிரச்சினைகளின் உட்காட்சியைப் படிப்போர் பெற முடிகின்றது.

அடிப்படைக் கொள்கைகளின் ஆராய்வில் (search) நாம் முதன்முதலாக ஊக்கிகளின் பிரச்சினையினை எதிர்ப்படுகின்றோம். ஏன் மனிதர் ஒருவரோடொருவர் இடைவினை (interaction) புரிகின்றனர்? மனிதனின் உயிரியல்சார் பெறுகை (biological equipment), சமூக இடைவினையை இன்றியமையாததாக்குகின்றதா? —இவ் வினக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது சமூகத் தூண்டு விசைகள் (social incentives)பற்றிய பிரச்சினை (problem)ஆகும். இவ் விரண்டு பிரச்சினைகள்பற்றிய விவாதம் (discussion) சமூக வயநிலையாதல்பற்றிய பிரச்சினைக்கு (problem of socialization) வழி காட்டுகின்றது. எவ்வாறு மக்கள் சமூக வயத்தைப் பெறுகின்றனர்? சமூக வயநிலையில் கற்றலின் (learning) பங்கு என்ன? என்ற இப் பிரச்சினைகள் மிகவும் கவர்ச்சிமிக்க சமூக நிகழ்வான (social phenomena) சமூக நிலைப்பேற்றையும் (social stability), சமூக மாற்றத்தையும் (social change) உளவியல் அடிப்படையில் அறிந்துகொள்ள

நமக்கு உதவி செய்கின்றது. மனித நடத்தை என்பது பெரும் பாலும் மற்ற மனிதர்களின் நடத்தையின் விளைவு (product) என்பதைச் சமூக உளவியலறிஞர் (Social Psychologist) படிப்படி யாகக் கண்டறிந்தனர். ஏன் மனிதர்கள் நிலையின்மையினைக் காட்டி டிலும் (instability) நிலைபேற்றை (stability) அதிகமாக விரும்புகின்றார்கள்? ஏன் அமைப்பற்ற புதிய பாதைகளைவிட நன்கு பழக்கப்பட்ட பாதையினையே அதிகமாக விரும்புகிறார்கள்? என்பனவற்றைப்பற்றி நாம் இந் நூலில் கற்போம்.

சமூக உளவியலின் மற்றொரு முக்கிய வளர்ச்சி; சமூக மனப் பான்மைகளின் உருவாக்கம் (formation), மாற்றம், அளவீடு ஆகியவைப்பற்றியதாகும். ஒருவன் தன் குழுவையும்,மற்றக் குழுக் களையும் எவ்வாறு அறிகின்றான் என்பதை அறிய இவ் வாராய்வு கள் நமக்குப் பயன்படுகின்றன. மேலும் இவை, எவ்வாறு சார்பெண்ணங்கள் (prejudices) எழுகின்றன என்பதையும், ஏன் இவை குறிக்கோள் நெறியின் (idealism) அழைப்பை (call of idealism) ஒருபுறமும் முழுதாய உண்மைகளை (stark realities) மறுபுறமும் எதிர்க்கின்றன என்பதையும் நாம் அறிந்து கொள்ள உதவி செய்கின்றன. நாம் இதனுடன் அண்மை ஆண்டு களில் பொதுமக்கள் கருத்து ஆய்வில் கடைப்பிடிக்கப்பட்ட வழி முறைகள்பற்றியும் கற்போம். பொதுமக்கள் கருத்து ஆராய்ச்சி கள் (researches) பெரிதும் முன்னேற்றமடைந்துள்ளன. எவ் வாறு தனியன் தன் சமூகச் சூழ்நிலைகளை அறிகிறான் (perceives)? எவ்வாறு அவன் தன்னுடைய சமூக நடத்தையைக் கற்கிறான்? எவ்வாறு அவன் தன்னுடைய சமூக இலக்குகளைப் (goals) பெறு கின்றான்? என்பன போன்ற அடிப்படைச் சத்தாயுள்ள செயன் முறைகளைச் (fundamental processes) சுருக்கமாக நாம் கற்றல் வேண்டும்.

முன்னரே சுட்டிக்காட்டியபடி அடிப்படைச் செயன்முறை களைக் கற்ற பின்னும், சமூக அடிப்படைக் கொள்கைகளைப் பொறுக்கிச் சேகரித்த (gleaning) பின்னும், இவற்றைத் திட்ட வட்டமான சமூகப் பிரச்சினைகளுக்குப் (concrete social problems) பயன்படுத்த முயற்சிப்போம்.

## சமூக உளவியலின் வரையறை
## (Definition of Social Psychology)

சமூக உளவியலால் ஆயப்பட்ட பற்பல பிரச்சினைகளின் விளக்கம் இப் பொருளுக்கு (சமூக உளவியலுக்கு) ஓர் ஆய்வுநிலையான

வரையறை (tentative definition) அமைக்க உதவுகிறது. விரிவாகக் கூறுமிடத்து அறிவின் இரு கிளைகளான சமூகவியலுக்கும், உளவியலுக்கும் உட்பட்ட இடையெல்லையாக இந்த ஒழுங்குமுறை அறியப் பெறுகின்றது. சமூக உளவியலை உளவியலின் ஒரு கிளையாகக் (branch) காண்பதற்கு மாருகச் சில சிந்தனையாளர்கள் (thinkers) ஓர் அறிவின் கிளையாகவும், ஒரு தனி அறிவியலாகவும் காண்கின்றனர். சிலர் சமூகவியலாலோ (sociology), உளவியலாலோ ஆய்வு செய்ய முடியாத சமூக வாழ்க்கையின் பிரச்சினைகள்பற்றிய ஆய்வில் ஈடுபாடு கொள்ளும் ஓர் ஒழுக்கமுறையாக இதைக் காண்கின்றனர். சமூக உளவியல் இரண்டு அறிவியல்களின் இடைவெளியை நிரப்புகின்றது என்று உறுதியாகக் கூறப்பட்டுள்ளது. உயிர் வேதியியல் (biochemistry), உயிரியலுக்கும் (biology) வேதியியலுக்கும் (chemistry) எவ்வாருே அவ்வாறு சமூக உளவியல், சமூகவியலுக்கும் உளவியலுக்கும் இடை நிற்பது என ஒப்புமைக் கூறப்பட்டுள்ளது.

இத்தகைய உச்சநிலை அமைப்புச் (extreme position) சமூக உளவியலின் வரம்பையும் கடமையையும் தெளிவாகத்தர இயலாமற்போயினும், உளவியலின் இக் கிளை வளர்ச்சியால், மனிதத் தன்மை (human nature) என்று கூறப்பெற்ற நம் கருத்துகளில் (views) ஒரு முன்னேற்றமான மாறுதல் ஏற்படுகின்றது என்பதில் ஐயமில்லை. பண்பாட்டு மனிதவியலின் (cultural anthropology) விரைவான முன்னேற்றம் (rapid strides) மனித நடத்தையைப் பற்றிய எண்ணற்ற நம் துணிவுகளைப்( assumptions )பற்றி வினுயெழுப்பவும்கூட நமக்கு உதவிசெய்கிறது. தனி மனிதர்களுக்கு ( individual human beings ) அப்பாற்பட்ட குழு வாழ்க்கை இல்லையென்பதும், தான் வாழும் குழுவுக்கு அப்பாற்பட்டுத் தனி மனிதன் இருத்தல் இயலாது என்பதும் இப்பொழுது தெளிவாகிறது. தனி மனிதனுக்கும், அவனுடைய சமூகத்துக்கும் இடையேயுள்ள தொடர்புகளை ஆய்வது சமூக உளவியலறிஞனின் கடமையாகும். இடைவினையின் பொதுமைக் கருத்தின் முக்கியத்துவத்தை (importance of the concept of interaction) நாம் இப்பொழுது உணர்கிருேம். நடத்தை, பெரும்பாலும் மனிதர்க்கு மனிதர் கொள்ளும் இடைவினையால் நிருணயிக்கப்பெறுகின்றது.

எனவே, நாம் சமூக நிலைமைகளில் தனியன்கள் ஒருவர்க்கொருவர் இடைவினை கொள்ளுதலில் எழுகின்ற உறவுத் தொடர்புகளை ஆயும் அறிவின் கிளையாகச் சமூக உளவியலை வரையறுக்கலாம். சுருக்கமாக, சமூகத்திலுள்ள தனியனின் சிந்தனை உணர்ச்சி, செயல் ஆகியவற்றைப்பற்றிச் சமூக உளவியல் ஆராய்கிறது.

## சமூக நிலைமையும் சமூக நடத்தையும்
## (Social situation and Social behaviour)

இந்த வரையறையை அறிந்துகொள்வதற்குக் கலைச்சொற்களான சமூக நிலைமை (social situation) சமூக நடத்தை ஆகியவற்றை விளக்கிக் கூறுதல் இப்பொழுது இன்றியமையாததாகும். ஒரு சமூக நிலைமையென்பது தனியன்களிடையே சுழல்கின்ற பார்வை, செவித் தூண்டல்களையும் பிற தூண்டல்களையும் கொண்டதாகும். இது நிகழ்காலப் புலன் காட்சிகளைக் கொண்டிருப்பதுடன், மனப்பான்மைகளையும் அதனுடன் பழைய அனுபவங்களின் புத்துயிர்ப்பையும் கொண்டது. எனவே, தனித் தூண்டல்களின் பகுப்பாய்வு (analysis) மட்டும் சமூக நிலைமையை அறிந்துகொள்வதற்குத் துணைபுரிவதில்லை. ஒரு சான்று கூறி, இவ் வுண்மையைத் தெளிவாக்கல் இயலும்.

ஓர் எட்டு வயது அல்லது பத்து வயது சிறுவன் அவனது நண்பனுல் தாக்கப்பட்டான் என்று வைத்துக்கொள்வோம். இதனுல் அவனுக்குக் காயம் ஏற்படலாம். ஆனுல், வலி உணரப்படாமலிருக்கலாம். அப்படி உணரப்பட்டிருந்தாலும் அச் சிறுவன் இதைப் பொருட்படுத்தாமல் நகைக்கவும் செய்யலாம். சில மணி நேரத்துக்குப்பின்னர் இதே சிறுவன் இல்லத்தில் தன் சகோதரனுலோ சகோதரியாலோ தற்செயலாகத் தாக்கப்படலாம். இதன் உடனடித் துலங்கல் உரத்த அழுகை, கண்ணீர், சகோதரன் அல்லது சகோதரியைத் திட்டுதல், தாயிடம் முறையிடல் ஆகியனவாக இருக்கலாம். மேற்கண்டதில் தூண்டுதல் (stimulus) ஒரே மாதிரியாக அமையினும் துலங்கல் (response) முற்றிலும் வேறுபட்டதாகக் காணப்படுகிறது. சமூக நிலைமையில் உள்ள வேறுபாட்டை அறிவதின் மூலமாக மட்டும்தான் நடத்தையிலுள்ள வேறுபாடுகளை அறிந்துகொள்ள முடியும். ஒரு விளையாட்டுத் தோழனுல் அடிக்கப்படும்பொழுது நீ, அழவோ முறையிடவோ (complaint) முடியாது. இது சமூக நியதி (social code). மாருக உடன்பிறந்தாருடன் பகைமை (sibling rivalry) உரத்த அழுகைகள் மூலமும், உரத்த முறையிடல் மூலமும் மனநிறைவைப் பெறுகின்றது. இது வீட்டில் அனுமதிக்கப்படுகிறது. ஆகவே சமூக நடத்தை, உடல்சார்ந்த தூண்டல்களினுல்மட்டுமன்றி விதிகள், நியதிகளினுலும் நிருணயிக்கப்படுகிறது. சமூக நடத்தையென்பது ஆளுமைகளின் பரிமாற்ற இடைநிகழ்வாகும் (reciprocal interplay). மனிதர்கள் ஒவ்வொருவருடன் கொள்ளும் எல்லா எதிர் வினைகளும், சமூகத் துலங்கல்

ஆகாது என்பது உணரப்படவேண்டும். நாம் ஒரு விளக்குக் கம்பத்தைத் தவிர்த்துச் செல்லுதல் போன்று, நடை பாதையிலுள்ள மனிதன்மேலும் மோதாமல் செல்ல முடியும். இஃது, ஒருவர் அல்லது இருவரும் சிரித்தலினலோ அன்றி 'என்னை மன்னிக்கவும்' அல்லது 'நான் வருத்தப்படுகிறேன்' என்று வியந்து உரைத்தலினலோ அசமூக நிலையிலிருந்து சமூக இடைவினைக்கு மாற்றப்படுகின்றது. இது தனியனுடைய வாழ்க்கைக்காலம் முழுவதும் அவனை உருவாக்கிய சமூகக் கட்டுநிலைகளைப் (social conditions) பொறுத்து அமைகின்றது. வேறு வகையாகக் கூறினல் இது மரபு வழக்குகளையும், வழக்கங்களையும், மதிப்பின் தரங்களையும் (standards of value) கொண்டுள்ளது. தனியனைச் சமூக வயமாக்குவதற்கு (socialize) இயங்கிய நிலைமைகளைத் தொடருதல் சமூக உளவியலின் கடமையாகும். சமூக நடத்தையென்பது மனிதர்களுடனும் மனிதர்களிடையேயும் இடைவினை புரிவதைக் குறிப்பிடுகின்றது. ஆனல், சமூக இடைவினை எப்பொழுதும் நேர்முகத் தொடர்புகளை (face to face contacts) உள்ளடக்கியது என்பதைப் புரிந்துகொள்ள முடியாது. சமூக நடத்தை, குறியீடுகளின் (symbols) ஊடகத்தின் (medium) மூலமாக மறைமுகமாகவும்கூட எழுதல்கூடும். பொருள்கள் அல்லது குறிகள் (signs) சமூக மதிப்புகளைக் கொண்டிருக்கலாம். 'நின்று போகவும்' (halt and proceed) என்ற குறி சமூக நடத்தைக்கு வழிகாட்டுகின்றது. தொழில் உடை அணிந்த போலீஸ்காரர் (police man) இச் சொற்களைக் கூறுகையில் எதிர்வினை அளிப்பது போன்றே நாம் அக் குறிக்கும் எதிர்வினையளிக்கிறேம். நாம் அக் குறியை மதிக்காமல் நம் சைக்கிளில் முந்திக் கொண்டு முன்செல்வோமாயின் சில கஜ தூரங்களுக்குமுன் நிற்கும் போலீஸ்காரரால் (constable) பிடிக்கப்படலாம் என்பதை நாம் அறிவோம். இதுபோன்றே எழுத்து, படம் சார் விளம்பரங்கள் (pictorial advertisements) மனித நடத்தையை மிகவும் பாதிக்கின்றன. 'இந்தியாவில் இலட்சக்கணக்கான மக்களால் பயன்படுத்தப்படும் சோப்பு' (soap) என்று விளம்பரம் செய்வதைப் பார்த்தவுடன் பல மக்கள் அதே சோப்பினை வாங்குகின்றனர். ஆனல், 'உயர்வகுப்பினரும்', சமூகத்தில் உயர்ந்தோரும் இதைப் பயன்படுத்துவதைக் கைவிடலாம். இந் நிலைமையில் மனிதர்கள் இல்லாதபோதுகூட சொற்சார்ந்த அல்லது சொற்சார்பற்ற குறியீடுகள் தூண்டுதல்களாகப் பணிபுரிந்து சமூக எதிர்வினைகளுக்கு வழி வகுக்கின்றன. மனிதர்களையும் பொருள்களையும் சமூகத் தூண்டுதல்களாக வேறுபடுத்துவதில் இஃது இடர்ப்பாட்டை ஏற்படுத்துகின்றது. ஒரு பொருள் இடைவினையின் குறியீடாக (symbolic of interaction) ஆயின் அஃதொரு சமூகத் தூண்டலாகலாம்.

இதன் விளைவாகச் சமூக உளவியலை ஓர் **அடிப்படைச் சமூக அறிவியல்** என்றும் கூறலாம். மற்றச் சமூக அறிவியல்களான பொருளாதாரம், அரசியல், சமூகவியல், சட்டம் ஆகியவை சமூக நிலையங்களின் குறிப்பிட்ட திட்ட முறைகளுக்குக் கட்டுப் பட்டு அமைந்துள்ளன. சமூக உளவியல் சமூகத்தில் தனியனது நடத்தையில் ஒவ்வோர் அம்சத்தையும்பற்றிய ஓர் அடிப்படைச் சமூக அறிவியலாகும். இது சமூகத்தில் தனியனின் நடத்தைப் பற்றிய அறிவியல் அல்லது தனியனின் சமூக நடத்தைப்பற்றிய அறிவியல் என்று விரிவாக வரையறுக்கப்படலாம்.

## சமூக, அசமூக நிலைமைகள்
## (Social and Non-social Situation)

மேலும் நாம் தொடர்வதற்கு முன்பு சமூக நிலைமைகள், அசமூக நிலைமைகள் என்பவற்றை ஒருபுறமும், சமூக நடத்தை, அசமூக நடத்தை என்பவற்றை மற்றொருபுறமும் மிகத் தெளிவாக வேறுபடுத்துதல் நன்று. சமூக நிலைமை மற்ற மனிதர்களின் இருப் பைக் கொண்டுள்ளது என்பது தெளிவு. சமூக நடத்தை நேர்முக நிலைகளை மட்டும் கொண்டதன்று. ஆனால், இது மக்களுடன் தொடர்புகொண்ட உளவியல்சார் நிகழ்வுகளுக்கு (psychological events)வழிகாட்டும் குறியீடுகளையும்(symbols)கொண்டது என்பதை நாம் முன்பே பார்த்துள்ளோம். போக்குவரத்துக் குறி (traffic sign) ஒரு சமூகச் சூழ்நிலையாகும். இப் போக்குவரத்துக் குறிகள் இதைக் கைக்கொள்ளுதல், கைக்கொள்ளாமலிருத்தல் என்ற சமூக விளைவு களைக் (social effects) கொண்டுள்ளது. இது மேலும் எந்த அள வுக்குத் தனியன் சமூகவயமடைகிறான் என்பதைக் குறிக்கின்றது. இது சம்பந்தமாக இடைக்காலத்திய கர்நாடகத் துறவியான கனக தாசர்பற்றிய புகழ்பெற்ற நீதிக்கதையை (parable) நினைவு கூறல் (recall) நலம். இக் கதையில் குரு தன் சீடர்கள் (disciples) ஒவ்வொருவருக்கும் ஒரு பழத்தைக் கொடுத்து அதை ஒருவரும் இல்லாத இடத்திற்சென்று சாப்பிட்டுவிட்டு வருமாறு கேட்டுக் கொண்டார். கனகதாசனைத் தவிர மற்ற யாவரும் பழத்தைச் சாப்பிட்டுவிட்டு வந்தனர். மற்ற ஒவ்வொருவரும், ஒருவரும் கவனிக்க முடியாத மனிதர்கள் இல்லாத இடத்திற்குச்சென்று அதைச் சாப்பிட்டுவிட்டு வந்ததாகக் கூறினர். 'ஏன் கனகதாசனால் தகுதியான இடத்தைக் கண்டுபிடிக்க இயலவில்லை' என்று அவனைக் கேட்டபொழுது, அவன் 'எங்குச் சென்றாலும் தான் கடவுள் முன் இருப்பதால் பழத்துடன் திரும்பிவர நேர்ந்தது' என்று பதிலளித் தான். இது போன்றே ஒரு தகுதி வாய்ந்த சமூக வயமான

தனியன், சட்டத்தின் காவலன் (minion of law) பார்வையில் இருப்பினும், இல்லாவிடினும் அந்தி வேளைக்குப்பின் சைக்கிளுக்கு விளக்கைப் பயன்படுத்த வேண்டிய விதிக்குப் பணிவான். எனவே, சமூக நடத்தை நாம் மற்றவர்கள் எதிரில் இருக்கும்போது மட்டும் எழுவதோடன்றி மற்றவர்கள் இல்லாதபோது ஆனால் அவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போதும் எழுகின்றது. இது போன்றே நாம் தனியாக இருக்கும்பொழுது மற்ற மக்கள் நம்மைப்பற்றி என்ன நினைப்பார்கள், அல்லது நாம் என்ன செய்யவேண்டும் அல்லது என்ன செய்யக்கூடாது என்று அவர்கள் விரும்புகிறார்கள் என் பவற்றால் வசப்படுத்தப்படுகின்றோம். சட்டைக்கு (shirt) ஏற்ற ஒரு குறிப்பிட்ட டையினைத் (tie) தேர்ந்தெடுக்கும் இளைஞனும், புடவைக்கு ஏற்ற ஒரு குறிப்பிட்ட ரவிக்கையைத் தேர்ந்தெடுக்கும் இளம் பெண்ணும் அழகியல் உணர்வின் (esthetic taste) வசப் படுவதோடன்றித் தங்கள் குழுவின் பிற உறுப்பினர்களைச் சந்திக் கும்போது தாங்கள் தேர்ந்தெடுத்தலைப்பற்றி அவர்கள் என்ன கூறுவார்களோ என்பவற்றாலும் வசப்படுகின்றனர். எனவே, ஒருவன் தனியாக இருப்பினும் மற்றவரது உளவியற்சார் தோற்றத் தால் (psychological presence) பாதிக்கப்படுவான். இவ்வாறே அடிக்கடி நாம் மற்றவர்களோடு சேர்ந்திருந்து அவர்களுடன் பரிமாற்றமான இடைவினை கொள்ளமுடிவதில்லை. இது நகர மய மாக்குதலின் (urbanization) ஒரு பொதுவான சிறப்புத் தன்மை யாகும். நாட்டுப்புற வெளிகளில் அண்டை வீட்டார் ஒருவரோ டொருவர் சமூக வயமான எதிர்வினை புரிகின்றனர். ஆனால் பம்பாய், கல்கத்தா போன்ற பல பெரிய நகரங்களில், பகுதிகள் (apartments) கொண்ட வீடுகளில் இருக்கும் மக்கள் பல காலம் அண்டை வீட்டுக்காரர்களாக வாழலாம்; பல தருணங்களில் ஒரு வரையொருவர் உணர்ந்தறிந்திருக்கலாம்; இருப்பினும்கூட ஒரு வர்க்கொருவர் முற்றிலும் அயலாளர்களாக இருக்கின்றார்கள். நாம் ஒரே பஸ்ஸில் அல்லது ரயிலில் செல்லும் ஒவ்வொருவருட னும் அல்லது நகரிலிருந்து சிறுதூரம் செல்லும் ரயிலில் (local train) பிரயாணம் செய்வோருடனும் சமூகத்தன்மையான எதிர் வினை கொள்வதில்லை. மறுபுறம் தனியன்கள் விலங்குகளிடம் மட்டு மன்றித் தாவரங்களிடத்தும், உயிரற்ற பொருள்களிடத்தும் சமூகத் தன்மையான எதிர்வினை கொள்ளலாம். மக்கள் தங்களுடைய செல்வப் பிராணிகளுடன் (pets) விளையாடும்போது செலுத்தும் அன்பினை நாம் நன்கு அறிவோம். அவர்கள் அவற்றின்மேல் ஆதிக்கம்கூடச் செலுத்தலாம். குழந்தை தானாகவே சென்று மோதிக்கொள்ளும் மேஜையைப் 'பழித்துரைக்கலாம்' (abuse) அல்லது தன்னைக் கால் இடறி விழச் செய்த கல்லைத் திட்டலாம். இன்றும் கூட சில மக்கள் மழை தவறும்போது திகைப்புக்குள்ளாவ

துடன் தவற்றைக் கடவுளர்களின் சினத்துக்குக் காரணமாகக் கூறு கின்றனர். அல்லது மேகங்களை வசப்படுத்தி மழை பொழிய 'பர்ஜன்ய ஜபத்தை' (Parjanya Japa) மேற்கொள்கின்றனர்.

## சமூக உளவியலும் மற்ற அறிவியல்களும்
## (Social Psychology and other Sciences)

மற்ற அறிவியல்களுடன் சமூக உளவியலின் தொடர்பை ஆராய்வதால் இதன் வரம்பும், பிரச்சினைகளும்பற்றிய நமது கணிப்பு (appreciation) மிகவும் தெளிவாக விளங்கும். ஒவ்வொரு மனிதனும் உடல்சார் உலகம், சமூக உலகம் ஆகிய இரண்டு உலகினுள் பிறந்துள்ளான். தான் பிழைத்து வாழவும், மனித இனம் பிழைத்து வாழத் தன்னுலானவற்றைப் பகிர்ந்து அளிக்கவும் அவன் தன்னைச் சுற்றியுள்ள உலகத்தைப்பற்றி அறிந்திருக்க வேண்டும். அவன் பிழைத்து வாழ்வதற்கான உயிரியல் சார் பெறுகைகளுடன் (biological equipments) உள உடலியல் (psycho-physical) உயிரியாக (organism) அவன் தொடங்குகின்றுன். ஆனுல், மனிதன் தனது நீண்ட குழந்தைப் பருவத்தில் பாதுகாக்கப் பட்டாலன்றி அவன் பிழைத்து வாழச் சிறிதளவு வாய்ப்பே உள்ளது. எனவே, சமூகச் செல்வாக்குகள் தனியனின் வளர்ச்சியில் மிகவும் முக்கியமான சூழ்நிலைப் பங்கைக் கொண்டுள்ளன. இன்னும் கூடப் பொது உளவியல் தனியனின் சமூகச் சூழ்நிலையைக் குறிப் பிடாமல் தனியனை ஆய்கின்றது. சமூகச் சூழ்நிலையின் செல்வாக் கால் ஏற்படும் எந்த விலக்கமும் மாறுகின்ற இயல்புத் தன்மைக்குப் பங்கு கொள்வதாகவே காணப்படுகின்றது. நடத்தை, அனுபவம் ஆகியவற்றின் அடிப்படை விதிகளைக் கண்டுபிடிக்கத் தொல்லை தரும் விளைவுகள் (influences) ஊடுருவிச் செல்லப்படவேண்டும். வளர்ப்பில் உள்ள வேறுபாடுகளால் பாதிக்கப்படாத நடத்தை யின் விதிகளை நிருணயித்தல் பொது உளவியலில் குறிக்கோளாகும். எவ்விதப் பண்பாட்டில் இவர்கள் வளர்க்கப்பட்டாலும் ஊக்கு வித்தல், புலன்காட்சி, கற்றல், நினைவு, சிந்தனை போன்றவற்றின் அடிப்படை விதிகள் எல்லா மனிதர்களுக்கும் பொதுவானது. இவ்வாறு பொது உளவியல் தனியனைக் கருத்து நிலையில் (abstract) ஆராய்கிறது. மறுபுறம், சமூக உளவியல் சமூகத் தூண்டல் நிலை மைகளில் (social stimulus situations) தொடர்புள்ள தனியனின் அனுபவத்தையும், நடத்தையையும் கொண்டிருப்பதால் பொது உளவியலுக்கு எது தகுதியற்றதோ அது சமூக உளவியலுக்கு மிகவும் முக்கியமானதொன்முக ஆகின்றது என்று நாம் காண் கிறோம். சமூக உளவியல் மனிதனை அவனது திட்டவட்டமான

(concrete) சமூக அமைவிலும் (setting), பண்பாட்டு அமைவிலும் ஆய்கின்றது. நாம் மேலே பார்த்ததுபோன்று, ஒரு சமூகச் சிறப் பின்றிச் செயல் வகையில் எவ்வித நிலைமைகளும் இல்லை. பசி என்பது ஓர் உயிரியல் சார் தேவையாகும். ஆனால், எவ்வாறு தனியன் உண்கிறான்? எதை அவன் உண்கிறான்? எப்பொழுது உண்கிறான்? என்பனவெல்லாம் அவன் வாழ்ந்துகொண்டிருக்கின்ற குழுவினால், குறிப்பாக அவன் வளர்க்கப்பட்ட குழுவினால் நிருண யிக்கப்படுகின்றது. எந்த அளவுக்கு இன வேறுபாடுகள், உயிரியல் சார் பெறுகைகளாலும் (biological equipments) எந்த அளவுக்கு மிகுந்த அல்லது குறைவான சமூக நிலைமைகளாலும் ஏற்படு கின்றது என்பதை நிருணயிப்பது மிகவும் சிரமமானது என்பதை நுண்ணறிவில் இன வேறுபாடுகள்பற்றிய ஆய்வுகள் காட்டு கின்றன. இக் கோணத்திலிருந்து ஆராய்ந்தால் சமூக உளவியல் பொது உளவியலுக்கு இன்றியமையாத நிரப்புப்பகுதி (complement) என்பது தெளிவு. பொது உளவியலின் படிப்புச் சமூக உள வியலின் படிப்பினால் குறை நிரப்பப்படாவிடின் நடத்தை விதி களின் முழுச் சிறப்பினை அறிந்துகொள்ளல் இயலாது. எவ்வாறிருப் பினும் சமூக உளவியல் விதிகள் பொது உளவியல் விதிகளினின்றும் வேறுபட்டது என்று எண்ணுதல் கூடாது. பொது உளவியலும் சமூக உளவியலும் ஒன்றிய (identical) தன்மைகொண்டவை. 'சமூகப் புலன் காட்சியும்' (social perception), 'சமூகக் கற்றலும்' (social learning), அசமூக நிலைமைகளின் (non-social situations) புலன் காட்சி அல்லது கற்றலினின்றும் வேறுபட்டதன்று. இந் நோக்குமுறையிலிருந்து சமூக உளவியல் சமூக இடைவினைகளுக்குப் பொதுவான கொள்கைகளைப் பயன்படுத்துகின்றது என்பதை உறுதியாகக் கூறலாம்.

நாம் இப்பொழுது சமூக உளவியலுக்கும் சமூகவியலுக்கும் உள்ள தொடர்பைச் சுருக்கமாக ஆராய்வோம். சமூகவியல் சமூக நிறுவனத்தின் வளர்ச்சியையும் கொள்கைகளையும் மேலும், பொதுவாகக் குழுவிலுள்ள தனியன்களின் நடத்தையினின்றும் வேறுபட்ட குழு நடத்தையைப்பற்றியும் கூறுகின்ற அறிவியலாகும். சமூகவியல் குழுக்களின் அமைப்பையும், அமைப்பு முறையை யும் (structure and organization) பற்றியது. குழு, சமூகவியல் ஆய்வின் அலகாகும். சமூகவியல் குழுக்களின் தோற்றம், வளர்ச்சி, ஒரு குழு நீடித்திருக்கும் (endures) வகையின் காரணம், எவ்வாறு அது குழு ஒழுக்கத்தை அதன் உறுப்பினர்கள் மேல் பதிக்கின்றது, அவர்களுடைய இணக்கத்தை (compliance) உரி மையுடன் கேட்கிறது என்பவற்றை ஆய்கிறது. இதனுடன் குழுக்களும் சமூக நிலையங்களும் (social institutions) எவ்வாறு

மாறுகின்றன என்பதையும் சமூகவியல் ஆய்கிறது. சான்றாக, இது குடும்பத்தை ஒரு குழுவாக மட்டும் ஆய்வதில்லை; இது காலத்துக்குக் காலம் எவ்வாறு மாறிற்று என்பதையும் ஆய்கின்றது. ஆனால், மறுபுறம் சமூக உளவியல் தனியனைப்பற்றிக் கூறுகின்றது. எவ்வாறு அவன் மற்றத் தனியன்களோடும், தனியன்களின் குழுவோடும் ( group of individuals ) இடைவினை புரிகின்றான் என்பதைப்பற்றிக் கூறுகின்றது. இதன் எல்லை மிகவும் வரம்புக்குட்பட்டது. இது குழு அமைத்தலில் உள்ளடங்கிய உளவியல்சார் காரணிகளை மட்டும் ஆய்கின்றது. மற்றொரு நோக்கு முனையில் சமூக உளவியல் சமூகவியலுக்கு அடிப்படையானதாகும். சமூக நிலையங்கள் அமைத்தலிலும் (formation), வளர்ச்சியிலும், மாற்றத்திலும் உளவியல்சார் காரணிகள் மிகவும் முக்கியமான இடத்தைப் பெறுகின்றன. கருத்தேற்றுமை (suggestibility), பின்பற்றல் (imitation), பற்றுறுதி ( loyalty ), அச்சம் ( fear ), தரங்கள் (norms) முதலியன சமூகச் செயற்பழக்கங்களிலுள்ள நிலையான போக்கை ( persistence) விவரிப்பதற்கு மேலாகச் சமூகச் செயற்பழக்கங்களிலுள்ள மாறுதலையும் விவரிக்கின்றது. மெக்கைவரும் பேஜூம் ( Maciver and Page ) கூறியுள்ளது போன்று 'நாம் நடத்தைப் புரியும் தனியன்களின் ( behaving individuals ) தன்மையை ஆயும்பொழுது, சமூகத் தொடர்புகளில் வெளிப்படுகின்ற தனியனின் நனவுநிலை (consciousness) அமைப்பை உளவியல் சார் நோக்கு முனையில் (psychological view point) எடுத்துக்கொண்டு ஆய்கிறோம், நாம் தொடர்பு வகைகளை (relationships) மட்டும் ஆயும்போது சமூகவியல் சார் நோக்கு முனையில் (sociological view point) எடுத்துக்கொண்டு ஆய்கிறோம். இவ்விரு அறிவியல்களும் ஒரு பகுக்கவியலாத (indivisible) உண்மைத் தன்மையின் (reality) வேறுபட்ட அம்சங்களைப்பற்றியது. ஒருவர்க்கொருவர் உள்ள தொடர்புகளிலிருந்து அப்பாற்பட்டுத் தனியன்களைப் புரிந்துகொள்ள முடியாது. தொடர்பு வகையின் அலகுகளிலிருந்து (units) அல்லது வகைகளிலிருந்து ( terms ) அப்பாற்பட்ட தொடர்புகளைப் புரிந்துகொள்ள முடியாது' (1.23). சமூகவியலறிஞரும் மனிதவியலறிஞரும் (anthropologist) சமூக இடைவினையின் கோலத்தோடு (pattern of social interaction) ஈடுபாடு கொண்டிருக்கையில், சமூக உளவியலறிஞர் சமூக இடைவினையின் செயல் முறைகளோடு (process of social interaction) ஈடுபாடு கொண்டுள்ளனர் என்று நாம் கூறலாம். எவ்வாறு தனியன் சமூக வயமடைந்தான்? எவ்வாறு அவன் சமூகக் கோலங்களைப் (social patterns) பயன்படுத்தவும் வெளிப்படுத்தவும் செய்கிறான்? எவ்வாறு குடும்பத்தின் மனப்பான்மை

களையும் கருத்துகளையும் அவன் வளர்ந்த குழுவின் மனப்பான் மைகளையும் கருத்துகளையும் அவன் வாழ்கின்ற குழுவின் மனப் பான்மைகளையும் தன்னுள் அமைத்துக்கொள்கிறான்? என்பவற் றையும் இதற்குப் பதிலாக எவ்வாறு அவன் அவனுடைய பதிவை (impress) மிகுந்த அல்லது குறைவான திறனோடு சமூகக் கோலங்களின்மேல் விட்டுச் செல்கின்றான் என்பவற் றையும் சமூக உளவியலறிஞர் ஆய்கின்றனர். மர்பி (Murphy) என்பவரின் மேற்கோளைக் கூற 'சமூக உளவியல் என்பது தனி யன் எவ்வாறு ஒரு சமூகக் குழுவின் உறுப்பினன் ஆகிறான், சமூகக் குழுவில் எவ்வாறு செயற்பிரிவுகள் (functions) செய்கிறான் என்ப வற்றைப்பற்றிய படிப்பாகும்' (2.16).

நாம் இப்பொழுது சமூக உளவியலுக்கும் மனிதவியலுக்கும் உள்ள தொடர்பு வகையைப்பற்றிய படிப்பைத் தொடருவோம். விரிவாகக் கூறப்போனால் மனிதவியல் என்பது மனிதனைப்பற்றிய அறிவியலாக வரையறுக்கப்பட்டது. இது சமூகப் பண்பாட்டு அம்சங்களுக்கு மேலாக உயிரியல்சார் அம்சங்களையும் உட் கொண்டுள்ளது. மனிதன் குழுக்களில் வாழ்கின்ற ஒரு சமூக விலங்கு மட்டுமன்று. மேலும் அவன் பேசும் திறனையும், வெற்றுநிலையைக் (abstract) குறியீட்டுமைப்படுத்தல் (symbolize), பொதுமையாக்கல் (generalize) ஆகிய திறன் களையும்கூடக் கொண்டுள்ள ஒரு தனித் தன்மை வாய்ந்த விலங் காவான். இவ் விரண்டு திறன்களின் உதவியாற்றான் அவனது ஆற்றல்களையும் (skills) அறிவையும் தனது கூட்டாளி மனிதருக் கும் (fellow-human beings), சந்ததியாருக்கும் (descendants) கருத்துப் பரிவர்த்தனை செய்ய முடிகின்றது. அவன் தனது ஆற்றல்களையும் ஆற்றல்களின் விளைவுகளையும் மட்டும் அவனு டைய சந்ததியாருக்குக் கடத்துவதில்லை; இதனோடு அவனது நம்பிக்கைகள் (beliefs), வழக்கங்கள் (customs), மதிப்புகள் (values), சமூக நிலையங்கள் (social institutions) ஆகியவற் றையும்கூடக் கடத்துகின்றான். இத்தகைய கூட்டுத் தொகை யான தன்மையினையே நாம் பண்பாடு என்று அழைக்கின்றோம். 'மொழி சார்ந்தவை, மொழி சார்பற்றவை, அவற்றின் விளைவுகள், பொருள், பொருள் அல்லாதவை ஆகிய மனிதனின் அனைத்து நடத்தையினையும் பண்பாடு குறிக்கிறது' (3.vi). மஜும்தார், மதன் (Majumdar and Madan) ஆகியோரின் கூற்றுப்படி சமூகப் பண்பாட்டு மனிதவியல் நான்கு வகையான மனிதச் செயற்பிரிவுகளை ஆய்கின்றது.

**i. ஒரு குழுவின் பொருளாதார அமைப்புமுறை:** இயல்பான உண்டி, உடை, இருக்கை ஆகியவற்றிலிருந்து பறித்தல் மூலமாகப்

பால், பசி போன்ற உயிருளத் (bio-psychic) தேவைகளுக்கு மனநிறைவு அளிக்கவல்ல செயற்பிரிவுகள்.

ii. **ஒரு குழுவைச் சமூக அமைப்பு முறைக்குக் கொண்டு செல்லும் செயற்பிரிவுகள்:** குழு முயற்சியை உண்டாக்குதலின் மூலம், உயிருளத் தேவைகளுக்கு மனநிறைவு தரவும், அன்புசார் (affectional) தேவைகளுக்கு மனநிறைவு தரவும், இயற்கையைத் திறமையாகப் பயன்படுத்திக்கொள்ள இயலும். 'குடும்பம், திருமணம் மேலும் இதுபோன்ற சமூக நிலையங்கள் சமூக வாழ்க்கை உளதாவதற்குரிய ஊடகத்தைத் தருகின்றன. இவ் வூடகத்திலும் (medium) ஊடகத்தின் மூலமாகவும் சமூக வாழ்க்கை உளதாகிறது. மேலும், அரசியல் சார் நிலையங்கள் (political institutions) சமூக வாழ்க்கையை இடைவினையின் பயனுள்ள நிலையில் நிறுத்தும் கட்டுப்படுத்தக்கூடிய காரணிகளை வழங்குகின்றன' (3. vii).

iii. **ஒரு குழுவின் மாந்திரீக - சமயப்பற்றுடைய (magico-religious) அமைப்பு முறை:** பார்க்காத இயற்கையிகந்த (super-natural) சக்திகளது தோற்றத்தின்பால் மனப்பான்மைகளும் (attitudes), செயற்பிரிவுகளும்.

iv. **ஒரு குழுவின் அழகியல் (aesthetic) செயற் பிரிவுகள்** அழகின் வெளிப்பாட்டுடன் (expressions) தொடர்புகொண்ட செயற்பிரிவுகள். மனிதவியல் உலகின் பலதரப்பட்ட பகுதியின் குறிப்பாக, படிப்பு வாசனை பெறுதற்கு முன்னும் நகர்வயமாவதற்கு முன்னும் (pre-urban) இருந்த குழுக்களிடையே உள்ள பண்பாட்டுக் கோலங்களை (patterns of culture) ஆய்கிறது. இது பலதரப்பட்ட குழுக்களுக்கு இடையே உள்ள வேறுபாடுகளை விவரிக்கப் பண்பாடு (culture), வழக்கம் (custom), செந்நிலைகள் (mores) போன்ற பொதுமைக் கருத்துகளைப் (concepts) பயன்படுத்துகின்றது. இதன் விளைவாகச் சில மனிதவியலார் குழுவுடன் சென்று வாழ்ந்து குழுவின் பண்பாட்டுக் கோலத்தை ஆய்கின்றனர். மறுபுறம், சில மனிதவியலார் இனம் சார்ந்த வெளியீடுகளை (specific reports) ஒப்புமைக் கூறுபகுப்புக்கு (comparative analysis) உண்டாக்குவதுடன், மனிதச் சமூகங்களின் வளர்ச்சியையும், செயலையும் (functioning), மாறுதலையும் (change) பற்றிய விதிகளை உருவாக்க முயற்சி செய்கின்றனர். மனிதனின் உயிரியல் - உளத் தேவைகள் (bio-psychic needs) குழு அமைப்பு முறைக்கு அடிப்படையானது என்று உணரப்பட்டதெனினும் பண்பாட்டு மனித

வியலால் அப் பண்பாடே உளவியல்சார் ஆக்க நிலையிருத்தம் (psychological conditioning) பெற்றிருக்கவில்லை என்று குறிப்பிடுகின்றனர். சமூக வாழ்க்கை உயிரியல், உளவியல் சார்ந்த மட்டத்திற்குக் கொண்டுவரப்படவில்லை. சமூக வாழ்க்கை 'ஒரு புதிய மட்டத்தை—ஏறக்குறைய மேலான உளத் தன்மையும் (super - psychic), மேலான உயிர்த் தன்மையும் (super-organic) உடைய சமூக மட்டத்தை அடைய வெளிப்படுகின்றது..... ஒரு சமூகம் என்பது ஓர் ஒழுங்கமைப்பான (system) சமூகத் தொடர்புகளைக் கொண்டது. இச் சமூகத் தொடர்புகள் வரலாற்றின் விளைவுகளாகும். இவை அறநெறி மதிப்புகளால் (moral values) ஒன்று சேர்க்கப்படுகின்றன; இயற்கையான சக்திகளால் அல்ல. எனவே, ஒரு சமூகம் என்பது சமூக ஒழுங்கமைப்பும் அறநெறி ஒழுங்கமைப்பும் கொண்டதாகும்' (3. ii). குரோபர் (Kroeber) போன்ற பண்பாட்டு நிருணயிப்பாளர்கள் (culture determinists) எவ்வாறு ஒரு தனியன் நடந்துகொள்கிறான் என்பதையும், எதை மதிக்கவும் போற்றவும் செய்கிறான் என்பதையும், நிருணயிக்கின்ற மேலான – உயிர்த் தன்மையையும் (super-organic), மேலான–உளத் தன்மையும் (super - psychic), மேலான – சமூகச் சக்தியையும் (super - social force) கொண்டதாகவும் பண்பாட்டைக் காண்கின்றனர். தனியன் குழுவினால் உருவாக்கப்படுகின்றான் என்பதிலும் கொடுக்கப் பட்டுள்ள குழுவின் பெரும்பான்மையான தனியன்கள் ஒத்திய லும் வகையைச் சேர்ந்தவர்கள் என்பதிலும் சிறிதும் ஐயமில்லை. ஆனால், சில தனியன்கள் பண்பாடு மாறுதலுக்குத் தம் பங்கினைக் கொடுக்கின்றார்கள் என்பதும் உணரப் பெற்றது.

பண்பாட்டுக் கோலங்களை ஆய்தல் சமூகப் பண்பாட்டு மனிதவியலின் கடமையெனின் சமூக உளவியலின் கடமை, கொடுக் கப்பட்டுள்ள குழுவிலுள்ள தனியன் எவ்வழியில் பண்பாட்டினைப் பெறுகின்றான் என்பதை ஆய்வதாகும். எனவே, மனிதவியல் சமூக நிறுவனங்களின் (organizations) கோலங்களைப் புரிந்து கொள்ளப் பண்பாட்டையும் (culture) பழக்கத்தையும் (custom), பொதுமைக் கருத்தாகப் பயன்படுத்துகின்றது எனின் இப் பொதுமைக் கருத்துக்கு (concept) அடிப்படையாக அமைந்துள்ள செயல் முறைகளைக் கூறுபகுப்பது (analyse) சமூக உளவியலின் கடமையாகும். இஃது, எவ்வாறு பழக்கங்கள் தலைமுறை தலை முறையாகக் காணப்பட்டன என்பதையும் கடத்தப்பட்டன என்பதையும் நிருணயிக்க முயற்சி செய்கின்றது.

சமூக உளவியலுக்கும் மனிதவியலுக்கும் உள்ள தொடர்பு பற்றிய மற்றோர் அம்சத்துக்குக் கவனம் திருப்பப்படவேண்டும். ரூத் பெனிடிக்ட் (Ruth Benedict) எனும் அம்மையார் தமது **பண்பாட்டுக் கோலங்கள்** (Patterns of Culture) என்ற நூலிலும், மார்கரெட் மீட் (Margaret Mead) எனும் அம்மையார் தனது **பாலும் மனப்பாங்கும்** (Sex and Temperament) என்ற நூலிலும் ஆறு பழமையான குழுக்களின் (primitive groups) நடத்தைப் பண்புகளை (behaviour traits) வெளியிட்டுள்ளனர். மனித இயல்பு (human-nature) என்பதைப் பற்றிக் கூறும்போது அது எவ்விதச் சமூகப் பண்பாட்டுச் (socio - culture) செல்வாக்கின்றி முற்றிலும் உயிரியல் சார்ந்தது என்று கூறுவது உறுதியற்றது என்று இவ் வாய்வுகள் காட்டின. ஆதிக்கத்தன்மையும் (aggressiveness) மனப்பாங்கு வேறுபாடுகளும் (temperamental differences) போன்ற நடத்தைப் பண்புகள் (behaviour traits) வளர்ப்பின் (up bringing) மூலம் ஆக்கநிலையிருத்தம் (conditioned) பெற்றுள்ளன. ஆதிக்கத் தன்மையும் போட்டியிடும் தன்மையும் (competitiveness) ஒப்புதல் பெற்றவை அல்லது ஒப்புதல் பெறுதவை என்பதைக் குழுவின் தரங்கள் (norms) நிருணயிக்கின்றன. நியூ மெக்ஸிகோவின் (New Mexico) ஸுனி செவ்விந்தியர் (Zuni Red Indian) அன்பான, பெருந்தன்மையுள்ள, அடக்கமான, தீமையற்ற தன்மைகளையும், நியூ கினியின் (New Guinea) தொபுவன்கள் (Dobuans) மிகவும் போட்டியிடும் தன்மை, ஆதிக்கம், கபடமுள்ள, நம்பிக்கையற்ற தன்மைகளையும் கொண்டிருக்கையில், அலாஸ்காவின் (Alaska) க்வாக்யுடில் (Kwakautl) இனத்தினர் தற்புகழ்ச்சியும், பகட்டும், பேச்சும், மற்றவர்களை ஏளனம் செய்யத் தயங்காத தன்மைகளையும் கொண்டவர்களாக இருக்கின்றனர் (4).

ஆண் தன்மைக்கும் பெண்மைத் தன்மைக்கும் உள்ள (masculinity and feminity) வேறுபாடுகளைப்பற்றி மார்கரெட் மீட் (Margaret Mead) என்னும் அம்மையார் வெளியிடுகின்றார் '... அரபேஷ் இனத்தினரின் இலட்சியம் (Arapesh ideal) மென்மையான, இதமான மறுமொழி (mild, responsive) தருகின்ற ஆண், மென்மையான, இதமான மறுமொழி தரும் பெண்ணுக்கு மணம் செய்விக்கப்படுதல் ஆகும். மண்டுகுமர் இனத்தினரின் இலட்சியம் (Mundugumor ideal) மூர்க்கமான, ஆதிக்கத்தன்மையுடைய ஆண், மூர்க்கமான, ஆதிக்கத் தன்மையுடைய பெண்ணுக்கு மணம் செய்விக்கப்படல் ஆகும். சாம்புலி (Tchambuli) இனத்தினரான மூன்றாவது

பண்படாக் குழுவில் (tribe) பெண்ணை மேலானவளாகவும் (dominant), தனிமுறைச் சார்பற்றவளாகவும் (impersonal), நிருவகிக்கும் கூட்டாளியாகவும் (managing partner), ஆணைக் குறைந்த பொறுப்புடையவனாகவும், மனவெழுச்சியில் சார்ந்திருக்கின்றவனாகவும், நமது பண்பாட்டுக்கு நேர் தலைகீழான (genuine riversal) பால்—மனப்பான்மைகளைக் கொண்டவனாகவும் (sex attitudes) நாம் காண்கிறோம்' (5.279). இவ் வாய்வுகள் (investigations) சமூக உளவியலாரின் சிந்தனையை மிகப் பாதித்தன. நாம் சமூகவயநிலையின் பிரச்சினை (problem of socialization) பற்றிப் பார்க்கும் பொழுது இப் பொருள்பற்றி விளக்கமாகக் கலந்து ஆய வேண்டிய அவசியம் உள்ளது. இந்திய பண்படாக் குழுக்களின் (tribal groups) நடத்தையிலுள்ள வியக்கத்தக்க வேறுபாடுகள் எந்த அளவுக்கு வளர்ப்பு முறைகளும் (methods of up bringing), சமூகத் தரங்களும் (social norms), ஆளுமைப் பண்புகளை (personality traits) உருவாக்குகின்றன என்பதைக் காட்டுகின்றன.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. MACIVER and PAGE, Macmillan, 1952. — *Society.*
2. MURPHY and NEWCOMB, Harper, 1937. — *Experimental Social Psychology.*
3. MAJUMDAR and MADAN, Asia Publishing House, Bombay, 1956. — *Social Anthropology.*
4. RUTH BENEDICT, Mentor, 1953. — *Patterns of Culture.*
5. MARGARET MEAD, Routledge, 1935. — *Sex and Temperament.*

# 2. சமூக உளவியல் வழிமுறைகள்
## THE METHODS OF SOCIAL PSYCHOLOGY

### அறிவியல் ஆய்வு வளர்ச்சியின் மூன்று முக்கியப் படிகள் (Three main stages in the development of scientific study)

வேனே டென்னிஸ் (Wayne Dennis) என்பார் எந்த ஓர் அறிவியல் சார்ந்த ஆய்வு வளர்ச்சியிலும் காணப்படும் மூன்று படிகளைச் சுட்டிக்காட்டியுள்ளார் (1.3-7). அறிவியல் சார்ந்த வளர்ச்சியின் முதற்படி, இருக்கும் இடத்திலேயே இருந்து கொண்டு கோட்படுத்தல் ஆகும். இது சமூகக் கோட்பாளராகக் (social theorists) கருதப்பட்ட சாக்ரெடிஸ் (Socrates), பிளாடோ (Plato), அரிஸ்டாடில் (Aristotle) ஆகியோரின் காலந்தொட்டே தொடங்கப்பெற்றதாகும். ஒரு வழியில் கோட்படுத்தல் (theorizing) எனும் சொல் நிரந்தரமான சிறப்புக் கூறாக அமைந்ததுமட்டுமன்றி அஃது எந்த அறிவியல் வளர்ச்சிக்கும் முதற்படியாக அமைந்துள்ளது. இரண்டாவது படி, உற்றுநோக்கலையும் (observation), விவரம் பதிவு செய்தலையும் (recording data) கொண்டுள்ளது. சில சமயங்களில் உண்மையான தகவல்களைச் சேகரித்தலும், சில சமயங்களில் ஆக்கப்பட்ட விளக்கக் கோட்பாடுகளை (theories propounded) ஆராய்தலும் இப் படியைச் சார்ந்ததாகும். விரிவாக, இப் படி பத்தொன்பதாம் நூற்றுண்டினிடையே தொடங்கப்பெற்றதாகும். 'பிரெய்டு (Braid) என்பரால் 1841ஆம் ஆண்டிலிருந்து 1860ஆம் ஆண்டுக்குள் அறிவியல் அடிப்படையில் முதன் முதலாகக் கூறப்பட்டதும், நான்சி பிரிவினரால் (Nancy school) சிறப்பாகப் பெர்ன்ஹைம் மால் (Burnheim) விரிவுபடுத்தவும் ஒழுங்குபடுத்தவும் பெற்றதும், பரிசோதனை உளவியலின் (experimental psychology) ஒரு முழுமையான பகுதியாகப் பினெயாலும் (Binet) பிரியாலும் (Fere) விளக்கிக் காட்டப்பெற்றதுமான கருத்தேற்றத்தைப் (suggestion) பற்றிய அறிவியல் ஆய்வே பரிசோதனை சமூக உளவியலின் உண்மையான தொடக்கம் எனக் கூறலாம்' (2-4). சில அறிஞர்களின் மேலான தனிப்பட்ட ஆராய்ச்சிகளால் இப் படி (stage) தனிச் சிறப்பினைப் பெற்றுள்ளது. மூன்றுவது படி

யில், தொடர்ச்சியான ஆராய்ச்சிகள் நடத்துவதற்கென ஆய்வுக் கூடங்கள் அமைக்கவும் ஆராய்ச்சி நிலையங்கள் தொடங்கவும் பெற்றன. எனவே 'எந்த அறிவியற்றுறை வளர்ச்சிக்கும் ஆராய்ச்சி நிறுவனங்களை அமைத்தல் ஒரு முக்கியமான எல்லைக் கல்லாகும்' (1.16). சுமார் 1917ஆம் ஆண்டு ஏல் (yale), அயோவா (Iowa) மேலும் மற்ற அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் அமைக்கப் பெற்ற குழந்தை வளர்ச்சி ஆராய்ச்சி நிலையங்கள், சமூக நடத்தை குறித்து முக்கியமான ஆய்வுகள் மேற்கொண்டதாக டென்னிஸ் (Dennis) என்பார் கூறுகின்றார். இதற்கு ஒப்பாக விலங்கு ஆய்வுக் கூடங்களில் (animal laboratories) விலங்குகளின் சமூக உள வியல்பற்றிய அறிவியல் ஆராய்ச்சிகள் பல நடத்தப்பட்டன. 1935ஆம் ஆண்டு பொதுமக்கள் கருத்தினை அறியும் நிலையங்கள் நிறுவப்பெற்றதுடன் வயது வந்தோரது சமூக நடத்தையை நன்கறிய ஆராய்ச்சிக் குழுக்கள் (research units) தொடங் கப்பெற்றன. இரண்டாம் உலகக் போருக்குப் பின்னர், உலகின் பற்பல நாடுகளின் குழு இயங்கு இயலை (group dyanamics) ஆய்வு செய்யப் பல ஆய்வுக் கூடங்கள் தொடங்கப்பெற்றன. சமூக நெருக்கடி ஆய்வுத் திட்டத்தின்கீழ் நம் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பற்பல ஆய்வுகளைத் தொடங்க கார்ட்னர் மர்பி (Gardner Murphy) என்பார் அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்கு வரவழைக்கப்பெற்றார் (3). திட்டக் குழுவும் (planning commission) அதன் ஆராய்ச்சித் திட்டத்தின்கீழ்ச் சமூகப் பிரச்சினைகளின் ஆய்வைத் தொடங்கிற்று. ஆனால், இவ்வாய்வுகள் இடையிடையனதாக அமைவதுடன் ஒரு சில தனியன்களின் வரம் புக்கு உட்பட்டதாகையால் இவை அறிவியல் வளர்ச்சியின் இரண்டாவது படியாகமட்டும் அமைகின்றன என்பதனை நாம் ஏற்றுக்கொள்வது அவசியம். நிலையான நிலையங்கள் நிறுவப் பட்டுத் தொடர்ச்சியான வழியில் ஆராய்வுகள் நடந்தால்தான் சமூக உளவியல் நம் நாட்டில் சிறப்பைப் பெறமுடியும்.

சமூக உளவியல் பாடப் புத்தகங்கள் இவ்வியல் அறிவு வளர்ச்சியை வெளிப்படுத்துகின்றன. 1908ஆம் ஆண்டு மெக்டூகல் (Mc Dougall) (4) என்பாராலும் ராஸ் (Ross) (5) என்பா ராலும் எழுதப்பெற்ற பாட நூல்கள் இவ்வியலின் தத்து வங்களை மிகையாகக் கொண்டுள்ளன, 1924ஆம் ஆண்டு வெளியான ஆல்போர்ட் (Allport) (6) என்பாரின் நூலுக்குப் பின்னர் இவ்வியல் கையாளும் முறையில் ஒரு தனிப்பட்ட மாறுதலைக் காண்கின்றோம். ஒருவரது கருத்தில் அல்லது தற்செயல் உற்று நோக்கல்களில் (casual observation), புறப்பொருள் தன்மையிலும் (objectivity), நம்பிக்கையிலும்

ஒரு தொடர்ச்சியான மிகுதிபாட்டைக் காண்பதில்லை. ஆனால், அறிவியல் உற்று நோக்கலுக்கும் (scientific observation), பரிசோதனைக்குட்பட்டதற்கும் (experimentation) அடிப்படையான செயலறிவு முறையில் (empirical method) புறப் பொருள் தன்மையிலும், நம்பிக்கையிலும் ஒரு தொடர்ச்சி யான மிகுதிப்பாட்டைக் காண்கிறோம். சமூக உளவியலில் விவரம் சேகரிக்கக் கையாளும் செயலறிவு முறைகளையும் பரிசோதனை முறைகளையும் (empirical and experimental methods) அவற்றின் பயனிறைவையும், எல்லைகளையும்பற்றிய குறிப்புகளை இனி நாம் சுருக்கமாக விவரிப்போம்.

## உற்றுநோக்கல் முறை
## (Observational Method)

அனைத்துச் சமூக நிலைமைகளையும் (social situations) பரிசோதனை வாயிலாக ஆராய இயலாது என்பது தெளிவு. இதன் விளைவாக இந்த உற்று நோக்கல் முறை (observational method) சமூக உளவியலில் விவரம் சேகரிக்க ஒரு முக்கிய மான முறையாகத் திகழ்கின்றது. எவ்வாறு உற்று நோக்க வேண்டும் என்பதன் மிகுதியான பயிற்சியை இவ்வுற்று நோக்கல் முறை கொண்டுள்ளது. நீண்ட நேர ஒழுங்கமைப்பான உண் மையான உற்று நோக்கலையும் இம் முறை உள்ளடக்கியது, உற்றுநோக்குநர், தாம் உற்று நோக்கிய சமூக இடைவினையின் நிகழ்ச்சிக் காலத்தை நிறுத்துக் கடிகாரத்தைப் (stop-watch) பயன்படுத்திச் சரியாகக் குறிக்க முடியும் என்பதினால் இம் முறை யின் உண்மைத் தன்மையும் (validity) புறவயத்தன்மை யும் (objectivity) மேலும் மிகுதியாகின்றன. குறிப்பேடு களைப் (recording sheets) பயன்படுத்தலும் சரிபார்க்கும் நிரல்களைப் (check-lists) பயன்படுத்தலும் இம் முறைக்கு மிகப் பெரிய உதவியாக இருக்கின்றன. கீழ்க்கண்ட முறை களைக் கடைபிடிப்பதன் மூலம் உற்று நோக்கல் முறையின் பயன்நிறைவு (efficacy) மேலும் மிகுதிப்படுத்தப்படுகின்றது. (a). கால - மாதிரி நுண்முறை மூலம் (Time-Sampling Technique), (b) பயிற்சி பெற்ற உற்று நோக்குநர்களின் உட னிகழ்ச்சியான உற்று நோக்கலின் மூலம், (c) 'ஒரு வழிக் கண்ணாடிகளை' (observation mirrors) அமைப்பதன் மூலம் உற்று நோக்கப்பெறும் தனியன்கள் அவர்கள் உற்று நோக்கப்படுதலை அறியமாட்டார்கள். (d) ஒலிகேட்கும் கருவியையும், (ear-phone) ஒலிப்பதிவுக் கருவியையும் (tape-recorder) உடி

யோகிப்பதன்மூலம் இடைவினையில் பயன்படுத்தப்பட்ட ஒலிகளும் சொற்களும் சரிவரப் பதிவு செய்யப்படுகின்றன, (e) அசைவுப் படங்களை (motion-pictures) உபயோகிப்பதன் மூலம் இவற்றைக் கவனமாகப் பின்னர் ஆராய முடியும். அறிவிதழ்களிலும் (journals), பாடப் புத்தகங்களிலும் வெளியிடப்பட்ட முடிவுகள் மேற்கண்ட முறைகளின் வாயிலாகப் பெறப்பெற்றவையே. எனவே, உற்று நோக்கலின் புறப்பொருள் தன்மையையும் (objectivity) நம்பகத்தையும் மிகுதிப் படுத்தக்கூடிய இவ் வழிகளுக்கு விளக்கங்கள் கொடுப்பது தேவையற்றதாகும்.

ஆய்வாளர் (investigator) குழுவின் இயற்கையான செயற்பிரிவுகளை விவரிப்பதற்கு மாறாகச் சில நபர்களை அக் குழுவில் கூட்டியோ விலக்கியோ இடைவினைச் செயல்முறைகளின் மாறுதல்களை உற்று நோக்கக்கூடும். ஒரு குழுவின் செயல் அதன் தலைவரது ஆளுமையால் பாதிக்கப்படுகின்றது என்பதை ஆயும் முறைகளுள் இஃதொரு முறையாகும். ஒருவருக்குச் சில வேலைகள் கொடுத்து அவற்றை நிறைவேற்றுதலிலுள்ள வேறுபாட்டைக் குறிக்கவும், ஒப்பிடவும் இது வழி செய்யலாம்.

## வளர்ச்சி முறை
## (Developmental Method)

ஒரு வழியில் இம் முறையை உற்று நோக்கல் முறையின் திருத்தமாகக் கொள்ளலாம். குழந்தைகள் பிறப்பிலிருந்து முதிர்ச்சி (maturity) வரையிலுள்ள சமூக நடத்தையின் வளர்ச்சியை ஆய்வதாய் இம் முறை அமைந்துள்ளது. இம் முறையில் பலதிறப்பட்ட வயதுகளை உடைய குழந்தைகளின் குழுக்கள், அவர்கள் விளையாடும் பொழுதும், சண்டை சச்சரவிடும் பொழுதும், ஒழுங்கமைப்பாக உற்று நோக்கப்படுகின்றன. உற்று நோக்கல் முறையின் மூலம் சிறு குழந்தைகளின் விளையாட்டுத் தனிமைத் தன்மையுடன் திகழுவதாகத் தெரிய வருகின்றது. ஆனல் வயது மிகுதியாக மிகுதியாகச் சமூக அம்சம் மிகவும் முக்கியமான பங்கினைப் பெறுகின்றது. சில எடுத்துக்காட்டுகளைக் கவனிப்போமாயின், பன்னிரண்டிலிருந்து பதினைந்து மாதங்கள் வரை, விளையாட்டானது ஒரு குறிக்கோளை அடைய வழியாக அமைகின்றதேயன்றித் தானே குறிக்கோளாக அமைவதில்லை என்று ஷெர்லி (Shirley) (7) என்பார் கண்டுள்ளார். பதினெட்டிலிருந்து இருபத்து நான்கு மாதங்கள் வரை நடிப்புத் தன்மையையும் பின்பற்றலையும் கொண்ட இயக்க விளையாட்டு (motor-

play) உற்று நோக்கப்பட்டது. இரண்டு வயதுக் குழந்தை விளையாட்டு நேரத்தில் 90 சதவிகித நேரம் தனிமையிலேயே விளையாடுவதாக வான் ஆல்ஸ்டைன் (Van Alstyne) (8) கண்டார். ஆனால் ஐந்து வயதுக் குழந்தை விளையாட்டு நேரத்தில் 70 சதவிகித நேரத்தை மற்றக் குழந்தைகளுடன் சேர்ந்து கழிப்பதனையே விரும்புகின்றது. பத்து வயதிற்கு மேற்பட்ட பள்ளி செல்லும் பிள்ளைகளிடையே குழு விளையாட்டுகளும் (group-games), ஒழுங்குபட்ட (organized) விளையாட்டுகளும் மிகவும் சாதாரணமாகக் காணப்படுகின்றன.

இந்த வளர்ச்சிமுறை மேலும் பல சிக்கலான நுண்முறைகளையும் (techniques) கொண்டுள்ளது. வளர்ச்சியின் படியை அளவிடப் பரிசோதனைகளும் (tests) ஆய்வுக்கூட முறைகளும் (laboratory methods) பயன்படுத்தப்படலாம். பிரிட்ஜஸ் (Bridges) (9) என்பார் குழந்தை வளர்ப்புப் பள்ளியில் (Nursery school) பயிலும் குழந்தைகளின் சமூக மனவெழுச்சி வளர்ச்சிகளை அளப்பதற்கென ஓர் அளவுகோலைப் (scale) புனைந்துள்ளார். இவ் வயதில் சமூக வளர்ச்சி முதன் முதலாக மற்றொரு குழந்தையின் செயல்கள், சொற்கள், சிரிப்புப் போன்றவற்றைப் பின்பற்றுதலில் காணப்படுகின்றது. குழந்தை வளர்ப்புப் பள்ளியின் செந்நிலைகள் (mores) தன் வயப்படுத்தல், அக் குழந்தை மற்றக் குழந்தைகளுக்கு மறுமொழிப்புத் தருவதினைத் தொடர்ந்து ஏற்படுகின்றது. இது புதிய திருப்பங்களை மேற்கொள்ளுதலைக் கற்றல், ஒரு தன்மையான வேண்டுகோளுக்குப் பொம்மையைக் கொடுத்தல், ஒருவனது பொம்மைகளையும் இடத்தையும்பற்றிய அதன் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளுதல், மற்றவர்களின் பிழைகளைச் சுட்டுதல், மற்றவர்க்கு உதவி செய்தல் போன்றவற்றில் சமூக வளர்ச்சி காணப்படுகின்றது. இதேபோன்று பிறர் வேலையில் தலையிடுதல் அல்லது பிறர் வேலையை அழித்தல், பிறரைத் தள்ளுதல், இழுத்தல், பிற பிள்ளைகளைக் குறித்துப் பெரியோரிடம் குற்றம் கூறல், குழு விளையாட்டில் பங்கு கொள்ளாமல் வெளியே இருத்தல் போன்ற சமூகம் ஒவ்வாத செயற்பிரிவுகளையும் (socially un-acceptable activities) வளர்ச்சியில் காணலாம்.

## பேட்டி முறை
## (Interview Method)

சமூகப் பிரச்சினைகளில் சரியான நோக்கம் கொண்ட அல்லது எதிர் நோக்கம் கொண்ட தனியனைக் குறித்துத் தகவலைப்பெற

அண்மை ஆண்டுகளில் இம் முறை விரிவாகக் கையாளப்பட்டு வருகிறது. சான்ருக நெவிட் சாம்ஃபோர்டு (Nevitt Samford) என்பார் இனமையக் கொள்கை அளவுகோலில் (Ethrocertrism Scale) அதிகமான மதிப்பெண்ணைப் பெற்ற ஒருவனையும் குறைந்த மதிப்பெண்ணைப் பெற்ற ஒருவனையும் சார்ந்துள்ள வேறுபாடுகளை அறிதற்கு இப் பேட்டி முறையைப் (interview technique) பயன்படுத்தியுள்ளார். சார்பெண்ணம் (prejudice) குறித்துப் பேட்டி முறையின் வாயிலாகப் பெறப்பட்ட தகவல்களை இந் நூலின் இரண்டாம் பகுதியிலும் நான்காம் பகுதியிலும் காணலாம் (10). அண்மை ஆண்டுகளில் பேட்டி முறையின் புறப்பொருள் தன்மையையும் பயனையும் செம்மையாக்கப் பற்பல முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. பேட்டியினைத் 'தரப்படுத்துதலால்' (standardizing) எண்ணளவு (quantitative treatment) முறையில் விவரங்கள் பெறப்படுகின்ற குறுகிய பேட்டியில் மொழிசார், மொழிசார்பற்ற நடத்தையைக் குறிக்க ஒருதரப்படுத்திய வரைதாள்கள் (standard charts) வரையப்பட்டுள்ளன. நிற்கும் நிலையிலும் (posture) பிறவற்றிலும் விறைப்புகளும் சிதைவுகளும் (tensions and distractions) தம்மை வெளிப்படுத்துகின்றன. பெறப்பட்ட மொழிசார் விவரத்துக்கு இவை ஒரு பயனுள்ள குறைவு நிரப்பாக (supplement) அமைகின்றன. பேட்டி நிலைமை சமூக உளவியலுக்குச் சுவையான பிரச்சினைகளை (problems) வழங்குகின்றது. தொழிலியல் உளயலின் (Industrial Psychology) ஆதார்ன் ஆய்வுகளிலும் (Hawthorne Studies), ஆக்கம் கூறல் துறையிலும் (field of counselling) (11) பயன்படுத்தப்படும் மறைமுகப் பேட்டி நுண்முறை (non-directive techiques) வளர்ச்சியினை இங்கு நாம் குறிப்பிடல் வேண்டும்.

மெக்கோபி, மெக்கோபி (Maccoby and Maccoby) என்ற இருவரும் பேட்டி முறையை 'ஒருவர் அல்லது பலரிடமிருந்து கருத்து அல்லது நம்பிக்கையின் தகவலையும், வெளிப்பாட்டையும் சிறிது சிறிதாக வெளிக்கொணரச் செய்கின்ற ஒரு நேர்முக மொழிப் பரிமாற்றம் (verbol interchange)' எனக் கருதுகின்றனர். (13. vol. 1.449). ஒரு தரப்படுத்திய பேட்டி முறைகளும், தரப் படுத்தப்படாத (standardized and unstandardized) பேட்டி முறைகளும், சமூக அறிவியல்களில் பெருமளவு பயன்படுத்தப் படுகின்றன. தரப்படுத்தப்படாத பேட்டி முறை மிகவும் வளைந்து கொடுக்கக்கூடிய (flexible) தன்மையுடையதாய் வாழ்க்கைக்கு உண்மையான பதில்களைப் பெற ஆதரவளிக்கிறது. ஆனல், இது முன் நிருணயிக்கப்பெற்ற (pre-determined)

வினாக்களுடன் அமைந்த தரப்படுத்தப்பட்ட பேட்டி முறையைப் போன்று அவ்வளவு நம்பிக்கையானதன்று. இவ்விரண்டில் முன்னது வளைந்துகொடுக்கும் தன்மை பெற்றதாய் இருக்கையில் பின்னது எண்ணளவுப் பண்பைக் (quantitative) கொண்டதாக உள்ளது. எந்த முறையினைக் கையாளுவது என்பது இருக்கக்கூடிய பிரச்சினையையும் ஆராய்வின் திட்டத்தையும் சார்ந்ததாகும்.

பேட்டி ஆளிடைத் தொடர்பை (interpersonal relationship) உள்ளடக்கி இருக்கின்றது. இதனின்றும் பேட்டி அளிப்பவர் (respondent) பேட்டியிடுபவரை (interviewer) சிறிது ஏற்றமும் (status), சிறிது அதிகாரமும் (Power) படைத்தவராகவும் காணலாம். மாற்றிக் கூறுகையில் இதில் அங்க வகுப்பு உறவைக் (role relationship) காணலாம். பேட்டியிடுபவர் பேட்டி நடத்த தான் பேட்டியிடும் பொருளில் (topic) தேர்ச்சி பெற்றவராகத் திகழ நல்ல பயிற்சி பெற்றிருத்தல் வேண்டுமென்பதனைப் பல ஆய்வுகள் காட்டியுள்ளன. அதே சமயத்தில் அவர் தான் ஒரு வல்லுநர் (expert) என்ற கருத்தைப் பிறருக்குத் தரலாகாது. கூடுதலான தகவலைத் திரட்டும் ஒருவராக அவர் காட்சியளிக்க வேண்டும். இரண்டாவதாக, அவர் சார்பற்றிருத்தல் வேண்டும். பேட்டியளிப்பவர் சார்ந்துள்ள துறையில் பதவி வகிக்காத உறுப்பினராக இவர் இருத்தல் வேண்டும். இவர் பேட்டியளிப்பவர் சிலரிடத்து நெருங்கிய நேரிடைத் தொடர்பு கொண்டால் மற்றவர் சந்தேகிப்பர். பேட்டியிடுபவர் ஒதுங்கிய தன்மையுடனும், கண்ணியத்துடனும் (dignified) நடந்து பேட்டியை முக்கியமானதாகத் திகழச் செய்தல் வேண்டுமென்பதை இது குறிக்கின்றது. இதே நேரத்தில் தன் சொந்த மனப்பான்மைகளைக் காட்டாமல், ஏற்பு அல்லது ஏற்பற்றது எனச் சுட்டிக் காட்டாமல் பேட்டியளிப்பவர் கூறுவனவற்றில் உண்மையான அக்கறையைக் காட்டவேண்டும்.

## மருத்துவமனை முறை
## (Clinical Method)

இம்முறை பல்வேறு கோளாறுகளின் தன்மையை அறியவும் (diagnosis) சிகிச்சை அளிக்கவும் பயன்படுகின்றது. உற்று நோக்கலும் பரிசோதித்தலும் நோயின் நுணுக்கம் காண உதவுகின்றன. சோதனை (testing), பேட்டிக்காணல் (interview), தனியாள் வரலாற்று முறை (case-history method) ஆகிய முறைகள் ஒன்று சேர்ந்தமைந்த முறையே

மருத்துவமனை (clinical method) முறையாகும். முக்கிய மாக இஃது ஒரு தனியாள் முறையாகும் (individual method). இது மருத்துவமனை முறையின் முக்கியத்துவத்துக்கும் (value) கடுமையான இயற்கைக் குறைபாடாக (limitation) உள்ளது என்பதில் ஐயமில்லை. சில நிகழ்ச்சிகளை (cases) ஏற்ற அளவில் ஆய்வதினுல் அதைப்பற்றிய உட்காட்சியைப் (insight) பெருமளவு இம்முறை நமக்கு மிகுதிப்படுத்துகின்றது. எடுத்துக் காட்டாக உளப்பகுபாட்டியில் (psycho-analytic findings) கண்டுபிடிப்புகளைக் கூறலாம். நாம் மேலே கண்டவாறு உளப் பகுபாட்டுப் பேட்டி நிலைமையின் (psycho-analytic interview situation) ஆய்வு ஆளிடைத் தொடர்புகளின் முக்கியத்துவத்தை அறிய வழி வகுக்கின்றது (14). சமூக இடைவினையின் மிகப் பெரும் சிறப்பு வாய்ந்த கண்டுபிடித்தல்களுக்கு ஃபிராய்டு(Freud) என்பாரின் மருத்துவமனை ஆய்வுகள் வழிகாட்டியாக அமைந் தன. தனியனின் வளர்ச்சியிலும் அமைப்பிலும் அன்பின் தேவையின் (need for affection) அடிப்படையான முக்கியத் துவத்தைப் ஃபிராய்டு காட்டியுள்ளார். இசைவான சமூகத் தொடர்புகளின் முன்னேற்றத்திலும், தடைசெய்தலிலும், அன் புக்கான தேவையும் (need for affection), காப்புணர்ச்சிக்கான தேவையும் (need for security) மிக முக்கியமான பங்கு வகிக் கின்றன. மற்ருெரு தலைசிறந்த உளமருத்துவரான (psychia-trist) அட்லர் (Adler) என்பாரும்கூட இம் மருத்துவமனை முறையைப் பயன்படுத்தியுள்ளார். சமூக இடைவினையில் தலையாய முக்கியத்துவம் வாய்ந்ததாக அவர் கருதும் 'சமூக உணர்ச்சி'யின் (social feeling) முக்கியத்துவத்தை இம் முறையில் வலியுறுத்துகின்ருர். 'ஒரு மனிதன் எவ்வாறு நினைக்கின்ருன் என்பதனை அறிய அவன் தன் சக மனிதர்களுடன் கொண்டுள்ள உறவுகளை ஆராய வேண்டும் ............ இச் சமூக உறவுத் தொடர்புகளைப் (social - relationships) புரிந்து கொள்ளாமலும், அவையின்றியும் நாம் ஒருவரது உளச் செயற்பிரிவுகளைப் (psychic - activities) சரிவரப் புரிந்து கொள்ள முடியாது (15.25).' 'கூடிவாழ் வேட்கை (communal need) மனிதரிடையே உள்ள எல்லா உறவுத் தொடர்புகளையும் ஒழுங்குப்படுத்துகின்றது. மனிதனின் கூட்டு வாழ்க்கை மனிதனின் தனி வாழ்க்கைக்கு முற்பட்டதாகக் காணப்படுகிறது. மனிதப் பண்பாட்டு வளர்ச்சியின் வரலாற்றில் எந்த வாழ்க்கை அமைப்பின் அடித்தளங்களும் கூடிவாழும் தன்மையில் அமையப்பெருதிருப்பதைக் காணமுடியாது. எந்த மனிதனும் மனித சமுதாயத்தில் தோன்றினுனேயன்றி எப்போ தும் தன்மையில் காணப்பெறவில்லை' (15.26-27). "மனிதத்

தன்மையில் (humanity) ஆழந்த தோழமையை (fellowship) உண்டாக்காமாலும் தன்னை மனிதனுக்கப் பழக்கப் படுத்திக்கொள்ளாமலும் ஒரு பூரண மனிதனுக வளரமுடியாது' என்பதை நரம்பு நோய்(neurotic)பற்றிய மருத்துவமனை ஆய்வு அட்லருக்குத் (Adler) தெளிவுபடுத்தியது (15.31). ஆகவே, சமூக உளவியலின் ஒரு புதிய தலைப்பாகிய **சமூகவய நிலையின்** பொதுமைக் கருத்தின் முக்கியத்துவம் உளமருத்துவர்களின், உளவியலார்களின் மருத்துவமனை ஆய்வுகளுக்குக் கடன்ப்பட்டிருப்பது போன்று மனிதவியலாரின் கள ஆய்வு களுக்கும் கடமைப்பட்டிருக்கிறதென அறிகிறோம்.

இப் பகுதியை முடிப்பதற்கு முன்னர் சமூக உறவுத் தொடர்புகளை (social relationships) நன்கறிந்துகொள்ள மிகவும் உதவிய ஃபிராய்டு (Freud) என்பாரால் உருப்படுத்தப்பெற்ற சில பொதுமைக் கருத்துகளுக்குக் (concept) கவனம் செலுத்தப் பெறல் வேண்டும். எடுத்துக்காட்டாக அவருடைய நிலைநிறுத்தல் (fixation) பற்றிய பொதுமைக் கருத்து, சமூகவயமடைதலில் (socialization) எவ்வாறு தடை ஏற்படுகின்றது என்றும், இதனால் ஆளுமை வளர்ச்சியில் எவ்வாறு தடை எற்படுகின்றது என்றும் காட்டுகின்றது. இது பகவத்கீதையில் காணப்படும் பற்றற்ற நிலை (detachment) என்ற பொதுமைக் கருத்தினைப் பெருமளவில் ஒத்து இருக்கிறது. பற்றற்றநிலை காணப்படாவிடின் நிலைநிறுத்தல் (fixation) நேருகிறது. ஆளுமை வளர்ச்சிக்குப் பற்றற்ற நிலை ஓர் அறிகுறியாகும். நிலை நிறுத்தல் (fixation) வளர்ச்சிக்கு ஒரு தடையாக இருக்கின்றது என்பதைப் ஃபிராய்டு (Freud) சுட்டிக்காட்டியுள்ளார். இது பின்னோக்கத்தையும் (regression) உள்ளடக்கியுள்ளது (16.348-350). இதனால் நிலைநிறுத்தலுக்குட்பட்ட தனியன் தன்னைத் தக அமைத்துக்கொள்ள (adjust) முடிவதில்லை. அவன் குழந்தைத் தன மட்டத்தில் (childish level) எதிர்வினை புரிகின்றான். அவனுடைய சமூக உறவுத் தொடர்புகள் குறைபாடு உடையனவாகத் திகழும். இதுபோன்றே சமூக நடத்தையை ஆய்வதற்கு மீமனம்பற்றிய பொதுமைக் கருத்து (concept of super ego) மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். 'ஒருவனது உண்மை மனத்துக்கும் (real ego) அவனுடைய இலட்சிய மனத்துக்கும் (ego ideal) இடையே யுள்ள இடைவினை அவனைப்பற்றியும் சமூக உலகுடன் அவனுக்குள்ள தொடர்புகள்பற்றியும் வாழ்க்கை முழுவதும் சிறிதளவு தொடர்ச்சியாகப் பிரதிபலிக்கின்றது. குறிப்பாகப் பெற்றோர் அமைத்துத் தந்த நியதிக்குக் கட்டுப்பட்டு வாழ்தலும், கட்டுப்

பட்டு நடக்காவிடின் தண்டனையையும் ஏற்பின்மையையும் பெறுதலும் ஆகிய குழந்தைக்கும் பெற்றோருக்கும் உள்ள உறவுகளை இவ்விடைவினை எப்போதும் சிறிதளவு ஒத்திருக்கின்றது. நாம் குழந்தைகளாக இருப்பின், நாம் 'நன்றாக' நடந்துகொண்டால் நம் பெற்றோரிடமிருந்து அன்பு, புகழ்ச்சி, உதவி, பாதுகாப்பு ஆகியவற்றையும், 'கீழ்ப்படியாதிருந்தால்' அச்சம், தண்டனை, குற்றங்கூறல் ஆகியவற்றையும் எதிர்ப்பார்க்கின்றோம். தெளிவாகக் கூறினால் இலட்சிய மனம் (ego ideal) பெற்றோர்களது ஒழுக்கத் துறைக்குரிய மனப்பான்மையின் ஓர் ஒன்றுசேர்ப்பு அல்லது அகத் தேற்றத்தினைத் (incorporation or introjection) தெரிவிக்கின்ற அளவில் மனதுக்கும் (ego) இலட்சிய மனத்துக்கும் இடையே உள்ள இவ்வொருவருக்கொருவர் தொடர்புகள் மீண்டும் பிரதிபலித்துக் காணப்படவேண்டும்' (17.65). சமூக இடைவினைகளை அறிந்துகொள்ள மிக முக்கியத்துவம்வாய்ந்த மருத்துவமனை முறைகளின் பெறப்பெற்ற ஃபிராய்டின் (Freud) பொதுமைக் கருத்துகளுக்கு (concepts) மேலும் விளக்கங்கள் தருதல் அவசியமற்றதாகும். ஒன்றுதல் (identification), புறத்தெறிதல் (projection) போன்ற பொதுமைக் கருத்துகள் மிகப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்தனவாகும்.

## வினாநிரல் முறை
## (Questionnaire Method)

தனியன்களைப் பரிசோதிப்பதற்குப் பேட்டி முறையும் மருத்துவமனை முறையும் மிகவும் பயனுள்ளதாய் இருக்கையில் குழு ஆராய்வுகளுக்கு வினாநிரல் முறை (questionnaire method) தேர்ந்தெடுக்கப்படுகின்றது. சில வகையான துலங்கல்களை (responses) வெளிக்கொணரத் (elicit) தரப்படுத்தப்பட்ட தூண்டல்களைக் (stimuli) கோவையாக வழங்குதல் வினாநிரல் ஆகும். தகவலைச் சேகரிக்க இது மிகவும் சிறந்த தரப்படுத்தப்பட்ட கருவியாகுமேயன்றி இது வெறும் வினாக்களின் திரட்சியன்று. இம் முறையின் குறிக்கோள் பொதுவாகத் தனியனின் மிகை விருப்பங்களைக் (preferences) கண்டுபிடித்தல் ஆகும். 'தனியனிடத்திலுள்ள, ஏறக்குறைய இயற்கையாக நிலைபெற்றிருக்கும் சில நிலைமைகளுக்குத் தூண்டலைக் காரணமாகக் குறிக்கின்ற தன்மை இச் செய்முறைகளைப் (procedure) பயன்படுத்தலில் வலியுறுத்தப் பெறுகின்றது. அவனுடைய மிகை விருப்பங்களின் நிருணயிப்பாகச் (determiner) செயல் புரிகின்ற துலங்கல்கள் தனியனிடத்திலுள்ள சில அடிப்படையான முற்றகைமையின் (fundamental

free disposition) குறிப்புகளாக (indices) வெளிக் கொணரவும், **ஆய்வு** செய்யவும் பெறுகின்றன (elicited and studied)' *(18.321)*.

பொதுமக்கள் கருத்தினைக் (public opinion) கண்டறிய வினாநிரல் முறை விரிவாகப் பயன்படுத்தப் பெறுகின்றது. கருத்தினை மதிப்பிட (assess opinion) அரசியலார் மற்றும் வாணிகம், தொழில் துறைகள் இம் முறையைப் பயன்படுத்து கின்றன, வினாக்களை அமைத்தல், மாதிரித்தேர்வு (sampling), விவரத்தைக் கூறுபடுத்தல் (analysis of data) ஆகியவைபற்றியும், மற்ற அம்சங்கள்பற்றியும் மிகுதியான ஆராய்ச்சிகள் நடந்துள் ளன.

**வாக்கெடுப்பு** வினாவும் (poll-question), **திறந்த முடிவு** (open-end) வினாவும் பயன்படுத்தப்பெறும் இரு முதன்மை யான வினாக்களின் வகைகளாகும். வாக்கெடுப்பு வினா ஒன்று விட்டு மற்றொன்றாக அமைந்த விடைகளின் (alternative answers) தொகுதியைக் கொண்டுள்ளது. பதிலளிப்பவர் (respondent) இவற்றில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந் தெடுக்க வேண்டும். இந் நூலாசிரியர் கீழக்கண்ட வினாவினை அவருடைய ஆய்வுகள் ஒன்றில் பயன்படுத்தினார்: 'சாதி அமைப்பு நீடித்திருக்க வேண்டும்; மாற்றப்படவேண்டும்; ஒழிக்கப்பட வேண்டும்' *(19.174)*. இத்தகைய வினாக்களில் பதிலளிப்பவர் கொடுக்கப்பட்டுள்ள ஒன்று அல்லது மற்றொன்றாக அமைந்த விடைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்.' வாக்கெடுப்பு வினா பரிசோதனை ஆய்க் கூடத்திலிருந்து உளப்பௌதிகத்தின் (psycho - physics) ஒழுங்குமுறை ஆய்வுகளினின்றும், உளவியல் ஆய்வுகளினின்றும் உருவாக்கப்பட்டன. இவ்விரண்டிலும் ஆட்படுநர் (subject) எடை ஒப்பிடுதலில் (weight comparison) 'அதிகம்' அல்லது 'பளு' (higher or heavier) என்ற குறிப்பிட்ட சொல் லைப் பயன்படுத்தியும், சோதனைத் தாள்களில் (test forms) "ஆம்' அல்லது 'இல்லை' (yes or no) என்ற சொல்லைப் பயன் படுத்தியும் குறிப்பிட்ட வகைகளில் மறுமொழி தருமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார் *(20.277)*. இதற்கு மாறாகத் திறந்த முடிவு (open-end) வினா எந்தவிதமான ஒன்றுவிட்டு மற்றொன்றாக அமைந்த துலங்கல்கள் கொடுக்கப்பெறுமல் கட்டற்ற துலங்கலை (free-response) வெளிக்கொணருமாறு அமைக்கப்பெற்றுள்ளன. ஒரு திறந்த முடிவுக் கேள்வியைக் கீழ்க்கண்டவாறு அமைக்கலாம்: 'காங்கிரஸ் கட்சியைப்பற்றி

நீ என்ன நினைக்கின்றாய்?' அல்லது 'காஷ்மீர் பிரச்சினையைத் தீர்க்க அரசினர் என்ன செய்யவேண்டுமென்று நினைக்கிறாய்?' இத்தகைய வினாக்களின் சிறப்புவாய்ந்த அம்சம் என்னவெனில் பதிலளிப்பவர் தனது விருப்பப்படி எதையும் கூறலாம், 'வாக்கெடுப்பு வினா, பரிசோதனை, சோதனை ஆய்வுக்கூடங்களினின்றும் தோன்றியதாகும்; திறந்த முடிவு வினாக்கள் உளவியல் மருத்துவமனைகளினின்றும் (psychological clinic) தோன்றியது எனக் கூறலாம்' (20.277). துலங்கல்களை எளிதில் வரிசைப்படுத்தல் வாக்கெடுப்பு வகை வினாவின் ஒரு நன்மையாகும். ஆராய்வுக்குரிய பிரச்சினையை அறிந்துகொள்ள மிகப் பெரும் உதவியாக இம் முறை தன்மையளவு அல்லது புள்ளி விவர முறையை ஏற்றுக்கொள்கிறது.

மாதிரி முறையின் முக்கியமான பிரச்சினையை நாம் இப்பொழுது சுருக்கமாகக் குறிப்பிடுவோம், இந்தியாவில் பத்து ஆண்டுகட்கு ஒருமுறை, குடும்பத்தையும், நாட்டுமக்கள் அனைவரையும் முழுமைத் தொகுதி அளவெடுப்பது (census) போன்று நாம் மக்கட்தொகை அனைத்தையும் ஆராயமுடியாது. இது மிகக் கடினமானதும் அதிகச் செலவு தரக்கூடியதுமான முறையாகும். ஆகையால் மத்திய அரசாங்கம் தற்போது, தேசிய மாதிரி அளவெடுப்புக் குழு (National Sample Survey Unit) ஒன்றினை அமைத்துள்ளது. இக் குழு அவ்வப்பொழுது பிரதிநிதியாக விளங்கும் (representative) சிறு சிறு மாதிரிகளை ஆராய்ந்து வருகின்றது. அரிசியையோ பருப்பையோ ஒரு பானையிலிட்டு வேகவைக்கும் பொழுது உன் தாயார் இம் முறையைத்தான் கடைப்பிடிக்கின்றாள். அரிசி வெந்துவிட்டதா இல்லையா என்று பார்க்க, அகப்பையால் வேகும் பானையை நன்றாகக் கிளறிவிட்டு ஒரு சில பருக்கைகளை எடுத்து அவை வெந்துவிட்டனவா என்று பார்க்கிறாள், அவை வெந்திருந்தால் முழு அளவும் வெந்திருக்கும் என்று ஊகிக்கின்றாள். அவ்வாறு இல்லையேல் மேலும் சிறிது நேரம் வேக வைக்கிறாள். பொறியாளர் தான் உபயோகிக்கும் சில கருவிகளின் சக்தியை அறிய இம் முறையைத்தான் பயன்படுத்துகின்றார். ஒரு நோயாளியது குருதியின் வெள்ளை, சிவப்பு நுண் எண்ணிக்கைத் தரத்தை அறிய மருத்துவர் உபயோகிப்பதும் இம் முறைதான். இவ்வனைத்திலும் மாதிரிதான் ஆராயப்படுகின்றன. முதலில் நாம் எந்த மக்கட்தொகையை ஆராய வேண்டும் என்பதை அறியவேண்டும். மாநகரிலுள்ள (city) எல்லா மக்களையா, அல்லது மாகாண (state) மக்களையா, அன்றி நாட்டு (country). மக்களையா, அன்றித் தேர்ச்சி பெறாத (unskilled) தொழிலாளர்களையா, அன்றி

வியாபார சமூகத்தினரையா, அன்றிக் கல்லூரி மாணவர்களையா என்று அறிய வேண்டும். ஆராய வேண்டிய மக்கட் தொகையை வரையறுத்தலின் அந்த மக்கள் தொகையிலிருந்து சரியான மாதிரியைத் தேர்ந்தெடுப்பது அடுத்தபடியாகும். மாதிரி தேர்ந்தெடுப்பதில் ஓர் அடிப்படையான தேவை என்ன வெனில் இது **பிரதிநிதித்துவம்** (representative) வாய்ந்ததாகவும், சார்பற்றதாகவும் (unbias) திகழ வேண்டும். எடுத்துக்காட்டாக அஞ்சல் வாயிலாகப் பெற்ற வினுநிரல்களைக் கொண்டு கணக்கிடப்பட்ட புள்ளியியல் ஒருபுறச் சாய்வு நிலைக்கு உட்பட்டது. அஞ்சல் மூலம் வினுநிரல் விடையளிப்பவர்கள் குழுவின் மாதிரியாக (typical) அமைய மாட்டார்கள். **இயைபிலா மாதிரித் தேர்தல் செயன் முறை**களின் (random sampling procedures) ஒருவனுக்கு மற்றொருவன் மாதிரியில் சேர எவ்வளவு வாய்ப்பு இருக்கிறதோ அவ்வளவு வாய்ப்பு முன்னவனுக்கும் இருக்கின்றது. இம் முறை மிகவும் திருப்திகரமானது. எனினும் இது மிகவும் நுண்முறையான பிரச்சினையாகும். பகுக்கப்பட்ட மாதிரித் தேர்தல்களில் (stratified random sample) பல்வேறான தொழில் செய்வோரையும், பல்வேறான கல்வி நிலையில் இருப்போரையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களின் (professional) ஒரு மாதிரி, அனைத்து வயது வந்தோரின் ஒரு தகுதியான மாதிரியாகத் திகழாது. மாதிரியின் உரு அளவு (size) அதன் போதுமைக்கு (adequacy) உத்திரவாதமாகாது. சட்ட ஆக்கப் பிரேரணையை (legislative proposal) ஆதரித்தோ எதிர்த்தோ நூற்றுக் கணக்கான கடிதங்களையும் தந்திகளையும் மாநில முதலமைச்சரோ நாட்டின் பிரதமரோ பெறலாம். இஃது ஒரு புறச்சார்ந்த (bias) மாதிரி எனலாம். ஏனெனில், பல்லாயிரக்கணக்கான மக்கள் தங்கள் கருத்துகளை அஞ்சல் மூலமாகவோ தந்திகள் வாயிலாகவோ தெரிவிக்காது இருக்கின்றார்கள். அவர்கள் வேறுபட்டு நினைக்கலாம். மேலும் ஒரு மாதிரியின் சரிநுட்பம் (precision) உரு அளவு விகிதாச்சாரத்தோடு மிகுதிப்படுவதில்லை. அஃது எண்ணிக்கையின் வர்க்கமூல (square root) விகிதத்தில் மிகுதிப்படுகின்றது. கான்டிரில் (Cantril) என்பார் சிறந்த முறையில் அடுக்கான கலந்த மாதிரித் தேர்தலில் (stratified random sample) 200 நியூயார்க் மாகாண வாழ் மக்கள் எவ்வாறு இராஜ்ய கவர்னர் தேர்தல் முடிவை முன்னறிவித்தனர் (predicted) என்பதைச் சுட்டிக் காட்டியுள்ளார். இம்மாதிரி, 2800 அல்லது 48,000 மக்கள் கொண்ட மாதிரி அறிவிப்பு நிலையை ஒத்தது. இத் தேர்தலில் நாற்பது இலட்சம் மக்கள் வாக்குப் பதிவு செய்தார்கள்(21.151).

இறுதியாக, உளவியல் விஞநிரல்களின் துலக்கல்களை **துண்டு படுத்திக்** (break downs) கூறுபடுப்பதைச் சிறிது சுருக்கமாகச் குறிப்பிடுவோம். முழுக் குழுவினுடைய துலங்கல்களின் சதவிகிதம் அக் குழுவின் சில சிறப்பியல்புகளை வெளிப்படுத்துகின்றது. வயது, பால், கல்வி, வருமானம், இனம் போன்ற இவற்றின் அடிப்படையில் ஒரு குழுவைத் துண்டு படுத்திப் பல சிறு துணைக் குழுக்களாகப் பிரித்து அவற்றின் துலங்கல்களின் சதவிகிதத்தைப் பெறுவதன் வாயிலாகக் கருத்துகளின் (opinions) உளவியல், சமூகவியல் நிருணயிப்புகள் பெறப்படுகின்றன. எவ்வகையான துண்டுபடும் முறை கையாளப்பட வேண்டுமென்று சோதனை செய்யவேண்டிய குறிப்பான கருதுகோளைச் (hypothesis) சார்ந்தது. 'காரணத்தை அறியும் பிரச்சினைக்கு (problem of causation) ஓர் அணுகுதலைத் தருகின்ற சில கருவிகளில் துண்டுபடும் முறை ஒன்றாகும். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாறிகளின் (variables) ஒப்பீடான (relative) முக்கியத்துவத்துக்கு விடை காண இத் துண்டுபடும் முறை பயன்படுகின்றது. கருத்துகள் நிலையாய் (constant) அமைந்தால் மாறிகளுக்கு இடையே உள்ள ஒரே காலத்தில் நிகழ்கின்ற தொடர்பினது அடிநிலையை இத் துண்டுபடும் முறை மேலும் தருகின்றது' (21.175).

## அளவை முறைகள்
## (Scaling Methods)

மனப்பான்மைகளை (attitudes) அளவிடப் பல முறைகள் தோன்றியுள்ளன. இம் மனப்பான்மைகள் சமூக இடைவினைகளில் ஒரு முக்கியப் பங்கினைப் பெறுகின்றன. மனப்பான்மைகள், புலன்காட்சி, ஊக்கமூட்டி மனவெழுச்சி சார் செயன் முறைகளின் ஏறக்குறைய நிலைபேரான அமைப்பு முறைகளாகும். இவை ஒருவிதமான எதிர்நோக்கும் செயலறிவை (expectancy experience) ஒரு புறமும், மறுபுறம் துலங்கத் தயாராக இருக்கும் நிலையினையும் கொண்டிருக்கின்றன. ஆனால், இந் நிலைகளை உற்று நோக்க முடியாது. அதனால் இவற்றை மறைமுகமாகவே அளத்தல் இயலும். அளவீட்டிற்கு ஓர் அளவை (scale) தேவைப்படுகின்றது. 'சுருங்கக் கூறின் இந்த அளவை முறையில் தனியனின் ஏற்பு, ஏற்பின்மையுடைய தெரிவிப்புகளில், எதிர்வினைகளையும் தரமிடப்பட்ட உருப்படிகளுக்கோ கருத்துகளுக்கோ இசைவு அல்லது மறுத்தலையும் வார்த்தைகளால் தெரிவிப்பது தேவைப்படுகின்றது. சார்பற்ற, எதிரற்ற (proneness of

conness) தன்மையுடைய ஓர் எண்ணளவு அளவையுடன் கூடிய ஒரு பதவியை ஒதுக்கிவைக்கவும் தனியனை அனுமதிக் கவும்கூடிய உருப்படிகளைக் (items) குறிக்கின்ற உருப்படி களின் அமைப்பின் (set) எதிர்வினைகளின் கோலமும் கூட்டு முடிவும் (summation) ஏதாவதொரு பொருளைப்பற்றிய தனிய னின் கருத்து அல்லது மனப்பான்மையை ஊகிக்க வழியாக அமைகின்றது' (20.210). அளவைகளைத் தயார் செய்யப் பல முறைகள் உள்ளன. ஆனால், கொடுக்கப்பட்டுள்ள தனியனுக்கு ஏற்பு, ஏற்பின்மையின் தொடர்ச்சியோடுகூடிய ஒரு பதவியை ஒதுக்கிவைப்பதை இம் முறைகள் அடிப்படையாகக் கொண்டுள் ளன. தனியனால் எழுதப்பெற்ற விளக்கப்பட்டியலிலிருந்து (statements) ஆராய்வுபெற்ற தலைப்புக்குத் தனியன் சாதக மானவனா நடுநிலையானவனா சாதக மற்றவனா என உய்த்துண ரலாம். தர்ஸ்டன் (Thurstone) என்பார் அளவைகளைத் தயாரிக்க சம இடைவெளிகொண்ட அளவீட்டு முறையைப் பயன்படுத்தினர் (1929). லிக்கெர்ட் (Likert) என்பார் கூட்டு முடிவுத்தரமிடல் (summated ratings) முறையைப் பயன்படுத்தி னர் (1932). கில்ஃபோர்டு (Guilford) என்பார் நாட்டுணர்ச்சி பற்றி ஓர் அளவைத் தயாரிக்க இணையீட்டு ஒப்புமை(pair-comparison) முறையைப் பயன்படுத்தினர் (1931). இரண்டாம் உலகப் போரின்போது கட்மான் (Guttman) என்பார் நிலையாயிருத் தலில் (consistency) அளவைக் கண்டறிய அளவைச் சிக்கல்முறை யைப் (scalogram) பயன்படுத்தினர் (1941). பொகார்டஸ் (Bogardus) என்பார் நாட்டுணர்ச்சிகளைப்பற்றிய மனப்பான் மைகளை அளவிடச் சில சமயங்களில் குழு—ஒழுங்கு முறை (group order method) என்று அழைக்கப்படும் முறையை அமைத் தார் (1925). இம்முறை பல்வேறு சாதிகளையும் கோட்பாடுகளை யும் (creeds) அளவிட, நமது நாட்டில் தழுவி அமைக்கப்பட்டுள் ளது. இவ்வனைத்து முறைகளின் சோதனை உருப்படிகளும் (test items) மிகக் கவனமான தேர்வினைக் கொண்டு அமைந்துள் ளன. தர்ஸ்டன் (Thurstone) பின்பற்றிய முறை நடுவர்களைப் (judges) பயன்படுத்திப் பின்னர் அளவைகள் தயாரித்தலைக் கொண்டுள்ளது.

## பரிசோதனை முறை
## (Experimental Method)

பரிசோதனைமுறை தனிமைப்பாடு (isolation), மாறுபாடு (variation), அடுத்தடுத்துச் செய்தல் (repetition) ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். இம் முறை, ஆய்வாளரால் நிலைமைகளைக்

கட்டுப்படுத்தப் பெறும் (control of conditions) தன்மையைப் பெற்றது. சில தெரிந்த நிலைமைகளில் என்ன நேருகின்றது என்பதை ஆய்வாளர் கூர்ந்து நோக்குகிறார். சமூக இடைவினையின் பிரச்சினைகள் மிகவும் சிக்கல் வாய்ந்தன என்பது தெளிவு. இதனால் இந் நிலைமைகளைக் கட்டுப்படுத்துதல் மிகவும் சிரமமான தொன்றாகும். அன்றியும் ஒவ்வொரு நிலைமையும் எந்த அளவில் பங்குகொண்டுள்ளது என்பதைச் சரியாக நிருணயிப்பதும் கடினமானதாகிறது. இக் குறைகள் இருந்தபோதிலும் பல நன்கு திட்டமிட்ட ஆராய்ச்சிகள் இம் முறையில் நடைபெற்றுள்ளன. சமூக இடைவினைப்பற்றிய மிகுதியான தகவலை ஆய்வுகள் வாயிலாக நாம் பெற்றுள்ளோம். இதனைப் படிப்போரின் கவனம், சிகாகோ கருத்தரங்குக்குச் (chicago symposium) செலுத்தப் படவேண்டும் (22). சமூகக் கட்டுப்பாடு (social control) நுண்முறைகளுக்குச் (techniques) சோதனை ஆராய்ச்சிகள் ஒரு சிறிது உட்காட்சியைக் கொடுத்துள்ளன. 'குழுக்கிலி (group panic), மக்களாட்சித் தலைமை (democratic leadership), ஆதிக்கத் தலைமை (authoritarian leadership), தலையிடாத் தலைமை (laissez faire leadership), குழுமனமுறிவு (group frustration), வாக்களிக்கும் தருவாயில் சார்பெண்ணம் செயல்படும் தன்மைபற்றிய இவைபோன்ற அண்மைக் காலத்திய ஆய்வுக்கூடச் சோதனைகள் மூலம் பெற்ற சமூக உளவியலில் நமது உட்காட்சிகளின் வளர்ச்சி இதே விசையில் (same spurt) குழு நடத்தையின் ஓர் ஒழுங்கமைப்பான சமூக உளவியலின் வளர்ச்சியில் நடைபெறுகின்றது என்ற திட நம்பிக்கைக்கு இட்டுச் செல்கின்றது' (22.22).

சமூக விசாரணைகளில் (investigation) பெரும்பாலும் கட்டுப்படுத்தப்பட்ட குழு (control group) முறையே கையாளப் படுகின்றது. கட்டுப்படுத்தப்பட்ட குழு, பரிசோதனைக் குழு (experimental group) ஆகிய இரு குழுக்கள் இச் சோதனைகளில் பயன்படுத்தப்படுகின்றன. இயன்றவரை இவ்விரு குழுக்களின் எண்ணிக்கை (number), பால் (sex), கல்வி (education) மற்றும் பல மாறிகளும் (variables) ஒத்ததாக அமைந்திருக்கின்றன. இவ்விரு குழுக்களை ஒத்ததாகச் செய்ய, சில சமயங்களில் நுண்ணறிவுச் சோதனை (intelligence test), மனப்பான்மைச் சோதனை (attitude test), அக்கறைச் சோதனை (interest test) போன்ற இன்ன பிற சோதனைகளும் பயன்படுத்தப்படுகின்றன. அப்போது அவை சமமற்ற (un-equal) தூண்டலுக்கு (stimulation) உட்படுகின்றன. ஒரு குழுவிற்கு ஒரு குறிப்பிட்ட தூண்டல் காட்டப்படும்போது மற்றொன்றுக்குக் காட்டப்படாமலிருக்கலாம்.

இரு குழுக்கள் மீண்டும் சோதனை செய்யப்பட்டு, செயல் நிறைவேற்றம் (performance) அல்லது அக்கறைகள் (interests) அல்லது மனப்பான்மைகளில் (attitudes) பெறப்பட்ட சமமற்ற தன்மைகளுக்குக் (inequalities) கொடுக்கப்பட்ட மாறிகள் (variable introduced) காரணமாகக் கூறப்படலாம்.

சமமான இரு குழுக்களை முதலில் பெற இயலவில்லையெனில் ஒரு குழுவின் தொடக்கச் செயல் நிறைவேற்றத்துக்கும் இறுதிச் செயல் நிறைவேற்றத்துக்கும் இடையே உள்ள வேறுபாட்டின் அடிப்படையில் மாறிய நிலைகளின் விளைவை நாம் அளவிடலாம். நாம் கொள்கைபரப்பலின் (propaganda) விளைவை அறியவேண்டுமாயின் எடுத்துக்காட்டாக, ஒரு குழுவைத் தேர்ந்தெடுத்து அதற்கு மனப்பான்மைச் சோதனையை (attitude test) அளித்துத் தொடக்கச் செயல் நிறைவேற்றத்தைக் காணவேண்டும். பின்னர், அக் குழுவைக் கொள்கைபரப்பலுக்கு உட்படுத்த வேண்டும். இறுதியாக முன் கொடுத்த மனப்பான்மைச் சோதனையை மீண்டும் அளித்துக் கொள்கைபரப்பலால் ஏதேனும் விளைவு ஏற்பட்டுள்ளதா எனப் பார்க்கவேண்டும். குறிப்பிட்ட பிரச்சினையையோ அன்றி ஒரு குழுவையோ ஆய்வு செய்யப் பல வழிகளில் சோதனைகள் உருவாக்கப் பெறுகின்றன. போருக்கு எதிரான கொள்கைபரப்பலின் விளைவை அறிய வேண்டுமாயின் போரைப்பற்றி ஒருவனது மனப்பான்மையை அளவிட நாம் ஒரு சோதனையை அளிக்கலாம். இச் சோதனை வாயிலாக நாம் மிதமான சமாதானம் நாடுகின்ற (pacific) குழு ஒன்றையும் மிதமான போர்க் கொள்கையுடைய (milttaristic) குழு ஒன்றையும் எடுத்துக்கொள்வோம். இவ்விரு குழுக்களையும் கொள்கைபரப்பலுக்கு உட்படுத்தி மீண்டும் மனப்பான்மையையும் அளவிடுவோம். மேலும், சமாதானம் நாடுகின்ற குழுவினரிடையேயும் (pacific) போர்க் கொள்கையுடையோரிடையேயும் போருக்கு எதிரான கொள்கை பரப்பலின் விளைவை நிருணயிக்கலாம்.

சமூகத்தரங்கள் (social norms) எவ்வாறு இயங்குகின்றன என்பதை நிருணயிக்கச் ஷெரீஃப் (Sherif) என்பாரால் உருவாக்கப் பெற்ற முக்கியமான சோதனையையும்கூட நாம் இங்குக் குறிப்பிடலாம் (23). ஒரே காலத்தில் செயலில் ஈடுபடுகின்ற வெவ்வேறுபட்ட தனியன்களின் எல்லைகளும் (ranges) தரங்களும் (norms) ஓரிடத்தில் கூடுகின்றன என்பதைத் தானசைவு (auto-kinetic) விளைவுகளைப் பயன்படுத்தியும் சமூகக் காரணிகளை அறிமுகப்படுத்தியும் ஷெரீஃப் என்பார் விளக்கிக் காட்டியுள்ளார். இந்த

ஆய்வு, ஆய்வுக்கூட நிலைமையில் ஒரு தரத்தை அமைத்தலைப் பற்றிய ஆய்வாகும். இது சமூகத் தரங்களை உண்டாக்குதலின் உள்ளடங்கிய அடிப்படை உளவியல் சார் செயல்முறைகளைக் காட்டுகின்றது. சமூகத் தரங்களின் பிரச்சினையையும் ஷெரீஃப் என்பாரின் ஆய்வின் சோதனை அமைப்பையும் (experimental design) பின்னைய அத்தியாயத்தில் கூற அவகாசம் உள்ளது.

எப். எச். ஆல்போர்ட் (F. H. Allport) என்பார் பலர் முன்னிலையில் ஒருவனுடைய செயல் நிறைவேற்றம் (performance) எவ்வகையில் மாறுதல் அடைகின்றது என்பதனை ஆயப் பரிசோதனை முறைகளைப் புகுத்தியுள்ளார். சமூக **வசதியளிப்பின்** (social facilitation) விளைவுகளை அவர் காட்டியுள்ளார். ஒரு தனியன் தனியாக வேலை செய்யும் பொழுதும், மற்றவர்களோடு சேர்ந்து வேலை செய்யும் பொழுதும் அவனுடைய வேலை அளவின் (out put) தரத்தையும் (quality), அளவையும் (quantity) ஆராய்ந்தார். 1920ஆம் ஆண்டிலேயே அவர் தனியன்கள் பலருடன் இருக்கும்பொழுது ஒரு வாசனையின் (odour) இன்பத் தரத்தையும் (pleasantness), வெறுப்புத் தரத்தையும் (unpleasantness) பற்றிப் புறக்கோடியான (extreme) தீர்ப்புகள் தரத் தயங்குவார்கள் என்பதையும் அவர்கள் தனியாக இருக்கும் பொழுது அவ்வாசனையைப்பற்றிப் புறக்கோடியான தீர்ப்புகள் தரத்தயங்குவதில்லை என்பதையும் கண்டார் (6).

## சமூக உளவியலில் பயன்படுத்தப்பெறும் முறைகளின் மதிப்பீடு

### (An estimate of methods used in Social Psychology)

இவ்வத்தியாயத்தை முடிப்பதற்குமுன் சமூக உளவியலின் ஆராய்ச்சி முறைகளைப்பற்றிய சில பொதுவான குறிப்புகளை மேற்கொள்ளுவோம். ஒரு பிரச்சினையைத் தீர்க்கவோ அன்றி முன்னதாகத் தெரிவித்த விடையைச் சோதிக்கவோ ஆராய்ச்சி நடத்தப்படுகின்றது. இஃது உற்று நோக்கல் செய்வதைக் கொண்டுள்ளது. இது சேகரித்த விவரங்களைப் பாகுபடுத்தவும் அவற்றின் முழு முக்கியத்துவத்தை அறியவும் பயன்படும் புள்ளியியல் முறைகளையும் உள்ளடக்கியுள்ளது. சில பிரச்சினைகளைப் பரிசோதனைக்குட்படுத்த வேண்டிய அவசியமில்லை. மாறிகளைக் (variables) கட்டுப்படுத்தும் நிலை இவற்றிற்குத் தேவையிரா. சமூகப் பொருளாதார ஏற்றத்துக்கும், ஒரு பொருள்பற்றிய கருத்தின் வகைக்கும் இடையேயுள்ள தொடர்பை நிருணயிக்க நாம் சோதனை செய்தல் இயலாது. தனி

யன்களின் சமூகப் பொருளாதார ஏற்றத்தை அல்லது அவர்களது கருத்துகளை நாம் கட்டுப்படுத்த இயலாது. இவ்விரண்டையுமே ஆய்வாளரால் கையாள இயலவில்லை. எந்தக் கருத்துகளைக் கொடுக்கப்பட்டுள்ள ஒரு பகுதி மக்கள் கொண்டுள்ளனர் என்பதையும் சமூகப் பொருளாதார ஏற்றத்துக்கு அவர்கள் தொடர்புடையன்ரா என்பதையும் மட்டுமே ஆய்வாளரால் ஆயமுடியும். எனவே, ஒரு பரிசோதனை, ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மாறிகளைச் கட்டுப்படுத்தும் நிலைகொண்டது. ஆய்வாளர் திருத்தி மாற்றி அமைக்கும் மாறிகள் **சுயமாறிகள்** (independent variable) எனப்படும். புற ஆய்வின் சாரம் என்னவெனில் சுயமாறியை மாற்றலும், சார்ந்த மாறியின் (dependent variable) மாற்றங்களை உற்று நோக்கலுமாகும். சுயமாறிக்குச் சார்ந்த மாறியின் மேலுள்ள விளைவு என்ன? வேறு சொற்களில் கூறினால் ஆய்வாளர் தூண்டுதலை (stimulus) மாற்றி அமைத்துத் துலங்கலில் ஏற்படும் மாறுதல்களை ஆய்கிறார். ஆய்வாளர் ஒன்றைத் தவிர மற்றெல்லா மாறிகளையும் சுய (independent) நிலையாக வைத்திருத்தல் வேண்டுமென நம்பப்படுகின்றது. மிகத் திறமைவாய்ந்த புள்ளியியல் முறைகளைப் புகுத்துதல் மூலமாகவும் பரிசோதனை அமைப்புகளின் முன்னேற்றத்தினாலும் ஓர் அமைப்புடைய பல சுய மாறிகளைக் கையாள முடிகின்றது. சமூக நிலைகளைப் பிரித்தல் அல்லது மாற்றி அமைத்தல் மிகவும் கடினமானது என்பதை நாம் அறியவேண்டும். மேலும், சமூக நிலைகளில் பலவற்றை ஆய்கூடங்களில் உருவாக்க இயலாது. ஃபெஸ்டிஞ்சர் (Festinger) குறிப்பிடுவது போன்று 'கட்டுப்படுத்தப்பட்ட ஆய்கூட ஆய்வானது (controlled laboratory experiments) வாழ்க்கையில் நேரும் ஓர் உண்மையான நிலைமையைச் சிறு அளவில் உருவாக்கும் முயற்சி அன்று. இது தூய நிகழ்ச்சியை (pure case) அமைக்கும் ஒரு முயற்சியாகும். வேறு முறையில் கூறினால் கட்டுப்படுத்தப்பட்ட ஆய்கூடப் புற ஆய்வானது முக்கியம் வாய்ந்ததாகக் கருதப்படும் ஒரு காரணியை அல்லது காரணிகளின் கலப்பினை (cluster of factors) எடுத்துக்கொள்ளவும் மற்றக் காரணிகளின் நன்கு கட்டுப்படுத்தப்பட்ட இடப்பேற்றில் (context) ஒழுங்கமைப்பாக மாற்றியமைக்கவும் செய்யும் ஒரு முயற்சியாகும். இம் முறைகளினால் இக் காரணிகளுக்கு இடையே உள்ள சரியான செயற்தொடர்புகளைப்பற்றியும் சமூக நிலைமைகளில் மக்களின் நடத்தைப்பற்றியும் சிறந்த அறிவினை அமைத்துக்கொள்ளத் தொடங்குகின்றோம்' (22.34).

சோதனையை நடத்துவதற்கு முன் ஆய்வாளர் சமூக நிலைமைகளிலும் (social situations) சமூக நடத்தைகளிலும் உட்

காட்சியை முன்னரே பெற்றிருத்தல் அவசியம். எனவே, ஆய்கூட ஆராய்வுக்குச் சிறப்பான நுண்முறையைத் திறம்படப் பயன் படுத்தக் கட்டுப்படுத்தப்பெறு நிலைமைகளில் பெற்ற உற்று நோக்கல்களும், மிகக் குறைவாகக் கட்டுப்படுத்தப்பெற்ற நிலை மைகளில் (less strictly controlled conditions) பெற்ற கள ஆய்வுகளும் (field investigations) மிக இன்றியமையாத முன் தேவைகளாகும் (pre-requisites). சமூக நிலைமைகள் மிகவும் சிக்கலானது என்பதையும் மறத்தல் கூடாது. ஆய்கூடப் புற ஆய்வுத் துறையில் முன்னேற்றம் எவ்வாறாய் இருப்பினும் உற்று நோக்கல் முறைகளும் (observational method), கள ஆய்வு முறைகளும் (field investigations) சமூக உளவியலுக்கு நிரந்தர மான சிறப்புக் கூறுகளாகத் திகழ்கின்றன.

சமூக உளவியலில் பரிசோதனை ஆய்வுகள் கொள்கை முறை யிலன்றி (theoritically) நடைமுறையிலும் (practically) மிகப் பெரும் மதிப்பினைக் கொண்டுள்ளன என்பதை லெவின் (Lewin) என்ற பெயரொடு தொடர்புகொண்ட இரு ஆய்வுப் பிரிவுகளான செயலாராய்ச்சியிலும் (action research) குழு இயங்கியலிலும் (group dynamics) காணலாம். உளவியல் வாழக்கையின் பல்வேறு அம்சங்களின் சமூகக் காரணிகளின் முக்கியத்துவத்தை லெவினின் ஆராய்ச்சிகள் காட்டியுள்ளன. போராட்டம், அவாவு நிலை (level aspiration) செயற்பிரிவுகளின் நினைவூட்டலும், மறுதொடக்கமும்பற்றிய ஆய்வுகள் சமூகச் செல்வாக்குகளின் விளைவுகளைத் தெளிவாக வெளிப்படுத்துகின்றன. மனிதனை எதிர் நோக்கியுள்ள, சார்பெண்ணங்கள் கொடுமையை எதிர் நோக்கல் (facing oppression) தொழிற்சாலையில் போராட்டம் போன்ற பல்வேறு சமூகப் பிரச்சினைகளின் ஆய்வுகள், சமூகச் செயல் முறைகளை அறிதற்கு இட்டுச் செல்வதோடுமட்டுமன் றிச் சில சமூகப் பிரச்சினைகளுக்கு விடை காணவும் வழி வகுக் கின்றன என்பதை லெவின் உணர்ந்தார் (24). இந்தத் திட நம்பிக்கையே அவரைச் செயலாராய்ச்சிக்கு (action-research) இட்டுச் சென்றது. சமூகப் பிரச்சினைகளின் நீக்கமும் தடையும் (elimination and prevention) பற்றித் தொடர்புள்ள பற்பல சமூகச் செயலாண்மைகளும் (social agencies) நாட்டுக் குழுக் களும் (civic groups) இருக்கின்றன. இந்தச் சமூகச் செயலாண் மைகளுடன் (social agencies) ஒத்துழைப்பதன் மூலம் சமூக அறிவியலறிஞர் உண்மை வாழ்க்கை நிலைகளில் (real life condition) சமூக மாறுதலின் செயல் முறைகளை ஆழ்ந்தாராய்ந்து கையாளுவதுடன் தகுந்த மாறிகளை அளவிட முடியும் என்பதை லெவின் காட்டியுள்ளார். இச் சமூகச் செயலே ஆராய்ச்சியினிடம்

பிணைப்பதின் வாயிலாகச் சமூக அறிவியலறிஞன் சமூக அடிப் படைச் செயல் முறைகளை அடையும் வழியைப் பெறுகின்றான். இல்லாவிடில், அவனால் ஆய்வு செய்ய இயலாது என லெவின் உணர்ந்தார். சமூக அறிவியலறிஞன் தன் சொந்த முயற்சியில் சமூக மாறுதலைத் தோற்றுவிக்கும் ஒரு நிலையில் இல்லை. ஆனால், சமூகச் செயலாண்மைகளுடன் ஒத்துழைப்பதன் மூலம் சமூக மாறுதலை உண்டாக்க முயற்சி செய்யலாம். செயலாராய்ச்சியை வற்புறுத்துவதின் வாயிலாக லெவின் தொழிற்சாலைகட்கும் அலு வலகங்கட்கும், மேலும் சமையலறைகட்கும்கூட பரிசோதனைச் **செயல் முறைகளை** மேற்கொள்ள சமூக உளவியலார்களைத் (social psychologists) தூண்டுவித்தார்.

லெவின் **செயலாராய்ச்சியில்** (action research) செயலை யும், ஆராய்ச்சியையும் தொடர்புபடுத்திக் **குழு இயங்கியலில்** அவர் பரிசோதனை ஆய்வையும் கொள்கைப் பகுப்பாய்வினையும் (theoritical analysis) தொடர்புபடுத்தினார். இவர் சமூக உள வியல், சமூகவியல், பண்பாட்டு மனிதவியல் ஆகியவற்றினை ஒன்று சேர்த்துக்கொண்டுவர விரும்பினார். அப்போது இது சமூக வாழ்க்கை விவரிப்பு, குழு வாழ்க்கையில் கொள்கைக் கூறுபடுப்பு, சமூக இடைவினையின் பரிசோதனை ஆய்வு ஆகியவற் றைக் கொண்டதாக இருக்கும். குழுபற்றிய பொதுமைக் கருத்து (concept) மறைபொருளிலுள்ள பொதுமைக் கருத்தன்று (mystical concept). ஆனால் குழுக்கள் பரிசோதனைக்குட்படுமாறு சிறிதளவு திட்டவட்டமானவை (concrete). சிறு குழுக்களின் பரிசோதனை ஆய்வுகள் மூலம் பெரிய அளவுச் சமூகச் செயல் முறைகளைப்(large-scale social processes)பற்றி நன்கு தெரிய வழிகாட்டுகின்றது என அவர் விளக்கிக் காட்டினார். 'ஒரு குழுவின் சாரம் அதன் உறுப்பினர்களின் ஒருமிப்பு அல்லது வேறு பாடன்று (similiarity or dissimiliarity); ஆனால் அவர்களிடையே ஒருவர்க்கொருவர் சார்ந்திருக்கும் (inter-dependence) தன்மை யாகும். ஒரு குழு 'இயக்கத் தன்மையான முழுமை' (dynamical whole) எனச் சிறப்பாகக் குறிக்கப்பெறுகின்றது. அதன் பொருள், துணைப் பகுதியிலுள்ள நிலைமைகளின் மாறுதல் மற்ற எந்த துணைப் பகுதியின் நிலைமைகளையும் மாற்றுகின்றது என்ப தாகும். குழுவின் துணைப் பகுதிகளின் (sub-party) உறுப்பினர் களது ஒருவருக்கொருவர் சார்ந்திருத்தலின் அளவு 'தளர்ச்சி யான' திரளிலிருந்து (loose-mass) சிறிது சிறிதாக ஒரு நெருக்க மான அடிப்படை அலகுவரை மாறுபடுகின்றது' (25.54). ஒரு குழுவின் உறுப்பினர் பதவி (membership) குழுவுடன் ஒன்றுதலை முன்னெண்ணுவதிலும் (pre-supposes) ஒத்துழைப்பின் மூலம்

குழுவினது இலக்குகளின் (goals) முன்னேற்றத்தை அடைவதிலும் அக்கறை கொள்கின்றது. ஒரு குழு மற்றக் குழுக்களுடன் கொண்டுள்ள தொடர்புகளும் சூழ்நிலையுமாகிய புறவயத் தொடர்புகளின் வாயிலாகக் கருதப்படலாம் அல்லது இதை உருவாக்கிய உறுப்பினர்களுக்கிடையே உள்ள தொடர்புகளாகிய அதன் அகவயத் தொடர்புகளின் (internal relations) வாயிலாகக் கருதப்படலாம். அகவயத் தொடர்புகள்பற்றிச் சிறப்பான ஆய்வுப் பணிகள் நடத்தப் பெற்றிருக்கையில் புறவயத் தொடர்புகள் (external relations) உளவியலறிஞரால் ஆய்வு செய்யப்படவில்லை. இருப்பினும் சமூகவியலாரும் மனிதவியலாரும் இவற்றைப்பற்றித் தொடர்பு கொண்டுள்ளனர். சிறு குழுக்களினுடைய பரிசோதனை ஆய்வுகளின் உண்மையான முடிவுகள்பற்றிய மேலும் சில குறிப்புகள், பின்னைய அத்தியாயத்தில் தரப்பெற்றுள்ளன.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. DENNIS, University of Pittsburg Press, 1951. — *Current Trends in Social Psychology.*
2. MURPHY and NEWCOMB, Harper, 1937. — *Experimental Social Psychology.*
3. MURPHY, Basic Books, 1953. — *In the Minds of Men.*
4. MCDOUGALL, — *Introduction to Social Psychology.*
5. ROSS, Macmillan, 1908. — *Social Psychology.*
6. ALLPORT, Houghton Mifflin, 1924. — *Social Psychology.*
7. SHIRLEY, University of Minnesota Press, 1931. — *The First Two Years.*
8. VAN ALSTYENE, 1932. — *Play Behaviour and Choice of Materials of Social Children.*

9. BRIDGES, 1931. — *Social and Emotional Development of the Pre-School Child.*

10. ADORNO Et AL, Harper, 1950. — *The Authoritarian Personality.*

11. ROGERS, Houghton, 1942. — *Counselling and Psychotheraphy.*

12. ELTON MAYO, Routledge and Kegan Paul, 1949. — *The Social Problems of Industrial Civilization.*

13. LINDZEY (ed), Addison-Wesley, 1954. — *Handbook of Social Psychology.*

14. SULLIVAN, Norton, 1953. — *The Interpersonal Theory of Psychiatry.*

15. ADLER, Perma-Books, 1949. — *Understanding Human Nature.*

16. FREUD, Perma-Books, 1955. — *A General Introduction to Psychoanalysis.*

17. FLUGEL, Pelican, 1955. — *Man, Morals and Society.*

18. BROWN and GHISELLI, McGraw Hill, 1955. — *Scientific method in Psychology.*

19. KUPPUSWAMY, 'A Statistical Study of Attitude to the Caste System in South Inida', 1956, 42. — *Journal of Psychology.*

20. KRECH and CRUTCHFIELD, McGraw-Hill, 1948, — *Theory and Problems of Social Psychology.*

21. CANTRIL, — *Gauging Public Opinion.*
Princeton University Press, 1944.

22. MILLER, — *Experiments in Social Process.*
Mc Graw-Hill, 1950.

23. SHERIF, — *The Psychology of Social Norms.*
Harper, 1936.

24. LEWIN, — *Resolving Social Conflicts.*
Harper, 1948.

25. LEWIN, — *Human Relations.*
Frontiers in Group Dynamics, 1947. Vol. 1

# 3. தனியனும் சமூகமும் பண்பாடும்
## (THE INDIVIDUAL, SOCIETY AND CULTURE)

### சில முன் தொடக்கக் குறிப்புகள்
### (Some preliminary remarks)

நாம் மேலே பார்த்தது போன்று, சமூக உளவியல், ஒருவர்க்கொருவர் கொள்ளும் இடைவினையில் மனிதர்களைப் பற்றிப் படிக்கும் படிப்பாகும். தனக்கென ஒரு பண்பாட்டுக் கோலத்தைக் கொண்ட ஒரு சமூகத்திலேயே ஒவ்வொரு குழவியும் பிறக்கின்றது. குழவி (infant), ஓர் அமைப்பையும் செயலையும் கொண்ட உடலையுடைய ஓர் உயிரி (organism). மனிதன் ஒரு நீண்ட பரிணாம வளர்ச்சி வரலாற்றின் மாற்று விளைவு (product). குழந்தைகள் அனைத்தின் உடல்களும் பெரும்பாலும் ஒரே அமைப்பையும் செயலையும் கொண்டுள்ளதால் குழந்தை பல வழிகளில் மற்றக் குழந்தைகளைப் போன்றே இருக்கின்றது. இருப்பினும் எந்த இரு குழந்தையும் சரியாக ஒன்று போலவே இருப்பதில்லை. இத் தனித்தன்மை வாய்ந்த உயிரி ஒரு சமூகக் குழுவான குடும்பத்தில் பிறக்கின்றது. குழந்தைக்கும் அதன் தாய்க்கும், அதன் குடும்பத்திலுள்ள மற்ற உறுப்பினர்களுக்கும், அதன் குடும்பத்திற்கு வெளியேயுள்ள சில மனிதர்களுக்கும் இடையே தனியாள் இடைத் தொடர்புகள் (inter personal relationships) ஏற்படுகின்றன. தாய் உண்பிக்கவில்லையென்றாலும், பாதுகாப்பளிக்கவில்லை என்றாலும் குழந்தை பிழைத்து வாழ்வதில்லை. குழந்தையைத் தாய் உண்பித்தலும், பராமரித்தலும் அவள் எந்தப் பண்பாட்டுக் குழு (cultural group)வைச் சேர்ந்தவளோ அதனைப் பொறுத்து அமைகின்றது. குடும்பத்தில் உள்ள மக்கள் காரியங்களைச் செய்வதிலும், அவற்றைக் காண்பதிலும், அவற்றை உணர்வதிலும் அவர்களுக்கே வழக்கமான வழிகளைக் கொண்டுள்ளனர். புரோட்டோபிளாசத்தின் (protoplasm) சேர்ப்பான குழந்தை வளர்ச்சியடைந்து வீட்டில் உள்ள மற்ற மனிதர்களுடன் எதிர்வினை கொள்கின்றது. மேலும், சில ஆண்டுகளுக்குள் பண்பாட்டுக் குழுவின் ஒரு மாதிரிப் படிவமாய் அமைந்த (typical) உறுப்பினனாக ஆகின்றது. இருப்பினும் காரியங்களைச் செய்வதிலும், அவற்றைப்பற்றி உணர்வதிலும்,

தனக்கே உரித்தான தனித்தன்மை வாய்ந்த வழிகளைக் கொண்ட வனுக அவன் இருக்கின்முன். ஆனுல், அவன் குழுவின் பெரும் பாலான வழக்கமான வழிகளைப் பெற்றுள்ள ஓர் உறுப்பினனும் ஆவான்.

எனவே, சமூக நடத்தை தனியன், சமூகம், பண்பாடு ஆகிய மூன்று மாறிகளை உள்ளடக்கியது. இம் மாறிகள் சம்பந்தப் பட்ட பிரச்சினைகளைச் சுருக்கமாக விவரிப்பதற்கெனவே இவ்வத்தி யாயம் ஒதுக்கப்பட்டுள்ளது. இதனுல் எஞ்சியுள்ள அத்தி யாயங்களில் நமது செயலைப்பற்றிய தகுதியான ஒழுங்கமைப் பினைப் பெற முடியும்.

## தனியன் (The Individual)

உணவு செரித்தல், மூச்சு விடுதல், குருதியோட்டச் செயல்கள், உடற்கழிவு நீக்கம் இவற்றை இயங்கச் செய்கின்ற இணைப்பான நரம்புத் தசையினுன் (Neuro-Muscular) செயல்கள் மேலும் இவைபோன்ற அடிப்படையான உயிரியல்சார் செயல் முறைகளுடன் (fundamental physiological processes) கூடிய ஓர் உயிரி குழந்தையாகும். இவ்வுடலியல்சார் செயன் முறைகளின் அடிப்படையில் சில அடிப்படையான உந்துகளாகப் (drives) பசி (hunger), உடற்பாதுகாப்பு, பால் போன்றன அமைகின்றன. இவ்வுந்துக்கள் அல்லது ஊக்கிகள் உடலில் உயிரியல்சார் தேவை களினின்றும் தொடங்குவனவாகும், மேலும், இவை தனியன் பிழைத்து வாழ்வதற்கும், இனங்கள் (species) பிழைத்து வாழ்வ தற்கும் முக்கியமாகும். எனவே, அவை உயிரியத் தோற்ற (biogenic) உந்துக்கள் அல்லது உயிரியல் தோற்ற ஊக்கிகள் என்று அழைக்கப்படுகின்றன. மேலும், இவை கற்கப்பட்டவையன்று, ஷெரீஃப் (Sherif) என்பார் எழுதுவது போன்று 'பேரரசுக் குள்ள அல்லது குடியேறியுள்ள, மேற்றிசைக்குரிய அல்லது கீழ்த்திசைக்குரிய, மிகவும் தொழில் வயமான அல்லது பழமை யான, ஓய்வு எடுக்கும் வகுப்பு அல்லது வறுமைப் பிடிப்புள்ள, கிறித்துவ அல்லது மத நம்பிக்கையற்ற எத்தகைய சமூக அமைவு ( social setling ) அல்லது 'பண்பாட்டுக் கோலம்' (cultural pattern) கொண்டவனுக இருப்பினும் மனிதன் உண்கி முன், குடிக்கிறுன், மூச்சுவிடுகிறுன், உறங்குகிறுன். மிகவும் இன்றியமையாத முற்றகைமைகளில் (pre occupations) சிக்கலை முன்னுக்குக் கொண்டு செல்ல தன்னை எளிதாக வைத்துக்கொள்ள முயற்சிக்கிறுன்—அஃதாவது உயிரியல் சார் (biological) உயிரியாக (organism) உயிருடன் இருப்பதற்காக வாழ்கிறுன்' (1.19).

பல்வேறான சமுதாயங்களுக்கும் (nationalities), பண்பாடுகளுக்கும் (cultures) மட்டும் இவை அடிப்படைத் தேவைகள் அல்ல. இவை எல்லா மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் கூடப் பொதுவனவாகும். தனியன் வளரும்போது இவ்வடிப்படைத் தேவைகளுக்கு மன நிறைவளிக்கின்ற பல்வேறு வகைத்துறைகளைப் (means) பெறுகின்றான். தனியனுடைய மற்றொரு முக்கிய அம்சம் அவனுடைய எளிதில் வளைந்து கொடுக்கும் தன்மையும் (flexibility), செயல்களை மாற்றம் செய்கின்ற திறனுமாகும். உயிரியின் மற்ற அடிப்படையான சிறப்புக் கூறு கற்கும் திறனாகும். இத் திறனிலும்கூட மனிதன் விலங்குகளுடன் பங்குகொள்ளுகிறான். புதிய நிலைமைகளுக்குத்தக அமைத்துக்கொள்ளுதல் (adaptability) எல்லா வாழும் உயிரினங்களுக்கும் பொதுவானதாகும். நரம்பியல் அமைப்பின் சிக்கலான தன்மையின் மிகுதிப்பாட்டுடன் உயிரியல்சார் பரிணும வளர்ச்சியில் இனங்களிலிருந்து இனங்களுக்கு நுண்ணறிவிலும், கற்கும் திறனிலும் மிகுதிப்பாடு ஏற்படுகின்றது. சில நிலையான உந்துக்களையும் மேலும் வளையும் தன்மையினையும் அல்லது கற்கும் திறனையும் மனிதன் மரபுரிமையாகப் பெறுவதை (inherits) நாம் பார்க்கிறோம். ஒருவனது கற்குந்திறனின் மேலான வரம்பு உயிரியல் சார்பில் கொடுக்கப்பெற்றதாகும். இருப்பினும் அடிப்படைத் தேவைகளின் உண்மையான இயக்கம், கற்கும் திறனின் பயன் விளைவுகள் (effective) ஆகிய இரண்டும் சமூகச் செயன் முறைகளினாலும், பண்பாட்டுச் செயன் முறைகளினாலும் ஆக்க நிலையிருத்தம் செய்யப்பெற்றதாகும். உயிரியல் சார்பில் கொடுக்கப்பெற்ற இவ்விரண்டு தொகுதிகளையும் (sets) மாற்றம் செய்கின்ற அல்லது பாதிக்கின்ற சூழ்நிலைச் செல்வாக்குகளுக்குத் தனியன் உட்படுவதால் இவ்விருதொகுதிகள் (sets) வெற்றிடத்தில் இயங்குவதில்லை.[1] மேலும், நுண்ணறிவிலும் கற்றல் திறனிலும்மட்டுமன்றி உந்துக்களின் வலிமையிலும்கூடத் (strength of motives) தனியாள் வேறுபாடுகளும் (individual differences) மாறும் தன்மையும் (variablity) காணப்படுகின்றன,

1 பெயரளவான இன (racial), சமுதாய (national), வகுப்பு, சாதி வேறுபாடுகள், அடிப்படை உந்துக்கள் (basic drives), எவ்வழியில் மன நிறைவு பெறுகின்றன என்பதிலும், கற்கும் திறனின் அளவு அல்லது தக அமைத்துக்கொள்ளல் (adaptability) அல்லது நுண்ணறிவின் மட்டத்திலும் (level of intelligence) உளதாகின்றன. இந்தியாவின் ஹரிஜனங்களும் (Harijans) பண்படா (tribal) மக்களும் கடந்த கால் நூற்றாண்டுக்குள் குறிப்பிடத்தக்க முன்னேற்றமடைந்துள்ளனர். இது போன்றே, இதே காலத்தில் அமெரிக்காவிலும், ஆப்பிரிக்காவிலும் உள்ள கறுப்பர்கள் மிகுதியான மாறுதல் அடைந்துள்ளனர். ஒரு நாட்டில் உள்ள ஒரு குழுவின் பிற்போக்கானநிலை அல்லது உலகச் சமுதாயங்களுக்கிடையே உள்ள பிற்போக்கானநிலை உயிரியல்சார் குறைபாடுகளினாலன்று, ஆனால் சமூகப்பண்பாட்டுக் குறைபாடுகளின் (social-cultural implications) னாலாகும். பொதுமக்கள் இடையே இருப்பது போன்று அறிவிலறிஞர்களிடையேயும் இப் பிரச்சினைபற்றி மிகுதியான கருத்து

நாம் தனியன்களுக்கு இடையேயுள்ள திறன் வேறுபாடுகளாலும் (ability in differences) மனிதர்களுக்கிடையேயுள்ள அடிப்படை உந்துக்களின் ஒன்றுமைகளாலும் (resemblances) மனத்தில் பதிவு செய்யப்பெறுவதால், இந்த உண்மை புறக்கணிப்புக்கு உள்ளாகக் கூடியது. மேலும், மனிதர்களிடையே உள்ள உந்துக்களின் வேறுபாடுகளை அளவிடுதலின் வெற்றியை ஒப்பிடும்பொழுது, திறன் வேறுபாடுகளை அளவிடுதலின் வெற்றி மிகுதியானதாகும். ஆளுமை அளவிடுதல் திட்டங்கள் பெரும்பான்மையாகப் பண்புகளையும் (traits) மனப்பாங்குகளையும் (tempraments), பற்றியதைத் தனியன்களிடையே உள்ள வேறுபாடுகளை அளவிடுதலுடன் முன்னமையப் பெற்றது. இது அடிப்படை உந்துக்களைப்பற்றியதன்று. இது விலங்கு உளவியலார்க்கு (animal psychologist) ஒரு வளமான துறையாகும். இன்று இத் துறையின் புற ஆய்வுப் பணிகள் (experimental work) விலங்குகளிடையே உள்ள உந்துக்களின் வலிமையை அளவிடுதலுக்குட்பட்டது. இந்த ஆய்வுகள் பல்வேறு உந்துக்களுக்கிடையேயுள்ள வேறுபாடுகளைப்பற்றிய பொருளில் மேற்கொள்ளப்படுகின்றனவேயன்றி ஓரினங்களைச் சேர்ந்த தனி விலங்குகளுக்கிடையேயுள்ள உந்துக்களின் வேறுபாடுகளைப்பற்றிய பொருளில் அல்ல.

இவ்வாறுகப் புதிதாகப் பிறந்த குழந்தை அடிப்படை உந்துக்களுக்கும், நுண்ணறிவுக்கும், கற்கும் திறனுக்கும், அடிப்படையான உயிரியின் உடலமைப்புடன் (organic constitution) குடும்பத்தில் நுழைவதை நாம் காண்கிறோம். வளரும் குழந்தையவன் பிழைத்து வாழ்தற்குச் சமூகத்தின்மேல் கோரிக்கைகளை ஏற்படுத்துகிறான். சமூகம் அவனுக்குக் கோரிக்கைகளை ஏற்படுத்துகின்றது. அவனது கோரிக்கைகளை ஏற்படுத்தும் செயன்முறையிலும், அவனுக்கென உண்டாக்கப்பெற்ற கோரிக்கைகளைச் சந்திப்பதிலும் அவன் சமூகவயமடைகின்றான் (socialized). அவன் படிப்படியாக அவனுடைய ஆளுமையை (personality) வரை செய்கிறான். அவன் பிழைத்து வாழ்தல், உடல்சார் (physical) கவனிப்பையும், அவனுடைய தாயாரும், குடும்பத்திலுள்ள மற்றோரும் அவன்மேல் செலுத்தும் அன்பையும் சார்ந்திருக்கின்றது. இரண்டாம் ஆண்டில்

---

வேறுபாடு இருப்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் 20ஆம் நூற்றாண்டின் இடையில் மாதிரிப்பருவமாய் (typical) அமைந்த பொருளாதார வளர்ச்சியும், உலகின் அனைத்து நாடுகளிடையே உள்ள கல்விசார்ந்த பரவலும், (educational diffussion) இப்போது நிலவுகின்ற மிகையான வேறுபாடுகளின் மிகுதியான பயனுக்குக் காரணமாகின்றன. ஆசியா, ஆப்பிரிக்கக் கண்டங்களின் தனி அரசுகளின் உருவாக்கம் (formation) விரைவில் அல்லாவிடினும் அடுத்த அரை நூற்றாண்டுகள் அடைய முடியாத பெரும் பயன்களை அடையவிருக்கின்றது.

அவன் மொழியைக் கற்கின்ருன். இவ்வகையான கற்றலின் கருத்துப் பரிவர்த்தனை, பிற மக்களோடு அவனது இடைத்தொடர்பினையும் (inter-relationship) இடைவினையையும் மிகுதிப்படுகின்றது. படிப்படியாக அவன் குடும்பத்தில் ஓர் இடத்தைப் பெறுகிருன். மேலும் சில செயல்களை (functions) (அங்கம் — role) மேற்கொள்கின்ருன். அவனுடைய அங்கத்துக்கும், அந்தஸ்திற்கும் அடிப்படையாக அவன் சிறப்பான பழக்கங்களையும், மனப்பான்மைகளையும் (attitudes), மதிப்புகளையும் (values) ஏற்படுத்திக்கொள்கின்ருன். சுருக்கமாக அவன் ஓர் ஆளுமையை உண்டாக்கிக்கொள்கிருன். உதவியற்ற உயிர்ச்சத்தின் சேர்ப்பு (bundle of protoplasm) ஒரு **மனிதனாக** உருவாகின்றது. கிம்பால் யங் (Kimbal Young) என்பார் எழுதுவது போன்று, 'குடும்ப உறுப்பினர்களது தோற்ற அமைப்பாகவும் (configuration), அவர்களுடன் நெருக்கமாகத் தொடர்பு கொண்டவரது தோற்ற அமைப்பாலும் சமூகத்தின் முனைப்பு (social self) வெளிப்படுகின்றது. குழந்தை மனிதத் தன்மையுடன் அல்லது சமூகத் தன்மையுடன் பிறப்பதில்லை. ஒரு விலங்கினத்துக்கு உடமையான ஓர் உயிரியாக அவன் தொடக்கத்தில் காணப்படுகின்ருன். அவனுடைய சகாக்களின் இடைத் தொடர்பினுற்ருன் (inter play) அவன் அவனுடைய 'மனித'த் தன்மையைப் பெறுகின்ருன். மேலும் அவனுடைய செயல்கள் சிந்தனைகளின் கலப்பினையே நாம் ஆளுமை எனப் பெயர் குறிக்கின்ருேம்' (2.4).

பட்டறிவின் (experience) வளர்ச்சியுடனும், மொழித் திரட்டின் (acquisition of language) வளர்ச்சியுடனும் உட்புற வயமானநிலை (internalisation) வளர்ச்சி ஏற்படுகின்றது. ஓசையில்லாப் பேச்சே சிந்தனை (thinking is sub vocal talking) என்ற வாட்சன் (Watson) என்பாரின் நோக்கிலிருந்து இது மாறுபடலாம் (3.332-338). ஆனல், தனியனின் வளர்ச்சியின் ஒரு மிக முக்கியமான அம்சத்துக்கு அவர் நமது கவனத்தை எடுத்துச் சென்ருர் என்பதில் ஐயமில்லை. சிந்தனை, மனப்பான்மைகளைத் தன்வயப்படுத்தல் (assumulation of attitudes) ஆகிய இவ்விரண்டினைப் பொறுத்த **உட்புற வயமானநிலை** செயன்முறைக் குழந்தையின் வாழ்க்கையில் இக் காலத்தே நடைபெறுகின்றது என்பது இப்போது நன்கு உணர்ந்தறியப்பட்டது (4). இரண்டாம் ஆண்டில் அவன் பேசுதலைக் கற்கத் தொடங்குகிருன். குழந்தை என்ன செய்கிருனே அதையே அவன் அடிக்கடிப் பேசுகிருன். படிப்படியாக உரக்கப் பேசுதலை அவன் கைவிடுகிருன். ஃபிராய்டு

(Freud) என்பார் காட்டியவாறு சுமாராக நான்கு அல்லது ஐந்து வயதுக்குள் பெற்றோருடன் ஒன்றுதல் (identification) ஆகிய செயன்முறை (process) நடைபெறுகின்றது. பெற்றோரது புறவயமான ஆணைகளையும், மற்ற வயதுவந்தோரது புறவயமான ஆணைகளையும், அவனது அகவய ஆணையின் விதிகளாகக்கொண்டு அவனுடைய மீமனத்தை (super ego) வளரச் செய்துகொள்கிறான். நாம் பின்னர் காண்பதுபோன்று சிந்தனையும், ஒழுக்கமும் ஆகிய இவ்விரண்டு உட்புற வயமானநிலைச் செயன்முறைகளும் குழந்தையின் சமூகவய நிலையில் மிகவும் முக்கியமான கூறுகளாகும். எனவே, குழந்தையின் வளர்ச்சியில் அவனுடைய நடத்தையைக் கட்டுப் படுத்தக் குடும்பத்திலுள்ள மற்ற மனிதர்கள் என்ன செய்கின்றார்களோ அவற்றால் மட்டும் அவன் பாதிக்கப்பெறுவதில்லை, சில நினைவுநிலையானதுமான, சில நினைவுநிலையில் அடைய முடியாததுமான அவனுடைய சிந்தனைகளாலும் மனப்பான்மைகளினாலும்கூட அவன் பாதிக்கப்பெறுகிறான். இந்த முழுச் செயன் முறையில் மொழி ஒரு முக்கியமான பங்கினைப் பெறுகின்றது.

மேலும், தனியனின் வளர்ச்சியின் மற்றோர் அம்சம் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். தனியன் தான் மட்டும் சமூகவயமடைவதில்லை. அவன் மற்றவர்களை வயப்படுத்தி அவர்களையும் சமூகவயமடையச் செய்கிறான். மற்றவர்களால் வசப்படுபவனாகவும், அவர்களை வசப்படுத்துபவனாகவும் அவன் சமூகத்தில் பங்கு பெறுகின்றான், தனியன் பண்பாட்டின் மாற்ற விளைவு (product) மட்டுமன்று; பண்பாட்டின் ஊடனுப்பி (transmitter)யுமாவான். அவன் பண்பாட்டையேகூட மாறு மாறு செய்யலாம்.

## சமூகம் (The Society)

நாம் இப்போது பார்த்ததுபோன்று குடும்பத்திலும் வெளியேயும் உள்ள மற்ற மனிதர்களுடன் அவனுடைய தொடர்பினால் (contact) தனியன் ஓர் ஆளுமையை உண்டாக்கிக்கொள்கிறான். சமூக வினை (social act) தனியன்களின் ஓர் இடைவினையாகும். தாய்—குழந்தை உறவுத் தொடர்பு அடிப்படைச் சமூக வினையாகும். ஒவ்வொரு மனிதனும் இதைக்கொண்டே தன் வாழ்க்கையைத் தொடங்குகின்றான். இவ்விதப் பெற்றோர்—குழந்தை உறவுத் தொடர்பு, நாம் கீழே காண்பதுபோல், விலங்குகள், பறவைகள், பூச்சிகளிடம்கூடக் காணப்படுகின்றது. சமூக இடைவினையின்

அனைத்துப் பல்வேறு கோலங்களும் (patterns) இவ்வடிப் படைத் தாய்—குழந்தை உறவுத் தொடர்பினின்றே தொடங்கு கின்றன.

சமூகவியலறிஞர் சமூக இடைவினையினை முதனிலை (primary), வழிநிலை (secondary) என இருவகைகளாகப் பாகுபடுத்து கின்றனர். குடும்பம், விளையாட்டுக் குழு, கிராம அண்டை யம் (Village neighbourhood) ஆகிய அனைத்தும் முதனிலைக் குழுக்களாகும். (primary groups) இவை நெருங்கிய நேருக்குநேர் தொடர்பால் (contact) சிறப்புப் பெறு கின்றன. 'குறைவான எண்ணிக்கையுள்ள மனிதர்கள் தோழமை (companionship), ஒருவர்க்கொருவர் உதவி, எல்லோ ருக்கும் தொடர்புள்ள ஒரு பிரச்சினைப்பற்றிய கலந்தாய்வு (discussion) அல்லது ஒரு பொதுவான கொள்கையின் (common policy) கண்டுபிடிப்பும் நிறைவேற்றமும் ஆகிய வற்றிற்காக நேருக்குநேர் (face to face) சந்தித்தல் இயைபின் (association) அனைத்து வகைகளின் எளிமையான, முதன்மை யான, மிகவும் முழுமையான இயைபாகும்' (5.218). முதனிலைக் குழு (primary group) விளையாட்டுக் குழுவிலும் நட்பிலும் இருப்பதுபோன்று கட்டற்றுச் செயல்படுவதாகவும் (free functioning), முறையணியாததாகவும் (informal) இருக்க லாம் அல்லது பேட்டியிலும், வகுப்பறையிலும், அலுவலகத்தி லும், தொழிற்சாலையிலும் இருப்பது போன்று ஒழுங்குமுறை யானதாக (formal) இருக்கலாம். இதற்கு ஒப்பாக வழிநிலைத் தொடர்புகளில் (secondary relations) ஆசிரியர்க்கும் மாண வர்க்கும், விற்போருக்கும் வாங்குவோர்க்கும், அலுவலர்க்கும் (official) நாட்டவர்க்கும் (citizens) இடையே இருப்பது போன்று ஒழுக்கமுறையும், சிறப்பான குழு அங்கங்களும் (specialized group rolls) காணப்படுகின்றன. இதில் நெருங்கிய பழக்கம் காணப்படுவதில்லை. சமூக இடைவினை மனிதர்களுக்கிடையே ஏற் படுவதன்று. ஆனால், வழக்கத்திற்கிசைந்த ஒழுங்குமுறையான பத விகளின் பிரதிநிதிகளிடையே ஏற்படுவதாகும். சமூகத்தின் சிக்க லானநிலை மிகுதிப்படும்போது சமூக உறவுத் தொடர்புகள் மிகவும் தனிமுறைச் சார்பற்றுக் (impersonal) காணப்படுகின்றன. கிராமத்தின் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு மற்ற மனிதனை அறிகிறான். ஆனால், ஒரு பெரிய நகரத்தில் ஒருவன் அவனது அண்டையரையுங்கூட (neighbour) அறியாமலும் ஒரே கட்டடத்தில் அடுத்த மாடியில் வாழும் ஒரு மனிதனை அறியாமலு மிருக்கலாம். மத நிறுவனம், அரசியல் கட்சி, அரசு (state) ஆகியன வழிநிலைச் சங்கங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

தொழில்வயமானநிலையுடனும் ( industrialisation ) அதன் விளைவாக எழுந்த நகர்வயமானநிலையுடனும் ( urbanisation ) 'திரட்சமூக'த்தின் ( mass society ) உருவாக்கம் காணப்படுகின்றது. நம் இக் கால நகரங்களில் வாழ்வது போன்று பெருவாரியான மக்கள் சேர்ந்து வாழ்ந்தாலும் அவர்களின் உறவுத் தொடர்பில், சமூக உறவுகள் தன் முறைச் சார்பற்றுக் காணப்படுகின்றன. மேலும், தனிமை உணர்ச்சியும் காணப்படுகின்றது. கலையரங்குக்கு ( theatre ) நீ மட்டும் செல்லும்பொழுது உன்னைச் சுற்றிலும் நூற்றுக்கணக்கான மக்கள் இருப்பினும் நீ தனிமையை உணர்கின்றாய். நெருங்கிய பழக்கமான உறவுத் தொடர்பு அங்குக் காணப்படுவதில்லை. திரட்சமூகத்தில் பகுத்தறிவு உள்ளதும் பகுத்தறிவற்றதுமான ஒரு விந்தையான கலப்புக் காணப்படுகின்றது. தொழில்மயமானநிலையின் முன்னேற்றம், அறிவியல், தொழில் நுட்பவியல் ( technology ), அமைப்புமுறை ( organisation) ஆகியவற்றின் ஆதாரத்தில் அமைவதாகும். ஆனால், நகர்வயமாதல், தன்முறைச் சார்பற்ற உறவுத் தொடர்புகளுக்கு இட்டுச் செல்வதோடு, கருத்தேற்றத்தின் (suggestions) செல்வாக்கையும் கொள்கை பரப்பலின் செல்வாக்கையும் மிகுதிப்படுத்துகின்றது. கூட்ட ( crowd) நடத்தை, திரட்சமூகத்தின் ஒரு முக்கிய அம்சமாக ஆகின்றது. 'மனிதர்களின் மேலும், அவர்களது பண்பாட்டின் மேலும் திரட்சமூகத்தின் பதிவு, ஆளுமைச் சமநிலை ( personality balance ), மனவெழுச்சிக் காப்புணர்வு (sense of emotional security), சக்தியின் ஒழுக்கம் சார்ந்த பயன் ஆகிய நமது பெரும்பாலான தீர்மானமான பிரச்சினைகளில் ஒன்றாக அமைகிறது' ( 2.6 ). முதனிலைக் குழுவின் இப் பொதுமைக் கருத்துகளும் ( concepts ) வழிநிலைக் குழுவின் இப்பொதுமைக் கருத்துகளும் சமூக இடைவினையின் அடிப்படைச் செயன்முறைகளைப் படித்தற்கு மிகவும் துணை செய்கின்றன என்பதை நாம் காண்கிறோம்.

இது போன்றே 'அகக்குழு' (in-group) 'புறக்குழு' (out-group) என்ற பாகுபாடும் பெரும் பயனைத்தருவதாகும். சும்னர் (Sumner) என்பார் 'அகக்குழு' என்ற சிறப்புச் சொல்லைப் பயன்படுத்தினார். நாம் மக்களை 'நாம்' (we) என்றும் 'அவர்கள்' (they) என்றும் பிரிக்கக் கற்றுக் கொள்கின்றோம். எந்தக் குழுக்களோடு நாம் ஒன்றுகிறோமோ ( identify ) அது 'அகக்குழு'வாக அமைகிறது. தனியன், குடும்பங்களுடனும், சாதி, அண்டைய மனிதர்கள் போன்றோருடனும் ஒன்றுதல் மனப்பான்மைகளை வளரச் செய்கிறான்,

நமது குழுவின் முன்னேற்றத்திற்கும் நலனுக்கும் எதிரிடையான, 'மற்ற'க் குழுக்களை உருவாக்கும் நபர்கள் அச்சம், சந்தேகம் அல்லது **வெறுப்புடன்** நோக்கப்படுகின்றார்கள். அகக் குழு உறுப்பினர்களிடையே **ஒத்துழைப்பும்** (co-operation), புறக்குழு உறுப்பினர்களிடையே **எதிர்ப்பும்** காணப்படுகின்றது.

செயல்களை **வேறுபடுத்தல்** (differenciation) மற்றோர் அடிப்படை இடைவினையாகும். இடைவினையின் மூலக்கூறுச் செயன்முறைகளின் (elemental processes) பலவகையான கலப்புகள் சமூகத்தில் உள்ள **வகுப்பு, சாதி** வேறுபாடுகளின் அடிப்படையில் அமைந்தனவாகும். செயல்களை வேறுபடுத்தலின் அடிப்படையிலும், செயல்களின் வளர்ச்சியில் அல்லது குழுவின் **அங்கங்களிலும்** சமூக இடைவினையின் பல்வேறு முறைகள் எழுகின்றன. வீட்டின் செயலில் காணப்படும் அடிப்படை வேறுபாடுகள் (differenciations) கணவன், மனைவி அங்கங்களையும், பால், வயது போன்ற சமூக அங்கங்களையும் எழச் செய்கின்றது. வீட்டிலும்கூட ஒரு தனியனுக்கு ஏறக்குறைய மட்டுப்படுத்தப்பட்டதும், நன்கு வரையறுக்கப்பட்டதுமான ஒரு சமூக அங்கம் கொடுக்கப்படுகிறது. இந்தியக் கூட்டுக் குடும்பத்தில் (joint family) இது குறிப்பான முனைப்பாகும் (conspicuous) தனியன் அந்த அங்கத்துக்குத் தகுதியான நடத்தையைக் கற்கிறான். அவ்வாறில்லையெனில் அவன் சமூகத்தால் ஏற்கத்தக்கவனுகமாட்டான். இல்லத்திலோ சமூகத்திலோ இவ்வங்கங்கள் மாறுதல் அடைந்து கொண்டிருப்பதுடன் கற்றலையும் அவசியமாக்குகின்றன. வயதுடனும், தருவாயுடனும் (circumstance) அங்கம் மாறுதலடைகின்றது. ஒரு மகனுக இருந்து, ஒரு மனிதன், ஒரு தந்தையாக மாறுதலடைகின்றான்; மாணவனிலிருந்து ஆசிரியராக, கீழ்ப்பட்ட பணியாளனிலிருந்து மேலாளராக (manager) மாறுதல் அடைகிறான்.

சமூக வேறுபடுத்தலிலிருந்து எழுகின்ற இடைவினைப் பண்பாட்டுக் காரணிகளையும்கூட உள்ளடக்கியது என்பதை நம் மனத்திற் கொள்ளவேண்டும். சமூகப் பண்பாட்டு அம்சங்களுக்கிடையேயுள்ள (social cultural aspects) விதிகள் வகையில் கண்டிப்பான தனிச் சிறப்பினைத் தருவது இயலாது; தருவதும் அவசியமற்றது. மற்றொருபுறம் சமூக, பண்பாட்டு அம்சங்களுக்கிடையேயுள்ள தனிச் சிறப்புகளைப் புறக்கணிக்க இது நமக்கு வழிகாட்டலாகாது.

## சமூகப் பண்பாட்டு அம்சங்கள்
### ( The Social and Cultural aspects )

இவ்விரண்டு அம்சங்களுக்கிடையே உள்ள தனிச் சிறப்பினையும் உறவினையும் நாம் உணர்ந்தறிதல் சிந்தனையின் தெளிவுக்குப் பெரும் பயன் தருவதாகும். தனிச் சிறப்புக்குரிய சிறப்புச் சொற்களைப் பயன்படுத்தல் இதை அடைவதற்கு உதவி புரிவதாய் அமையலாம். இவ்விரு வகையான இடைவினைகளை வேறுபடுத்தற்கு ஆளிடைத் தொடர்பு, சமூகப் பண்பாட்டுத் தொடர்பு, (socio cultural relationship) ஆகிய சிறப்புச் சொற்களை நாம் பயன்படுத்தலாம். சிறிது அல்லது ஏதுமற்ற பண்பாட்டு நிறுவனக் காரணிகளை உள்ளடக்கிய தனியன்களிடையே காணப்படும் இடைவெளியை ஆளிடைத் தொடர்பு சுட்டிக் காட்டுகின்றது, சமூக—பண்பாட்டுத் தொடர்பு இவற்றைப் பெருமளவில் கொண்டிருக்கின்றது. லேபியரும் (LaPiere) ஃபார்ன்ஸ்வொர்த்தும் (Farnsworth) எழுதுவது போன்று 'நிலையான சமூக ஒழுங்கு அமைப்புகளிலேனும் மிக முக்கியமான மனிதத் தேவைகள் நிறுவனச் செயல் தன்மைகளால் (institutional mechanism) மனநிறைவு பெறுகின்றன. இச் செயல் தன்மைகள் நீடித்து இருக்கக்கூடிய குறிக்கோளுக்காகத் தற்காலிகமான விருப்பங்களைப் புறக்கணிக்கின்றன. ஆகையால், உடனடித் தன்மையுடைய தனித்த தேவைகள் பொதுவாக நிறுவிய வகை (institutional type) தவிர மற்ற இடைவினை நிலைமைகளின் (interactional situations) அஃதாவது தனியாள் இடைவினை நிலைமைகள் என்று (interpersonal situations) குறிப்பிடப்படும் நிலைமைகளில்—மன நிறைவு பெறுகின்றன. தனித்த தேவைகளிலிருந்து எழுகின்ற தனியாள் இடைவினை நிலைமைகளும், அத் தேவைகள் எவற்றால் உருவாக்கப்பெற்றதோ அவையும், நிறுவன உறுப்பினர் பதவியின் (institutional membership) தற்செயல் விளைவுகளாகும். மேலும், இவை நிறுவன உறுப்பினர் பதவியின் எதிர்ப்பில் ஏற்படுவது அருமை. ஆனால், நிலைமைத்துவ இடைவினைக் கோலம் (pattern of situational interaction), முதனிலையாக நிலைமையில் உள்ளடக்கிய குறிப்பிட்ட ஆளுமையின் ஒரு செயலாகும்' (6.408). பண்பாட்டு அம்சங்களை உள்ளடக்காத அல்லது மிகக் குறைந்த பண்பாட்டு அம்சங்களை உள்ளடக்கிய சமூக நடத்தையின் தனிச் சிறப்பினையும், பெருமளவு பண்பாட்டை உள்ளடக்கிய சமூக நடத்தையினையும், மனத்திற் கொள்ள வேண்டியது இன்றியமையாதது என்பதை நாம் காண்கிறோம். எந்த ஒரு மனிதனும் ஒரு குடும்பத்தில் வளர்க்கப்படவில்லையெனில், அல்

லது எளிய அல்லது சிக்கலான அதற்கே உரித்தான பண்பாட்டு மரபுரிமையுடைய ஒரு குழுவில் வளர்க்கப்படவில்லையெனில், உயிர் பிழைத்து வாழ முடியாதாகையால் மனிதர்களுக்கு இடையே யுள்ள சமூக நடத்தையினைப்பற்றிப் பார்க்கும்பொழுது இத் தனிச் சிறப்பினை விளக்குவது சிறிது கடினமானது. ஆனால் இது, சமூக நடத்தை முன்—மனிதத் தன்மையுடையது (pre-human) என்ற உண்மையை நாம் புறக்கணிக்குமாறு செய்வ தில்லை. ஒரு செல் (uni-cellular) உயிரிகளிடத்தும்கூட ஒரு சமூகக் காரணி காணப்படுகின்றது. 'உயிரிகளுக்கிடையே உள்ள இடைவினை, மிக அடிப்படையான உயிரிகள் சார் உணமைகளில் ஒன்றாகும். துரத்திச் செல்லலும், தொடர் தலும் மனிதர்களுக்கிடையேயுள்ள ஒரு சமூக நிகழ்ச்சியாயின் அமீபாவில் (Amoeba) நேர்ந்தால் இஃது ஏன் சமூக உண்மை யாகாது? உண்மையாகக் கூறுமிடத்து சமூகம் என்பது ஓர் **உயிரியல்சார் அம்சமாகும்** நாம் அறிந்தவரை சமூகத் தொடர்புகளின்றி (contacts) எவ்வுயிரிகளும் இருப்பதில்லை' (7.19). விலங்குகளின் சமூக நடத்தையின் பல்வேறு அம்சங்களை அடுத்த அத்தியாயத்தில் நாம் பார்க்கலாம். 'சமூகத் தன்மை' எப்பொழுதும் பண்பாட்டு அம்சத்தை உள்ளடக்கியது எனக் காணுதல் கூடாது என்பதை மனத்தில் கொள்ளுதல் வேண்டும்.

மனிதர்களிடத்துமட்டுமல்லாமல் குழவிகளிடையேயும் குழந்தைகளிடையேயும்கூடத் தனித்த சமூக ஆளிடைத் தொடர்புகளை நாம் காண்கிறோம், குழந்தை வளரவளரத்தான், ஒரு குடும்பத்துடன் அவனுக்குள்ள தொடர்பு, மதம், தந்தையின் தொழில் போன்றவற்றினைப்பற்றிய நினைவுநிலையைப் பெறு கின்றது. இதுபோன்றே நாம் தகுதியான நிலைமைகளில் (congenial situation) பண்பாட்டுக் காரணியின் மிகக் குறைந்த தலையீட்டினைக் காணலாம். குழந்தைகளும், இளையோரும் (adolescents), வயது வந்தோரும் (adults) விளையாடும் பொழுது அவர்களுடைய நிலையத் தொடர்புகளைப்பற்றிப் (institutional affiliations) பெரும்பாலும் நினைவுநிலையற்று இருக்கின்றனர். நாம் சாலையில், சந்தைக் கடையில், அலுவ லகத்தில், பேருந்து வண்டியில் அல்லது புகைவண்டியில் எதிர்ப் படும் அயலாரோடு பழக்கப்பட்ட வழியில் எதிர்வினை செய்யும் பொழுது ஏறக்குறையத் தனித்துச் சமூக ஆளிடத் தொடர்புகளை உண்டாக்குகின்றோம். இது போன்றே நட்பில், மிகுதியும் பண் பாடல்லாத தன்மையே காணப்படுகின்றது. தனியன்களது குறிப்பிட்ட பண்பாட்டு அமைப்பினை உள்ளடக்கிய மிகுதியான

தேவைகளையும், எதிர்பார்ப்புகளையும் நட்பு ஆதாரமாகக் கொள்ளவில்லை. ஆனால், பற்று உருவாக்கத்தின் (sentiment formation) மிகையான அடிப்படையிலும், அன்பு, காப்பு (security) ஆகிய சுயதேவைகளைப்பற்றிய தொடர்ந்த அல்லது சிற்சில மன நிறைவுகளிலும் நட்புத் தனது ஆதாரத்தைக் கொண்டுள்ளது. ஒரு மிகக் குறுகிய பாதையில் இரு மனிதர்கள் சந்தித்துக்கொள்கின்ற ஒரு கற்பிதமான நிலைமைப் (hypothetical situation) பற்றி லேபியரும் ஃபார்ன்ஸ்வொர்த்தும் (LaPier and Farnsworth) மிகச் சிறப்பாக நடத்திய ஒரு பகுப்பாய்வினிற்குக் கவனம் செலுத்தப்பட வேண்டும். பாதை குறுகியதாக இருப்பதினாலும் இலக்கத்தை அடைய ஒவ்வொருவரும் மற்றவரைக் கடக்க வேண்டி இருப்பதினாலும் ஓர் இடைவினை நிலைமை ஏற்படுகின்றது. இப் பிரச்சினையைத் தீர்க்கப் பல வழிகள் உள்ளன. ஒருவர் ஒருபுறமாக விலகி இருக்கலாம் அல்லது இருவரும் பாதிக்கலாம் அல்லது அடி தடிக்கு உட்படலாம். 'நமது பிரச்சினை அவர்கள் என்ன செய்கின்றனர் என்பதன்று. ஆனால், எவ்வாறு அவர்கள் என்ன செய்ய வேண்டும் என்று நினைத்துச் செய்ய முனைகின்றனர் என்பதாகும். இவ்வகையில் ஒன்றுக்கொன்று விலகும் தன்மையுள்ள மூன்று அடிப்படைத் தக அமைப்புகளை வேறுபடுத்திப் பார்க்கலாம்.

'முதலாவதாக, அவர்கள் இத்தகைய பிரச்சினையை என்றும் எதிர்நோக்கி இருக்கவில்லையெனில், இடைவினையின் ஒரு போதுமான கோலத்தின் திட்டத்தில் அவர்கள் முயன்று தவறிக் கற்றலால் (trial and error) வலியுறுத்தப்பெறுகின்றனர்.

'இரண்டாவதாக, அவர்கள் இப் பாதையிலோ வேறு பாதையிலோ முன்னர் சந்தித்திருந்தால், அவர்கள் முன்னர் திட்டமிட்டுப் பொருத்தப்பட்ட நுண்முறையை (adjustment technique) இப்பொழுது பயன்படுத்தலாம்.

'இறுதியாக அவர்கள் சமூக மரபுரிமையின் (sooial heritage) ஒரு பகுதியாக, அவர்களுக்குத் தரப்பெற்ற பொருத்தப்பாட்டின் வைத்துக் கோடல் முறையினைப் (conventional method of adjustment) பயன்படுத்தலாம்' (6.408).

தெளிவாகக் கூறினால், முதல் இரு முறைகள் இடைவினைத்துவ நிலைமைகளைத் (inter- actional) தீர்க்கும் மிகையான தனியாள் இடைவினை அல்லது ஆட்சமூகத் தன்மையினைச் சேர்ந்

தவை. மூன்றுவது வழி உறுதியாகச் சமூக—பண்பாட்டைச் சேர்ந்ததாகும். ஓர் உழவனையோ ஓர் அந்தணனையோ தீண்டத் தகாதோர் ஒரு குறுகிய வழியில் சந்தித்தால் தீண்டத் தகாதோர் விலகி நிற்றல் அல்லது திரும்பிச் செல்லுதல் அல்லது ஓடுதல் பண்டை இந்தியாவின் சம்பிரதாயமாகும். இதுபோன்றே ஓர் அந்தணனைச் சந்திக்கும்போது உழவன் விலகி நிற்றல் வேண்டும். குறிப்பிட்ட சம்பிரதாய வழிகளில் ஒரு சமூக நிலைமையில் எதிர்வினை செய்ய சமூகச் சமமின்மை (social in-equality) வழி வகுத்ததுள்ளது. இதுபோன்றே பால் அல்லது வயது அல்லது செல்வம், யார் விலகிநிற்றல் என்பதை நிருணயிக்கலாம். இப்போதும்கூட அரசியல் உயர் படிகளுக்குப் (political dignitaries) புக முந்துதலின் முறைமையை (order of precedence) அரசாங்கம் வெளியிடுகின்றது. சம்பிரதாயத்தை ஏற்க ஒரு தடையை உள்ளடக்கியவற்றிலிருந்தும், ஒருவனது மதிப்பைப்பற்றிய அவனது எண்ணத்துக்குத் தகுதியான சம்பிர தாயத்தை மாற்ற விரும்பும் போதும், இத்தகைய ஏற்றச் சலுகை களைப்பற்றி அடிக்கடி போராட்டங்கள் எழாதிருக்கலாம். எனவே, இரு மக்கள் சந்திக்கும்பொழுது சமூக இடைவினை, தனியாள் இடை அல்லது சமூகப் பண்பாடு உடையதாக இருக்கலாம்.

இந்தியாவில் மனித முன்னேற்றத்தின் உயர்வான நிலை பண்பாட்டுத் தொடர்புகள் (cultural affiliations) அற்ற **சன்னியாசி** நிலையாகும். பண்பாட்டுத் தொடர்புகளற்று இருப்பதினுல்தான் அவர் மற்ற மனிதர்களை மனிதர்களாகச் சந்திக்கும் தகுதியினைப் பெற்றிருக்கின்றுர். அவர் அகக் குழு, புறக் குழு மனப்பான்மைகளைக் கைவிடுவதினுல் அனைத்து மனிதரையும் அகக் குழுவினராகக் காண்கின்றுர். இந்த இன்றி யமையாத **மனித** மனப்பான்மை பெரும் பண்பாட்டு முயற்சியின் விளைவாகும் என்பது மறுக்க முடியாததாகும். இது சட்டத்தின் ஒழுங்கு அல்லது நேர்மை போன்றதாகும். நேர்மை என்பது நிறம், சாதி, சமயம், பால், மற்றச் சலுகை ஆகியவற்றுல் சார்பெண்ணத்திற்கு உட்பட்டதன்று. பண்பாட்டு வளர்ச்சியினுல் ஆக்கநிலையிருத்தம் பெற்ற சமூகத் தொடர்புகளைக் கட்டுப் படுத்துகின்ற ஒரே நிலையிலுள்ள மதிப்புகளை உணர்ந்தறி தலின் மூலம் மட்டும், பண்பாட்டுத் தொடர்புகளுக்கு மேலாக ஒரு நாடும், ஒரு மனிதனும் எழலாம் என்று ஒப்புக்கொள்ளப் படுகின்றது.

## பண்பாடு (The Culture)

நாம் மேலே பார்த்தது போன்று மனிதவியலார் (anthropologist) பண்பாடு எனும் சிறப்புச் சொல்லை ஒரு குழு

மக்களின் சமூக மரபுரிமையைக் குறிக்கப் பயன்படுத்துகின்றனர். இது தலைமுறை தலைமுறையாக அனுப்பப்பெறும் அமைவுற்றதும் நிலையான கோலங்களின் பழக்கங்களையும் மனப்பான்மைகளையும், மதிப்புகளையும் கொண்டதும் ஆகும். ஒவ்வொரு குழந்தையும் ஒரு பண்பாட்டுக்குத் தன்னை வெளிப்படுத்துவது மட்டுமல்லாமல் பண்பாட்டைத் தன்வயப்படுத்தவும் அதனைப் பிறர்க்கு அனுப்பவும் செய்கின்றது. 'பண்பாடு என்பது ஒரு சமூகத்துக்கு அல்லது சமூகத்தின் ஒரு பகுதிக்குச் சொந்தமான பங்கு பெற்ற நடத்தைகளையும், நம்பிக்கைகளையும், பருப்பொருளான பொருள்களையும் கொண்டதாகும்' (8.145). 'சமூகத்தன்மை', 'பண்பாடு' என்ற சிறப்புச் சொற்கள் ஒன்றுக்கொன்று மாறும் தன்மையுடையதாகப் பயன்படுத்தப்படுகின்றன, சான்றுகப் பண்பாடு என்பது சமூக மரபுரிமை (social heritage) ஆகக் கருதப்படுகின்றது. பண்பாட்டுக் கோலங்கள் சமூக இடைவினையின் வாயிலாக அனுப்பப்படுகின்றன என்பதில் ஐயமில்லை, ஆனுல், நாம் முன்னர் பார்த்தது போன்று அனைத்துச் சமூக இடைவினைகளும் பண்பாட்டுத் தன்மையுடையன என்று கூற முடியாது. கிம்பால் யங் (Kimball Young) என்பார் குறிப்பிடுவது போன்று, 'சமூகம், பண்பாட்டுக்கு முன் நிகழ்கின்றது; நெருங்கிய சமூகத் தொடர்புகளில் வாழ்கின்ற விலங்குகள் போராட்டம் (conflict), ஒத்துழைப்பு (co-operation) ஆகிய செயன்முறைகளை வெளிக்காட்டியதோடன்றி முக்கியமாக வயது, பால்பற்றிய செயல்களது ஒரு குறித்த வேறுபடுத்தலை வெளிக்காட்டியுள்ளன' (2.7). தலைமுறை தலைமுறையாக அனுப்பும் மரபுச் செயல்புரிவு வகைகளின் ஊடுருவல், உணர்ச்சி, நினைவு ஆகியவற்றைக் குறிப்பதே பண்பாடு. பண்பாட்டின் பருப்பொருளான (material), பருப்பொருளற்ற (non-meterial) அம்சங்களும் காணப்படுகின்றன. பருப்பொருள் (physical object) சார்ந்த பொருட்களான வீடுகள், கருவிகள், இயந்திரங்கள் ஆகியன போன்றவையும் பண்பாட்டின் பகுதியாக அமைகின்றன. மனப்பான்மைகள் (attitudes), நம்பிக்கைகள், அறிவு, ஆற்றல்கள் (skills) ஆகிய யாவும் பண்பாட்டின் பகுதியாக அமைகின்றன. சிந்தனை, செயற்கோலங்களிலிருந்து விலகிப் பொருள்கள் பொருளற்று இருப்பதால் இந்த அடிப்படையில் பண்பாட்டின் பிரிவு பெரும்பாலும் மனநிறைவு தருவதாகாது, இதன் விளைவாகப் பருப்பொருள்களான பொருட்களை விடப் பண்பாட்டுச் சத்து, தலைமுறை தலைமுறையாக ஊடனுப்பப்பெறும் (transmission) மனப்பான்மைகளும், நம்பிக்கைகளுமாகும் என்பது வற்புறுத்தப்படுகின்றது. அமெரிக்கர்களால்

தயாரிக்கப்பெற்ற மின் சாதனங்களைப் (electrical equipments) பயன்படுத்துதல் அல்லது அமெரிக்கரின் போர்க் கருவியின் தொகுதிகளைப் பயன்படுத்துதல் இந்தியர்களை அமெரிக்கரது தன்மை (Americanized) உடையவர்களாக்குவதில்லை. இது போன்றே வேதாந்தத்தைத் கற்றலின் மூலம் அமெரிக்கர் இந்தியரது தன்மை (Indianized) பெறுவதில்லை. மற்றப் பண்பாடு, ஒரு பண்பாட்டின் பொருட்களைத் தன்னுடையதாக்கிக் கொள்ளுதல் அல்லது எண்ணங்களைத் தன்னுடையதாக்கிக் கொள்ளுதல், பண்பாட்டு இணைப்பின் (Synthesis of culture) ஏற்படுத்துகின்றது. வளர்ப்பு முறை (up-bringing) உண்மையாகக் குறிப்பிடத்தக்கதாகும். வெவ்வேறு பண்பாடுகளை உடைய மக்கள் ஓரிரு தலைமுறைகள் அமெரிக்காவில் வாழ்தலால் அமெரிக்கரது தன்மை பெறுகின்றனர். இது போன்றே கடந்த ஆண்டுகளில் அயல் நாட்டுப் பண்பாடு உடைய மக்கள் இந்தியாவில் வாழ்ந்ததினுல் இந்திய வாழ்க்கை வழிகளைத் தன்வயப்படுத்தி (assimilating) அதன் வாயிலாக இந்தியத் தன்மைகளைப் பெற்றனர்.

தனியன் தான் பிறந்த குழுவின் பண்பாட்டுக்கு வெளிப்படுத்தப்படுவதுடன் அதனுல் உருவாக்கவும் பெறுகின்றுன். பண்பாடென்ற வரைச் சட்டத்தில்தான் தனியன் வளரவும், முன்னேற்றமடையவும் செய்கின்றுன். முழுமைகளுக்கும் (universal) மாற்று வழிகளுக்குமிடையே (alternatives) ஒரு தனிச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது (9). பண்பாட்டு முழுமைகள் (universals) ஏறக்குறையப் பொதுவாக ஒத்துக்கொள்ளப்பெற்ற, எதிர்பார்க்கப்பட்ட நடத்தையின் கோலங்களாகும். ஒரு பண்பாட்டிலுள்ள தனியன்கள் மற்றவர்களோடு குறிப்பிட்ட உறுதியான கோலங்களுடன் நடந்துக்கொள்ளக் கற்கின்றனர். இது சமூக உடன்பாட்டின் (conformity) அடிப்படையில் அமைந்தது. தனியன்களின் தனித்த (typical) நடத்தையின் அடிப்படையில் அமைந்ததாகும். சான்ருக, இந்தியாவிலுள்ள ஒரு குறிப்பிட்ட மொழிக் குழுவுக்குச் சொந்தமான தனியன்களின் உடையைக் கூறலாம். கொடுக்கப்பட்டுள்ள மொழியினைக் கற்றலில் மட்டுமன்றி நடத்தை, சிந்தனை, நம்பிக்கை ஆகிய மற்ற எண்ணிறந்த அம்சங்களிலும்கூட உடன்பாடு காணப்படுகின்றது. இது முழுமையான ஒரு தன்மையுடையது (uniformity) என்று பொருள்படாது சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. இதைத்தான் லின்டன் (Linton) என்பார் 'மாற்று வழிகள்' (alternatives) என்று அழைக்கின்ருர். பொதுவாக, ஒரு சீரான தன்மையிருப்பினும் நுணுக்கங்களில் மாறுபாடுகள் காணப்படுகின்றன. எந்தக் குழுவிலும் பொதுவான உடன்பாடு இருந்த போதிலும் சில தனி

யன்கள் பண்பாட்டின் முழுமைகளிலிருந்து பெருமளவிற்கு விலகி யிருக்கின்றனர். மேலும், மிகுதியான மாறுபாடுகளும்கூடக் காணப்படுகின்றன என்பதைச் செயலறிவு காட்டுகின்றது. எந்தத் தனியனும் பண்பாட்டினுல் முழுமையாக நிருணயிக்கப்படுவதில்லை. ஒவ்வொரு தனியனும், எந்தப் பண்பாட்டிலும் தனித்தன்மை வாய்ந்தவனுகத் திகழ்கிருன். பொதுவான, பெரும்பான்மை யான சிறப்புக் கூறுகளை நாம் உணர்ந்திருப்பினும், நாம் ஒரு தனியனின் தனித்தன்மை வாய்ந்த (unique) தன்னியக்க (autonomous) அம்சங்களையும் புறக்கணித்தல் கூடாது. தனித்தன்மை என்பது திறன் (ability), நாட்டம் (aptitude), கற்றல் ஆகிய வற்றின் தனியாள் வேறுபாடுகளின் ஆதாரமாக அமைந்ததாகும். தனியனின்மேல் பண்பாட்டின் பிணைப்பு (impact) ஒவ்வொரு நிலை மையிலும் ஒருமைத்தன்மை (identical) உடையதன்று. மேலும், ஒவ்வொரு தனியனும் விரைவாகவோ அன்றித் தாமதமாகவோ பண்பாட்டினுல், முழுமையாக முன் நிருணயிக்கப் பெருத, செல்வாக்குகளுக்கு வெளிக்காட்டப் பெறுகின்றுன். பண்பாட் டுக்குப் புறத்துள்ள மக்களை அவன் சந்திக்கின்றுன். பயணம் ஒரு புறத்திலும் நூல்கள், வானெலி, கலைக்கூடம், திரைப்படம் செய்தித்தாள்கள் ஆகியன மறு புறத்திலும் ஒரு தனியனைப் பண் பாட்டுக்குப் புறமான பல செல்வாக்குகளுக்கு வெளிகாட்டுகின்றன. நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ள தனியாளிடை (inter-personal) அல்லது 'ஆட் சமூக' (personal - social) அம்சமும் காணப்படு கின்றது. இவ்வனைத்து வேறுபட்ட உயிரியல் காரணிகளும், சமூகக் காரணிகளும் எந்தப் பண்பாட்டிலும் தனியனுக்குத் தனித் தன்மையை அளிக்கின்றன. சுருக்கமாக, 'பண்பாட்டுக் கோலங் கள்' (patterns of culture), 'தனியனின் தனித்தன்மை' ஆகிய இரண்டின் உண்மையையும் நாம் மனத்திற்கொள்ள வேண்டும்.

சமூக நடத்தைப் பண்பாட்டினுல் நிருணயிக்கப்பெற்றது என்ற உண்மையைச் சில எடுத்துக்காட்டுகள் புலப்படுத்தும், ஒரு குழுவுக்கு எது 'சரியான' நடத்தையோ அது மற்ரெரு குழுவுக்கு நேர்மாறுனதாக இருக்கலாம். ஒருவன் உணவு உண்ணும் பொழுது வலது கையினுல் கலங்களைத் தொடுதல் ஒரு குழுவினர்க்கு விலக்கமான (taboo) செய்கையாகும், ஆனுல், மற்றக் குழுவினருக்கு இது மிகவும் சரியானதாகும், இதுபோன்று காப்பி அருந்தும்போது கோப்பையில் அருந்துவது ஒரு குழுவுக்கு ஏற்புடை நடத்தையாகவும், சிறு தட்டில் (saucer) அருந்துதல் மற்ரெரு குழுவுக்கு ஏற்புடைய நடத்தையாகவும் அமைகின்றது. எனவே, ஒரு குழுவின் ஏற்புடை நடத்தை மற்றக் குழுவுக்கு அதிர்ச்சி தரும் செய்கை

யாகும். மேற்றிசை மக்கள் நடத்தையில், அங்கு ஆடவரும் பெண்டிரும் கைகளைப் பிடித்து நடத்தல் அல்லது கரங்கோத்து நடத்தல் இந்தியனுக்கு அதிர்ச்சி தருவதாக இருக்கிறது. இது போன்றே தென்னிந்தியனின் நெருங்கிய நண்பன் அல்லது உறவினனை வெறும் வணக்கம் கூறி அல்லது கைகுலுக்கி வர வேற்கிறான். வட இந்தியன் அவனைத் தழுவுகின்றான். வடக்கி லுள்ள ஒரு நெருங்கிய தன் நண்பன் வடக்குக்கு ஏற்புடைத் தாய் அமைந்த முறையில் அவனுடைய மகிழ்ச்சியையும் அன்பை யும் வெளிப்படுத்தும்போது ஒரு தென்னிந்தியன் மிகவும் வசதியற்றதாக உணர்கின்றான். சமூக நடத்தையிலுள்ள ஒற்றுமைகளையும், வேற்றுமைகளையும் நாள்தோறும் உற்று நோக்கலிலிருந்து எடுத்துக்காட்டுகள் பெருக்கப்பட முடிகிறது. ஒரு குழுவினால் சம்மதிக்கப்பெற்ற நடத்தையின் இத்தகைய வழிகளும் சிந்தனைகளும் பண்பாட்டின் ஒரு பகுதியாக ஆகின் றன. குழுவால் சம்மதிக்கப்பெற்ற எதுவும் குழுவைச் சேர்ந்த தனியன்களால் கற்கப் பெறுகின்றன. பண்பாட்டின் மற்ற உறுப்பினர்கள் என்ன செய்கின்றார்களோ, என்ன செய்தார் களோ அவற்றால் மனிதர்கள் இடைவிடாது பாதிக்கப்பெறு கின்றார்கள்.

பறவைகளையம் விலங்குகளையும் போன்றல்லாமல் மனிதன் உடல்சார் முதிர்ச்சி பெறாதவனாகப் பிறக்கின்றான். குழந்தை நகரமுடிவதில்லை; இயற்கையான இடையூறுகளினின்றும் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடிவதில்லை. அவன் பிழைத்து வாழ் தற்குப் பல ஆண்டுகள் அவனைப் பராமரித்தல் வேண்டும். மேலும், மனிதர்கள் உலகு, பறவை அல்லது விலங்கு உலகினும் மிகச் சிக்கல் உடையதாகும். முயன்று தவறிக் கற்றலின் (trial and error) வாயிலாக மட்டும் அவன் பிழைத்து வாழ முடியாது. 'எனவே குழவிப் பருவத்திலிருந்து குழந்தைப் பருவம் வரையில் தனியனின் பிழைத்து வாழ்தலை இயலுவதாக்குகின்ற சமூகமானது, சமூக வழிகாட்டலின் (social - guidance) கீழ்மட்டுமே கற்கக் கூடிய சிக்கலான சமூகத் தக அமைத்தல்களைப் பெறுவதையும் இன்றியமையாத தாக்குகின்றது. குழவி குழந்தையாக வளரும் பொழுதி லிருந்து இறக்கும் வரையிலும் சமூகம், ஏறக்குறையப் பயன் விளையத் தக்கவாறும் (effectively) மேலும் எப்பொழுதும் மிகச் சிக்கலான வழிகளிலும், சமூக வாழ்க்கையின் குறிப்பிட்ட நிலைமைகளில் பிழைத்து வாழ்வதற்கும் இன்றிய மையாத நடத்தையின் சமூகக் கோலங்களை அவனுக்குப் பயிற்றுவிக்கின்றது' (6.46). இவ்வாறு உயிரியல் சார்

மரபுரிமை (biological heritage) மனிதனின் உயரியல் (organic) உள்ளார்ந்த இயல்புகளை (potentialities) நிருணயிப்பது போன்று, சமூக மரபுரிமை அவனுடைய நடத்தை மனப்பான்மைகள், நம்பிக்கை, ஆற்றல்கள் ஆகியவற்றைப் பெருமளவு நிருணயிக்கின்றது. உயிரியல்சார் மரபுரிமை இயற்கைச் சக்திகளின் ஒரு விளைவாக (product) இருக்கும் போது சமூக அல்லது பண்பாட்டு மரபுரிமை மனிதச் செயலறிவின் ஒரு விளைவாகும் என்பது இவ்விரண்டு மரபுரிமைகளுக்கு இடையேயுள்ள வேறுபாடாகும். ஒரு குறிப்பிட்ட பண்பாடுகளில் குறிப்பிட்ட ஆண்டுகளில் ஒப்புமைச் சமூக நிலைப்பின் (comparative social - stability) காரணமாக ஏற்புடைய சமூகச் செயற்பழக்கங்கள் தெய்வத்தன்மையால் அமைத்தாளப்பெற்றது (devinely ordained) என மக்கள் நம்பலாம். ஆனுல், வரலாற்ருராய்ச்சிகள் ஒரு புறமும் மனிதவியல் கள ஆய்வுகள் (anthropological field studies) மறுபுறமும் சமூகச் செயற்பழக்கங்களில் (social practices) 'இயற்கைத் தன்மையுடையது' அல்லது தவிர்க்க முடியாதது என்று ஒன்றும் இல்லை என்று முடிவாகக் காட்டியுள்ளன. எந்தக் குழுவிலுள்ள சமூக ஒழுங்கமைப்பும் (social-system) மனிதனுல் ஏற்படுத்தப்பட்டதாகும். மேலும், இஃது ஒவ்வொரு குழுவிலும் தொடர்ச்சியாக மாறுதல்கள் அடைந்துகொண்டே இருக்கின்றது. சில குழுக்களில்மட்டும் இந்த மாறுதல் படிப்படியாகவும் மற்றக் குழுக்களில் இது மிக விரைவாகவும் நிகழ்கின்றது. குழுவினரின் உடலியத்தன்மை பொறுத்தப்பாட்டிலும் (physical adjustments), மற்ற மனிதர்களின் முன்னிலையில் அவர்களது பொறுத்தப்பாட்டிலும் உள்ள வெவ்வேறு குழுக்களது மாறுபட்ட செயலறிவுகளின் ஆதாரத்தில் அமைந்த சமூக மரபுரிமையின் வேறுபாடுகளின் காரணமாகப் பண்பாட்டில் உள்ள வேறுபாடுகள் ஏற்படுகின்றன.

செயலறிவின் மாறுதலுடனும், நிலைமையின் மாறுதலுடனும் பண்பாட்டில் மாறுதல் காணப்படுகின்றது என்பதை இது குறிப்பிடுகின்றது. இத்தகைய மாறுதல்கள் ஏற்பினுல் வசதியளிக்கப்படலாம் அல்லது குழுவிலுள்ள தனியன்களால் எதிர்க்கப்படலாம் என்பது மேலும் ஓர் உய்த்துணர்தல் (implication) ஆகும். இம் மாறுதல்கள் ஒரு தனியனுல் அல்லது ஒரு சில தனியன்களால் ஏற்படலாம். இவ்வாறு ஒரு புறம் சமூக மரபுரிமை ஒரு குழுவிலுள்ள தனியன்களின் நடத்தையை நிருணயிக்கின்றது, மறுபுறம் சில தனியன்கள் சமூக மரபுரிமையைப் பாதிக்கலாம். எனவே, சமூக மரபுரிமையிலும், சமூக

மாறுதலிலும் ஒரு தொடர்ச்சியான செயலும் எதிர்விளையில் காணப்படுகின்றது. சில சமூகங்களின், சில காலங்களில் சமூக மரபுரிமை மிக வலிமை பெற்றிருக்கலாம், மற்றச் சில சமூகங்களில் சமூக மாறுதல் மிக வலிமையுடையதாக இருக்கலாம். இம்மாறுதல் முன்னேற்றமுடையதாகவோ சீர்கேடு உடையதாகவோ இருக்கலாம்; அல்லது மாறுதலின்மை அல்லது மாறுதலுக்குத் தடை, தேக்கத்துக்கு (stagnation) இட்டுச் செல்வதுடன், குழு பிழைத்து வாழுதலையும்கூடப் பாதிக்கலாம். எனவே, நாம் தானகவே மனிதர்களை முன் நிருணயிக்கப் பெற்ற கோலங்களில் (free-determined patterns) உருவாக்கும் ஒருவிதச் செயல் தன்மையாகச் (mechanisms) சமூகத்தைக் காணுகின்ற தவருன வாதத்தைச் (fallacy) செய்தல் கூடாது. அல்லது ஒவ்வொரு தனியனும் அவன் விரும்பிய எவ் வழியிலும் வளர உரிமையுடையவன் என்ற இதற்கு முற்றிலும் மாருன தவருன வாதத்தைச் செய்தலும் கூடாது. குழுவினுல் ஏற்கத்தக்க சமூகப் பொருத்தப்பாடுகளைக் கற்றல் ஒவ்வொரு தனியனுக்கும் இன்றியமையாததாகும். நீண்ட முக்கியமான பருவமான குழவிப் பருவத்திலும் (infancy) குழந்தைப் பருவத்திலும் (child-hood) குடும்பத்திலும் அண்டையத்திலுமுள்ள (neighbourhood) பெற்றேரும் மற்றேரும் குழுவுக்குத் தனிப்பட்ட சமூகப் பொருத்தப்பாடுகளைத் தனியன் தனதாக்கிக்கொள்ளுமாறு உண்டாக்குவதால் இங்கு எவ்விதத் தேர்வும் (choice) இல்லையென்றும் கூறலாம். ஆனுல், பின்னர் தனியன் வளர்ச்சியடைவதாலும், சமூக நிலைமைகளையும், தேவைகளையும்பற்றிய உட்காட்சியைப் பெறுவதாலும் அவன் சமூக மாறுதலை ஏற்படுத்தலாம். இவ்வாறு தனியன் ஏறக்குறைய தடையுடன் (resistance) சமூக உடன்பாட்டினைத் (social confirmity) தொடங்கி, பின்னர் சமூக மாறுதல் வெற்றியுடன் கொண்டுவரலாம். சமூக மாறுதல் என்பது எப்பொழுதும் ஒரு தலைவனுல் மனங்கவருகின்ற வழியில் உண்டாக்கப்பெற்ற ஒரு திடீரென்று நிகழ்கின்ற குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகாது என்பது வற்புறுத்தப்பெறுகின்றது. குழுவிலுள்ள ஒவ்வோர் உறுப்பினரும் பண்பாட்டை ஊடனுப்புதலுக்கு (transmission) எவ்வாறு பங்குகொள்ளுகின்றுர்களோ அதுபோன்று மிக நுட்பமான வழியிலும் பயன் விளையத்தக்கவாறும் குழுவின் ஒவ்வோர் உறுப்பினராலும் சமூக மாறுதல் செய்யப்படலாம்.

நாம் மேலே கண்டது போன்று 1934ஆம் ஆண்டில் ரூத் பெனடிக்ட் (Ruth Benedict) (10) என்பாரால் வெளியிடப்பெற்ற

**பண்பாட்டுக் கோலங்கள்** (patterns of culture) எனும் நூலும், 1935ஆம் ஆண்டில் மார்கரெட் மீட் (Margaret Mead) என்பாரால் வெயியிடப்பெற்ற **மூன்று சமூகங்களில் பால்தன்மையும் மனப்பாங்கும்** (Sex and Temperament in Three Primitive Societies) எனும் நூலும் சமூக உளவியல் வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட முன்னேற்றப்படியாகத் திகழ்கின்றன. இவ்விரு நூல்களில் வெவ்வேறு பண்பாடுகளின் ஆறு சுருக்கமான தெளிவான விளக்க உரைகள் காணப்படுகின்றன. சமூகக் குழு குறிப்பிட்ட தன்மைகளின் முன்னேற்றத்தை ஊக்குவிப்பதுடன் மற்றவற்றின் வளர்ச்சியை அவற்றைக் கண்டித்தலின் மூலம் தடுக்கின்றது என அந் நூல்கள் காட்டுகின்றன. நட்புக்குரிய அரபேஷியரும் (amiable Arapesh) சந்தேகக் குணமுள்ள தொபுவன்களும் (suspicious Dobuans) அவர்களது மாறுபட்ட பண்பாடுகளின் மாற்ற விளைவாகத் (product) தெளிவாகக் காட்டப்பெற்றுள்ளனர். நாம் ஒவ்வொரு குழுவையும் பல்வேறு இயலுகின்ற பண்பாட்டுக்கோலங்களின் மாற்ற விளைவுகளில் ஒன்றாகக் காண வேண்டுமென இவ்வாய்வுகள் காட்டியுள்ளன. எனவே, பண்பாடு சமூக உளவியலின் ஒரு முக்கியமான பகுதியாக எடுத்துக்கொள்ளப்படுகின்றது. இவ்வுணர் அறிவு சமூக உளவியலின் வளர்ச்சியில் ஒரு குறிப்பிடும்படியான படியினைக் (step) குறித்துள்ளது.

'சூனி' (Zuni) இன மக்கள் அடக்கமான தன்மையையும், தீமையற்ற தன்மைகளையும் மற்ற அனைத்து நற்குணங்களுக்கும் மேலாக மதிக்கும் சடங்குகளைப் பின்பற்றும் மக்களாவர். அவர்களது அக்கறை செழிப்பானதும் சிக்கலானதுமான சடங்குகள் நிறைந்த வாழ்க்கையை (ceremonial life) மையமாகக் கொண்டது' (10.50). சூனி (Zuni) என்பார் அமெரிக்காவின் நியூ மெக்ஸிகோவிலுள்ள சிவப்பு இந்தியராவார் (Red Indians of New Mexico in U.S.A.). 'ஒரு திருமணம் மனநிறைவு தரவில்லை எனினும் பெண் கணவனில்லாமல் இருக்க மாட்டாள் என்று அவள் மனநிறைவு பெருகின்றாள். அவள் அவளது கணவனின் உடைமைகளை ஒன்றாகச் சேகரித்து அவற்றை வாயிற்கதவுப்படியருகில் வைக்கிறாள் ....... அவன் மாலையில் வீட்டுக்கு வரும்பொழுது, சிறிய மூட்டையினைக்கண்டு அதை மேலே எடுத்து அழுகின்றான், பின்னர் அதை எடுத்துக்கொண்டு தன் தாய்வீடு திரும்புகின்றான். அவனும் அவன் குடும்பத்தாரும் அழுகின்றனர். மேலும் அவர்கள் நற்பேறு அற்றவர்களாகக் கருதப்படுகின்றனர். ஆனால் வாழும் இருப்பிடத்தை மறுவகையாக ஒழுங்குபடுத்தல் (rearrangement) நிலையற்ற வம்புப் பேச்சுக்கு (fleeting gossip) உட்பட்டதாகின்றது. ஆழந்த உணர்ச்சி

யின் ஒரு விளைவு தொடர்பு (inter play) அரிதாகக் காணப்படுகின்றது. கணவன்மார்களும் மனைவிமார்களும் இவ்விதிகளினால் ஒரே நிலையில் இருத்தப்படுகின்றனர். மேலும், இவ்விதிகள் மூர்க்கமான மனவெழுச்சிகளான பொறாமைத்தன்மை (jealousy) அல்லது பழிக்குப்பழி வாங்குதல் (revenge) அல்லது விலக்கலை ஏற்க மறுக்கும் ஒரு பற்றுதலுக்குப் (attachment) பெரும்பாலும் இடமளிக்காமல் இருக்கின்றது. திருமணம், விவாகரத்து ஆகியவை தற்செயலான தன்மை பெற்றிருந்தும், மிகப் பெரும் சதவீத (proportion) சூனி (Zuni) திருமணங்கள் வாழ்க்கைக் காலத்தின் பெரும் பகுதியினூடே நிலைபெற்றிருக்கின்றன' (10.68). சூனி மக்கள் தாய்வழி உரிமையைக் (matriarchal) கொண்டவர்கள். சில பண்பாடுகளில் சிறப்பு, பூப்பின் (puberty) தொடக்கம், திருமணம், இறப்பு போன்ற அனைத்து வாழ்க்கைக் கட்டங்களும் திகிலுடைய நிலைமைகளாகக் (terror situation) கருதப்படுகின்றன. மிகப் பெரும் அச்ச நிலைமை சூனியமாகவும் (sorcery), மற்ற வட அமெரிக்க சிவப்பு இந்தியக் குழுக்களில் சூனியம் பரவி நிலவுதல் காணப்படுகின்றது. 'அச்சம், சந்தேகக் குணம், மருத்துவனுக்குப் (medicine man) பெரும்பாலும் கட்டுப்பட முடியாத எதிர்ப்பு,.....ஆகியன முழுதும் சூனியத்தின் குணவியல்பாக உள்ளது' (10.110). இயற்கை இகந்த (super natural) சக்தி வாய்ந்ததாக இருப்பதோடு மட்டுமல்லாமல் அபாயகரமானதாகவும் இருப்பதால் அவர்கள் இச்சக்தியை மதிக்கின்றனர். மருத்துவ மனிதன் கேடு விளைவிக்கும் சக்தியை உடைய ஒரு மனிதனுகக் காணப்படுகின்முன். ஆதலால் அவன்பால், அச்ச மனப்பான்மை, பகைமைத்தன்மை, சந்தேகக் குணம் ஆகியவை காட்டப்படுகின்றது, 'இத்தகைய நிகழ்ச்சிகளைத் சூனி (Zuni) மக்களிடையே கற்பனை செய்ய இயலாது. அவர்களது மதக் குருக்கள் (priests) மறைத்து வைக்கும் பகைமையையும் (vield hatred) சந்தேகக் குணத்தையும் கொண்டவர்கள் அல்லர்' (10.111). எனவே சூனி மக்கள் எந்தவகை மிகுதியையும் வசப்படுத்த முயலுவதில்லை. மூர்க்கத்தனத்தில் (violence) சகிப்புத்தன்மை (tolerance) காணப்படுவதில்லை. 'ஆட்சிச் செல்வாக்கில் தலையிடுதலோ (indulgence) அல்லது தனியன் உயர்நிலையிலிருக்கின்ற எந்த நிலைமையிலும் களிப்போடு (delight) காணப்படுவதில்லை' (10.112). 'அவர்களது அண்ட ஆராய்ச்சியியல் எண்ணங்கள் (cosmological ideas) மற்ருெரு வகையாகும். இதில் அவர்களது பொதுநிலைகடந்த நிலையான உற்சாகத்திற்கு அவர்களது எண்ணங்களை வெளியிட்டுள்ளனர். இவ்வுலகில் அவர்கள் நிறுவனவயப்பெற்ற (institutionalized) அதே செறிவுப் போராட்டம், அபாயம்

ஆகியவற்றின் குறைபாட்டினை அவர்கள் மற்ற உலகுக்குப் புறத் தெறிகின்றனர் (project)' (10.116). அவர்கள் இந்த அண்டத்தை (universe) நன்மை தீமைகளின் ஒரு போராட்டமாகக் காண்பதில்லை. 'அவர்கள் பருவங்களைக் காண்பதில்லை அல்லது மனிதனின் வாழ்க்கையை வாழ்வு, சாவுடன் நடக்கும் ஓர் இனமாகக் காண்பதில்லை. வாழ்வும் எப்பொழுதும் நிகழ்கின்றது. சாவும் எப்பொழுதும் நிகழ்கின்றது. இறப்பு வாழ்க்கையின் மறுப்பு (denial) அன்று. பருவங்கள் (seasons) நம் முன்னே சுழலுகின்றன. மனித வாழ்க்கையும் வழிவழியாகச் சுழற்சி அடைகின்றது. அவர்கள் மனப் மான்மை துறப்பமைவினையோ (resignation) ஒரு வலிமையான ஆற்றலுக்குக் கீழ்ப்படியும் தன்மையுடைய விருப்பத்தையோ உள்ளடக்கியதன்று; ஆனால், அண்டத்துடன் மனிதனது ஒருமைத் தன்மையின் வகையினை உள்ளடக்கியதாகும்' (10.111). 'மற்ற மக்களுடன் மனிதனுடைய தொடர்பில் அவர்களது கூற்றுப் போன்று, அண்டத்துடன் (cosmos) மனிதனின் தொடர்பில் அவர்களது கூற்று வீரத்துக்கு (heroism) இடந்தருவதாக இல்லாததோடு, தடைகளை வெல்லுதற்குரிய மனிதனின் மன உறுதிக்கு இடந்தருவதில்லை' (10.118).

## மேற்கோள் நூற்பட்டியல்


1. SHERIF and SHERIF, Harper, 1956. — *An Outline of Social Psychology.*
2. KIMBALL YOUNG, Routledge and Kegan Paul, 1948. — *Hand-book of Social Psychology.*
3. WATSON, Lipincott, 1919. — *Psychology from the Standpoint of a Behaviourist.*
4. FREUD, Hogarth, 1927. — *The Ego and the Id.*
5. MACIVER and PAGE, Macmillan, 1952. — *Society.*
6. LA PIERE and FARNSWORTH, Mc Graw-Hill, 1949. — *Social Psychology.*

7. MURPHY and NEWCOMB, Harper, 1937. — *Experimental Social Psychology.*

8. ARGYLE, Methuen, 1957. — *The Scientific Study of Social Behaviour.*

9. LINTON, Appleton-Century, 1936. — *The Study of Man.*

10. RUTH BENEDICT, Mentor, 1953. — *Patterns of Culture.*

11. MARGARET MEAD, Routledge, 1935. — *Sex and Temperament.*

# 4. சமூக நடத்தையின் வளர்ச்சி

## (DEVELOPMENT OF SOCIAL BEHAVIOUR)

இவ்வறிமுகப் பகுதியை முடிப்பதற்குள், சமூக நடத்தையின் வளர்ச்சியைக் குறித்த சில கண்டுபிடிப்புகளை ஆராய்தல் பொருத்தமானதாகும். இதனை இரு தலைப்புகளின்கீழ் ஆராயலாம். (அ) விலங்குகளின் மூல முன் மாதிரிச் (proto type) சமூக நடத்தை. (ஆ) குழந்தையின் சமூக நடத்தை வளர்ச்சி.

### விலங்கு முன் மாதிரிகளின் சமூக நடத்தை
### (The animal prototype of social behaviour)

ஒரு செல்லினைக் கொண்ட உயிரினத்திலும் (unicellular organism) கூடச் சமூகச் காரணி இருப்பதை நாம் முன்பே கண்டோம். துரத்திச் செல்லுதல் (chasing), பின் தொடர்தல் (pursuing), முரண்பாடு (conflict) ஒத்துழைப்புப் (co-operation) போன்ற பல சமூக நடத்தைகள் விலங்குகளிடையேயும் காணப்படுகின்றன. சமூக வாழ்க்கை (social life) மனிதனுக்குமட்டும் உரியது என்று நாம் கருதலாகாது. சமூக நடத்தையிலும் மற்ற நடத்தைகளில் காணப்படும் தொடர்ச்சிக் கொள்கை (principle of continuity) இயங்குகின்றது. முன் சுட்டியபடியே சமூகம், இடைவினையைக் (interaction) கொண்டுள்ளது. ஓர் இனத்தின் (species) ஓர் உறுப்பினரது (member) செயல் மற்றவரது செயலைப் பாதிக்கிறது. விரிவாகக் கூறப்படுமானால், இடைவினையானது (interaction) எதிர்பட்ட (oppositional) அல்லது ஒத்துழைக்கும் (co-operative) தன்மையைப் பெற்றது. இடைச் சார்ந்திருத்தல் (inter dependency), பரிணமத்தின் விளைவு (product) அன்று, இடைத் தனியர் (inter individual) போராட்டம் ஒரு பக்கமும் சூழ்நிலையின் சக்திகளுக்கு (force) எதிராகப் போராடும் உயிரினம் மறுபுறமும் ஆகிய இவற்றால் நாம் பெரிதும் திறம்படக் கவர்ச்சி (impressed) அடைந்துள்ளோம்.

இவை உயிரினம் (organism) பிழைத்து வாழ்வதற்கு (survival) உதவியாயுள்ளன என்று கூறுவதில் ஐயமில்லை. ஆனால், உயிர் வாழ்வதற்குச் சூழ்நிலைக்கேற்ப இடைத்தனியரின் (inter individual) ஒத்துழைப்பும் (co-operation), பொருத்தப் பாடும் (adjustment) மிகவும் அடிப்படையாக அமைகின்றன.

முதுகெலும்பிலிகளின் (invertebrates) சமூக நடத்தைக் (social behaviour) கோலங்களையும் (patterns) முதுகெலும்புகளின் (vertebrates) சமூக நடத்தைக் கோலங்களையும் வேறுபடுத்தி நோக்குவதின் வாயிலாக விலங்குகளிடத்தில் காணப்படும் சமூக நடத்தையைக் காணலாம். முதுகெலும்பிலிகள் சூழ்நிலையிடத்தும் அவை மற்ற ஒவ்வொன்றிடத்தும் கொள்ளும் பொருத்தப்பாடும் ஏறக்குறைய உடலியல் இரசாயனச் சக்திகளினால் (physico chemical forces) நிருணயிக்கப்பட்ட தன்னியக்கச் செய்கைகளாகும் (automatic). ஆகையினால் தூண்டு சக்திக்கேற்ப அமையும் அசைவு, மறிவினை (reflex), இயல்பூக்கம் (instinct) போன்ற கலைச் சொற்கள் (terms) உறுதியான (inflexible) நடத்தை மாதிரிகளைக் குறித்தலுக்குப் பயன் படுகின்றன. அதற்குமாறாக முதுகெலும்பிகள் மிகுந்த நெகிழ்வான (flexible) தன்மையை வெளிப்படுத்துகின்றன. முதுகெலும்பிலிகள் ஏறக்குறைய, தகவமைப்பின் (adaptation) நிலையான கோலங்களை வெளிப்படுத்துகின்றன. அதே சமயத்தில் முதுகெலும்பிகள் மிகுந்த தனிமாறுதலையும், கடந்த அனுபவங்களினால் பயன்பெறும் திறனையும் பெற்றுள்ளன. இயற்கை இருவகையான பரிசோதனைகளை நடத்தியுள்ளது. ஒன்று, முதுகெலும்பிலி நிலையில் உயிரிக்கும் சூழ்நிலைக்கும் உள்ள தொடர்பு கற்றலுக்கும், தனித்தன்மை வளர்ச்சிக்கும் சிறிதளவு வாய்ப்பே தந்து நெகிழ்வற்றதாக அமைந்துள்ளது. ஆனால், மற்றொன்றான முதுகெலும்பி நிலையில் உயிரிக்கும், சூழ்நிலைக்குமான தொடர்பு கற்றலுக்கும் தனித்தன்மை வளர்ச்சிக்கும் பெருமளவு வாய்ப்பினைத் தரக்கூடிய நெகிழ்வான நிலையில் அமைந்துள்ளது. வேறு வகையாகக் கூறினால் உயிரற்ற மட்ட அளவிலிருந்து (inorganic level) உயிர் விலங்குகளிடையேயும் மனிதர்களிடையேயும் இயலுகின்ற உயர்ந்த அளவு தனித்தன்மை (high degree of individuality) வரை, ஏற்படும் நிலை மாறுபாட்டில் (transition) ஒரு படியாக முதுகெலும்பிலி மட்ட அளவிலுள்ள (invertebrate level) நடத்தையின் உறுதித் தன்மையைக் (rigidity) கூறலாம்.

## முதுகெலும்பிலிகளின் சமூக நடத்தை
(Invertebrate social behaviour)

ஜென்னிங்ஸ் (Jennings) (1.29) என்பார் பாக்டீரியா (Bacteria) திரளாக ஒன்று சேருவதற்குள்ள காரணங்களை ஆராய்ந்துள்ளார். பாக்டீரியாவின் நடத்தை அடிப்படையில் தக அமைப்புத் தன்மை (adaptive) பெற்றுள்ளதையும், அதன் துலங்கல்கள் வாழ்க்கைச் செயல்களை மேம்படச் செய்கின்றன என்பதனையும் ஜென்னிங்ஸ் கண்டார். அவர் பாக்டீரியா கொண்ட தண்ணீரைக் கண்ணாடிச் சில்லில் (slide) வைத்தார். முதலில் அவை எல்லாத் திசைகளையும் நோக்கி நீந்திச்சென்று ஒரு சீராகச் சிதறின. பின் படிப்படியாக அவை காற்றுக் குமுழியைச்(air bubbles)சுற்றித்திரண்டு சேர்ந்தன. பிராணவாயு (oxygen) மிகுந்த பகுதிக்கு (zone) அவை வந்தடைகின்றன. இவ்வாறு திரளுவதற்குக் காரணம் அவற்றின் உயிரணுக் கொண்ட உறுப்பமைப்பே (proto plasmic constitution) எனலாம். அவற்றின் நடத்தையில் சமூகம் என்ற ஒன்று இல்லை.

இவ்வாறே, ப்ரோடோஜோவாவில் (protozoa) கூடின. ஆனால், அசமூக நிலையினைக் (non social) காணலாம். சான்றாக; இக்லினே (Euglenae) ஒளியுள்ள இடத்தைச் சுற்றிக் கூடுகின்றது. நிறப்பகுதிக்குச் செல்கையில் தன்னைத்தானே கசையால் (flage llum) அடித்துக்கொள்வதினால் இவை ஒளியுள்ள இடத்திலேயே கூட ஏதுவாகிறது. ஆல்வெர்டெஸ் (Alverdes) சங்கங்களையும் (association) சமூகங்களையும் (societies) (உயிரி முழுமைகள்—organic wholes) வேறுபடுத்திக் காட்டியுள்ளார். 'புறவயக் காரணிகளால் (external) முழுவதும் உண்டாக்கப்பெற்ற தற்செயலான (chance) திரட்சிகளைச் சங்கங்கள் (association) என நான் கருதுகிறேன். (உதாரணமாக, வெளி ஒளியைச் சுற்றிப் பூச்சிகள் திரள்வது போன்றது) இதற்குமாறாகச் சமூகங்கள் எனப்படுவது சமூகப் பொது உணர்ச்சியாய்க் கட்டுப்பட்ட சமுதாயங்களாகும்.....(உதாரணமாக, எறும்புக் கூட்டம், குரங்குகளின் கூட்டம் (Horde). ஒரு சங்கம் அமைப்பதில் ஒரு தனியன் சூழ்நிலைக் காரணிகளால் நடத்தப்படுகின்றானேயன்றி அவனுடைய இன (species) மக்களால் நடத்தப்படுவதில்லை. இதற்கு மாறாக ஒரு சமூகம் என்பது ஒரு தனியன், முதலில் தன் இனத்தவர்களுடன் (presence) இருத்தலினாலும், இரண்டாவதாகச் சூழநிலைக் காரணிகளோடு இருத்தலினாலும் அமையப்பெறுகின்றது' (2.4). ஆல்வெர்டெஸ்(Alverdes)கருத்துப்படி,ப்ரோடோஜோவா கூட்டங்கள் மட்டுமன்றி, இறந்த எலிகள் அல்லது பறவைகளைச் சுற்றியுள்ள

வண்டுகளின் (beetles) கூட்டமும், விலங்கின் சவத்தைச் சூழ்ந்துள்ள பறவைகளே அன்றிப் பிற விலங்குகளின் கூட்டமும் சங்கத்துக்கு (association) உதாரணங்களாகுமேயன்றி ஒரு சமூகமாகாது. வேறு இடத்தில் ஆல்வெர்டெஸ் (Alverdes) சமூகத் தன்மையற்ற (asocietary) விலங்குகளேயும், சமூகத் தன்மையுள்ள (societary) விலங்குகளேயும் வேறுபடுத்திக் காட்டியுள்ளார் (3.113). கீழ்நிலே விலங்குகள் (lower animals) ப்ரோடோஜோவா (protozoa) முதற்கொண்டு சமூகத் தன்மையுடையனவாயுள்ளன. இவை தனித்திருந்தாலும், தன் இனத்துடன் இருந்தாலும், தனக்காகவே வாழ்கின்றன. பெரும்பாலும் அவை ஒன்றை ஒன்று தாக்கிக்கொள்ளும் அல்லது பிறர் தாக்குதலிலிருந்து காத்துக்கொள்ளும். ஆனுல், அவை மற்றவற்றோடு எவ்விதமான தொடர்புகொள்ளவும் தகுதியற்றவையாய் இருக்கின்றன. இதற்கு மாருகச் சமூகத் தன்மையுடைய விலங்குகளே ஒருங்கே சேர்த்தால் அவற்றில் ஒன்று, மற்றென்றினிடத்தில் தொடர்புகொள்ளுகின்றது. 'மேற்கூறிய நிலேமையிலிருந்து (சாதாரணச் சேர்க்கை—அல்லது கீழ்த்தரச் சமூகச் சேர்க்கை) எவ்விதச் சிக்கலான ஒரு சமூகக் குழுவையும் வேறுபடுத்துவது, குறிப்பிட்ட பண்புகளுடன்கூடிய தனியன்களாகிய குழு உறுப்பினர்களால் பயன்படுத்தப்பட்ட பயன்களிலிருந்து பெறப்பட்ட ஒரு நிலேயாகிய ஒற்றுமையாகும். இது தனியன்களின் ஓர் இடைச் சார்தலின் பொருந்தியிருக்கின்ற ஒன்ருகும்.

நடனமாடும் தேனீக்களின் கூட்டம் கூடுவது, வெளிச்சம், நீர்நயப்பு அல்லது குளிர்மை (humidity), வெப்பம் (temperature) போன்றவற்றிற்கு அவை செய்யும் ஒருமித்த தனித்த துலங்கல்களினுலாகும். இவ்விதத் தற்செயலான சேர்க்கைகளினுல் சில தக அமைப்புப் (adaptive) பயன்களே (benefits) விளேவிக்கலாம். இந்தத் தேனீக் கூட்டங்களுக்குப் (swarms) பால் தோற்றங்கள் (sexual forms) உதவியாய் அமைகின்றன. இதனுல், இனங்கள் பிழைத்திருக்க முடிகின்றது (survival). கீழ்மட்ட அளவுகளில் உயிரினங்கள் ஒன்று சேர்வது (a) பொதுச் சூழ்நிலேத் தன்மைகளுக்காகவும், (b) இன விருத்திக்காகவும் என்பதை நாம் அறிகிறோம்.

எறும்புகள், தேனீக்கள் மற்றும் கறையான்கள் (Termites) போன்ற பூச்சிகள் மட்டத்தில் உண்மையான சமூக அமைப்பை நிறுவனம் (social organization) நாம் காண்கின்றோம். மையர் (Maier) என்பாரும், ஷெனிரில்லா (Schneirla) என்பாரும் கூறுவது போன்று 'உண்மையான சமூக அமைப்பைப் பின்வருமாறு

வரையறுக்கலாம். சிறந்த முழுமையையும், தன்னிலையையும் உடைய குழுவாகத் தனியன்கள் சேர்ந்திருப்பதனை உண்மை யான சமூக அமைப்பு எனலாம். இச் சமூக அமைப்பு, தனித் தனி உயிரிகளின் இடைச் சார்ந்திருத்தலின் அடிப்படையிலும், ஒருவருக்கொருவர் தரும் துலங்கல்களின் அடிப்படையிலும் அமைந்துள்ளது' (5.164). உருமாதிரியான (typical) பூச்சி இனவாழ்வுக் கூட்டமைப்பு (colony), பெற்றோர்கள் குழந்தை கள் அடங்கிய குழுக்களின் அடிப்படையில் அமைந்ததாகும். இரண்டாவது சிறப்புக் கூறு என்னவெனில் அவற்றினுள் காணப்படும் கருத்துப்பரிவத்தனை (communication) ஆகும். ஒன்றிலிருந்து மற்றொன்றிற்குக் கிளர்ச்சி அல்லது பரபரப்பு ஊட்டுவதன் மூலம் இனப்பூச்சி சமுதாயமே தூண்டப் பெற்று எழுச்சியுறுகிறது. உணர்ச்சியுறுப்புகளின் (antenna1) அசைவுகளினால் (vibration) ஓர் எறும்பு ஒரு கூட்டு (nest) அங் கத்தினர்களை எழுச்சியுறச் செய்கிறது. இறுதியாக எறும்புகளிடத் தில் நாம் தொழிற்பிரிவினையும் (division of labour), வகுப்பு ஒழுங்கமைப்பினையும் காணலாம், அவற்றினிடத்தில் இனப்பெருக்க மிக்க (fertile) வகைகளும், வளமற்ற (infertile) வகை எறும்பு களும் காணப்படுகின்றன. பூச்சிக் கூட்டமைவுகளில் (colonies) தொழிலாளர் வர்க்கத்தைத் தவிர, போர் புரியும் வர்க்கத்தை யும் காணலாம். இனப் பெருக்கத்திற்குரிய (fertile) பெண் அல்லது அரசி தன் இறக்கைகளை இழந்து முட்டையிடும் இயந்திரம் போன்று மாறுகிறது. அஃது ஒளியிலிருந்து விலகி (shuns) ஒரு சிறு பொந்தினை (burrow) உருவாக்குகின்றது. இதில் முதல் முட்டைகளைத் தன் நாக்கால் துழாவுகிறது. முட்டைகளினின்று வெளிவந்த புழுக்களைத் (larvae) தன் உமிழ்நீர்ச் சுரப்பி (salivary glands) நீரால் உண்பிக்கின்றது. இந்த இனப் புழுக்கள் பின் தொழிலாளி எறும்புகளாக மாறுகின்றன. இவை மிகவும் சுறுசுறுப்பாக (active) அரசியைப் பேணியும், உணவு சேகரித் தும், வளையைக் குடைந்தும் வாழ்கின்றன. இவை அரசி இட்ட மிகையான முட்டைகளைப் பொருக்கி எடுத்து அவற்றை நாவால் நக்கி முதலில் அரசி செய்தது போன்றே ஒன்றாய்ச் சேர்க்கின்றன. முதிர்ச்சியடைந்த தொழிலாளி எறும்புகள் இடையே ஒன்றை ஒன்று அடிக்கடி ஊட்டியும் (feed) உடல்களை நக்கியும் (lick) உணர்ச்சியுறுப்புகளால் ஒன்றை ஒன்று கீரியும் (stroke) கொள்கின்றன. எறும்புகள் அனைத்தும் ஓர் இனத் தவையாயினும், ஒரு கூட்டமைவு எறும்பு வேறு கூட்டமைவு எறும்பைக் கண்டால் தாக்குதல் செய்கின்றன. எறும்பு, தன் கூட் டமைவுக்குரிய இரசாயனப் பொருள்களுக்கு (chemical) ஆக்க முறையான துலங்கல்கள் அளிக்கின்றன. ஓர் ஆராய்ச்சியாளர்

பல்வேறு இனக் கூடுகளினின்றும் முட்டைகளை எடுத்துச் செயற்கை முறையில் அவற்றைக் குஞ்சு பொரிக்கச் செய்தார். அவை, ஒரு பொதுவான கூட்டில் வளர்ந்ததால் சண்டையின்றிச் சமாதானத்துடன் வாழலாயின. ஆனால் மூலமுதலான (original) கூடுகளினின்று எடுத்த முதிர்ச்சியான எறும்புகளை ஒருங்கே சேர்த்தால் அவற்றில் ஒன்று மற்றொன்றைத் தாக்கலாயின. ஓர் எறும்பு உணவைக் (food) கண்டு, மற்றோர் எறும்பைக் கூண்டில் சந்தித்தால், உடனே இவற்றிற்குள் துரிதமான பரபரப்பு, உணர்ச்சிக் கருவுகள் மூலம் பரிமாறிக்கொள்ளப் படுகின்றன. இவ்வாறு ஓர் எறும்பிலிருந்து அடுத்த எறும்பிற்குக் கருத்துப் பரிவர்த்தனை (communication) ஏற்படுகின்றது. இக் கருத்துப் பரிவர்த்தனை வெறும் குறியீடுத் தன்மை (symbolic) யன்று. ஆனால், இது பொருளடங்கிய (sense dominated) ஒரு சமூகச் செயலாகும். சமூக அமைப்பில் (social formation) பாலும் (sex) இனப் பெருக்கமும் (reproduction) முக்கிய அங்கம் வகிக்கின்றன. நடனமாடும் ஈக்களின் தற்செயலான சேர்க்கைகளிலும்கூட இருபாற்பட்டவை, ஒன்று சேர வழியளிக்கின்றன. இதனால் இனம் உயிர் வாழ இயல்கின்றது. முன்னர் கண்டபடி, சமூகத்தன்மை வாய்ந்த பூச்சிகளில் இனப் பெருக்கமிக்க இராணி ஈ முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கத் தொடங்கியதும் முழுக்கூட்டமைவும் எழுச்சியுறுகிறது. இக் கூட்டமைவு தாயையும் குழந்தைகளையும் கொண்டதாகும். ஆல்போர்ட் (Allport) எழுதுவதாவது, 'பால் இயல்பூக்கத்திலிருந்து (sex instinct) சமூகம் தொடங்குகின்றது. இது நம்மை வாழவைப்பதற்கு ஓர் அவசியமான பகுதியாகிய (unit) குடும்பம் (family) எனப்படும் நிலையத்திற்கு இட்டுச் செல்கின்றது. குடும்பத்தினுள் ஒத்துணர்வுக் (sympathy) கொள்கை (principle) செயல் புரிகின்றது. ஒரு குழந்தை உயிர் வாழ்வது தான் வலிமையும் தகுதியும் உடையவனாக இருப்பதால் மட்டுமன்று, அதன் பாதுகாப்பிலாத் தன்மை (defencelessness) பிறரிடத்தில் எழுப்பும் ஒத்துணர்வினாலும்... எனக் கூறலாம்' (6.19). இராணி ஈ முதலில் இட்ட முட்டைகளை நக்கிக் குஞ்சுகளைப் பொரித்து அவற்றிற்குத் தன் உமிழ்நீர்ச் சுரப்பி நீரால் உண்பித்தல் ஒத்துணர்வினால் என்று கருதும் ஆல்போர்ட்டின் (Allport) கருத்தினை நாம் சம்மதிக்கத் தேவையில்லை. ஆனால் இங்கு எது பின்னால் உளவியற் செயன் முறையாக வெளிப்படுகின்றதோ அந்த ஒத்துணர்வ ஒன்றே உயிரியல்கள் அடிப்படையில் காணப்படுகின்றது.

சமூகத் தன்மையுள்ள பூச்சிகளினிடையே தொழிற்பிரிவு சரியானதாகவும் வன்மையுடையதாகவும் திகழ்கிறது. இப்

பிரிவு இனப்பெருக்கம் (reproduction), உணவூட்டம் (nutrition), பாதுகாப்பு (protection) இவற்றின் தேவைக்கேற்ப அமைந்துள்ளது. ஒவ்வொரு பூச்சிச் சமுதாயமும் ஒவ்வொரு வேலைக்கென ஒதுக்கப்பட்டுள்ளது. இராணி ஈயின் வேலை இனப் பெருக்கம்; வேலையாள், பணிவும், உணவு சேகரிப்பதும். அவற்றில் சில பூச்சிகளுக்குப் பாதுகாப்புத் தொழில். அதே நேரத்தில் மற்றச் சமுதாயங்களிலுள்ள போர் வீரர்களின் (soldiers) பொறுப்புப் பாதுகாத்தலாகும். ஒவ்வோர் இனமும் அதன் தொழிலை நிறை வேற்றத்தக்க உடலமைப்பினைப் (structure) பெற்றுள்ளன. ஆண் ஈக்கள், இராணி ஈக்கள் என்ற இனப் பெருக்கச் சமுதாயத்தைப் பொருத்தமட்டில் இந்த நிருணயிப்பு (determination) மரபுவழி யமைந்ததாகக் காணப்படுகிறது. தேனீக்களிடையேயும் (Bees) குளவிகளிடையேயும் (Wasps) இராணிச் சமுதாயம் வேலையாள் சமுதாயம் என்ற நிருணயிப்புப் பெரும்பாலும் உணவு ஊட்டத் துக்குரிய காரணிகளைச் (nutritional factors) சார்ந்திருக்கின்றது. வீலர் (Wheeler) (7) குறிப்பிடுவதுபோல வேளையாட்களுக்குத் 'தேனீதேன்' ('bee nector') கொண்டு உண்பிக்கப்படுவதால் அவை உணவு வாயிலாய் இனப் பெருக்க ஆற்றல் அழிக்கப் படுகின்றன' (nutritional castrated), ஆனல் இராணி ஈக் களோ முழுவதும் 'அரச உணவால்' (royal jelly) உண்பிக்கப் படுகின்றன. பொதுவாகச் சமூகப் பூச்சிகளின் வளர்ச்சியின் முதற் கட்டத்தில் சமுதாய நிருணயிப்புப் பெரும்பாலும் நெகிழ்வான தாகக் காணப்படுகின்றது. அவை நிருணயிக்கப்பட்ட பின் ஒன்றின் சமுதாயம் நிலையாகப் பொருந்திவிடுகின்றது' (6.536).

எறும்பு, தேனீ, கரையான்கள் (Termites) ஆகியவற் றின் கூட்டமைப்புகளில் பல்வேறுபட்ட 'சமுதாயங்களும்' 'விருந்தாளிகள்', 'கைதிகள்' போன்றவையும் காணப்படுகின் றன. விருந்தாளிகளைப் பேணுதல் வெறுமையான பொறுதி யிலிருந்து (tolerance) திட்டமான ஊக்குவித்தல் வரையுள்ள வீச்சுக்கு (range) உடன்படுகின்றது. வீலர் (Wheeler) என்பார் (7) சமூகத் தன்மையுடைய பூச்சிகளான விருந்தாளிகள் (guests) ஒட்டுண்ணிகள் (parasites) பற்றிய உற்று நோக்கல்களை விவரிக்க ஒரு முழு அத்தியாயத்தை ஒதுக்கியுள்ளார். பொதுநிலை கடந்த சமூக நிகழ்வான அடிமைகளாகும் தன்மையில் அவை 'பொது வாகப் புழுக்களாக இருக்கும்போது தாக்குதல் நடத்தி மற்றக் கூட்டமைவுகளில் எடுத்துச் செல்லப்பட்டு அடிமை உண்டாக்கு வோரின் கூட்டில் (slavemakers'nest) குஞ்சு பொரிக்கப்பட்டு வளர்க்கப்படுகின்றன. பின்னர் இவை கூட்டினைக் குடைதல் (excavating), குஞ்சுகளுக்கு உண்பித்தல், பேணுதல் போன்ற

வேலைகளையும் கூட்டமைவிலுள்ள மற்றத் தொழிலாளர்களால் இயல்பாகக் கடைப்பிடிக்கப்படும் தொழில்களையும் மேற்கொள்ளு மாறு பணிக்கப்படுகின்றன' (6.537).

## கீழ்த்தர முதுகெலும்பிலிகளின் சமூக வாழ்க்கை
(Social life among the lower vertebrates)

நாம் முன்னர் கண்டபடி, பால் வேறுபாடு (sexual differentiation) சமூக இடைவினைக்கு அடிகோலுகின்றது. நாம் வெப்பக் குருதியுடைய (warm blood) பறவைகளிடையேயும், பாலூட்டிகளிடையேயும் (mammals) குழந்தைகள் (off spring) பெற்றோர்களால் மிகுதியாகக் கவனித்துப் பேணப்படுதலைக் காண் கின்றோம். உண்பதனையும் பாதுகாப்பையும் உள்ளடக்கிய பிழைத்து வாழ்வதலுக்காகக் குழந்தைகள் தாயைச் சார்ந்திருக் கின்றன. உண்பித்தல் (feeding), பாதுகாப்பு (protection), விளையாட்டு (play) போன்றவற்றிற்கு ஏதுவாக அவற்றினிடத் தில் சமுதாய வாழ்க்கை (communal living) காணப்படுகிறது. நாம் முன் கண்டபடி, சமூக நடத்தையின் வளர்ச்சித் தூண்டல் துலங்கலின் ஏறக்குறைய நிலையான கோலங்களில் படிப்படியான குறைவினைச் சார்ந்தும், முதிர்ச்சி (maturation), கற்றல் (learning) இவற்றின் மிகுதிப்பாட்டின் முக்கியத்துவத்தைச் சார்ந்தும் இருக்கின்றது. இவை அதிக ஆதிக்கம் (domination) கொண்ட உயர்ந்த மூளை நிலையங்களைச் சார்ந்துள்ளன. ஸ்காட் (Scott) என்பார் குறிப்பிடுவது போன்று 'சமூக அமைப்பின் (social organization) பெரும்பகுதி அடிப்படைகள் (roots) தொடுகை நடத்தையினால் (contactual behaviour) எனத் தெரிகின்றது. இந் நடத்தை முடிவாக (eventually) உயர்தரமான ஒற்றுமை வழி களுக்கும் பால்வழி நடத்தைக்கும் (sexual behaviour) வழி காட்டு கிறது. இவற்றை விரிவான (elaborate) இனப்பெருக்க (reproduction) வழிகளுக்கும் குழந்தைகளைப் பாதுகாக்கும் முறை களுக்கும் ஒப்பிட்டுப் பார்க்குங்கால் பிறர்க்கென உழைக்கும் கோட் பாட்டினை உடைய (altruistic) நடத்தையாக இவை முடிவடை யலாம்' (9.47).

இவ்வாறு, கீழக்கண்ட நான்கு அடிப்படையான (basic) முறைகள் (roots) சமூக அமைப்பிற்கு அமைகிறது. (a) பாக்டீ ரியாவிலிருந்து ப்ரோடோஜோவா (protozoa) வரையுள்ள தொடர்பு நடத்தை (contactual behaviour), வெப்பம், மற்றும் சூழ்நிலைக் காரணிகளிலிருந்து பாதுகாத்தல் போன்ற அளவில் இயலும் உடலியல் பயன்களுக்கு நம்மை அழைத்துச் செல்கின்

றன. (b) இனப்பெருக்கம். (c) குழந்தைகளின் பாதுகாப்பு. (d) உண்பித்தல் (feeding) பாதுகாப்பு, விளையாட்டுப் போன்றவற்றிற்காக உயர் முதுகெலும்பிகளுக் (higher vertebrates) கிடையேயுள்ள குழு வாழ்க்கை. இரண்டாவதாக வளர்ச்சிபெற்ற உண்மைத் தன்மையுள்ள சமூக உறவுகள், ஒரு விலங்கின் பல்வேறு வகையான கற்றல் திறனைச் சார்ந்துள்ளது. இவ்வாறு சமூக நடத்தைக்கு இருவித உயிரியல் (biological) மூலக்காரணங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று (a) உடலியல் (organic) தேவைகள்; (b) மற்றொன்று கற்றல் செயன்முறைகளுக்கு (learning processes) ஏதுவாய் அமைந்த தசைநார் (neuro muscular) அமைப்பு. இவ்விரண்டும் சேர்ந்து மனிதன் தோன்றியதற்கு முற்பட்ட விலங்கு இனங்களின் நடத்தையின் மட்டத்தை நிருணயிக்கின்றன.

நாம் இப்பொழுது கீழ்த்தர முதுகெலும்பி (lower vertebrates) இனங்களுக்கிடையே காணப்படும் சமூகக் காரணிகளைப் (social factors) பற்றிய ஓர் ஆராய்வினைப் பார்ப்போம். இவற்றிற்கிடையில் காணப்படும் சமூகத் தூண்டுதலின் பரப்பையும் (social stimuli) துலங்கலையும் (response) குறித்து அதிகமான பாடப் பகுதிகள் (literature) இல்லை. உணவூட்டலுக்கும், இனப் பெருக்கத்திற்கும் மீன்களிடையே பருவகாலத் திரள்கள் காணப்படுகின்றன. இதில் தொடர்பு நடத்தையின் பாதிப்பையும் (influence) காணலாம். மீன்களுக்கிடையே ஆதிக்கம் (domination) அல்லது கீழ்ப்படுதல் (sub-ordination) இருப்பதை நாம் அறிந்திலோம். நீர் நில உயிர்வாழ் (amphibians) பிராணிகளைப் பொருத்தமட்டில், குறிப்பாக தவளைக்களுக்கிடையில் தொடர்பு இடைத் தொடர்பு (contactual interplay) மட்டுமன்றிச் சில குரல் இடைத்தூண்டுதலும் (vocal inter-stimulation) காணப்படுகின்றன. மீன்களுக்கிடையேயும், நில, நீர் வாழ்ப் பிராணிகளிடையேயும் உணவூட்டுதலிலும், குஞ்சுகளைப் பாதுகாத்தலிலும் ஒற்றுமை இருப்பதும் இல்லாததும் நமக்குச் சரிவரத் தெளிவாகப் புலப்படவில்லை. பாம்பினங்கள் கூடுகட்டுதல், குட்டிகளைப் பராமரித்துப் பாதுகாத்தல், மேலும் குட்டிகளின் அசைவுகளைச் (movements) சிறிதளவு கட்டுப்படுத்துதல் போன்றவற்றிற்குச் சில சான்றுகள் உள்ளன. பல்லிகள் சில நிலப் பகுதியை முயற்சி செய்து உரிமையாக்கிக் கொள்கின்றன. இந் நிலப் பகுதியில் தங்கியிருக்கிற ஆண் பல்லி 'போர்களில் 91 சதவீதம்' வெற்றி பெறுவதால் அது சிரமப்பட்டுச் சண்டை செய்து அந்த நிலப் பகுதியைப் பாதுகாக்கிறது. பல்லிகளும்கூட ஆதிக்கத்தின் சில கோலங்களையும் தாழ்மைப்படுதலின் சில கோலங்களையும் காட்டுகின்றன

ஆதிக்கம் அதன் எடையுடன் பெரிதளவு தொடர்புடையது (correlated). மிகப் பருமன் வாய்ந்த ஆண் பல்லிகள் ஆட்சியின் தலைமையில் முதன்மையாகவும், மெலிந்தது கடைசியிலும் காணப்படுகின்றன.

நாம், பறவைகளுக்கிடையே பெருமளவு சமூக வாழக்கையைக் காண்கின்றோம். உணவூட்டுவதற்காகவும் (feeding) குடிப்பெயர்ச்சிக்காகவும் (migration) மற்றும் கூடு கட்டுவதற்காகவும் அவை கூட்டமாய்க் கூடுகின்றன. அவற்றின் கலவி (mating) பெரும்பாலும் ஒரு சமயம் ஒருவரையே மணம் செய்யும் முறையில் (monogamous) அமைந்ததாகும். இச் சோடி கூடு கட்டி, குஞ்சு பொறித்து அவற்றைக் காப்பாற்றும் காலம் வரை நீடித்திருக்கும். மூன்றாவதாகப் பல இனங்களில், ஒரு வகையான ஆதிக்கமும் (dominance) கீழ்ப்படுதலும் (sub-ordination) காணப்படுகின்றன. இறுதியாகக் குரல் கருத்துப் பரிவர்த்தனையில் (vocal communication) வளர்ச்சி அடைகின்றன.

பல பறவைகள் சமூகப் பின்னணிச் சூழல் (social back ground) பெற்றுள்ளன. கூட்டைவிட்டு வெளியேறாத குஞ்சாக (nestling) இருக்கும்பொழுது பெற்றோர்களின் பாதுகாப்பையும் உடனுள்ள சிறு பறவைகளுடன் (fledging) பழக்கத்தையும் கற்றுக்கொள்கின்றது. பறவைகளின் சிறப்பியல் வாய்ந்த செயல்களில் பெரும்பாலானவை இனப்பெருக்கக் காலவட்டத்துடன் (reproductive cycle), குடிப்பெயர்ச்சி (migration), காதல் விளையாட்டம் (courting), கூடிப் பழகுதல் (meeting), கூடு கட்டுதல் (nest building), அடைகாத்தல் (breeding), குஞ்சுகளைப் பராமரித்தல் போன்றவற்றுடன் இயைபு கொண்டுள்ளன. இனப்பெருக்கக் காலவட்டம் (breeding cycle) சில வகையான குடிப்பெயர்ச்சியினைப் (migration) பின்தொடர்ந்துள்ளது (accompanied). குறைவான தூரத்திற்கோ அன்றி நீண்ட தூரத்திற்கோ பறவைகள் கூட்டமாகப் பறந்து செல்கின்றன. கிடைக்கக்கூடிய தீனியில் குறைவு, வெப்பக்குறைவு, ஒளிக் குறைவு போன்றவை பறவைகளின் குடிப் பயிற்சிக்குக் காரணமாய் அமைகின்றன. பறவைகள் இனப் பெருக்க இடத்தை (breeding ground) அடைந்தவுடன் கூடிப் பழகுதல் (mating) இனப் பெருக்கச் செயற் புரிகைகள் தொடங்கப்படுகின்றன. பெரும்பாலான இனங்களில், ஆண் பறவைகள் முதலில் இவ்விடத்திற்கு வந்து சேருகின்றன. அது ஓர் 'இடத்தை'த் தன்வயப்படுத்திக் கொண்டு மற்ற

ஆண் பறவைகளை விரட்டிவிடுகின்றது. அது மற்ற ஆண் பறவைகளிடம் சண்டையிட்டும் பெண் பறவையைக் கவர் வதற்கு ஊக்கத்துடன் பாடுகிறது. பெண் பறவை முதலில் சீக்கிரத்தில் இணங்குவதில்லை. சிறப்பாக, 'மயிலிடையே ஆண் பறவை பெண் முன்னிலையில் இருத்தலினுல் தூண்டப்பட்டு அதனுல் உண்டான உபரிச் சக்தி (surplus-energy)', பகட்டு நடை (strutting), 'காட்சியணி' (display) போன்றவற்றில் ஈடுபடுத்தப்படுகின்றது. கூடிப் பழகுதலுக்குப்பின் (mating) கூடுகட்டும் செயல் தொடங்கப்படுகின்றது. இக் கூடு, முட் டையிடத் தொடங்குவதற்குமுன் கட்டி முடிக்கப்படுகின்றது. பிறகு அடைகாத்தல் (brooding) ஆரம்பமாகிறது. குஞ்சு பொரித்தபின் ஆண் பறவையும் பெண் பறவையும் கூட்டை விட்டு வெளியேற இயலா; இக் குஞ்சுகளுக்குக் (nestlings) குறித்த இடைவேளைகளில் உணவளித்து வருகின்றன. குடும்பக் குழுக்கள் (family group) அடிப்படையில் அன்றிச் சில பொது வான புறவயச் சூழ்நிலைக்கு (common external conditions) எதிர்வினையாகப் பறவைகள் ஒன்று சேரலாம். குழு அமை யும் பொழுதே அவற்றில் ஒன்று மற்றொன்றினேடு பொருத் தப்பாடு கொள்கின்றது (adjusted), பயமுறுத்தப்பட்டதினுலோ (frightened) அன்றி உணவு கண்டுபிடிக்கப்பட்டதினுலோ மற்றப் பறவைகள் எழுப்பும் ஓசைக்குப் பிற பறவை கள் செயல்பட மறுக்கின்றன. இவ்வொலிகள் மற்றவற்றின் கவனத்தைப் பெறுவதற்காக ஒலிக்கப்படுவதில்லை. ஆனுல், அஃது அவற்றினது சொந்த நிலையில் தற்செயலாக நிகழ்கின்ற ஒன்ருதலால் இவை இந்தக் கருத்துப் பரிவர்த்தனைக்குச் செவி சாய்த்தல் இயலாதது. பறவைகளிடையே ஆதிக்கமும் (dominance), பணிவும் (submission), இருப்பதைப் பல ஆய் வுகள் வெளிப்படுத்தியுள்ளன. ஒரு பறவை மற்றப் பறவையின் மேல் 'கொடுங்கோன்மை' செலுத்துவதைக் கண்டுள்ளதாகப் பல அறிக்கைகள் (reports) கூறுகின்றன. மற்றப் பறவையைத் தன் அலகால் கொத்துதல் (pecking) மூலம் ஒன்றின் ஆதிக்க நிலை (ascendancy) வெளிப்படுகிறது. அ பறவை ஆ பறவையை கொத்தினுல் ஆ பறவை அ பறவைக்கு அடங்கியிருக்கின்றது என்பது பொருள். ஆனுல் இந்த ஆ பறவை இ பறவையைக் கொத்தலாம். அடக்கப்பட்ட பறவையானது அச்சம், பணிவுத் தன்மை (submissiveness), தவிர்ப்பு (avoidance), பறத்தல் (flight) போன்றவை மூலம் உணர்ச்சிகளை வெளிப்படுத்திக் காட்டுகின்றது. வயது, வலிமை (strength), பால் (sex) வேறுபாடுகள் போன்றவை ஒன்றின் ஆதிக்கம் - பணிவு ஆகிய தொடர்புகளை நிருணயிக்கின்றன. சுறுசுறுப்பும் (active)

வலியத் தாக்கும் தன்மையும் (aggressive) உடைய பறவைகள் 'தலைவர்களாக' மாறுகின்றன. மற்றப் பறவைகள் இவற்றை விட்டு முன் செல்லாதிருக்கக் கற்றுக்கொள்ளுகின்றன.

பாலூட்டிகள் ( mammals ) இடையே கன்றுகள் தாயைச் சார்ந்திருத்தல் மிகவும் அதிகமாகத் தென்படுகின்றது. இஃது உயிரியற் சமூக (biosocial) அமைப்பை அளிக்கிறது. இவ் வமைப்பில் முக்கியமான பயிற்சிகள் நடைபெறுகின்றன. பாலூட்டிகளின் படிவரிசையில் (mammalian scale) மேல் செல்லச் செல்ல சார்ந்திருக்கும் காலமும் ( period of dependence) அதி கரித்துக் கொண்டே போகின்றது. இது பயிற்சியளிப்பதற்கு அதிக வாய்ப்பினைத் தருகிறது. மேலும், இதில் விளையாட்டு வெளிப்படுவதைக் (emergence) காண்கிறோம். பிடித்தல் விளை யாட்டு (catching game), சண்டையிடுதல் (fighting), பாதுகாப்பு இடம் (shelter) தேடிச் செல்லுதல் போன்றவற்றிற்குத் தேவைப் படும் பலவிதமான செயல்களைப் பெறுவதற்கு விளையாட்டுத் துணை புரிகின்றது. இவ்வாறு சமூகக் கற்றல் (social learning) நிகழ்வதை நாம் காண்கின்றோம். ஸ்காட் (Scott) என்பார் நாய்களிடத் தில் கண்ட ஒன்பதுவிதப் பெரும்பான்மைச் சமூக நடத்தைகளை விவரிக்கிறார். அவையாவன; (1) தொடுகை (contactual), உடல் தொடுகையைத் தொடர்ச்சிப் பேணுதல் (maintaining bodily contact), ஒன்றாய்ப் படுத்தல் (lying together), (2) பால் சார்பு (sexual), (3) பேணுதல் ( nurturance ), கவனம் அல்லது பராமரிப்பு அளித்தல், நாய் குட்டிகளை நக்குதல், (4) குழந் தைப் பருவ நடத்தை, பராமரிப்பிற்கோ அன்றி கவனித்தற்கோ அழைப்பது, கனைதல் (whining), (5) சண்டையிடலும் தப்பித் தலும், (6) தொற்று நடத்தை (contagious behaviour), ஒன்றுக் கொன்றான தூண்டுதலுடன் ஒரே செயலைச் செய்தல், ஒன்றாக ஓடுதல், (7) உண்ணுதலும் குடித்தலும், (8) விலகுந்தன்மை, (9) ஆராய்வுத் தன்மையுள்ள துருவி ஆராய்வு நடத்தை, ஒன்றன்பின் ஒன்று செல்லல் ஆகியவையாகும்.

## உயர் உயிரினங்களிடையே காணப்படும் சமூக வாழ்க்கை
(Social life among the primates)

குரங்குகள், வாலில்லாக் குரங்குகள் (apes) ஆகியவற்றின் சமூக வாழ்க்கையைக் குறித்த ஆய்வுகள் மிகவும் விரிவானதாக வும் (extensive) பயனளிக்கக்கூடியதாகவும் இருக்கின்றன. நான்கு அடிப்படை உயிரியல் காரணிகளாகிய (biological factors) (1) நிமிர்ந்து நேராக நிற்கும் நிலை (errect posture), (2) இடம்

பெயர்ப்பிலிருந்து கைகளின் கட்டற்ற நிலையும் கையாளுதலில் அவற்றின் பயனும், (3)விரிவாகக் குரல் வாயிலாகத் தெரிவித்தல் (vocalisation), (4) மூளையின் பெருமளவு வளர்ச்சி போன்றவை குரங்குகளையும், வாலில்லாக் குரங்குகளையும் பிற உயிர் பாலூட்டிகளினின்று வேறுபடுத்திக் காட்டுகின்றன. குரங்குகள், வாலில்லாக் குரங்குகள் இவ்விரண்டின் சமூகங்கள் வயதுவந்தவற்றையும் குட்டிகளையும் கொண்ட தளர்ந்த கூட்டங்களாகும். பொதுவாக ஒரு கூட்டத்தில் ஓர் ஆண், சில பெண்கள், அவற்றின் குட்டிகள் ஆகியன அடங்கியுள்ளன. சில சமயங்களில், இக் கூட்டங்கள் பல சேர்ந்து ஒரு பெரிய குழுவாகவும் அமையலாம். இவ்வாறு, குழு வாழ்க்கையானது இனப் பெருக்கம் (reproduction), குட்டிகளைப் பராமரித்தல் (care of the young), உணவு பெறுதல், பாதுகாப்புப் போன்றவையோடு இணைந்துள்ளது. ஒன்றுக்கொன்று பேணுதலின் வாயிலாக (mutual grooming) அவை மிகுந்த இன்பம் பெறுகின்றன. இச் செயலை எலிகள், கீழ்த்தரப் பாலூட்டிகள் இவற்றிடையேயும் நாம் காண்கின்றோம். இங்குத் தனியாய் வாழ்வில் கவர்ச்சிப்படுகிறது. அநேக கூட்டங்களை ஆராய்ந்ததில், ஒரு வயது வந்த ஆண் குரங்கிற்கு இரண்டிலிருந்து மூன்று பெண் குரங்குகள் இருப்பதையும், அஃதாவது, இது பலதார மணத்தைச் (polygamy), சுட்டிக்காட்டுகிறது. பிறந்த குட்டி உதவியற்ற நிலையில் அது முழுமையாகத் தாயைச் சார்ந்திருக்கின்றது. குரங்குக்குட்டி சுதந்தரமடைய ஏறக்குறைய ஒரு மாதமும், வாயில்லாக் குரங்கு (chimpanzee) ஏறக்குறைய மூன்றுமாதக் காலமும் எடுத்துக்கொள்கின்றன. தாயானது தன் குழந்தையை உண்பிப்பதோடல்லாமல் அதைப் பேணியும் (grooms) மற்றும் அநேக துலங்கலில் அதற்கு அறிவுறுத்தியும் வருகிறது. தாயுடன் மட்டுமன்றி மற்றும் வயதுவந்தவை அனைத்தும், சார்ந்துள்ள தொடர்பினைக் காண்பதையும், அடைபட்டவை பராமரிப்பவரைச் சார்ந்திருப்பதையும் காண்கின்றோம். இங்குப் பல முன் மாதிரியான மனித அன்பும் (human affection) 'உடைமையுரிமை'யும் தென்படுகின்றன.

இவ்வனைத்து இனங்களிலும் சில தலைமையாட்சி (hierarchy of power) காணப்படுகின்றது. குறிப்பாக, இது பால் சார் தன்மையிலும் (sexuality) உண்பித்தலிலும் காணப்படுகின்றது. அடைபட்டவையிடத்தில் பெண்களைக் கட்டுப்படுத்த ஆண்களிடையே தொடர்ச்சியான சண்டைகள் நேருவதாகச் சுக்கர்மென் (Zuckerman) குறிப்பிடுகின்றார் (10). சில சமயங்களில் இச்

சண்டை மிகவும் கொடியதாகவும் அதனால் வலிமையற்ற ஆணும் சச்சரவில் தலையிட்ட பெண்ணும் கொல்லப்படுகின்றன. ஒரு குரங்குக் கூட்டம் உணவுக் களத்தை அடைந்த பொழுதும் அல்லது ஒரு கூட்டம் மற்றக் கூட்டத்துடன் சண்டையிடும் பொழுதும் ஆதிக்கமும் அதனால் வளர்ச்சியடையாத் தலைமையும் (leader ship) உண்டாகின்றன. வலிமைமிக்க ஆதிக்க நிலை (ascendant) கொண்ட குரங்கு கிடைத்த எல்லா உணவையும் தனக்காக ஒதுக்கி வைத்துக்கொள்வதாகவும் அஃது அக் கூட்டத்திலுள்ள மற்ற உறுப்பினர்களிடத்தில் வலியத் தாக்குதல் (aggression) நடத்தியதாகவும், பால் ஆதிக்கம் கொண்டதாக இருந்தது என்றும் மாஸ்லோ (Maslow) (11) குறிப்பிடுகின்றார். கீழ்ப்படுத்தல்பட்ட (subordinate) குரங்குக்குச் சிறிது உணவோ, உணவு இல்லாமலோ போகின்றது. இது வலியத் தாக்குதலுக்குக் கீழ்ப்படிந்தோ அஞ்சி ஓடியோ விடுகின்றது. இங்கும் சமூகத் தலைமையாட்சி ( social hierarchy of power ) புலப்படுகின்றது. கீழப்படிந்த ஒரு குரங்கு, மற்றொரு குரங்கின் மேல் ஆதிக்கம் செலுத்துவதைக் காணலாம்.

எர்கிஸ் (Yerkes) கருத்துப்படி இளமையான வாலில்லாக் குரங்கு புறமுகத்தன்மையுடையது; சுறு சுறுப்பானது; சக்திவாய்ந்தது; தூண்டுவிக்கும் தன்மையானது; ஆர்வமிக்கது; கிளர்ச்சித் தன்மையுடையது; மிகவும் சமூகத் தன்மையுடையது. சாதாரணமாக நற்றன்மையும், சுமாரான நல்ல மன நிலையினையும் கொண்டது; மிக விரைவானது: பழக்கப்படாதவற்றிடம் எளிதில் அஞ்சும் தன்மையுள்ளது. அதன் தொடர்ந்த உணர்ச்சியின் பொங்குதலை மிகவும் அதிகமாக வெளிக்காட்டும் தன்மையுடையதாகவும் விரைவில் மன நிலையை மாற்றும் தன்மை உடையதாகவும் இருக்கின்றது' (12.27). இது விளையாட ஆர்வமிக்கதும், குறும்புத்தன்மை உடையதுமாகும். இளையோர் பருவத்திலும், வயதுவந்த பருவத்திலும் விளையாட்டுத் தன்மையும், நோக்குடைய தன்மையும் உடைய செயல்கள் குறைவாகக் காணப்படுகின்றன. மேலும், ஆண்டுகள் செல்லச்செல்ல அது மிகவும் கருத்தோடும் ஒதுங்கியும் அமைதியாகவும் இருக்கின்றது. 'இந்தச் சமூகத் தூண்டல்கள் வாலில்லாக் குரங்குகள் (chimpanzee) சக்தி வாய்ந்த எப்பொழுதும் விளக்கிக் காட்டக்கூடிய நிருணயப்பிகளாகும்( determiners). புதிய உணவை உண்ண மறுக்கின்ற, புதிய இடத்துக்குச் செல்ல மறுக்கின்ற அல்லது அதன் சூழ்நிலையில் பொருள்களின் புதிய பயனை உள்ளடக்கிய சில எளிய செயல்களை இக் குரங்குகள் செய்கின்றன. தகுதியான வழியில்

செயல்புரிகின்ற சோதனையாளரில் ஒரு தோழனை வேண்டு மென்றே கண்காணிக்கலாம். மேலும், இஃது அலைக்கழிக்கப் பட்டாலோ அன்றி எடுத்துக்காட்டுச் செயலினால் ஊக்கமூட்ட பட்டாலோ அதாகவே ஒரு முயற்சியை மேற்கொள்கின்றது. அஃது இன்பகரமானதாக உணரப் பெற்றால் அல்லது தனது செயலில் ஏற்பில்லாத ஒன்றும் நேரவில்லை என்று கண்டுபிடித் தால் அதுமேலும் எவ்விதச் சமூக உதவி (social aid) அல்லது ஊக்குவித்தலின்றித் தொடர்ந்து செயல் புரிகின்றது' (12.41). இதைத்தான் கோலர் (Koller) உட்காட்சி யுள்ள (insightful) நடத்தை என அழைக்கின்றார் (13).

எர்கிஸ் (Yerkes) தாய் குழந்தை உறவின் வளர்ச் சியை விளக்கிக் காட்டுகின்றார். மனிதக் குழந்தை (human infant) எவ்வாறு தாயைச் சார்ந்திருக்கின்றதோ அவ் வாறே வாலில்லாக் குரங்கும் தாயைச் சார்ந்திருக்கின்றது. மேலும், இக் குழந்தைக்குப் பற்றிக்கொள்ள (cling) ஏதா வது தேவைப்படுகிறது. மெக்கல்லோ (Mc Culloch) காகிதத் துண்டைப் (paper towel) பயன்படுத்தினார். குட்டி பற்றிக் கொள்ள ஏதாவது ஒரு துண்டு அல்லது கம்பளத்தின் (blanket) தேவையை ஹார்லோ (Harlow) (15) ஆராய்ந்தார். முதலில் குட்டி தன்னைச் சார்ந்திருப்பதைத் தாய் குரங்கு ஊக்குவிக்கிறது. குட்டி துணிவு மேற்கொள்வதைத் (risk) தாய் தடுக்கின்றது. இரண்டு அல்லது மூன்று மாதங்களுக் குப்பின் தாய் தன்னுடைய மனப்பான்மையை மாற்றிக் கொண்டு, குட்டி நடமாடுவதையும் **துருவி ஆராய்தலையும்** (explore) ஊக்குவிக்கின்றது. நிற்றல், தழுவியேறுதல் (climb), நடத்தல் மற்றும் பல செயல்களையும் தாய் தன் குட்டிக்குக் கற்பிக்கிறது.' இறுதியாகக் குட்டி பற்றிக்கொள்ளும் எதிர்வினைக் குத் தாயானது எதிர்ப்பைத் (antagonistic) தெரிவிக்கின்றது. குட்டி பற்றிக்கொள்ள வந்தால் அதைத் தள்ளி விரட்டி விடு கின்றது. இவ்வாறு தாயின் உடலியல் ஏற்றமும் (physiological status) குட்டியின் வளர்ச்சிக் கட்டமும் பால் மறக்கச் செய்யும் (weaning) காலத்தையும், தான் சார்ந்து (self-dependence) வாழ்தலையும் நிருணயிக்கின்றன. தாய்-குட்டி உறவில் சுறுசுறுப் பான சமூகவயநிலை (socialization) ஏற்படுவதை நாம் காண் கின்றோம். மேலும், தொடக்கத்தில் காணப்பட்ட தாயைப் பற்றிச் சார்ந்திருக்கும் (clinging dependence) தன்மை யானது பொதுவாகப் பிறர்மேல் சார்ந்திருத்தலால் ஈடு செய்யப்படுகின்றது (replace). இச் சமயத்தில் இது மற்ற அங் கத்தினர்களின் தோழமையை நாடுகின்றது. ஏன் வாலில்லாக்

குரங்கு தனித்திருத்தலைக் கண்டு அஞ்சுகிறது என்பது இப்பொழுது நமக்குப் புலப்படுகின்றது. அதனிடத்தில் பிரிவாற்றுமையின் (deprivation) பலதிறப்பட்ட அறிகுறிகளுக்குத் (varied-symptoms) தனிப்படுத்துதல் (isolation) காரணமாகின்றது. வாலில்லாக் குரங்கின் தோழமையை வலியப் பிரித்தாலோ அதனைத் தனியே விட்டாலோ அது தன் தோழர்களுடன் சேருவதற்காக அழுவதையும் (cries) கூச்சலிடுவதையும் (scream) முரட்டுத் துணிச்சலான போராட்டத்தையும் காணலாம். ஹார்லோ என்பார் (Harlow) எழுதுவதாவது, 'பிறந்த இரு ரீசஸ் குரங்குக் (Rhesus Monkeys) குட்டிகளைத் தாயினிடத்திலிருந்து பிரித்து அவற்றை விஸ்கான்சின் ஆய்வுக் கூடத்தில் (Wisconsin laboratory) நாங்கள் வளர்த்தோம். அவற்றை எங்களால் சரிவர கவனித்துப் பேணி வளர்க்க இயலவில்லை. அடைப்பான் (dropper) வாயிலாக இவை உண்பிக்கப்படலாயின. இதனால் அவை இரண்டும் நிலையான நீடித்த பெருவிரல் சூப்பிகளாக (thumb suckers) மாறிவிட்டன' (6.132). எவ்வளவு மனிதத் தன்மை! வாலில்லாக் குரங்கின் சமூக வயமாதற்குப் பின்நோக்கிச் செல்லுகையில் எர்கிஸ் (Yerkes), இம் மனிதக் குரங்கு தாயின்மேல் உள்ள முழு ஆதரவிலிருந்து மற்றவர்களின் தோழமையிலும் இறுதியாகத் தற்காப்பிலும் வளருகின்றது என விரிவுரைத்தார். ஆதிக்கமானது தன் தேவைகளையும் அவர்களையும் பூர்த்தி செய்துகொள்வதினால் மற்றவர்களுக்கு மேலான முதன்மையும் பகுதியாக அல்லது முழுமையாக மற்றவர்களின் உரிமைகளையும் ஒதுக்குதலாகும். எதிர்ப்பு இருந்தால் போட்டி நேருகிறது.

குரங்கு, வாலில்லாக் குரங்கு (apes) இவற்றினிடையே தொடக்க நிலையான ஒத்துழைப்பும் (co-operation) காணப்படுகின்றது. ஒரு குரங்கு மற்றொன்றினால் பயமுறுத்தப்பட்டதினாலோ அடிப்பட்டதினாலோ பெரும் துயரக் கூக்குரலிட்டால், இக் குரலைக் கேட்டுக் குழுவின் குரங்குகள் அனைத்தும் விரைந்து சென்று கூக்குரலிடும் குரங்கைக் காப்பாற்றும். வாலில்லாக் குரங்குகளினிடையே காணப்படும் கூட்டுறவுத் தன்மையைத் தழுவிய க்ராஃபோர்டுவின் (Crawford) புற ஆய்வுகளைப் பிந்திய அத்தியாயங்களில் குறிப்பிடுவோம். இப்பொழுது நாம் பேனுதலைக் குறித்துக் (grooming) கவனிப்போம். நாம் மிருகக்காட்சி சாலையில் குரங்குகளும் வாலில்லாக் குரங்குகளும் பேன் பிடுங்குவதைப் பார்த்துள்ளோம். இந்தப் 'பேன் பிடுங்கும் நடத்தைச் சாதரண

மானது அன்று. இது பரஸ்பரத்தையும் (mutuality), கூட்டுறவு ஆற்றலையும் வெளிக்காட்டுதலாகும். இந்தப் பேணுதல் மனிதனின் கழுவுதல், குளித்தல் போன்றவற்றிற்கு ஒத்ததாகும். இச் செயலினுல் தோல், மயிர் இவற்றினிடத்தில் காணப்படும் எல்லாப் புறப் பொருள்களும் அகற்றப்படுகின்றன. தானே பேணுதல் (self grooming) ஒன்றுக்கொன்று பரஸ்பர மாய் மயிரைக் கோதுதல் (mutual grooming) ஆகியவற்றை இதனிடத்தில் காணலாம். இந்த விலங்கு பேணுதலை விரும்பிக் கேட்கலாம். அல்லது இச் செயலைத் துவக்கி வைக்கலாம். இச் சமூகத் தொடர்பில் அவற்றின் மிகுந்த நிறைவு வெளிப் படுத்துகிறது. குரங்குகளேயன்றி வாலில்லாக் குரங்குகளும் உண்மையான பேச்சுத்திறன் (speech) பெற்றிருக்கவில்லை. அவற் றின் குரல்வகைகள் (vocalisms) மற்றச் சைகைகளைப் போல் மன வெழுச்சிகளையும் (emotion), உந்துக்களையும் (drive) வெளிப் படுத்துகின்றன. அவற்றின் குரல் வகைகள், பால், உணவு பெறுதல், ஒட்டம் பிடித்தல், சண்டை, விளையாட்டுப் போன்ற இடைவினைகளோடு தொடர்ந்து நடக்கின்றன.

விலங்குகளின் சமூக நடத்தையின் வளர்ச்சியை மிகவும் பண்பாடு இல்லாத கூட்டங்களிலிருந்தும், குடும்பங்கள் அமைப் பதற்கு முன் சூழ்நிலைகளில் ஏற்பட்ட தொடுகைகளிலிருந்தும் ஆதிக்கத் தலைமையுடைய குழுக்களிலிருந்தும் நாம் காண்கிறோம். உயிரியல், சமூக மூலக்கூறுகள் (elements) குரங்குகள், வாலில்லாக் குரங்குகள் இவற்றினிடையே காணப்படும் சிக்கலான சமூக இடை வினைகளுக்கு வழிகாட்டுகின்றன. கற்றலும், சமூகவயநிலையும் (socialization) முக்கிய அங்கம் வகிக்கின்றன. வாலில்லாக் குரங்குப் பண்பாடு என்று (ape culture) ஒன்று உண்டா? பண் பாட்டின் (culture) அடிப்படையான மூலக்கூறு என்னவெனில் மரபுப் பண்பை (tradition) ஊடு செல்ல விடுதலாகும் (trans- mission), இது மொழியோடு தொடர்பு கொண்டுள்ளது. மேற்கூறிய இரண்டும், கருவிகள், திறமைகள் (shells), குழுக் குறித் தொகுதிகள் (Codes), மதிப்புக் கூறுகள் (values) இவற் றிற்கு அடிப்படை வாய்ந்த ஏறக்குறைய நிலையான எண்ணக் (thought) கோலத்தோடு (pattern) இணைந்திருக்கின்றன. இவற் றில் எவற்றையும் வாலில்லாக் குரங்குகள் பெற்றிருப்பதாகச் சான்றுகள் இல்லை. மனிதச் சமுதாயமொன்றில்தான் உயிரியல், சமூக மூலக்கூறுகளோடு (elements) பண்பாட்டு மூலக்கூறும் சேர்ந்திருக்கிறது.

## குழந்தைகளிடையே சமூக வளர்ச்சி
(Social development among children)

கடந்த சில ஆண்டுகளாகக் குழந்தைகளிடையே காணப் படும் சமூக நடத்தையின் வளர்ச்சியைத் தழுவிய புற ஆய்வுகள் நடைபெற்றுள்ளன. கீழ்வரும் பகுதியில் நாம் கெஸ்ஸல் (Gesell) (16), ஷெர்லி (Shirley) (17), சார்லெட் பூலர் (Charlotte Buhler) (18) மற்றும் பல முனைவர்கள் (19 and 20) குழந்தை வளர்ச்சி ஆய்வில் கண்ட உற்றுநோக்குகளில் முக் கியமாகக் கவனம் செலுத்தலாம்.

## முதல் ஆறுமாதக் கால வாழ்க்கை
(The first six months of life)

குழந்தையின் முதல் மாத வாழ்க்கைக் காலத்தில் சூழ்நிலை யின் சமூக அம்சங்களை (social aspects) உணரும் எவ்வித அறிகுறிகளும் அதனிடத்தில் காணப்படுவதில்லை. நான்கு வார இறுதிக்குள், குழந்தை தன் அருகிலுள்ள மனிதர் களின் முகத்தை உற்றுப்பார்ப்பதைக் காணலாம். குழந்தை அழும் பொழுது அதனை எடுத்துக்கொண்டால் அது தன் அழுகையை நிறுத்தி அமைதியுறுகின்றது. இதில் சமூகத் தூண்டுதலுக்கு உண்டாகும் துலங்கல்களின் தொடக்கத்தைக் காணலாம். எப்படியாயினும், இது வெப்பத்திற்கு மற்றொரு துலங்கலாகும். இஃது ஆக்கநிலையிருத்தச் செயன்முறைக்கு கொண்டுபோய்விடுகிறது. ஆறு முதல் எட்டு வாரத்துக்குள் சமூகத் தூண்டுதலைப் பெற, குழந்தை அழுகையைக் கையாளு கிறது.

எட்டு வார முடிவிற்குள் குழந்தை பெரியோர்களின் புன்முறுவலுக்கு எதிர்வினையாகப் புன்முறுவல் அளிக்கிறது. ஒரு குழந்தை அறையிலுள்ள மக்களின் அசைவுகளைக் கவனித் தல் மூலம் மக்களின்பால் அது கொண்டுள்ள அக்கறையை வெளிப்படுத்துகிறது. அறையில் மக்கள் நடமாடுவதைக் கண்டு குழந்தை பூரிப்படைகிறது. ஒரு குழந்தை 16 வார இறுதிக் குள் சமூக உணர்வைத் திட்டமான அறிகுறிகள் மூலம் வெளிப் படுத்துகின்றது. தன்னுடன் பெரியவர்கள் பேசுவதை விரும்பு கின்றது. தாய் அல்லது செவிலித்தாய் (nurse) தன் முன் பாடுவதை மிகவும் விரும்புகின்றது. 20 வார அளவில், மக்கள் தன்னைவிட்டு விலகினால் அழ ஆரம்பிக்கின்றது.

ஒரு குழந்தை 28 வார வயதடைந்ததும், அது சமூக இடைவினைகளில் பெரிதும் பங்குகொள்கிறது. தான் ஒருவர் இடத்திலிருந்து மற்றொருவரிடத்தில் மாறுவதைப் பெரிதும் விரும்புகின்றது. இக் கட்டத்தில் ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்டவர்களுக்கு எதிர்வினையை அளிக்கிறது. வேறுபடுத்தலின் (discrimination) தொடக்கம் இப்பொழுது காணப்படுகின்றது. மேலும், இது மக்களை வேறுபடுத்திப் பார்க்கின்றது. தன்னை உண்பித்துப் பராமரித்து வரும் தாயைத் தெரிந்துகொள்ளுகின்றது. வேறுபடுத்தும் திறனால் அயலாரையும் தெரிந்துகொள்கின்றது. தான் அறிந்தவர்களிடத்தில் குதூகலத்தையும் (lively) மற்றவர்களிடத்தில் வெட்கத்தையும் வெளிப்படுத்துகிறது. குறிப்பாகப் புதிய இடங்களில் அயலாரிடத்தில் வெட்கத்தையும் தெரிவிக்கிறது. ஒரு குழந்தை அயலார்களால் சூழப்பட்டால் அஃது அச்சத்தின் அறிகுறிகளைக் காட்டுகிறது.

ஒரு குழந்தையின் 4 முதல் 6 மாத வாழ்நாளில் அதன் சமூக உணர்வு படிப்படியாக வளர்ச்சியடைவதைக் காண்கின்றோம். 4 மாத அளவில், ஒரு குழந்தை முன் மற்றவர் வந்தால் தன் அழுகையை நிறுத்தி அவரது குரலிலும் முகத்திலும் தன் கவனத்தைச் செலுத்துகின்றது. அவர் அறையைவிட்டு வெளியேறினதும் தேம்பி அழ (Whimper) ஆரம்பித்துவிடுகின்றது. மற்றவனின் உற்றுப் பார்த்தலுக்குத் துலங்கலாகக் குழந்தை சிரிக்கிறது. 5 மாத வயதடைந்ததும் மிகச் சுறுசுறுப்பாகக் குரலினால் விடையளித்துத் தொடுவதற்கும் பிடிப்பதற்கும் முயற்சி செய்கிறது. 5 மாதம் வரை, ஒருவனின் குரல் கோபக் குரலாய் இருப்பினும் அல்லது அன்புக் குரலாய் இருப்பினும் இரண்டிற்கும் ஒருங்கே சிரிப்பு மூலம் விடையளிக்கிறது. 6 மாதமடைந்ததும் குழந்தை தொனியையும் (tone) சொற்றொடரையும் (expression) வேறுபடுத்தும் திறன் பெறுகிறது.

## இரண்டாவது அரை வருடம்

## (The second half year)

முதல் வருடத்தின் இரண்டாவது அரையாண்டில் ஒரு குழந்தை மற்றவர்களின் உடனிருத்தலில் பெரிதும் மகிழ்ச்சியடைகிறது. குழந்தை மிக எளிதில் மிகுதியாகத் தூண்டப்படுகின்றது. குழந்தையின் மனவெழுச்சி வாழ்க்கை நிலையற்றது என்பது அதன் செயலான அழுகையினின்று சிரிப்பிற்

கும், பின் சிரிப்பிலிருந்து அழுகைக்கும் எளிதில் மாறும் தன்மையிலிருந்தும் வெளிப்படுகிறது. 40 வார வயதடைந்ததும், அஃது அயலாரைக் கண்டால் மிகவும் நாணமடைகிறது (shy). தன் தாயோ செவிலித்தாயோ தன்னுடனே இருக்கப் பெரிதும் கோருகிறது. மறைவாக நோட்டமிடும் விளையாட்டு (peek-a-boo), ஊஞ்சலாட்டம் (rock-a-bye) மற்றும் சமூக இடைத்தொடர்பு கொண்ட விளையாட்டுகளில் குழந்தைப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறது. குழந்தை 'சென்றுவா' (bye-bye) என்று சொல்லவும் கற்றுக்கொள்கின்றது.

தான் ஊர்ந்து (creep) செல்லும்பொழுது பிறர் தன்னைத் துரத்தும் (chase) விளையாட்டைப் பெரிதும் விரும்புகிறது. நாற்காலியின் பின்புறத்தில் ஒளிந்துகொண்டு 'குழந்தை எங்கே' என்று கண்டுபிடிக்கும் விளையாட்டில் மிகப் பெருமிதமான மகிழச்சியடைகின்றது. ஒரு வயதடைந்ததும் பிறர் கையைப் பிடித்துக்கொண்டு நடக்க விரும்புகிறது. குழந்தைக்குப் பேரானந்தம் அளிக்கும் விளையாட்டு என்னவெனில் தனக்கு மறுபடியும் எடுத்துக் கொடுப்பார்கள் என்கின்ற நோக்குடன் விளையாட்டுப் பொருள்களைத் தரையில் வீசி எறிவதாகும். இச் செய்கைகளினால் சலிப்புற்ற பெரியோர்கள் இவ் விளையாட்டுப் பொருள்களைக் குழந்தைக்கு எடுத்துக்கொடுக்க மறுத்தால் உடனே அழ ஆரம்பித்துவிடுகிறது. மேலும் அவற்றினிடத்தில் இருந்து பொருள்களை எடுத்துக்கொண்டால் உடனே தேம்பி அழத் தொடங்குகிறது. இதிலிருந்து உடைமையாக்கிக்கொள்ளும் உணர்வைப் பெற்றிருப்பதை அறிகிறோம்.

குழந்தையின் ஆறுமாத வயதில் காணும் மற்றொரு வளர்ச்சி என்னவெனில், அது பிற குழந்தைகளை உணர்ந்தறியும் தன்மையாகும். குழந்தை வளர வளரப் பிற குழந்தைகளின் மேல் உள்ள கவர்ச்சியும் வளர்ச்சியடைகிறது. பிற குழந்தைகளின் அழுகைக்குத் தன் கவனத்தைச் செலுத்துகிறது. சில சமயங்களில் மழலைச் (babble) சொல் மூலம் பிற குழந்தைகளின் கவனத்தைப் பெறுகிறது.

6 மாத வயதுக்குள் ஒரு குழந்தை முகபாவனை, அன்புக் குரல், கோபக் குரல் இவற்றை வேறுபடுத்த முடிவதில்லை எனினும், இது 8 மாத வயதடைந்ததும் பிறர் செய்கைகளின் உட்பொருளை வெளிப்படுத்துவதிலும் (interpreting), புரிந்து கொள்வதிலும் வியக்கத் தகுந்த திறனைக் காட்டுகிறது.

இப் பருவத்தில், ஒரு குழந்தை எதிர்மறை (negative) எதிர்வினைகளாகிய, ஓட்டம், பாதுகாப்பு, தாக்குதல் போன்றவற்றை வெளிப்படுத்துகிறது. புதுமை அல்லது எவ்விதமான தலையீடும் (interference) ஒரு குழந்தையினிடத்தில் ஓட்டம், பாதுகாப்புப் போன்ற துலங்கல்களுக்கு வழிகாட்டுகிறது. தான் விரும்பும் பொருளைப் பிற குழந்தை வைத்திருந்தால் இக் குழந்தை வலுத்தாக்குதல் (aggressive behaviour) நடத்துவதைக் காண்கிறோம். எட்டு மாத வயதிலேயே ஒரு குழந்தை மற்றவன் மேல் தான் அடைந்த வெற்றியை, மன நிறைவு, மகிழச்சி ஆகியவற்றின் வாயிலாய் வெளிப்படுத்துவதாகப் பூலர் (Buhler) என்பார் கருதுகிறார் (18.57).

## வாழ்க்கையின் இரண்டாவது வருடம்
(The second year of life)

குழந்தை 15 மாத வயதடைந்ததும் அயலாரிடத்தில் காட்டும் நாணத்தை விஞ்சி மேம்படுகிறது. இப் பருவத்தில் குழந்தை ஆவலுடன் வெளிச் செல்ல விரும்புகிறது. இது பிறரைப் பின்பற்றுதலாகிய (imitation) செயலில் மகிழச்சி கொள்கிறது. இருமுதல் (coughing), மூக்கைச் சிந்துதல் (blow the nose), தும்முதல் போன்ற செய்கைகளை மற்றவர் செய்யும்பொழுது குழந்தை அதைப் பின்பற்றலாம். தான் காணும் எதையும் கேட்டுந் தன் பெற்றோர்களை இக்கட்டான நிலையில் வைக்கிறது. 18 மாத வயதளவில் ஒரு குழந்தை வீட்டுவேலைகளில் மிகவும் கவனம் செலுத்துவதை நாம் காண்கிறோம். இது துடைப்பத்தால் துப்புரவு செய்வதிலும், தூசியைத் துடைப்பதிலும் பெருமகிழ்ச்சி அடைகிறது; பொருள்களைக் கொண்டுபோய்க் கொடுப்பதிலும் பெருமிதம் அடைகிறது. இக் காலத்தில் தன்னைப் பிடிப்பில் வைத்திருத்தலை மறுத்துக் கட்டுப்பாடில்லாமல் இருக்க விரும்புகிறது. மேலும், பிறர் தன்னைத் தொடுவதையும் வெறுக்கிறது. இந் நிலைகளில் குழந்தை பிடிவாதப் போக்கை வளர்க்கின்றது. அது தான் கோரியதை அடையும் வரையிலும் அல்லது செய்ய நினைத்தைச் செய்ய அனுமதிக்கும் வரையிலும் அழுகின்றது. இஃது ஒரு குழந்தையின் நிலையான எதிர்வினையாகும்.

ஒரு வருட வயதில் தான் பிறரை உணர்ந்தறியும் திறனை விட 21 மாத வயதில் மிகவும் அதிகத் திறனைப் பெற்றிருக்கிறது. மேலும், வீட்டில் எந்தெந்தப் பொருள்கள் யார் யாருக்குச் சொந்தமென்பதையும் அறிகின்றது. தாய், தந்தை மற்றும்

தனக்குச் சொந்தமான பொருள்களைக் குழந்தை அடை யாளம் கண்டுகொள்கிறது. இவ்வாறு சொத்துரிமை (property right) உணர்ச்சி வன்மையாகிறது. குழந்தை வேலைகளில் காட்டும் அக்கறை பலப்படுகின்றது. இது தன் தாய்க்கு அடுப்பறையில் பெரிதளவும் உதவி புரிகிறது. இப்பொழுது, குழந்தை மேஜை இழு அறையிலிருந்து (drawer) பொருள் களைக் கொண்டு வரவும், பின் அவற்றின் வேலை முடிந்தவுடன் அதே இடத்தில் வைக்கவும் செய்கின்றது. ஆனால் 'எதிர் மறைப் போக்கின்' (negativism) தொடக்கமும் காணப் படுகிறது. இவ்வயதில் முன்பு இருந்ததைவிட வேண்டு கோள்களுக்கு மிகவும் குறைவாகத் துலங்கல்களை அளிக்கிறது. அவன், கேட்டதற்கு மாறான காரியம் செய்தாலும் செய்யலாம்.

குழந்தை இரண்டு வயதடைந்ததும் அதன் சொத்துரிமை மிகவும் வலிமையாகின்றது. எவ்வளவு பொருள்களைத் தன் வயப்படுத்த முடியுமோ அவ்வளவு பொருள்களைத் தன் வயப்படுத்த முயல்கிறது. 'அஃது என்னுடையது என்று வலியுறுத்துவதின்மூலம் அவன் உரிமைகளை நிலைநிறுத்திக் கொள்கின்றான்.

சம வயதுடைய பிள்ளைகளை ஒரு நிலைப்படியான (standard) நிலைமையில் (situation) வைத்து அவர்களிடையே நேரும் எதிர்வினையை உற்று நோக்குதல் மூலம் அவர்களின் சமூக உறவுகளை மாட்ரியும்(Maudry) நெகுலாவும் (Nekula) (21) ஆராய்ந்தார்கள். ஒன்பது மாத வயது வரை குழந்தைகளுக்கிடையே மிகச் சிறிதளவில் சமூகத் துலங் கல்கள் காணப்படுவதை மேற்கூறிய ஆராய்ச்சியாளர்கள் கண்டனர். ஒன்பது முதல் பதினான்கு மாதங்கள் வரை, ஒருவர் மற்றவரின் மேல் கவனம் செலுத்துவதிலும், அவர்களின் கவனம் விளையாட்டுப் பொருள்களினால் கவரப்படுவதினால் ஒருவர் மற்றவரின் மீது பெருமளவு கவனம் செலுத்துவதில்லை. ஒரு குழந்தை மற்றக் குழந்தையைப் பக்கத்தில் தள்ளுவது போன்ற எதிர்மறையான (negative) துலங்கல்கள் காணப் படுகின்றன. பதினான்கு மாதம் முதல் பதினெட்டு மாதம் வரை படிப்படியாக (gradual) நிலைமாறுபாடு (transition) ஏற்படுகின்றது. பின் பிள்ளைகளுக்கிடையே நேர்நிலையான (positive) துலங்கல் ஏற்படுகிறது. இத் துலங்கல் பின் நட்புடைய தாயும் (friendly) ஒத்துழைப்புடையதாயுமாக (co-operation) மாறுகிறது. குழந்தைகள் இரண்டு வயதடைவதற்குள் நேர் நிலையான துலங்கல்கள் (positive responses) எதிர்மறையான

துலங்கல்களைக் (negative responses) காட்டிலும் அதிகரித்து ஆதிக்கமுடையனவாகக் (predominated) காணப்படுகின்றன. இவ்வயதில் குழந்தைகளுக்கிடையே கொடுக்கல்-வாங்கல் (give and take) போன்ற ஒத்துழைப்புத் தன்மை அதிக நேரம் நீடித்திருப்பதில்லை. பல குழந்தைகள் ஒன்றாய் இருக்கும் பொழுது, ஒருவர் மற்றொருவரைக் கவனித்து அவர்களிடத்தில் தொடர்பு கொள்ளுவதை(contact) மேற்கூறிய ஆசிரியர்கள் கண்டனர். இக் குழந்தைகளின் விளையாட்டு இணையானதாக (parallel) உள்ளது. ஒவ்வொரு குழந்தையும் மற்றக் குழந்தை விளையாடும் அதே விளையாட்டைப் பின்பற்றி விளையாடுதலையும், சிற்சில சமயங்களில் மட்டுமே அவற்றிற்கிடையே பரிமாற்றம் (inter change) காணப்படுவதையும் காண்கிறோம்.

குழந்தையின் முதல் வருடத்தில் சமூக மனவெழுச்சி வாழ்க்கையை அதன் இரண்டாவது வயது சமூக மனவெழுச்சி வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்த்தால், அவற்றில் பெரிதளவு வித்தியாசம் இருப்பதை நாம் காணலாம். நாம் முன் கண்ட படி, ஒரு குழந்தை தன் முதல் வயதில் தன் தாய் அல்லது செவிலித் தாயை அடையாளம் கண்டுகொள்வதைத் தவிர, பிற தனியர்களைப் பெரிதளவில் வேறுபடுத்துவதில்லை. ஒரு குழந்தையிடத்தில் சிரிப்பது, மழலையில் பேசுவது, அனைவரையும் தொடுவது போன்ற செயல்களைக் காண்கிறோம். இவ்வாறே, ஒரு குழந்தையின் அசைவு உரிமையில் (freedom of movement) இடையூறுகள், அயலாரைச் சந்திக்க நேர்தல், மற்றும் தெரிந்தவர்கள் விசித்திரமான உடையில் காட்சி யளித்தல் போன்றவற்றிற்கு எதிர்மறைத் துலங்கலான சண்டை, பாதுகாப்புப் போன்றவை ஏற்படுகின்றன. குழந்தை யின் இரண்டாவது வயதில் அதன் நேர்நிலை (positive) எதிர்மறைச் (negative) சமூக எதிர்வினைகள் மிகவும் வன் மையாக மாறுகின்றன. ஒரு குழந்தை தன் அன்பை (affection), அன்பாகத் தழுவுதல் (caresses), அன்புள்ள (fond) வார்த்தைகளால் பேசுதல், உதவி புரிதல், மற்றும் பரிசுகளைக் கொடுத்தல் ஆகியவற்றின் வாயிலாய் வெளிப் படுத்துகிறது. மேலும், பிரிவை எதிர்பார்த்தால் உடனே தன் தாயையோ வேறு அன்புக்குரியவரையோ பற்றிக்கொள் கிறது. தன் தாயைப் பிறர் அணுக வந்தால் பொறாமையைக் (jealousy) காட்டுகின்றது. இவையனைத்தும் அன்பின் திட்ட மான அறிகுறிகளாகும். இவ்வாறே, எதிர்மறை எதிர் வினைகள் (negative reactions) பகைமையின் (hated) திட்டமான அறிகுறிகளாகத் திகழ்கின்றன. ஒரு குழந்தை தன் வலுக்கட்டா

யமான (violent) எதிர்மறை நடத்தையைத் (negative behaviour) தாக்குதல், தள்ளுதல், கூச்சலிடுதல் போன்றவையால் வெளிப் படுத்துகின்றது. இவ்வாறு நாம் ஒரு குழந்தையின் முதலாவது, இரண்டாவது வயதில் அதன் நேச, எதிர்ப்பு நடத்தை முறையில் பெரிதளவில் மாறுதலைக் காண்கிறோம். 'புறவய உளவியல் (objective psychology) முதல் வயதில் ஒரு குழந்தை எல்லோரையும் பார்த்துச் சிரிப்பதும், முதல் வருட இறுதியிலிருந்து இரண்டாவது வருடம் வரை அது தெரிந்த மக்களிடத்தில் மட்டுமே நேர்நிலையான எதிர்வினையளிப்பதையும் நான்கு மாதங்களுக்குப்பின் பழக்கப்பட்டவர்களையும் அயலாரையும் பெரு மளவில் வேறுபடுத்தலையும், பின் இரண்டிலிருந்து நான்கு வயது வரை குறிப்பிட்ட தனியர்கள் மீது மிக்க அளவில் சார்ந்தி ருத்தலையும், இத் துவக்கம் மற்றும் வேறு சாதாரண நேர் நிலைத் துலங்கல்களிலிருந்து வேறுபட்டிருப்பதையும் உற்று நோக்குகின்றது. நேர்நிலையான எதிர்வினைகளில் எப்பொ ழுதும் அதிகரித்துக்கொண்டேயிருத்தலும், தனிப் பயிற்சியடை தலும், வலுப்படுத்தலும் நடைபெறுகின்றன. இறுதியாக அவை சில கட்டங்களைக் கடந்த பின்னர் ஒரு தனியனின் மேல் திட்பம் பெற்றவையாய் அமைகின்றன. இக் கட்டங் களில் எல்லாப் பழக்கமுள்ள மனிதர்களும் முன்னர் பழக்க முள்ள தனியர்களும் இறுதியாக, மிகப் பழக்கமுள்ள மனித னுந்தான் நேர்த்தியான துலக்கங்களை ஏற்பவராவர். இவ் விறுதிக் கட்டத்தில், பெற்றோர்களும் மற்றத் தனியர்களும் குழந் தைக்குச் சிறப்பு முக்கியத்துவம் அமைந்தவர்களாக முற்படு கின்றனர்' (18.63).

## இரண்டரை வயது குழந்தை
### (The two-and-a-half year old)

கெஸ்ஸல் (Gesell) (16.188) கருத்துப்படி, சடங்கு முறை (ritualism) முப்பது மாதக் குழந்தையின் ஒரு தனிச் சிறப்பியல்பு. இக் குழந்தை வீட்டிலுள்ள பொருள்கள் எவ்வெவ்விடத்தில் இருக்கிறது என்பதை நன்க றிந்து அப் பொருள்களை அவ்விடத்திலேயே வைக்க வற்புறுத்து கிறது. அவற்றை மாற்றி ஒழுங்குபடுத்துவதையோ (re-arrangement) திருத்துவதையோ குழந்தை மறுக்கிறது. இவ் வயதுக் குழந்தைகள், அதனுடைய தந்தை எவ்வாறு காலணிகளையும், காலுறைகளையும் குறிப்பிட்ட முறையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கழற்றுவதை வற்புறுத்துகிறது என்பதைக் கவனத்திற்குக் கொண்டு வரலாம். இவ் வயதுக்

குழந்தை தன் தகப்பனுர் வேலைக்குச் செல்லும்பொழுதாவது அன்றி வேலையிலிருந்து வீடு திரும்பியவுடனேயாவது தன்னைச் சைக்கிளிலோ (cycle) காரிலோ (car) ஏற்றி அமர்த்திவைக்க வற் புறுத்துகிறது. 'குழந்தையின் மாட்சிமையுள்ள (imperial) ஆதிக்க வழிகள், சில சமயங்களில் பிறரால் ஒத்துக்கொள்ளப்படுவதில்லை. இக் குழந்தை, ஒருவரை ஒரு குறிப்பிட்ட இடத்தில் உட்காருமாறு கட்டளையிடலாம். மற்றவரை வேறு சில காரியத்தைச் செய்யச் சொல்லலாம். மற்றும் சிலரை வெளியில் செல்லச் சொல்லலாம். பெற்றேர் தன் குழந்தை தற்காலிக வீறுர்ந்த (temporary regal) ஆணவமான (dictatorial) கட்டத்தைக் கடந்துக்கொண்டிருக் கிறது என்று உணர்ந்து, அதன் கட்டளைகளுக்குச் பெருந்தன்மை யுடன் (graciously) சட்டெனத் தோன்றும் எண்ணத்தால் (Whimsically) விடை கூறினுல் நன்கு இருக்கும்' (16.189).

இவ் வயதில் ஒரு குழந்தை பல எளிய வீட்டு வேலைகளை ஒழுங்கு முறையில் செய்து வரும். குழந்தை முதியோருடனும் மற்றப் பிள்ளைகளுடனும் இருக்க விரும்புகிறது. மற்றப் பிள்ளை களுடன் வீட்டின் வெளிப்புறத்தில் விளையாட விரும்புகிறது. மற்றக் குழந்தையுடன் வீட்டினுள் விளையாட விரும்பும் குழந்தை புதிய இடங்களில் பொருந்தத்தகாத முறையில் நடந்துக் கொள்வதாகக் கெஸ்ஸல் (Gesell) கண்டார். ஆகையினுல், குழந்தையின் ஆரோக்கிய வளர்ச்சியை முன்னிட்டு இவ்வயதுக் குழந்தையை மற்றவர்கள் வீடுகளுக்கோ பூங்காக்கள், விளை யாடுமிடங்கள் போன்ற இடங்களுக்கோ எடுத்துச்செல்லு தல் வேண்டும். இதனுல் இக் குழந்தைகள் விளையாடும்பொழுது தங்கள் விளையாட்டுச் சாமான்களை மற்றப் பிள்ளைகளுடன் பகிர்ந்துகொள்வதைத் தெரிந்துகொள்கிறுர்கள்.

## மூன்று வருடங்கள் (Three years)

மூன்று வயதளவில், ஒரு குழந்தை வெளிப் புறத்தில் மற்றக் குழந்தைகளோடு விளையாடுவதை விரும்புகிறது. இக் குழந்தை விளையாடுவதுமட்டுமன்றிச் சண்டையிடவும் செய் கிறது. இவ் வயதுக் குழந்தை மற்றக் குழந்தையைத் தாக்கு வதோ, கீறுவதோ (scratch), கடிப்பதோ (bite), தள்ளு வதோ (push) அன்றி உதைக்கவும் செய்கிறது, ஆகையினுல் இவ்விளையாட்டைக் கண்காணிக்க வேண்டும். சிறு வீட்டு வேலைகளை ஓடிச் செய்வது மூலம் தன் தாய்க்குப் பேருதவியாய் இருக்கிறது.

தன்னைப்பற்றிப் புது மன உணர்ச்சி உடையதாக இருக்கிறது. தன்னையும் தாயையும் சேர்த்து 'நாம்' என்று கூறுவதில் பெருமகிழச்சியடைகிறது. தன்னைக் குறித்து மிகுதியாக அறிய ஆசைப்படுகின்றது. ஆதலினால் தாய் இதன் கடந்த அநுபவங்களையும் (experience) செயல்களையும் குறித்துச் சொல்லுகிறாள். ஏறக்குறைய இவ்வயதில், மொழியின் வளர்ச்சியினாலும் இடைவினைச் செயன்முறையின் (interactional processes) வளர்ச்சியினாலும் ஒருவரைப் பற்றி உணர்வதை நாம் காண்கிறோம். சில குழந்தைகள் கடந்தவற்றைப்பற்றியும், வேறு சில குழந்தைகள் பள்ளி செல்லுவதற்கேயன்றி விடுமுறையில் வேறு இடத்திற்குச் சென்று ஓய்வு எடுத்துக்கொள்வதற்குத் திட்டமிடுவதையும் காண்கிறோம். இவ் வயதில் குழந்தை தன் உணவு, உடை, விளையாட்டுச் சாமான்கள் மற்றும் வேறு பலவற்றையும் தேர்ந்து எடுத்துக்கொள்ளும் திறன் பெறுகிறது. தான் வெளிச் செல்ல விரும்பும்பொழுது, அவ்விதம் வெளிச் செல்லத் தன் தாய் அனுமதி தரமாட்டாள் என்று தெரியும் பொழுது தந்தையிடம் சென்று அனுமதி பெறலாம். பின் தாய் கேட்கும்பொழுது தான் சென்று அனுமதி பெற்றதனைக் கூறாது தந்தைதான் அனுப்பியதாக மாற்றிக் கூறலாம். இவ்விதமாகத் தன்பெற்றோர்களில் ஒருவரைக் காட்டி மற்றவரை ஏமாற்றவும் தெரிந்துகொள்கிறது. பெற்றோர்களிடையே வேறுபாடு காணும்பொழுது, குழந்தை இம் முறையைக் கையாளுகிறது. ஆகையினால் பெற்றோர் தங்களிடையே பிரிவுபட்ட அதிகாரம் தோன்றுவதைக் கைவிட வேண்டும். குழந்தையின் உணவு, உடை போன்றவற்றைத் தாயும் மற்றவற்றைத் தந்தையும் முடிவு செய்ய வேண்டும்.

இவ் வயதில் குழந்தையின் கற்பனை வாழ்க்கை வளர்ச்சியடைகிறது. மூன்று அல்லது மூன்றரை வயதுக் குழந்தை கற்பனைத் தோழர்களுடன் பேசவோ விளையாடவோ செய்யலாம். குழந்தையின் இரண்டாவது வயதிலேயே கற்பனை விளையாட்டுத் தொடங்குகிறது. இரண்டரை வயதுக் குழந்தை, தன் விளையாட்டுத் தேநீர் பாத்திரத்திலிருந்து (toy tea pot) தேநீர் அளிப்பதையும், நீருள்ள கோப்பையையோ நீரில்லாக் கோப்பையையோ கொடுப்பதையும் காண்கிறோம். குழந்தை தன்னை விலங்கெனக் கற்பனை செய்து கொண்டு அஃது அசைவது போலவும் கத்துவது போலவும் செய்துகாட்டலாம். பலவகையான, இச் செயல்கள் தன் இன உறுதி கண்டுணர்வோடு பொருத்தமாக அமைகின்றன.

இக் குழந்தை, பிற பிள்ளைகளுடன் அல்லது முதியோர்களுடன் விளையாடும்பொழுது தபால்காரன், காவற்காரன், மருத்துவர், தின்பண்டங்களை விற்பவர் (hawker) அல்லது தாயைப் போல நடித்தும் விளையாடலாம். 'குழந்தையிடத்து எல்லாக் கற்பனையான வாழ்வும் சில உட்தேவைக்கு மன நிறைவளிக்க லாம். அது தோழமைக்கோ யாரையாவது 'தோற்கடிக்கவோ' பார்த்துக்கொள்ளவோ, உடன் செயல் புரியவோ, மேலாளித் தனம் செய்யவோ இவற்றில் எவையாயிருந்தாலும் சரி, இந்தக் கற்பனையான ஏற்பாடுகளினால் தனித்த மனவெழுச்சி சார் வளர்ச்சியின் சிக்கலான பிரச்சினைகள் குழந்தையினால் தீர்க்கப்படுகின்றனவாய் இருக்கலாம்' (16.211).

## நான்கு வருடங்களும் அதற்குப் பிறகும்
## (Four years and after)

நான்கு வயதுக் குழந்தை சமூக இயல்புடைய ஒரு பிராணி. இது மற்றக் குழந்தைகளுடன் விளையாடுவதைப் பெரிதும் விரும்பு கிறது. குழந்தைகள் இல்லா வீட்டிற்குச் செல்ல மறுக்கும் அளவிற்கு இதன் விருப்பச்சார்பு (preference) குழந்தை களின் மேல் காணப்படுகிறது. இவ் வயதில், குழந்தை தன் விளையாட்டிலும் நண்பர்களிடத்திலும் பெரிதும் ஈடுபட்டிருப்ப தால் தன் தாயின் வீட்டு வேலைகளில் உதவி புரிவதிலுள்ள கவனம் குறைகிறது.

இதே நேரத்தில், குழந்தையின் குடும்பப் பாசம் பெரிதும் வளர்கிறது. அதிகாரம் படைத்தவர்களாகத் தந்தையையோ தாயையோ மேற்கோள் காட்டுவதைக் காண்கிறோம். தன் வீட்டையும் பெற்றோர்களையும் குறித்துப் பெரிதும் தற்பெருமை கொள்கிறது. தன் பெற்றோரின் இயல்புகளையும் (attributes) மற்றும் தன் வீட்டுக் காரியங்களையும் மிகைப்படுத்தி ஒப்பிடு கிறது.

இவ் வயதில், குழந்தையின் கற்பனை விளையாட்டு நண் பர்கள் பெரிதளவில் தோன்றுவதில்லை. குழந்தையின் கற்பனை விளையாட்டு அதன் சமூக வாழ்வுடன் நெருங்கித் தொடர்பு கொள்கிறது. விலங்குகளைப் போல் நடிப்பதற்கு மாறாகத் தன் தகப்பன், தாய், மருத்துவர், மற்றும் மளிகைக் கடைக்காரன் போன்று நடிக்கிறது. தன் தந்தை அல்லது தாயுடன் வெளியில் உலாவச் செல்வதை விரும்புகிறது. இவ்வாறு செல்லும் பொழுது முடிவிலா அளவிற்குக் கேள்விகளைக் கேட்கிறது.

ஒரு தனியனின் சமூக வளர்ச்சிச் தொடர்ச்சியானது, வாழ்க்கையில் நம்மைப்பற்றிச் சிலவற்றை அறிந்துகொள்ளவும் மற்றவரது உரிமைகள் சிலவற்றைத் தெரிந்துகொள்ளவும் நேருகிறது. நாம் இப்பொழுது குறிப்பிட்ட சில சமூக உறவுகளைப் பற்றிச் சுருக்கமாக ஆய்வு செய்யலாம்.

## சில குறிப்பிட்ட சமூக உறவுகள்
## (Some specific social relationship)

குழந்தை (infant) தன் வாழ்க்கை துவங்கும்பொழுது பிறரைத் தெரிந்துகொள்ளும் திறனில்லாமலும் மற்றும் பிறர் மேல் முழுமையாகச் சார்புற்றிருப்பதை உணராமல் இருப்பதையும் காண்கிறோம். காலம் செல்லச் செல்ல, இது பிறரை உணர்வதல்லாமல் தன்னையும் உணர்கிறது. படிப்படியாகக் குழந்தை பிறரிடத்திலிருந்து தன்னுரிமை பெறுகிறது. பின் தற்சாதிப்பை (self assertive) வற்புறுத்துகின்றது. இஃது எதிர்த்து நிற்கவும் (defiant) செய்கிறது. 'எந்த முன்னிலையில் மேற்கொண்டாலும் மற்றவர் மேலுள்ள சார்பு வழக்கத்திலிருந்து முழுவதும் மாறுவதில்லை. தன் தோழர்களின் ஒப்புதல் (approval) அல்லது ஒப்புக்கொள்ள மறுத்தலுக்கு விலக்காகவோ மற்றும் தன் சக நண்பர்கள்பால் உள்ள அன்பு (affection) பாதுகாப்பு இவற்றின் அவாவிலிருந்து கட்டுப்பாடற்றவனாகவோ ஆகத் தன்னிறைவு உள்ளவனாக அமைவதில்லை' (22.131). முன் கண்டபடி, கார்லெட் பூலர் (Charlotte Buhler) கருத்துப்படி அன்பு அல்லது நேர்நிலையான எதிர்வினைகளைப் பொருத்த மட்டில் குழந்தையின் வளர்ச்சியில் மூன்று கட்டங்கள் காணப்படுகின்றன. அவர் கூறுவதன்படி முதல் நான்கு மாதங்களிலிருந்து ஆறு மாதங்கள் வரை, குழந்தையின் புலன் காட்சி (perception) தெளிவாகவும் திட்டமாகவும் தோன்றுவதில்லை. இஃது எல்லா மக்களுக்கும் நேர்நிலை முறையில் (postive-way) எதிர்வினையளிக்கிறது. இரண்டாவது அரை வருடத்தில், குழந்தை பழக்கப்பட்ட மக்களையும் அயலாரையும் வேறுபடுத்துகிறது. பழக்கப்பட்ட மக்களிடத்தில் நேர்நிலையிலும் அயலாரிடத்தில் எதிர்மறையிலும் (negatively) செயலாற்றுகிறது. இரண்டு முதல் நான்கு வருடங்கள் வரை கொண்ட இம் மூன்றுவது கட்டத்தில், குறிப்பிட்ட தனியர்களாகிய தாய், தந்தை மற்றும் வீட்டிலுள்ளோர் இடத்தில் புறக் கோடியான சார்பு கொண்டுள்ளது. ஒருவரை இரக்கத்துடன் பராமரிப்பதன் தலையாய முக்கியத்துவத்தைக் குறித்து அமி டேனியல்ஸ் (Amy Daniels) நடத்திய ஆய்வு ஒன்றைக் கார்லெட் பூலர்

(Charlotte Buhler) குறிப்பிடுகிருர். 'ஒரே நிலையத்தில் வாழும் இரு வயதுடைய இரு குழுக்களைத் தனிப்படுத்தப்பட்டு (segregated) அவை இரு வேறுபட்ட நடைமுறைக்கு உட்படுத்தப் பட்டன. இவற்றில் ஒரு குழுவுக்குச் சிறிதளவில் மட்டும் இரக்கம் காட்டப்பட்டு, மற்ற எல்லாவற்றிலும் சரிவரப் பராமரிக்கப்பட்டு வந்தது. மற்றக் குழுவிலுள்ள ஒவ்வொரு குழந்தைக்கும் ஒவ்வொரு செவிலித் தாய் (nurse) அமர்த்தப்பட்டு, அக் குழந்தைகளுக்கு இரக்கமும் அன்பும் காட்டப்பட்டு வந்தன. ஓர் அரை வருட இறுதியில் முதல் குழு இரண்டாவது குழுவைவிட மனப் போக்கிலும் (mentally), உடல் நிலையிலும் (physically) பின்பட்டதாகக் காணப்பட்டது. சிறு குழந்தைகளிடையே தர நிலையான உள, உடல் முதிர்ச்சி திறம்பட அடைவதற்கு அதை வளர்க்கும்பொழுது தனிப் பராமரிப்பும் பற்றுறுதி காட்டுதலும் இன்றியமையாதனவாகும்' (18.65). இவ்வாறு நாம் குறிப்பாகக் குழந்தையின் முதல் ஐந்து வருடகால வாழ்க்கையில் தாயின் அன்பு பெருமளவில் தேவைப்படுவதைக் காண்கிறோம். குழந்தையும், குழவியும் நெருங்கிய அன்பான தொடர்ச்சியான நல்லுரவுகளைத் தன் தாயிடத்திலிருந்தாவது அல்லது தாய்க்குப் பதிலாக உள்ளவரிடத்திலிருந்தாவது அனுபவிப்பதினுல் குழந்தையும் தாயும் இன்பமும், மனத்திருப்தியடைவதும் மட்டுமன்றி, இவை மனநலம் (mental health) இன்றியமையாததென்பதை உளப் பகுப்பாய்வு வல்லுநர் (Psycho analysts), உள மருத்துவர் (Psychiatrists), உளவியலார் (Psychologists) இப்பொழுது நம்புகிருர்கள். 'தாய் அன்பைக் கவர்ந்துகொள்'வதினுல் (maternal deprivation) விளையும் தீய விளைவுகள் மிகவும் அதிகமானவை. 'ஒரு குறைக் கவர்ச்சி (partial deprivation), கவலை (anxiety) அன்பிற்கு மிகையான தேவை, ஆற்றல் வாய்ந்த பழிவாங்கும் உணர்ச்சிகள் இவற்றினின்று குற்றம் (guilt), சோர்வு (depression) ஆகியவற்ருல் உள்ளத்திலும் உடலிலும் முதிர்ச்சியடையாத இளங்குழந்தை, இவ்வகையான மனவெழுச்சிகளையும் (emotions), உந்துக்களையும் (drive) சமாளிக்க இயலாது' (23.12). குறிப்பாக இரண்டிலிருந்து ஐந்து வயதுவரை ஒரு குழந்தைக்கு அதன் தாயின் அன்பை முழுமையாகக் கவர்ந்துகொள்வதினுல் (deprivation) அதற்குக் கடுந்துன்பம் நேருவதுமட்டுமன்றி அது பிறருடன் அன்பு நல்லுறவுகள் கொள்ள இயலாமையையும் பௌல்பி (Bowlby) காட்டினுர்.

முடிவாக, வாழ்க்கையின் முதல் ஆறு மாதங்களில் மற்றவர்களுடன் அன்பு வெறுப்புத் தொடர்புகள் (ராகத்வேஷா),

வேறுபடுத்தப்பட்ட அன்பிலிருந்து அனைவரையும் நோக்கியே வளருகிறது எனலாம். வாழ்க்கையின் முதலாண்டு இறுதியில் பழக்கப்பட்ட மனிதர்கள், அந்நியர்கள் இவர்களிடையே வேறுபாடு காண்கிறது. இறுதியாக, மனிதத் தொடர்புகளின் மையமாகப் பெற்றோர்கள், குடும்பத்தின் மற்ற உறுப்பினர் களிடையேயும் பெருத்த வேறுபாடும், இரண்டிலிருந்து ஐந்து ஆண்டுகட்குள் குடும்பத்திலிருந்து மற்றப் பழக்கப்பட்ட மனிதர் களுக்கும் தொடர்புகள் மாற்றப்படுகின்றன. கடைசியாக, எல்லார்க்கும் அன்பையும், விட்டுக் கொடுக்கும் பண்பையும் எடுத்துச் சொல்வதினால் சுழற்சியான நிகழ்ச்சி மறுபடியும் நிறைவு படுத்தப்பட வேண்டும். தனியன் அவன் குடும்பத்திற்கு அவனது அன்பு எதிர்வினைகள் கட்டுப்படுத்தப்பட்டதால், தடைப் பட்டபடியிலிருக்கிறான். இது போன்றே, குலம், ஜாதி, **ஸ்வஜன** அல்லது நாடு அல்லது சமயம் இவற்றிற்குக் கட்டுப் படுத்தப்பட்ட அன்பு எதிர்வினைகளைக்கொண்ட தனியன் குறு கிய ஆளுமையுடையவனாவான். உண்மையான முதிர்ச்சியின் அடையாளம் மனித உரிமைகளின் உரிமைப்பத்திரம் (charter) இப்போது கூறுவதுபோலவும் அல்லது பண்டைய இந்தியர்கள் விஸ்வபிரேமா (Visvaprema) குறிப்பிடுவது போல, எல்லா மனிதர்களிடையேயும் அன்பு காட்டுதலேயாகும்.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. JENNINGS, Columbia University Press, 1923 — *The Behaviour of Lower Organisms.*
2. ALVERDES, Kegan Paul, 1927. — *Social Life in the Anima World.*
3. ALVERDES, Kegan Paul, 1932. — *Psychology of Animals.*
4. ROHRER and SHERIF (Ed), Harper, 1951. — *Social Psychology at the Crossroads.*
5. MAIER and SCHNEIRLA, Mc Graw-Hill, 1935. — *Principles of Animal Psychology.*
6. LINDZEY (Ed). Addison-Wesley, 1954. — *Handbook of Social Psychology*, Vol. 1.
7. WHEELER, Kegan Paul, Trench, Trubner, 1928. — *The Social Insects.*

8. SHERIF and WILSON (Ed), Harper, 1953. — *Group Relations at the Crossroads.*

9. L. T. EVANS, 'A Study of Social Hierarchy in the Lizard', 1936, 48. — *Journal of Genetic Psychology.*

10. ZUCKERMAN, 1932. — *The Social Life of Monkeys and Apes.*

11. MASLOW, 'The Role of Dominance', 1936, 48. — *Journal of Genetic Psychology.*

12. YERKES, Yale University Press, 1945. — *Chimpanzees.*

13. KOHLER, Pelican, 1957. — *The Mentality of Apes.*

14. Mc CULLOCH, 'The Role of Clasping Activity',1939, 7. — *Journal of Psychology.*

15. WARLOW, Western Psychological Covention, Monteray, Cal., 1958. — *Presidential Address.*

16. GESELL and ILG, Harper, 1943. — *Infant and Child in the Culture of To-day.*

17. SHIRLEY, University of Minnesota, 1933. — *The First Two Years of Life.*

18. CHARLOTTE BUHLER, Kegan Paul, 1945. — *From Birth to Maturity.*

19. VALENTINE, Pelican, 1956. — *The Normal Child.*

20. ILG and AMES, Dell, 1954. — *Child Behaviour.*

21. MAUDRY and NEKULA, 'Social Relations between Children' 54, 1939. — *Journal of Genetic Psychology.*

22. JERSILD, Staples Press, 1947. — *Child Psychology.*

23. JOHN BOWLBOY, Pelican, 1953. — *Child Care and the Growth of Love.*

# 5. சமூகப் புலன்காட்சி

## (SOCIAL PERCEPTION)

எல்லா நடத்தையின் அடிப்படை உண்மை என்னவெனில் அது தேவைகளையும் இலக்குகளையும் (goals) சார்ந்திருத்தலாகும். இதன் விளைவாகச் சமூக இடைவினைத் தேவைகளையும் இலக்குகளையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. தேவைகளையும் இலக்குகளையும்பற்றிய விரிவான ஆராய்ச்சியைச் சமூகவயப் பிரச்சினையைக் குறித்து மூன்ரும் பகுதியில் கையாளும் பொழுது எடுத்துக்கொள்ளலாம்.

### சமூக இடைவினை புலன்காட்சியிலிருந்து தொடங்குகிறது

### (Social inter-action starts with perception)

ஒவ்வொரு சமூக எதிர்வினையும் மற்றத் தனியன்களை அல்லது குழுக்களைப் புலன்காணுதலிலிருந்து தொடங்குகின்றது. எனவே, புலன்காட்சியெனும் பிரச்சினை சமூக இடைவினையின் அடிப்படையாக அமைகின்றது. நீ அறிமுகமான ஒருவனை வீதியில் சந்தித்துப் பேசத் தொடங்குகையில், அந்தத் தனியனைப் புலன்காணுதலிலிருந்து சமூக இடைவினைத் தொடங்குகின்றது. நீ அவனைப் புலன்காணுதிருந்தால் எவ்விதமான சமூக இடைவினையும் அங்கு நேர்ந்திருக்காது. நீ ஏன் அதனைப் பார்த்தாய்? அவன் அவ்விடம் அவ்வாறு போய்க் கொண்டிருந்ததினுல் மட்டும் அது நேர்ந்ததன்று. பலமுறைகள் நம் நெருங்கிய நண்பர்களில் சிலர், நாம் அவர்களைக் கடந்து சென்றும் புலன்காணவில்லை என்று குறை கூறியிருப்பதை மீட்டறியலாம். மேலும், அவர்கள் நம் கவனத்தைத் திருப்ப முயன்று தோல்வியும் அடைந்திருக்கலாம். நம்மைக் கடந்து செல்லும் எல்லா மனிதர்களையும் நாம் புலன்காண்கின்ரும் என்பது உண்மையானதன்று. கார்டனர் மர்ஃபி (Gardner Murphy) கூறியது போல 'அண்மை ஆண்டுகளில் வலுவான போக்கின் (trend) பேரில் சமூக உளவியலின் பிரச்சினையை நடத்தைப் படியிலிருந்து (behaviour level) சமூக இயற்பொருள் உலகினை (reality) உணர்தல் என்ற படிக்கு உயர்த்துவதற்குச்

சமூகப் புலனறிதலின் செயன்முறையின் தத்துவக் கோட்பாட்டிற்கான தேவை மிகவும் இன்றியமையாததாயிற்று' (1.139). குறிப்பாக ரோஷாக்கு (Rorschach), மர்ரே (Murray) என்பவர்களின் ஆய்வுகள் ஆளுமை, புலன்காட்சியை நிருணயிக்கின்றதென நிறுவியதால் சமூகப் புலனறிதலின் பிரச்சினை மிகுதியான கவனத்தைப் பெறுகின்றது. சமூகப் புலன்காட்சியை உறுதி செய்பவை யாவை?

## உறுப்பியல் காரணிகளும் செயலியல் காரணிகளும் (Structural and functional factors)

புலன்காட்சி விதிகள் சமூக இடைவினையில் எவ்வாறு செயல்புரிகின்றன? 1940ஆம் ஆண்டு தொட்டே இந் நூலாசிரியர் சுட்டிக் காட்டியதாவது, 'திரிபுக்காட்சி தருகின்ற அல்லது தராமலிருக்கின்ற எல்லாப் புலன்காட்சிகளும் இடைவினையின் மூன்று முக்கியக் காரணிகளை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அவையாவன: உள்ளிடத்திற்குரிய தூண்டுதல் (local stimulation), தூண்டல் கள ஆற்றல்கள் (stimulus field forces), உயிரியற்கள ஆற்றல்களுமாம் (organismic field forces)' (2.165).

'இப்பொழுது நாம் அலகு அமைத்தலின் (unit formation) ஆறு காரணிகளை வெர்திமர் (Wertheimer) என்பாரால் விளங்கக் கூறப்பட்டதைப் பின்னோக்கினால், முதன் மூன்று காரணிகளான, 'அண்மை' (proximity), 'ஒப்புமை' (similarity), 'பொதுமைவிதி' (common fact) ஆகிய புறவயச் சிறப்பியல்புகள் புலன்காட்சியின் களத்திலுள்ள ஆற்றல்களை அடிப்படையாகக் கொண்டுள்ளன எனக் காணலாம். ஆனால், இறுதி இரண்டான 'ஆயத்தநிலை'யும்(set), 'கடந்தகால அனுபவமும்' (past experience) உற்று நோக்குநரின் நிலைமைக்குத் தகுந்தாற்போல் முற்றிலும் அகவயமாக அமைகின்றன. அவ்வாறு இருக்கையில் நான்காவதான 'நல்ல தன்மை' (goodness) எனும் காரணி செவ்வொழுக்கத்தையும் சமநிலையையும் அடிப்படையில் அமைத்தால் புறவயமாகவும், அமைத்தலின் எளிய தன்மையையோ மகிழ்ச்சியைத் தரக்கூடிய இயல்பினையோ அடிப்படையிலமைத்தால் அகவயமாகவும் திகழும்' (2.161).

1942ஆம் ஆண்டில் முயன்சிஞ்சர் (Muenzinger) (3) என்பார் 'செயலியல்காரணிகள்' (functional factors) என்ற கலைச்சொல் தேவைகள், உட்பாட்டுநீட்சிகள், கடந்த அனுபவம் இவற்றிலிருந்து பிறப்பிக்கும் முத்திரைக் காரணி

களைக் குறிப்பிடுவதாகக் கருத்துத் தெரிவித்தார். 1947ஆம் ஆண்டு ப்ரூனர் (Bruner) (4) என்பார் இக் காரணிகளை விவரிப்பதற்கு 'நடத்தைத் தீர்ப்பிகள்' (behaviour determinants) என்ற கலைச் சொல்லைக் குறித்துள்ளார்.

ஆகவே, இவ்வுறுப்பியல் காரணிகளையும் செயலியல் காரணிகளையும் புலன்காணுதலின் அமைப்பியலுக்குப் பொறுப்பான இருவகைக் காரணிகளாகக் கருதலாம். கெஸ்டால்ட் உளவியலார் (Gestalt Psychologists) உறுப்பியல் காரணிகளின் முக்கியத்துவத்தை விளக்கி வெளிக்கொண்டுவர வேண்டிய பொறுப்புள்ளவர்களாகின்றனர். மறுபக்கத்தில் ரோர்ஷாக் (Rorschach), மர்ரே (Murray), பார்ட்லெட் (Bartlett) ஆகியவர்களின் ஆய்வுகள் புலன்காட்சியிலும் மற்ற அறிதற்குரிய நடைமுறைகளிலும் (cognitive operations) செயலியல் காரணிகளின் செல்வாக்கை மிகத் தெளிவாக விளக்கியுள்ளன. நாம் இங்குச் சில பரிசோதனை முடிவுகளை விவரிக்குமுன் சில எளிய இருவகையான காரணிகளைக் கொண்ட எடுத்துக்காட்டுகளை அளிப்போம். ஒரு தனி கறுப்புப் புள்ளி, வெள்ளைப் புள்ளிகளின் ஒரு குழுவினிடையே தெளிவாகக் காணப்படுவதுபோல், ஒரு நீக்ரோ மனிதன் ஒரு வெள்ளை மனிதர்களின் குழுவினிடையே தெளிவாகக் காணப்படுவான். இதுபோன்றே ஒரு செந்நிற மனிதன் (fair person) ஓர் இந்தியர்களின் குழுவின் நடுவே தெளிவாகத் தெரிவதைக் காணலாம். ஒரு துருக்கிக் குல்லாய் (fez cap) அல்லது காந்திக் குல்லாய் அல்லது மைசூர் தலைப்பாகை அணிந்துள்ள ஒருவன் மற்றச் சிகை அலங்காரமில்லாத மனிதர்களிடையே சிறப்பாகத் தோன்றுவான். இங்கு உறுப்பியல் காரணியின் இயங்குமுறை புலனறிதலின் அமைப்பியலுக்கு நம்மை அழைத்துச் செல்வதைக் காண்கின்றோம். ஒப்பாக, தேவைகளின் அடிப்படையிலமைந்த செயலியற்காரணிகள் புலன் காட்சியின் அமைப்பியலையும் பாதிக்கும். புகை வண்டியையோ உந்து வண்டியையோ (bus) அடைவதற்கு விரைந்து செல்லும் ஒரு மனிதன் அல்லது வகுப்பிற்குத் துரிதமாகச் செல்லும் ஒரு மாணாக்கன் வழியிலுள்ள சிற்றுண்டிச் சாலைகளைக் கவனிக்கமாட்டான். அதேபோன்று, பசியுடன் கூடிய ஒரு மனிதன் கடைக் காட்சி அறையிலுள்ள (shop window) ஆடைகளையும், மற்றத் துணிமணிகளுக்கான பொருட்களையும் கவனிக்கமாட்டான். நாம் எதனைக் புலன்காண்கிறோமோ அஃது அத் தருணத்திலுள்ள நமது தேவைகளினால் நிருணயிக்கப்படுகின்றது.

## சில பரிசோதனை முடிவுகள்
(Some experimental results)

1942ஆம் ஆண்டில் மர்ஃபியும் மற்றவர்களும் (Murphy and others) (5) எவ்வாறு ஒரு தேவையின் வலுவான தன்மை புலன்காட்சியின் உருத்திரிபுக்குக் (perceptual distortion) கொண்டு செல்கின்றது என்பதற்கு விளக்கமளிக்கும் ஒரு மிகச் சுவையான பரிசோதனையை நடத்தினர்கள். அவர்கள், கல்லூரி மாணவர்களைக் கொண்ட இரு குழுக்களுக்கு மங்கலாக்கப்பட்ட கண்ணுடித் (ground glass) திரைக்குப் பின்னுல் இருபொருள் மயக்க வரை படங்களைக் (ambiguous drawings) காண்பித்தனர். பசியுடன் கூடிய மாணவர்கள் சாப்பிட்டு முடித்தவர்களைவிட மிக அதிகமுறை இருபொருள் மயக்க வரைபடங்களை உண்ணும் பொருள்களாகப் புலன்கண்டனர். இந்தப் புலன்காணுதலின் வேறுபாடு உறுப்பியல் காரணிகளாலன்று. ஆனுல், புலன்காண் போரின் தேவைகளும் ஊக்குதலினுமிடையேயுள்ள வேறுபாடு களினுல்தான் என்பவற்றை அவர்கள் மிகத் தெளிவாக விளக்கிக் காட்டினர்.

1947ஆம் ஆண்டில் ப்ரூனரும் (Bruner) அவருடைய உடனுளர்களும் நாணயங்களின் அளவுகளை வைத்து இதற்கு ஒப்பான முடிவுகளைப் பெற்றனர். சேரி வாழ் மக்களின் குழந் தைகள் வணிக, தொழில் வகுப்புக் (business and professional classes) குழந்தைகளைவிட, இந் நாணயங்களை அளவில் பெரியனவாகப் புலன்கண்டனர். அவர்கள் பத்து வயது சிறுவர்களைப் பலவிதமான வட்ட தகடுகளின் அளவினை யும், நாணயங்களின் அளவினையும் ஒப்பிட்டுப் பார்க்கச் செய்தனர். அவர்களில் ஏழைச் சிறுவர்கள் நாணயங்களை அதே அளவுள்ள வட்டத் தகடுகளை விட அளவில் பெரியனதாக மதிப்பிட்டதைக் கண்டனர். பொருளின் சமூக மதிப்பும் (social value), சமூகத்தினுல் மதிப்பிடப்பட்ட பொருளின் (socially valued objects) தனித் தேவையும் புலன் காட்சியைப் பாதிக்கின்றன என்ற முடிவுக்கு இவ்வாராய்ச்சி யாளர்கள் வந்தனர். அவர்கள் இக் காரணிகளை நடத்தைசார் தீர்ப்பிகள் (behavioural determinants) என அழைத்தனர்.

'இவ்வொப்புமுனை கொண்ட பரிசோதனைகளில் ஆர். எல். சாலமன் (R. L. Soloman) என்பார் அடையாள வில்லைகளைப்(tokens)பெற்ற பின்னர் அவற்றை மிட்டாய்க்கோ (Candy) விரும்பப்பட்ட பொருள்களுக்கோ மாற்றுதற்குப் பயிற்சி

பெற்ற குழந்தைகள், வில்லைகளைப் பயிற்சி அனுபவத்திற்கு முன்பு மதிப்பிட்டதைவிடப் பெரிதாக மதிப்பிட்டதாகக் கண்டு பிடித்தார். இந்த அளவிடப்பட்ட மிகை மதிப்பீடு (over estimation) பில்லைகள் மூலம் வெகுமதியைத் (reward) திரும்பப் பெறுதல் முடியாது என்று அறிந்த பின் மறைவுற்றது' (6.189).

கிரேச்சும் கிரெச்ஃபில்டும் (Krech and Crutchfield) மகத்தான உட்கருத்துகள் கொண்ட இரு முன்மொழிவுரைகளை வெளியிட்டனர். முன்மொழிவுரை (1): புலனறிதல் களமும் அறிதற்குரிய களமும் அவற்றின் இயற்கையான நிலையில் அமைவுற்றதாகவும் பொருளுள்ளதாகவும் உள்ளன (7.84). முன்மொழிவுரை (2): புலன் காட்சி செயல் சார்பில் தேர்ந்தெடுக்கும் தன்மையது (7.87).

நாம் அந்நியநாட்டு மக்களின் சொற்றொடரையும், நடத்தையையும் தவறாகப் புரிந்துகொள்ளுதல் ஒரு சாதாரண அனுபவமாகும். நாம் அவர்களுடைய ஆடைகள், மொழி, நடத்தைகள் மற்றும் பழக்கங்கள் ஆகியவற்றை மிகவும் தனிப்பட்டதாகவும் வேடிக்கையானதாகவும் ஏராளமானதாகவும் கூடப் புலன்காண்கிறோம். ஒரே மொழியைப் பேசும் மக்கள் உச்சரிப்பிலுள்ள வட்டார வேறுபாடுகளை (regional differences) மிகவும் ஏளனமாகக் காண்கிறார்கள் என்பதனை நாம் கண்டிருக்கிறோம். ஒருவேளை அவர்களுடைய பாராட்டுகள் ஒருவருக்கொருவரானதாக இருக்கலாம். இது, நாம் ஒலிகள், அசைவுகள் முதலியனவற்றை ஓர் அமைந்த முறையில் புலன்காண விழைகின்றோம் என்ற உண்மையினாலாகும். அவை, நமக்குப் பழக்கமான அமைப்பியல் முறையில் பொருந்தாவிடில் நாம் அவற்றினைத் தனிப்பட்டனவாகவும் வியப்பானதாகவும் பார்க்க முற்படுகிறோம். 1946ஆம் ஆண்டில் ஆஷ் (Asch) (8) என்பார் மிகச் சுவையான ஒரு பரிசோதனையை நடத்தினார். அவர் பண்புகளின் (traits) பட்டியலொன்றை மாணவர்களுக்குக் கொடுத்து அப்பண்புகளைக்கொண்ட தெரியாத (unknown) மனிதரைப்பற்றி அவர்களுடைய மனப் பதிவுகளை (impression) விரிவாக எழுதச் சொன்னார். ஒரு பதிப்பில் (version) கீழ்வரும் வரிசையில் பண்புகள் கொடுக்கப்பட்டன:

சுறுசுறுப்பான, நுண்ணறிவுள்ள, எளிதில் மன உணர்ச்சியை எழுப்புகின்ற (impulsive), திறனாய்க்கூடிய (critical),

இணங்காத, பொறாமையடையக்கூடிய (envious) என்பவை அப் பண்புகளாகும்.

மற்றொரு பதிப்பில் கீழ்க்கண்ட வரிசையில் பண்புகள் கொடுக்கப்பட்டன:

பொறாமையடையக்கூடிய, இணங்காத, திறனுயக்கூடிய, எளிதில் மன உணர்ச்சியை எழுப்புகின்ற, சுறுசுறுப்பான, நுண்ணறிவுள்ள என்பவை அப் பண்புகளாகும்.

ஆஷ் (Asch) இவ்விரு விரிவுரைகளும் குறிப்பிடத்தகுந்த வகையில் மாறுபட்டன எனக் கண்டார். அவர் முடிவு செய்ததாவது: 'ஆட்படுநர் முதற்பட்டியலைக் கேட்கும்பொழுது விரிவான உருப்பெருத (uncrystalised) ஆனுல், வழிகாட்டப் பட்ட (directed) மனப்பதிவு உருவாகின்றது. அடுத்த சிறப் பியல்பு தனிஉருப்படியாக வராமல், நிறுவப்பட்ட வழிக்கு இயற் பொருள் உலகாக அமைகின்றது.'

## காண்டல் அமைப்பு—குறிப்பு மண்டலம்
## (Frame of reference)

இவ்வாருகப் புலன்காணுதலின்மேல் அறிதலின் அமைப் பியல் செல்வாக்குச் செலுத்துகிறதென அறிகிறோம். ஷெரீஃப்பும் (Sherif) மற்ற ஆசிரியர்களும் இவ்வாருன நிகழ்ச்சியை விளக்குவதற்குக் குறிப்புமண்டலம் (frame of reference) என் கின்ற பொதுக் கருத்தைப் பயன்படுத்தியுள்ளார்கள். பக்ஸ்டன் (Buxton) (9) என்பவர் எழுதுவதாவது, 'காண்டலமைப்பு என்பதைத் தனியொரு நிலைமையில் நம் நடத்தையைப் பாதிக்கும் தூண்டுதலின் பின்னணி வண்ணமென வரையறுக்கலாம். அது தலைசிறந்தவற்றைத் தவிர வெளிப்புற அல்லது உட்புறத் தூண்டல்களையும் உட்படுத்தலாம். அஃது எண்ணங்களையும் நினைவுகளையும் உட்கொள்ளலாம். ஆனுல், நம் எளிய வரையறையில் முக்கியமானதொரு மேற்கோள் பதிந்துள்ளது. அஃதாவது ஒரு மனிதனின்மேல் கொடுக்கப்பட்ட எந்தத் தூண்டலின் விளைவுகளும் மற்றத் தூண்டல்களின் விளைவு களிலிருந்து தனிப்பட்டவையல்ல.' ஆகவே, காண்டலமைப் பானது செயல்சார் தொடர்புகளின் ஒழுங்கமைப்பான காரணி, ஒரு குறிப்பிட்ட நேரத்தில் நம் புலன்காட்சியைப் பாதிக் கிறது என்ற முக்கியத்துவத்தைத் தெளிவாகக் காண்பிக்கின் றது. நாம் புலன்காட்சியை வெளிப்புறத்திலிருந்து உயிரியை

மோதும் தூண்டலை மூலமாகக்கொண்டு விளக்க முடியாது. உட்புறக் காரணிகளும் புலன்காட்சியைப் பாதிக்கின்றன. நாம் மனத்தில் கொள்ளவேண்டிய முக்கியமான காரணி யாவது, வெளிப்புறக் காரணிகளையும் உட்புறக் காரணிகளையும் உட்கொண்ட அமைப்பினை ஒன்று சேர்த்தலாகும். ஷெரீஃப் (Sherif) என்பார் எழுதுவதுபோல, 'ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இடைச்சார்பு முறையில் செயல்புரியும் உட்புற, வெளிப்புறக் காரணிகளின் தொகுப்பைப் பிரச்சினைக்குட்பட் டிருக்கும் அநுபவம், நடத்தையின் காண்டலமைப்பு என்று இனி நாம் குறிப்பிடலாம்' (10.41).

தினசரி வாழ்க்கையிலிருந்து சில எடுத்துக்காட்டுகள் இப்பொதுக் கருத்தைத் தெளிவாக்கும். ஒரு வீடு சிறியதாக இருக்கிறதென்று நாம் கூறினால், அவ் வீட்டைப்பற்றிமட்டுமே நாம் கூறவில்லை. ஆனால், அவ் வீட்டை மற்ற வீடுகளுடன் ஒப் பிட்டுப் பார்த்தே கூறுகிறோம். வேறுவகையில் கூறினால், வீட் டின் அளவினைக் குறித்து நாம் ஒரு குறிப்பிட்ட காண்டலின் தரம் (standard of reference) கொண்டுள்ளோம். இப் போது நாம் இக் குறிப்பிட்ட வீட்டை மற்ற வீடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கிறோம். ஐந்தடி நான்கங்குலம் உயரமுள்ள பெண்மணி, அதிக உயரமுள்ள பெண்மணியாக மதிக்கப்படு கிறாள் என்பது தெரிந்த உண்மையாகும். மாறாக, ஐந்தடி நான்கங்குலம் உள்ள மனிதன் குள்ள மனிதனாகப் புலன்காணப் படுவான். இவ்விரு வழக்குகளிலும் உயரம் ஒன்றாயிருந்த போதிலும் உயரங்களை மதிப்பிடுவதில் நாம் வேறுபாடு காண்கிறோம். இஃது ஏனென்றால் உயரத்தின் தரம் பொருள் தொக்கு நிற்பதாலும் நம் நிகழ்காலப் புலன்காட்சிகளைக் கடந்த கால அநுபவத்துடன் இணைப்பதாலும்தான். இருபால்களின் சராசரி உயரத்தில் வேறுபாடு இருப்பதால் உயரத்தின் புலன் காட்சியும் மாறுபடுகிறது. இதுபோன்றே, நாம் எவ்வாறு நன்னயமுள்ள நடத்தையையும் முரட்டு நடத்தையையும் புலன்காணப் பழக்கப்பட்டுள்ளோமோ, அதைப் பொறுத்து ஒரு மனிதனின் நடத்தையை முரடாகப் புலன்காணுகிறோம். நடுத்தர வகுப்பினனான படித்த மனிதனுக்கு எது முரட்டுத்தன மாகத் தெரிகின்றதோ அது சேரிவாழ் பாமரனுக்குச் சாதாரண மாகத் தோன்றும். இதுபோன்று பொருத்தமற்ற தற்குறிப் புரையொன்று (self reference) மரபொழுங்கு சார்ந்த சமூகக் கூட்டத்தில் ஒருவரைத் திக்குமுக்காடச் செய்யலாம். இருந்தபோதிலும், அதே தற்குறிப்புரை மற்றொரு கூட்டத்தில் மகிழ்ச்சி தரக்கூடியதாயிருக்கும். ஆதலால் தூண்டல் மட்டும்

சிறப்புடைத்தன்று. மற்றும், சந்தர்ப்பம், குழுவின் தன்மை, காலம் போன்ற சில மற்றக் காரணிகள் நாம் எவ்வாறு அத் தற் குறிப்புரையைப் புலன்காண்கின்றோம் என்பதைப் பாதிக்கின் றன. 35 சதவிகிதம் மதிப்பெண்கள் வாங்கும் மாணவன் தான் தேர்ச்சிக்குரிய அம்சங்கள் பெற்றுவிட்டோம் என மகிழலாம். மறுபுறம், மற்றொரு மாணவன் 58 சதவிகிதம் மதிப்பெண்கள் மட்டும் கிடைத்தது என்பதால் வருத்தப்பட லாம். ஓர் ஏழை மனிதன் தான் மாதத்திற்கு 100 ரூபாய் மட்டும் சம்பாதிக்க முடியுமென்றால் தன் குழந்தைகளைச் 'சரி யான பள்ளிக்கு' அனுப்ப முடியும் என எண்ணலாம். மாறாக, ஒரு நடுத்தர வகுப்பினன் அவன் வருமானமான 400 ரூபாயில் கூடத் தன் குழந்தையைச் 'சரியான பள்ளி' க்கு அனுப்பப்போத வில்லையே என எண்ணலாம். ஆகவே, வெற்றி அல்லது தோல்விபற்றிய அனுபவமும் மனப்பான்மைகளும், இவற்றின் சிறப்பும் தனியனால் நிறுவப்பட்ட தரத்தையும், தனியன் சார்ந் திருக்கும் குழுவின் தரத்தையும் பொருத்ததாகும். இக் காரணத்தால்தான் இரு மனிதர்களுக்கிடையே நடந்த சச்சரவைப்பற்றியோ சமூகத்திலோ நாட்டிலோ நடக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றியோ மாறுபட்டான கூற்றுகள் வழங்கப் பெறுகின்றன.

'உருத்திரிபுபெற்ற படங்கள் மனிதர்களின் மனத்திலே உருவாகின்றன. ஆனால் இவை உருவாவது மனிதர்கள் இயற்கை யாகவே ஏமாறக்கூடியவர்கள் என்பதனாலல்ல. சரியான நிலைகளில் நோக்கங்களின்கீழ்ச் சரிவரக் கூர்வாக நிகழ்ச்சிகளைப் பார்க்க முடியாதவர்கள் என்பதினாலுமல்ல. பொருள்களை நோக் குவது ஒருவரின் ஆசைகள், சார்பெழுந்த எண்ணங்கள் இவற்றிலிருந்து தனித்து அமைந்தவையல்ல. பல மாற்று வழிகளைக் கவனிக்க வேண்டிய சிக்கலான சமூகவுலகத்தில், அவன்தன் உள்நோக்கங்களுக்கும் (intentions) மனப்பான்மை களுக்கும் சார்ந்தவாறு உள்ளவற்றையே கவனிக்கத்தகுந்தவ னாவான்' (10.40).

பர்ஸ் ராம் (Pars Ram) என்பார் 1951ஆம் ஆண்டில் அலிகாரில் (Aligarh) இந்து-முஸ்லிம் நெருக்கடிகளின் ஆய்வை மேற்கொண்டார். அதற்குச் சில மாதங்களுக்கு முன்பு மார்ச்சு மாதம், 1950ஆம் ஆண்டில் அலிகாரிலும் உத்திரபிரதேசத் தின் மற்றப் பகுதிகளிலும் பரந்த இந்து-முஸ்லிம் கலகங்கள் இருந்தன. ஒரு பேட்டியில், இந்துக்கள் முஸ்லிம்கள் இருவரை யும் அவர் கேட்டதாவது, 'வேறுபட்ட குழுக்களினிடையேயோ

சமுதாயங்களுக்கிடையேயோ சச்சரவு நடந்ததைப்பற்றி ஏதாவது கேட்டோ பார்த்தோ இருக்கின்றீர்களா? (a) கடந்த ஆண்டுபோக்கில், (b) கடந்த ஆறு மாதங்களில், (c) கடந்த மூன்று மாதங்களில், (d) கடந்த வாரத்தில்.' இந்துக்களுக்கிடையேயும் முஸ்லிம்களுக்கிடையேயும் விடை கூறுவதில் வேறுபாடுகள் உள்ளதை அவர் கண்டார். இந்துக்கள் மார்ச்சு 1950ஆம் ஆண்டுச் சச்சரவுக்குப் பின்னர் வேறு சம்பவங்கள் இல்லை எனத் திரும்ப வலியுறுத்திக் கூறினர். மாறாக, முஸ்லிம்கள் இந்துக்களால் வேறுபடுத்தப்பட்டதாகவும், சரியாக நடத்தப்படவில்லையென்றும் நிகழ்ச்சிக்குப்பின் நிகழ்ச்சியாகக் கொடுத்தனர். இவ்வாறு, கலகத்திற்குப் பிறகு ஒரே நிலைமையை இரு குழுக்கள் புலன்கண்டதில் ஒப்புமை இல்லையெனக் கண்டுபிடிக்கப்பட்டது (11.149). சிறுபான்மை வகுப்பினரின் (minority) காப்பின்மை (insecurity), பெரும்பான்மை வகுப்பினுல் சாதாரணமாகவும், பொது நிலைமையானதாகவும் நோக்கப்பட்ட நிகழ்ச்சிகளின் மேல் கவனத்தைச் செலுத்தவும், அச்சுறுத்தல்களைப் புலன்காணவும் வழிகாட்டியது.

நம் வெளித் தோற்றத்திலுள்ள வேறுபாடுகளினுல் எழும் ஒரே சூழ்நிலையிலுள்ள புலன்காட்சியின் வேறுபாடுகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்கிக்காட்ட செலீக் (zellig) என்பாரின் ஆராய்வைக் குறிப்பிடலாம் (12). 1928ஆம் ஆண்டில் அவர் இரு குழந்தைக் குழுக்களை அழைத்து அவர்கள் வகுப்பறைத் தோழர்களுக்கு முன் கட்டழகுக் கலைக்கான (callisthenic) பயிற்சிகளைச் செய்துகாட்டச் சொன்னுர். ஒரு குழுவினர் அனைவரும் அவர்கள் வகுப்பறைத் தோழர்களால் விரும்பப்படாதவராக இருந்தனர். அதே சமயத்தில், மற்றக் குழுவினர் அவர்கள் வகுப்பறைத் தோழர்களால் மிகவும் விரும்பப்பட்டவராக இருந்தனர். பரிசோதனையாளர் 'விரும்பப் படாத' குழுவைத் தேர்ந்த முறையில் பயிற்சிகள் புரிவதற்குப் பழக்கப்படுத்தியிருந்தார். மாறாக 'விரும்பப்பட்ட' குழு வேண்டுமென்றே (deliberately) தவறுகள் செய்யப் பயிலுவிக்கப் பட்டிருந்தது. இவ்விரு குழுக்களும் பயிற்சிகளைப் புரிந்து கொண்டிருக்கையில், பார்வையாளர்கள், 'விரும்பப்படாத' குழு பல தவறுகளைச் செய்ததென வலியுறுத்தித் திரும்பத் திரும்பக் கூறியதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. விளங்கக் கூறினுல், முன்கருத்து (predisposition) அல்லது விரும்பப் படாதிருக்கும் கருத்தானது, ஒருவரையோ குழுவையோ தவறுகளைப் புலன்காணுதலுக்கு உதவுகிறது. இதற்கு மாறாக, விரும்பத் தகுந்த கருத்தானது தவறுகளைப் பொருட்படுத்

தாதகைக் கொண்டுள்ளது. மாற்றாந்தாய் மாற்றாள் குழந்தையிடம் தவறு கண்டுபிடிப்பதென்பது பொது அனுபவமாகும். ஒப்பாக, மாமியாரும் மருமகளின் நடத்தையில் எப்பொழுதும் குற்றம் காண்கிறாள். இது மிகவும் கவர்ச்சியாகச் செலிக்கின் (Zellig's) பரிசோதனையில் வெளிக்கொணரப்பட்டிருக்கிறது. ஆனால், சார் பெண்ணங்கள் (prejudices) எப்பொழுதும் நம் புலன்காட்சி யைத் திரிபு செய்கின்றன என்று ஊகித்துணர்தல் (inferred) கூடாது. ஆல்போர்ட்டும் (Allport) அவருடைய துணையாளர் களும் (13) ஹார்வர்டில் (Harvard) வலுவான இன எதிர்ப்புச் (anti-semitic) சார்பெண்ணங்கள் கொண்டவர்கள், யூதர்களை (Jews) அவர்கள் முகபாவனையிலிருந்தே அறிதலில் சார்பெண் ணங்கள் இல்லாதவர்களைவிட திறமையாக இருந்தனர் என்ப தைக் கண்டனர். இங்குக் 'கள்ளனைப் பிடிக்கக் கள்ளனை நியமி' என்ற பழமொழிக்கு இப் பரிசோதனைச் சான்றாக (proof) உள்ளது.

மர்ஃபியும் ஷாஃபரும் (Murphy and Schafer) (14) புலன் காட்சியின் மேல் வெகுமதியும், தண்டனையும் (reward and punishment) தருதலின் விளைவைக் காண்பிக்க மிகச் சுவையான தொரு பரிசோதனையை நடத்தினர். அவர்கள், இரண்டு இரு முகத் தோற்றப் படங்களைச் (ambiguous figures) சிறிது நேரத் திற்கே காண்பித்தனர். ஒவ்வொரு படமும் படத்தின் ஒரு பகு தியை மனித முகத்தின் எல்லைக் கோடுகளாகப் (outline) பார்க் கும்படியாக அமைக்கப்பட்டது. இம் முகங்களில் ஒன்றைப் புலன் கண்ட ஒவ்வொரு முறையும் ஆட்படுநர்க்குப் பணம் வழங்கப் பட்டது. ஆனால், மற்றப் படம் புலன்காணப்பட்டபோது தண் டனைக்குரியவராகச் சில காசுகள் அவர்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டன. இந் நுண்முறையைப் பயன்படுத்தி மர்ஃபி சில பார்வைக் கோலங்களுக்கும் வெகுமதிகளுக்குமிடையேயும், மற்றும் சில கோலங்களுக்கும் தண்டனைகளுக்குமிடையேயும் ஒரு வலுத்த இயைபை (association) உண்டுபடுத்தினர். சோதனை நிலைமையில் வெகுமதியளிக்கப்பட்ட கோலங்களும், தண்டனையளிக்கப்பட்ட கோலங்களும் ஒரே படமாக இணைக் கப்பெற்று இவ்விரண்டும் உருவமாகவோ பின்னணியாகவோ பார்க்க முடியும்படி அமைக்கப்பட்டன. 67 புலன் காட்சிகளில் 54 வெகுமதியளிக்கப்பட்ட முகப்படங்களின் முகங்களாகக் காணப்பட்ட புலன்காட்சிகளென அறிவிக் கப்பட்டது. நன்கு தெரிந்தாற்போல ரோர்ஷாக்கும், மர்ரே யும் (Rorschach and Murray) ஆளுமையின் அடித்தளத்திலுள்ள

சச்சரவுகளையும் தேவைகளையும் ஆய்வதற்கு அமைப்பற்ற பொருளின் (unstructured material) புலன்காட்சியைப் பயன்படுத்தினர்.

மன ஆயத்தநிலை புலன்காணுதலைப் பாதிக்கின்றது என்பது தெரிந்த உண்மையே. நன்கு ஊன்றிய அரசாங்க ஊழியர் சிலர், 1942ஆம் ஆண்டில் வீதியில் நடந்து செல்லும் தொண்டர்களின் குழுவை, ஒழுங்கற்றவர்களையும் (rabble) திரிபவர்களையும் (strays) அளவற்றவர்களையும் (waifs) உள்ளடக்கியதாகக் குறிப்பிட்ட பல சந்தர்ப்பங்களை இந் நூலாசிரியர் மீட்டறிகின்றார். மாறாக, இதே காட்சி நாட்டுப்பற்றும் தேசப்பற்றும் கொண்ட மனிதர்களை ஊர்வலமாகச் சென்று கொண்டிருக்கும் இளைஞர்களின் ஒழுங்குமுறையைப்பற்றிப் பாராட்டச் செய்யும். ஒப்பாகவே, தொழிற்தலைவருக்கு ஒரு தொழிற்சாலையின் வாயில்களுக்கருகே இருந்து ஒத்துழையாமை செய்யும் துணைப்படை (contingent) ஒழுங்குள்ளதாகவும், தியாக மனப்பான்மையுள்ளதாகவும், விரும்பத்தகுந்த மக்களின் கூட்டமாகவும் தெரிகிறது. அவ்வாறு இருக்க, நிருவாகப் பிரதிநிதிகளை (management representatives) அதே காட்சி ஒழுங்கீனமானதாகவும், பண்படாததாகவும், சீரற்ற மக்களாகவும், ஒழுக்கமுள்ள மனிதர்களைத் தங்கள் கடமைகளைச் செய்வதிலிருந்து தடுக்கும் மக்களாகவும் காணச் செய்கின்றது. ஏதோ ஒரு களவில் ஈடுபாடுகொண்டதாகச் சந்தேகத்தின்பேரில் கைது செய்யப்பட்ட ஆட்களை நாம் பார்க்கும் பொழுது அவர்கள் முகத்தில் தந்திரத்தின் தெளிவான குறிகளையும், பொறுப்பின்மையையும், இரக்கமற்ற தன்மையையும் மற்றும் இதுபோன்ற குறியீடுகளையும் புலனறிய இயலுகின்றது. இவர்களில் பலர் தவருகக் கைது செய்யப்பட்ட நேர்மையான குடிமக்களாகவும், பின்னர் விடுதலை செய்யப்படக்கூடியவர்களாகவும் இருக்கலாம். மகிழ்ச்சியான உடன்பாட்டுச் செவ்வியிலுள்ள (mood) ஒரு மனிதன், நிலைமையிலோ ஒருவரின் நடத்தையிலோ பல பொருள்களைப் புறக்கணிக்க முற்படுகின்ருன். ஆனல், சினமான அல்லது பற்றுர்வமுடைய உடன்பாட்டுச் செவ்வியிலுள்ள மனிதன் திறனாய்கிறவனாக இருக்க முற்படுகிருன் என்பது தெரிந்த செய்தியே. வேறு சொற்களில் கூறப்போனல், மகிழ்ச்சியான உடன்பாட்டுச் செவ்வியிலுள்ள மனிதனின் புலன்காட்சியியல் அமைப்பு எளியதாகவும் வேறுபாடு இல்லாததாகவும் உள்ளது. அவ்வாறிருக்கத் திறனாயும் (critical) உடன்பாட்டுச் செவ்வியிலுள்ள மனிதன் புலன்காட்சியியல் களத்திலுள்ள குறிப்பான விவரங்களுக்குத் தன் கவனத்தைச் செலுத்துகிருன்.

'பொருள்கள், மிக அரிதாகத்தான் தாம் காணப்படுகிறாற்போலவே உள்ளன. மக்களின் மனவெழுச்சிகள் (emotions), செவ்விகள் (moods), ஆளுமைகள் (personalities), மனப்பாங்குகள் (temperaments) ஆகியவை மக்கள் 'அங்கு வெளியே' என்ன காண்கிறார்களோ அவற்றிற்கு வண்ணமேற்றி அவற்றை நிருணயிக்கின்றன. தற்காப்பிற்கு அவசரமான இன்றியமையாத் தேவையையுடைய மனிதனின் கவன உலகு முழுவதும் (the entire cognitive world) நிலையான உறுதியைத் தேடாத ஒருவனினின்று வேறுபாடான அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கும்' (7.91). மற்றும் ஒரு தெரிந்த செய்தியை நாம் குறிப்பிடலாம். நட்புடனுள்ள இருவர் ஒருவருக்கொருவர் பல நல்ல இயல்புகளைப் பார்த்துக்கொள்வர். பின்னர், இருவரிடையேயுள்ள நட்புப் பகையாக மாறும் பொழுது ஒவ்வொருவரும் மற்றவரை மிக ஏமாற்றுபவராகவும் கீழ்த்தரமானவராகவும் இழிவானவராகவும் காண்கின்றனர். இங்கு நேருவது என்னவெனில், நட்புக் காலத்தில் பின்னணியின் பகுதியாக இருந்த நிகழ்ச்சிகள், பகைக் காலத்தில் முன்னணிக்கு வருகின்றன. தனியர்கள் மாறுபட்டனர் என்பதனுலல்ல. ஆனால் காண்டலமைப்பு இப்பொழுது மாறுபடுகிறது. இது நம் புலன்காட்சியிலும் நினைவுகளிலும் மாறுதல்களைக் கொண்டுவருகின்றது.

ஷெரீஃப்பும் கான்ட்ரிலும் (Sherif and Cantril) கூறுவது போல, 'காண்டலமைப்பு என்ற கலைச் சொல் உளவியல்சார் (புலன்காட்சி, மதிப்பிடல் (judgement), உணர்ச்சி (affectivity) போன்ற) நிகழ்ச்சிகளின் குறிப்பிட்ட இயல்புகளை நிருணயிக்க அந் நேரத்தில் செயல்புரியும் செயல்சார் உறவுகொண்ட காரணிகளைக் (நிகழ்காலமும், கடந்தகாலமும்) குறிப்பிடவே பயன்படுத்தப்பட்டு வருகிறது' (15).

## ஆதார இடம் (Anchorage)

இவ்வாறு காண்டலமைப்பின் கருத்துப் பல சமூக நிகழ்ச்சிகளைப் புரிந்துகொள்ள உதவுகிறதெனக் காண்கிறோம். ஷெரீஃப்பும் (Sherif) இந்த ஆதார இடம் (anchorage) என்ற சொல்லைப் பயன்படுத்தினர். ஆதார இடமென்பது முழுப் புலன்காட்சிக்கே குறிப்பிடுமை கொடுக்கும் பெரும் காண்டல் முனையாகும். நாம் புலன்காணுதலைப் பாதிக்கும் தரம் ஆதார இடமாகும். இவ்வாதார இடம் பின்வருபனவற்றின் காரணமாக இருக்கலாம்: (a) வெளிப்புறத் தூண்ட

லின் அமைவுத் தன்மையாக இருக்கலாம். (b) தனியனின் ஊக்கிகள், மனப்பான்மைகள், முன்னிருக்கை நிலைகள் (pre occupations) அல்லது மற்றச் செயன்முறைகளாக இருக்கலாம். (c) சமூகத்திலிருந்து தழுவப்பட்ட காரணிகளாக இருக்க லாம். ஒரு தனியனின் மனப்பான்மைகளோ முன்னிருக்கை நிலைகளோ பேரவாக்களோ (ambitions) குறிப்பிட்ட புலனறிதலின் கோலத்தை வெளிவரச் செய்யக்கூடிய முழுநிலைமையையும் மீண்டும் அமைத்த ஆதாரவிடமாக இருக்கலாம். ஒப்பாகச் சமூகத்திலிருந்து தருவிக்கப்பட்ட காரணிகளான, குழுத்தரமோ குழு அழுத்தங்களோ நம் புலன்காட்சியை மாற்றி அமைக்கலாம் (10.52). ஷெரீவ் நிலையான ஆதார இடம் இழத்தலினால் நேரும் நடத்தையின் பேரிழப்பான பாதிப்பிற்கு நம் கவனத்தைத் திருப்புகிறார். நாம் நிலக்குறிகளைப் புலன்காண முடியாமலிருக்கும், எவ்வித மான இடஇயல்பு அறியும் திறனும் (orientation) இல்லாத புதிய இடத்திற்குச் செல்லுகையில், தடுமாறிப்போனவர்களாக வும் அச்சப்பட்டவர்களாகவும் ஆகிறோம். ஒப்பாக அன்பு கூர்ந்தவர்களிடமிருந்தோ நம் குழுக்களிடமிருந்தோ நம் சமூகப் பிணைப்புகள் தடைப்பட்டபோது, ஆற்றுப் படுத்தலில்லாமைத் தோன்றலாம். ஒருவருடைய நெருங்கிய தோழன் காட்டிக்கொடுக்கும்போதோ மிகவும் நெருங்கிய ஒருவர் இறக்கும்போதோ ஒருவர் முழுவதும் நிலைகுலைவதைக் காணலாம். இதேபோன்று பொருளாதார நிலைமையிலும் காணப்படுகிறது. தேவைப் பொருள்களின் விலைகள் பல கார ணங்களால் அதிகரிக்கும் பொழுது மக்கள் குழப்பமடை கிறார்கள். அரசாங்க தானியங்களைக் கொள்ளையடிக்க அழைக்கும் புரட்சியாளரிடத்தே மக்கள் ஓர் ஆதார இடம் காண் கின்றனர். இவ்வாறான தறுவாய்களில் இரு ஆதார இடங்க ளிடத்தே முரண்பாடு ஏற்படலாம். பசியைத் தீர்க்கும் வலு வான தூண்டு (strong urge) சட்டப்படி ஒழுங்குபடுத்தப் பட்ட வாழ்க்கையை மேற்கொள்ள வலுவான தூண்டுதலுடன் முரண்பாட்டில் (conflict) இருக்கலாம்.

## வயதின் செல்வாக்கு
## (The influence of age)

இறுதியாக முகக் குறிப்பைப் புலன்காணுதல்பற்றிய சில ஆய்வுகளிடத்தே கவனத்தைத் திருப்பலாம். 1923 முதற்றே கேட்ஸ் (Gates) (16) முகக் குறிப்புகளின் புகைப்படங்களைப் பயன்படுத்திச் சமூகப் புலன்காட்சியைப்பற்றிய ஆய்வை வெளி

யிட்டார். மூன்றிலிருந்து 14 ஆண்டுகள் வரை வேறுபடும் குழந்தைகளுக்கு மகிழ்ச்சி, சினம், வியப்பு, அச்சம், வெறுப்பு, வலி முதலியவற்றை வெளிப்படுத்த அமைக்கப்பட்ட புகைப் படங்கள் காண்பிக்கப்பட்டன. துவக்கப்பள்ளி வயதில் 70 சதவிகிதக் குழந்தைகள் சிரிப்பினைக் காண்பிக்கும் படத்தைச் சரியாகப் பேரிட்டனர். ஆனால். பாதிக்குக் குறைவானவர் களே வலியையும், சினத்தையும், அச்சத்தையும் அடையாளம் அறிந்தனர். வியப்பையும், வெறுப்பையும் காண்பிக்கும் படங் களை இக் குழந்தைகளும் கண்டுபிடிக்கவில்லை. மாறாக 7 வயது சிறுவர்களில் 50 சதவிகிதத்திற்கு மேல் சினத்தைக் கண்டறியும் ஆற்றலடைந்தனர். அச்சத்தை 10 வயது சிறுவர்களில் 50 சதவிகிதத்திற்கு மேல் கண்டறிந்தனர். வியப்பை 11 வயது சிறுவர்களில் 50 சதவிகிதத்திற்குமேல் கண்டறிந்தனர். தினசரி வாழ்க்கையில் குழந்தைகள், நிலைமைகள், சொற்கள் முதலியவற்றால் பழக்கப்பட்ட அமைப்பு நிலையிலுள்ள குறிப்புக் களைச் சரியாக அடையாளங்காணும் ஆற்றல் பெற முடிகிறது.

சமூகப் புலன்காட்சியில் மற்றுமோர் அம்சம் தனியர்களைக் குழுக்களின் அங்கத்தினர்களாகப் புலன்காணுதல் வழியைச் சார்ந்தது. குழுக்களை உடையுடுத்துவதின்மூலம் தனிவழிகளை ஏற்படுத்த முயற்சிக்கின்றான். எடுத்துக்காட்டாக, இந்தியா வில் பலவித ஏற்றங்களில் உள்ள மக்கள் பலவிதமான உடைகளை அணிந்துள்ளனர். இஃது அவர்களின் ஏற்றத்தில் (status) உடனடிப் புலன்காட்சிக்கு எடுத்துச் செல்லுகிறது. இதே போன்று இராணுவம், புகைவண்டி, தபால் இலாக்காக்கள் முதலியவற்றின் ஊழியர்களுக்குச் சீருடை அங்கிகள் (uniforms) தரப்பட்டதால் இவ்விதமான ஏற்றமும் செயலுங்கொண்ட மனிதரென்று புலன்காண முடிகிறது.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. MURPHY, 'Known and Unknown in the Dynamics of Social Perception' Harper, 1953. — *Group Relations at Cross roads.*

2. KUPPUSWAMY. B, 'Analysis of Perception and its Reference to Reality', April, 1940. — *Prabuddha Bharata.*

3. MUEZINGER, Harper, 1942. — *Psychology: The Science of Behaviour.*

4. BRUNER and GOODMAN, 'Value and Need as Organizing Factors in Perception,' Vol. 42. 1947. — *Journal of Abnormal Social Psychology.*

5. MURPHY, LEVINE and CHEIN, 'The Relation of Intensity of a Need to the Amount of Perceptual Distortion', 13. 1942. — *Journal of Psychology.*

6. FARIS, Ronald Press, 1952. — *Social Psychology.*

7. KRECH and CRUTCHFIELD, McGraw-Hill, 1948. — *Theory and Problems of Social Psychology.*

8. ASCH, 'Forming Impressions of Personality', 1946, 41. — *Journal of Abnormal Social Psychology.*

9. BUXTON, 'The Frame of Reference', Holt, 1942. — *Fields of Psychology.*

10. SHERIF and SHERIF, Harper, 1956. — *An Outline of Social Psychology.*

11. MURPHY, Basic Books, 1953. — *In the Minds of Men.*

12. ZELLIG, 1928 (Cited in 7). — *Einstellung and Aussage.*

13. ALLPORT, KRAMER and LINDZEY, (1946-1951) (cited in 6). — *Report of the Harvard Laboratory of Social Sciences.*

14. MURPHY, and SCHAFER, 'The Role of Autism in a Visual Figure-Ground Relationship', 1943, 32. — *Journal of Experimental Psychology.*

15. SHERIF and CANTRIL, Wiley, 1947. — *The Psychology of Ego-Involvements.*

16. GATES, 'An Experimental Study of Social Perception', 1923, 14. — *Journal of Educational Psychology.*

# 6. சமூக இடைவினைச் செயலுறும் தன்மைகளும் வகைகளும்

## TYPES AND MECHANISMS OF SOCIAL INTERACTION)

*சமூகச் செயன்முறைகளைப் (social processes) புரிந்து கொள்ள மிகவும் பயன்படக்கூடிய பல்வேறுபட்ட பொதுமைக் கருத்துகளை (concepts) இவ்வத்தியாயத்தில் காண்போம்.*

### சமூக இடைவினை வகைகள்
(Types of social interaction)

*பொதுவாகக் கருதப்படும் மூன்று சமூக இடைவினை வகைகளாவன: (1) மனிதனிலிருந்து மனிதன், (2) மனிதனி லிருந்து குழு, (3) குழுவிலிருந்து குழு, (a) மனிதனும் குழுவும்.*

*சமூக இடைவினை பலவற்றில் நிகழ்வது போல ஒரு மனிதனுக்கும் மற்றொரு மனிதனுக்கும் இடையே நிகழலாம். இவ்வாறு நிகழும் ஆளிடை இடைவினை (interpersonal interaction) உண்மையிலேயே சமூகத்திற்கு அடிப்படையான தொன்றாகும். நாம் முன்னரே கண்டவாறு சமூகச் செயலானது தனியர்களின் இடைவினையாகும். இச் சமூகச் செயல்களில் தாய்-குழந்தை உறவு அடிப்படையானதொரு சமூகச் செய லாகும். இதிலிருந்தே ஒவ்வொருவரின் வாழ்க்கையும் தொடங் குகின்றது. முன் அத்தியாயத்தில் (அத்தியாயம் 4) தாய்-குழந்தை உறவு மனிதன் தோன்றிய காலத்திற்கு முன்னரே இருந்தது என்பதனைக் கண்டோம். இவ்வுறவு விலங்குகள், பறவைகள் மற்றும் பூச்சிகளிடையேயுங்கூடக் காணப்பட்டது. அடுத்தபடியாக, நாம் கவனிக்க வேண்டியது மனிதனிடமிருந்து குழுவிற்கு ஏற்படும் இடைவினையாகும். இதில் தனியன் எதிர்முகமாகக் குழுவிற்கு எதிர்வினை அளிக்கின்றான். குழந்தை யும்கூட ஒரு குழுவிற்கு எதிர்வினை அளிக்கலாம். சான்றாகக் குழந்தைப்பள்ளியிலும் (nursery school), ஆரம்பப்பள்ளி யிலும் காணப்படுவதைக் குறிப்பிடலாம். இவ்வாறே*

இக் குழந்தை அருகாமையில் விளையாடும் குழந்தைகளின் குழுவிற்கும் எதிர்வினை அளித்தல் வேண்டும். ஒரு தனியனின் வாழ்க்கையின் பிற்பகுதியில் முறையற்ற (informal) அல்லது முறையுள்ள (formal) குழுக்களைச் சந்திக்கும் போது இவ்வெதிர்வினைகள் மிகவும் சிக்கலுள்ளனவாய் மாறுகின்றன. ஒரு தனியனது ஆளுமையின் பெரும்பகுதி, அவன் மற்றவர்களைத் தனியர்கள் என்ற முறையில் எதிர்வினை அளிப்பதிலும், குழுவிலுள்ள மற்றவர்களுக்கு எதிர்வினை அளிப்பதிலும் வெளிப்படுகின்றது. அதனால்தான், ஒரு தனியனின் ஆளுமையை மதிப்பிடுவதற்குக் குழு நிலைமைகள் (group situations) மிகவும் உதவியாய் அமைகின்றன. இறுதியாக, நாம் ஒரு குழு மற்றொரு குழுவிற்கு அளிக்கும் இடைவினையை ஆராய்வோம். இதில் ஒரு தனியன் ஒரு குழுவுடன் ஒன்றி, அடுத்த குழு முழுவதற்கும் எதிர்வினை அளிக்கின்றான். ஒரு கிராமத்தில் உட்பகைக் கட்சிகளிடையேயும் (factions), ஒரு கிராம மக்களிடையேயும், மாநகரிலுள்ள இரு மொழிக் குழுக்களின் அங்கத்தினர்களிடையேயும், இறுதியாக இரு நாடுகள் அல்லது பல நாடுகள் சேர்ந்த குழுக்களிடையேயும் எதிர்வினை நிகழ்கின்றன.

## முதனிலை, வழிநிலைக் குழுக்களிடையே உள்ள ஒருமைப்பாடு

(Integration within primary & secondary groups)

சமூக இடைவினையை முதனிலை (primary), வழிநிலை (secondary) எனச் சமூகவியலார் பாகுபடுத்தியுள்ளார்கள். குடும்பம், விளையாட்டுக் குழு, கிராமம் அல்லது மாநகரின் சுற்றுப்புறம் (neighbourhood) ஆகியவை அனைத்தும் தலையாய குழுக்களாகும். முக்கியமாக இக் குழுக்கள் அனைத்தும் சிறு குழுக்களே. இதனால்தான் ஆதிவாசிகளின் குழுக்களிலும் (tribal groups), நாட்டுப்புறக் குழுக்களிலும் (rural groups) சமூக இடைவினை நெருங்கிய, நேருக்கு நேரான தன்மையைப் பெற்றுள்ளதைக் காண்கின்றோம். மக்கீவர் (Maciver), பேஜ் (Page) எழுதுவதுபோல, 'குறைவான எண்ணிக்கையுள்ள மனிதர்கள் தோழமை (companionship), ஒருவருக்கொருவர் உதவி (mutual aid), எல்லோருக்கும் தொடர்புள்ள ஒரு பிரச்சினையைப் பற்றிய கலந்தாய்வு (discussion) அல்லது பொதுவான கொள்கையின் கண்டுபிடிப்பும், நிறைவேற்றமும் ஆகியவற்றிற்காக நேருக்கு நேர் சந்தித்தலைக் கொண்ட ஒன்றே இயைபுகள் எல்லாவற்றினும் எளிமையான, முதன்மையான, முழுமையான இயைபாகும்' (1.218). முதல்நிலைக் குழுவின்

மற்றொரு சிறப்பியல்பு செயல்கள் (functions), ஏற்றம் (statuses) இவற்றின் 'அனைத்தும் அல்லது ஒன்றுமில்லை' (all or none) என்ற கொள்கையில் அடங்கியுள்ளது. செயல்களின் தனிப் பயிற்சி இங்கு இல்லை. அதனால்தான் ஆதிவாசிகளின் குழுக்களி லும், நாட்டுப்புறக் குழுக்களிலும் எந்த மனிதனும், எந்த வேலை யையும் செய்வதை நாம் காண்கிறோம். இறுதியாக முதனிலைக் குழு காலத்திலும் தலையாயதாக நிற்கிறது. இந்த முதனிலைக்குழு உருவாகும் இடத்திலிருந்து ஒருவனின் குழு ஆளுமைவரை வளர் கின்றது. வீட்டிலும், சுற்றுப்புறங்களிலும் தனியர்களின் உறவு கள் ஆளுமை வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதவையாகின்றன. இந்த முதனிலைக் குழு, விளையாட்டுக் குழுத் தோழமைபோலத் தன்னியல்பால் முறையில்லாத செயல்புரியும் குழுவாகவோ அன் றிப் பேட்டிக் குழு, வகுப்பறை, அலுவலகம், தொழிற்சாலைக் குழு போன்று ஒழுங்குமுறைப்படியான குழுவாகவோ அமையலாம்.

இதற்கு மாறாக வழிநிலைக் குழுவில் காணப்படும் ஆளிடைத் தொடர்புகள் (interpersonal relationship) ஒழுங்குமுறை யினால் சிறப்புற்றுள்ளன. ஆதலின் இவ்வழிநிலைக் குழுக்கள் மிக உணர்வு நிலையுடைய ஒழுங்குமுறையான குழுக்களாகத் திகழ்கின்றன. பண்பாட்டின் வளர்ச்சியினால் மட்டுமே இவ்வழி நிலைக் குழுக்கள் எழுகின்றன. தொடர்புகள், அங்கத்தினர் களின் துண்டிக்கப்பட்ட கவர்ச்சிகள், தனித்துறை இவற்றின் அடிப்படையில் அமைகின்றன. குழுவின் எல்லா அங்கத்தினர் களும் சில தனிப்பட்ட செயல்களைச் செய்கின்றார்கள். ஆகை யினால் இவ்வகையான வழிநிலைக் குழுக்கள் அமைப்பு முறைக்குட் படுத்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு குழுவும் தனக்கெனச் சட்டத் தொகுப்புகள் (codes), சடங்குகள் (rituals), விதிகள் (rules), ஒழுங்கு விதிகள் (regulations) ஆகியவற்றைப் பெற் றுள்ளன. இதனால் நிலையான ஆதிக்கப்படி மரபு (fixed hierarchy authority) காணப்படுகிறது. சாதி நிறுவனம் (caste organization) நகராட்சி, கேளிக்கைக் குழு (club), சமயக் குழு (religious group), அரசியல் கட்சி (political party) இவையனைத்தும் வழிநிலைக் குழுவிற்கு எடுத்துக்காட்டுக்களாகும். மாகாணம் வழிநிலைக் குழுவிற்கு ஒரு சிறந்த உதாரணமாகும். ஒருவன் அல்லது ஒரு குழு நெடுந்தூரத்திலுள்ள ஒரு மாகாணத்தின் பகுதியிலோ அன்றி உலகின் மற்ற நாடுகளிலுள்ள குழுக்களுடனோ தொடர்பு கொள்ளலாம். இக் குழுக்களுடன் இவர்கள் நேர்முகத் தொடர்பு (personal contact) கொள்ள முடியவில்லையெனினும் இவர்கள் உறுப்பினர்களாய் இருக்கும் நிலையங்கள் வாயிலாய் நெருங்கி இணைந்துள்ளார்கள்.

வழிநிலைக் குழுக்களின் அமைப்பு, பண்படாத அமைப்பிலிருந்து ஒன்றுபட்ட சமூக அமைப்புகளாகவும் நாட்டுப்புற அமைப்பிலிருந்து நகர அமைப்பு முறையாகவும் மாறுவதைக் குறிக்கிறது.

பண்டைய இந்தியாவில்கூட, மாநகரங்களை அமைத்தலினுல் தனியர்களிடையேயும் குழுக்களிடையேயும் உள்ள தொடர்பு மிகவும் மரபு சார்ந்ததாக அமைந்தது. ஆனுல் உலகில் சமீபக் காலங்களில், குறிப்பாகத் தொழில்வயத்தினுல் வழிநிலைக் குழுக்களின் ஆதிக்கம் மிகவும் குறிப்பிடத்தக்கதாக அமைந்துள்ளது. நாமறிந்தாற்போல, தொழில்வயம் அதிகமான மாநகரவயமாதலுக்கு இட்டுச் செல்கின்றது. இதன் விளைவாக, முதல்நிலைச் சமூகத் தொடர்புகளின் செல்வாக்கு மிகச் சிறியதாக அமைகின்றது. சமீபக் காலத்தில் இரண்டாம் தரக் குழுவின் ஆதிக்க வளர்ச்சியானது, **திரட்சமூகம்** (mass society) என்னும் சமூகக் பொதுமைக் கருத்து (social concept) உண்மையென ஏற்றுக்கொள்ள வழிகாட்டும் அளவிற்கு உயர்ந்தோங்கியுள்ளது (2). இத் **திரட்சமூகமானது**, பகுத்தறிவுத் தன்மை (rationality), தனிமுறைச் சார்பற்ற (impersonal) உறவுகள், வாழ்க்கைப் பங்குகளில் புறக் கோடியான தனிப் பயிற்சி இவற்றை ஒரு புறமும், மறுபுறத்தில் கருத்தேற்றம், தொடர்ந்து செல்லல் (persuasion), கொள்கைப் பரப்புதல் (propaganda) ஆகியவற்றையும் சிறப்பியல்புகளாகப் பெற்றிருக்கிறது. ஆகையினுல் நாம் மக்கள் திரள் சமூகத்தில் ஆராய்ச்சி அறிவு (reason), கருத்தேற்றம் (suggestion) போன்ற இரு முரண்பாடானவற்றை ஒருங்கே காண்கிறோம்.

தொழில் வயமாக்குதல், அறிவியல், பொறிநுட்பத் துறை (technology), நிறுவனம் போன்றவற்றின் சாதனைகளைச் (achievement) சார்ந்திருக்கின்றது. இவையனைத்தும் இன்றியமையாத அளவில் பகுத்தறிவுள்ளவை. எண்ணத்தின் (thought) பயன், இயற்கையைப் (nature) புரிந்துகொள்வதுமட்டுமன்றி அவ்வாறு புரிந்துகொண்ட தத்துவங்களை (principles) வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்வு காணவும், வாழ்க்கை வசதியுடனும் (comfortable) திறமையுடனுமிருக்கப் பல நுண் முறைகளை அபிவிருத்தி செய்யவும் பயன்படுத்துவதும் ஆகும். இதற்கு மாறுகத் தனிமுறை சார்பற்ற தொடர்புகளுக்கு (impersonal relation) இந் நகரவயமாக்கல் வழிகாட்டுகின்றது. இதன் விளைவாகத் தனியர்களிடையே நெருங்கிய உறவுகள் காணப்படுவதில்லை.

சமூக இடைவினை மக்களிடையே அன்றி, அங்கீகாரமுள்ள சங்கங்களின் (formal order) பிரதிநிதிகளுக்கிடையேயும் நேருவதாகும். கிராமங்களில் முதன்மையான நேர்முகத் தொடர்புகள் காணப்படுகின்றன. இங்கே ஒவ்வொருவனும் மற்றொருவனை அறிந்திருக்கிறான். ஆனால், பெரிய மாநகரங்களிலோ நம்முடைய அண்டை வீட்டாரையே அன்றி அதே கட்டடத்தில், அடுத்த மாடியில் வாழ்பவனை அறியாமலும்கூட இருக்கலாம். தற்கால மாநகரில் பெரும்பான்மையான மக்கள் ஒன்று சேர்ந்து வாழ்கின்றனர் என்றாலும், சமூக உறவுகள் தனிமுறைச் சார்பற்று இருப்பதனால் அவர்களிடையே தனிமை உணர்ச்சி காணப்படுகின்றது. திரைப்படக் கொட்டகைக்கு நீ தனிமையில் சென்றால் அங்குப் பல நூறு மக்கள் உன்னைச் சூழ இருந்தபோதிலும் நீ தனிமையில் இருக்கும் உணர்ச்சியையே பெறுகிறாய். ஏனெனில், திரைப்படக் கொட்டகையில் மற்றவர்களுடன் நெருங்கிய தொடர்பு காணப்படுவதில்லை. நாம் பின்னால் பார்க்கப்போவது போன்று திரள் பிரச்சார நுண் முறைகளின் (mass propaganda techniques) மக்கள் பெற்றுள்ள திரள் நடத்தையின் ஆதிக்கம், திரட்சமூகத்தின் மற்றொரு சிறப்புக் கூறு ஆகும்.

தனியர்கள் பகுத்தறிவுக்கு மாறான முறையில் எதிர்வினையளிப்பதனால் மக்களை இயக்கித் தூண்டிவிடும் தலைவர்களால் குழுக்கள் இழுப்பாற்றலடையும் (swayed) அபாயம் காணப்படுகின்றது. ஒரு பெரிய கும்பலைச் சிறந்த காரியங்களைச் செய்ய ஊக்குவிக்கவும் அதே எளிதான முறையில் அக் கும்பலை மிகவும் சீர்கேடான செயல்களைச் செய்ய வழிகாட்டவும் இயலும். இவ்வாறு, வழிநிலைக்குழு பகுத்தறிவு (rationality) தனிமுறைச் சார்பற்றநிலை (impersonality) போன்ற நற்பயன்கள் பெற்றிருந்தாலும், இது பகுத்தறிவுக்கு மாறான கும்பல் நடத்தை போன்ற செயல்களுக்கு உள்ளாகும் அபாயத்தினையும் பெற்றிருக்கிறது. கிம்பால் எங் (Kimball Young) கூறுவதுபோல, 'மனிதர்களின் மேலும், அவர்தம் பண்பாட்டின் மேலும் திரட்சமூகத்தின் பதிவு, ஆளுமைச் சமநிலை (personality balance), மனவெழுச்சிக் காப்புணர்வு (sense of emotional security), சக்தியின் ஒழுக்கம் சார்ந்த பயன் ஆகிய நமது பெரும்பாலன முடிவுகளைத் தீர்மானிக்கின்ற (crucial) பிரச்சினைகளில் ஒன்றாக அமைகின்றது' (3.6). இவ்வாறு முதல்நிலைச் சமூக இடைவினை, சமுதாயங்களிலும், நாட்டுப்புறக் குழுக்களிலும் சிறப்புவாய்ந்த நன்மைகளையும் தீங்குகளையும் ஒருங்கே பெற்றுள்ளது, முதல்நிலைக் குழுவில் நெருங்

கிய நேர்முகத் தொடர்புகளினுல் (face to face contacts) பாசம் காணப்படுவதுடன், ஒருவன் மற்றவனது விவகாரங்களில் தலையிடுவது போன்ற அபாயம், பொருமை, போட்டியிடுதல் (rivalry) போன்ற ஆளுமை வளர்ச்சியைக் கட்டுப்படுத்து கின்றவையும் காணப்படுகின்றன.

இதற்கு மாருக, வழிநிலைக்குழு, சமூக இடைவினைகளை மிகவும் தனிமுறைச் சார்பற்றதாகச் செய்வதினுல் ஒரு தனியன் பொருமைகள், போட்டிகள் இவற்றினின்று விடுவிக்கப்படுகி ருன். ஆனுல், இது தனிமை உணர்ச்சி (sense of loneliness) குழுவின் மற்ற அங்கத்தினர்களுடன் நெருங்கிய தொடர்பின்மை போன்றவற்றிற்கு வழி செலுத்துவதின் விளைவால் பாதுகாப் பின்மையினை (loss of security) உருவாக்குகின்றது. மறு புறத்தில் இது தனியனைக் கருத்தேற்றம், கொள்கைப் பரப்பல் ஆகியவற்றிற்கு வெளிப்படுத்தி (expose) அவன் நடத்தையைக் கும்பல் நடத்தைக்கு ஒப்பாகச் செய்துவிடு கின்றது. இவ்வாறு இவ்விரு சமூக வாழ்க்கை முறைகளின் இடையே இசைவினை ஏற்படுத்தல் கல்வி, புலப்படுத்தல் (enlightenment) ஆகியவற்றின் கடமைகளாகும். இதனுல் தனியன் தனிச் சார்பற்றும் (impersonal) திறனுடனும் இருப்பதுமட்டுமன்றித் தனிமை உணர்ச்சி, பாதுகாப்பின்மை போன்ற உணர்ச்சிகளைப் பெருமலும் இருக்கின்ருன்.

## அகக்குழு, புறக்குழு அமைத்தல்
## (Ingroup and Outgroup formation)

சமூக இடைவினையின் மற்ருெரு பகுப்பு, 'அகக் குழு', 'புறக்குழு' அமைப்புகள் என்பதாம். ஒரு குழு முதல்நிலை யாகவோ அன்றி வழிநிலையாகவோ இருந்த பொழுதிலும் அதனிடம் மிகுந்த பற்றுணர்ச்சி, ஒருமை உணர்ச்சி, பரஸ்பர ஒன்றுதல் (mutual identification) அல்லது பகைமை உணர்ச்சி முதலியவை இருப்பதனை உணர்கிருேம். முன்னவை அகக்குழு அமைவதற்குரிய மனப்பான்மையையும், பின்னவை புறக்குழு மானப்பான்மையையும் வெளிப்படுத்துகின்றன. நாம் மக்களை 'நாம்', 'அவர்கள்' எனப் பிரிவுபடுத்தத் தெரிந்துக் கொள்ளுகிருேம். நாம் ஒன்றச் (identify) செய்யும் குழுக்கள் அகக் குழுக்களாக அமைகின்றன. ஒரு தனியன், குடும்பம், சாதி, அண்டைப்புறம் ஆகியவற்றினைச் சார்ந்த மக்களுடனும் ஒன்றி ஏற்ற மனப்பான்மையை வளர்க்கிருன். 'பிற' குழுக்களை அமைக்கும் மக்களைப் பயம், ஐயம் அல்லது

வெறுப்புடன் காண்பதுடன் குழுக்களைத் 'தங்கள்' குழு முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் எதிரிடையானதாகவும் கருதுகிருன். அகக்குழு அங்கத்தினர்களிடையே ஒற்றுமையும் புறக்குழு அங்கத்தினரிடத்து எதிர்ப்பும் பகைமையும் காட்டப்படுகிறது. இவ்விரண்டும் நெருங்கிய தொடர்புடையவை யாகும். அகக் குழு உணர்ச்சி அதிகமாக அதிகமாகப் புறக் குழு உணர்ச்சியும் அதிகமாகிறது. இதனுல் அகக் குழு, புறக் குழு மனப்பான்மைகள், நிலையான எண்ண மாதிரிகள் மனவெழுச்சி, செயல் ஆகியவற்றை உருவாக்குகின்றன. இம் மனப்பான்மைகள் மிகவும் பண்பாடுடையனவாகும். இவை ஒரு தலைமுறையிலிருந்து (generation) மறு தலைமுறைக்கு ஊடு செலுத்தப்படுகின்றன. வரலாற்றில் காணப்படும் அநேக சச்சரவுகள் கிராம உட்பகைகள் (factions) ஆகியவற்றிற்கு மூல காரணங்கள், மனிதர்களிடையே பண்பாட்டினுல் அகக் குழு, புறக்குழு மனப்பான்மைகள் ஊடு செலுத்தப்படுவதனுல் ஏற்படுகின்றன என்று கூறலாம். இம் மனப்பான்மைகள் முதல்நிலை மட்டத்தில் செயல்புரியலாம். இதனுல் ஒரு தனியன் மற்றத் தனியனையோ ஒரு குழுவினையோ தவிர்த்து அவற்றிற்கு நேர்மாருகச் செயல் புரியலாம்.

குடும்பம் அல்லது தன்னலக் கும்பல் அல்லது கிராமம் அல்லது நாடு இவற்றிற்கு உரிமை உணர்ச்சியை (sense of belonging) வெளிப்படுத்துகிரேம். அகக் குழு அங்கத்தினிரிடத்தே பொறுமை மனப்பான்மையும் (tolerence), ஒருவரை ஒருவர் சரிவரப் புரிந்துகொள்ளலும் காணப்படுகின்றன. ஆனுல், அகக் குழுவினர் புறக்குழு அங்கத்தினரிடத்து வேற்றுமை உணர்ச்சி, சகிப்புத்தன்மையற்ற உணர்ச்சி, சார்பு எண்ணம் ஆகியவற்றை வெளிப்படுத்துகின்றனர். நாம் வாழ்க்கைத் தொடர்பு கொண்டிருக்கும் குடும்பம், கல்லூரி, தொழில் அல்லது சமயம் முதலியவற்றை நம்முடையதாகவே கருதுகிரேம். ஆகையினுல், இதில் ஒருவகையான நனவுவகை (consciousness of kind) அடிப்படையாகக் காணப்படுகிறது. இவ்வாறு, இவ்வகவயக்குழு மனப்பான்மைகள் அடிப்படையானவையாக அமைகின்றன. ஆனுல், அகக்குழு உணர்ச்சியும், புறக்குழு உணர்ச்சியும் சமூகவயச் செயன்முறைகளிலிருந்து உருவானதென்பதை நாம் மனத்தில் பதியச் செய்ய வேண்டும்.

ஒரு குழுவுடன் தனியன் தொடர்பு கொள்ளவும் மற்றவர்களை இக் குழுவிலிருந்து விலக்கவும், தெரிந்துகொள்கிருன். புறக்குழு

மனப்பான்மை எப்பொழுதும் வேறுபாடு உணர்ச்சியினுல் குறிக்கப் படுகின்றது. பெரும்பாலும் சிறிதளவில் எதிர்ப்பு (antagonism) காணப்படுகின்றது. இது மென்மையான வெறுப்புலிருந்து (antipathy) கடுமையான பகைமை (powerful aversions) வரை மாறலாம். சான்ருக, 1940ஆம் ஆண்டுகளில் இந்தியாவில் இந்து-முஸ்லீம்களிடையே காணப்பட்டதை ஒப்பிடலாம். அகக் குழு, புறக்குழு மனப்பான்மைகள் பண்பாட்டினுல் சுமத்தப் பட்டிருப்பதனை நாம் நினைவுக்குக் கொண்டு வரலாம். எனவே, இது நாகரிகத்தின் பெரும் பிரச்சினைகளில் ஒன்ருகும். ஒரு தனியன் சமூகவயமடையும்போது விரும்பத்தக்க அகக்குழு மனப்பான்மைகளையும் விரும்பத்தகாத புறக்குழு மனப் பான்மைகளையும் வளர்க்கிருன். பொதுக் கவர்ச்சிகளுக்கு (common interests) மேல் தனிக் கவர்ச்சிகளைப் பொருத்து வதனுல் சச்சரவுகளும் ஒருவருக்கொருவரிடையே பொருமையும் காணப்படுகின்றன. இது நாகரிகத்தின் தொடர்ச்சியான வாழ்க் கைக்கு ஒரு மிகையான அபாயமாகும். சமுகவயத்திற்குப் புது ஒழுங்கமைநிலை (orientation) மிகவும் தேவைப்படுகிறது. உலகின் உறுப்பினராகவோ சமுதாயத்தின் உறுப்பினராகவோ இருப்பதற்கு எதிர்ப்பு விளைவிக்காதவாறு நாம் ஒரு குழுவி னிடமோ நாட்டினிடையோ பற்று வளர்க்க வேண்டும்.

## சமூகச் செயற்பாட்டின் வகைகள்
## (Types of social functioning)

சமூகச் செயற்பாட்டின் நான்குவகைகளான: வலுக்கட் டாயம் (coercion), ஒத்தியங்கல் (co-operation), போட்டி (competition), இணங்கிப்போதல் (accommodation) ஆகிய வற்றைப் பொதுவான முறையில் வேறுபடுத்தி அறியலாம்.

(a) **வலுக்கட்டாயம்** (coercion): ஆதிக்கப்பணி உறவில் இது தோன்றுகிறது. நாம் முன்னறிந்தவாறு பறவை நடத்தை, விலங்கு நடத்தை மட்டத்திலும்கூட வலுகட்டாயம் தோன்று கிறது. ஆதிக்கத் தனியன், எதை மெலிந்தவன் ஒப்புக் கொள்ள வேண்டும் என்று கருதுகிருனே அதை அவன் ஒப்புக் கொள்ளுமாறு தூண்டுதல் செய்கின்ருன். ஆதிக்கமானது உடலியலிலோ சமூகத்திலோ நுண்ணறிவிலோ அமைப்பு முறையிலோ சக்தி வாய்ந்ததாகக் காணப்படலாம். ஆதிக்கக் குழுவின் நீடித்த வலுகட்டாயத்தினுல் அதன் தரங்களை, மற்றவை தன்னியலாக்க வகை செய்யப்படலாம். ஆதிக்கக் குழுவின் முறைகளை ஏற்க வலுக்கட்டாயப்படுத்தப்பட்ட குழு

முதலில் எதிர்ப்புத் தெரிவிக்கலாம். அதில் வெற்றி காண முடியாவிட்டால் பின் அம் முறைகளை அதே குழு மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு தன்னியலாக்குகின்றது. சமூக அரசியல் அமைப்பு முறைகளில் இந்தப் பெரும் அபாயம் காணப்படு கின்றது. சக்திவாய்ந்த சிறுபான்மையோர் தன் தரங்களைப் பணிவான பெரும்பான்மையோரின் மேல் சுமத்தவும் செய்ய லாம். வலுக்கட்டாயத்திற்கு எதிர்ப்பு ஏற்படக்கூடும். பின் இவ்வெதிர்ப்புச் சிறிது சிறிதாக இயங்குவிசை (momentum), வலுக்கட்டாயப்படுத்தும் அதிகாரத்தை வீழ்த்துவதற்கு (over throw) வழி கோலுகிறது. ஆதிக்கக் குழுவானது தான் செயல் புரியும் குழுக்கள் மேல் தன் விருப்பங்களை வற்புறுத்த எப்பொ ழுதும் விரும்புகிறது. பலவகையான வலுக்கட்டாயங்கள், வலுக்கட்டாயங்களைப் பணிவாக ஏற்றுக்கொள்ளல், கிளர்ச்சி செய்து வலுகட்டாய அதிகாரத்தை வீழ்த்துதல் போன்ற பல வரலாற்றில் நிறைந்துள்ளன. பெற்றோர்-குழந்தை உறவிலும் கூட வலுக்கட்டாயம் காணப்படுவதைக் காண்கிறோம். அடிக்கடி தாய் தன் குழந்தையைச் சமூகத் தரங்களுக்கு ஒத்தியங்க (conform) வலுக்கட்டாயப்படுத்துகிறாள். ஆகவே, வலுக் கட்டாயத்தின் ஆதாரம் விலங்கு நடத்தையில்மட்டுமன்றிக் குடும்ப நிலைகளிலும் காணப்படுகிறது. சமூக உறவுகளில் காணப்படும் வலுக்கட்டாயங்களை மாற்றியமைப்பதுமட்டுமன்றி அவற்றை முழுமையாக அகற்றவும் வழிவகுத்தல் நாகரிகத்தின் கடமையாகும்.

(b) **ஒத்தியங்கல்** (co-operation): இது சமூகச் செயற் பாட்டின் மற்றுமோர் அடிப்படையான வகையாகும். சில இலக்குகளைப் பெறப் பல்வேறு தனியர்களோ தனியர் களைக் கொண்ட பல்வேறு குழுக்களிலோ ஒருவருக்கொருவர் ஒத்துழைக்கலாம். பல்வேறு தனியர்கள் ஒன்றுபட்ட செயல்கள் புரியும்பொழுது ஒத்துழைப்பு இருக்கலாம். பல் வேறுபட்ட செயல்களின் நிறைவேற்றத்தின் வாயிலாய், குறிப்பாக மேல் வகுப்பினரிடையே ஒத்துழைப்பு அடையக் கூடும். வலுக்காட்டாயத்தைப் போல, ஒத்துழைப்பின் ஆதா ரம் விலங்கு நடத்தையிலும் குழந்தை நடத்தையிலும் காணப் படுகிறது. சிறு குழந்தையானது அடுப்பறையிலோ சாப் பிடும் அறையிலோ பல சிறு பணிகளைத் புரிந்து தாயுடன் ஒத்துழைக்கலாம். குழந்தை துடைப்பம் எடுத்து வீட்டைச் சுத் தப்படுத்தவும் ஆயத்தமாய் இருக்கலாம். வளர வளரக் குறிப்பாகக் குமரப் பருவத்தில், ஒரு பையனோ பெண்ணோ வீட்டு வேலைகளில் ஒத்துழைக்க மறுப்பதைத் தாய் காணக்கூடும்,

(c) **போட்டி** (competition): அனைவராலும் பகிர்ந்து கொள்ள முடியாத ஓர் இலக்கத்தினை அடைய மக்கள் அல்லது குழுக்களிடையே உண்டாகும் சச்சரவிலிருந்து போட்டி எழுகிறது. போட்டியை, எதிர்ப்பீட்டிலிருந்து (rivalry) வேறுபடுத்தலாம். இவ்விரு சொற்களும் தெளிவாக வரையறுக்கப் படவில்லை. ஒரு தனியன் தன் பகைவனை (opponent) அழித்து இலக்கத்தினைப் பெற முயலும் நிலைமைகளை எதிர்ப்பீடு எனக் கூறுதல் விரும்பத்தக்கதாகும். இலக்கத்தினை அடைய, ஒரு தனியன் தன் எதிராளியைப் பாதிக்காமல் தான் மிகுந்த திறன் வெளிப்படுத்தி அதனை அடைய முயலும் நிலைமையைப் போட்டி எனக் கூறலாம். ஒரு தனியன் கடந்த ஆண்டுகளில் செய்ததைவிட அதிகமாகச் செய்ய முயலும் தற்போட்டியானது உயர்நிலையான போட்டி எனப்படும். தனியர்களிடையே தற்போட்டி உணர்ச்சியைப் பேணி வளர்ப்பதும் பலவகையான எதிர்ப்பீடுகளை இகழ்ச்சிப்படுத்தலும் குடும்பம், பள்ளி, சமூகம் ஆகியவற்றின் தலையாய நோக்கமாயிருக்கவேண்டும். பொறுமையின் அடிப்படையில் அமைந்தது எதிர்ப்பீடாகும் (rivalry). பொறுமையானது பண்படாததொன்றாகும். இதை விலங்குகளிடையே நாம் காண்கிறோம். எதிர்ப்பீடானது (rivalry)எதிராளியை அழிக்க வழிவகை செய்கிறதேயன்றித் தன் முன்னேற்றத்திற்கு (self improvement) வழிவகுப்பதில்லை. இதன் விளைவாகப் பெருமளவில் எதிர்ப்பீடுகள் கொண்ட குழு முன்னேற முடியாது. குழுவின் தனியர்களிடையே தற்போட்டி காணப்பட்டால்தான் சமூக முன்னேற்றம் ஏற்படும்.

(d) **இணங்கிப்போதல்** (accommodation): நாம் முன் கண்டவாறு, எதிர்ப்பும் (opposition), ஒத்தியங்கல் (co-operation) இரு அடிப்படை இடைவினைச் செயன்முறைகளாகும். சில இலக்குகளை அடையப் பல தனியர்கள் ஒருங்கே கூடிப் பொறுப்புகளைத் தாங்க வேண்டியதன் தேவையை உணர்ந்தால் ஒத்துழைப்பைப் பெறலாம். ஆனால் எதிர்ப்பும், சச்சரவும் எல்லா வகையான சமூக உறவுகளையும் துண்டிக்க வழி காட்டுகிறது. இங்கே இணங்கிப்போதல்தான் தனியன்களிடையேயும் குழுக்களிடையேயும் தக அமைத்துக்கொள்வதற்கு வழிகாட்டுகிறது. இதனால்தான் அவர்களுக்கிடையேயுள்ள விறைப்புகள் (tension) குறைகின்றன. சமரச இணக்கம் (compromise), சமூக ஒருமைப்பாடு (social integration) ஆகிய இருவகையான இணங்கிப்போதல் நடத்தைகள் உள்ளன. எங்கு எதிர்ப்பும் மாறுபாடும் காணப்படுகின்றனவோ அங்கு ஒரு வகையான இணங்கிப்போதலைக் காணலாம். இவ்விணங்கிப்போதல்

ஒருவிதமான தற்காலிக உடன்படிக்கையாகும். ஆனால், இஃது ஒருவிதத் தீர்வு (solution) அன்று. சச்சரவிடும் கட்சிகள் சச்சரவு மனப்பான்மையையும், பகைமையையும் தள்ளி வைக்கவோ தற்காலிகமாக அத் தருணத்தில் கைவிடவோ முயற்சி செய்யலாம். அதனால்தான் சமரச இணக்கமானது தீர்வு அன்று. இரு கட்சிகளுக்கிடையேயுள்ள இம் மாறுபாடு தீர்க்கப்படாமலும் விடப்படலாம். பின் இத் தீராப் பகை கொடிய வேகத்தில் வெடிக்கக்கூடும். இங்கே சமரச இணக்கம், வலுக்கட்டாயம் ஆகியவற்றினிடையே ஒத்த தன்மை (resemblance) இருப்பதை நாம் காண்கின்றோம். இவ்விரண்டும் வெறுப்புக்கேயன்றிச் சமூக ஒத்திசைவிற்கும் (social harmony), சமூகத் திறனுக்கும் (social efficiency) வழிகாட்டுவதில்லை. வலுக்கட்டாயம், அச்சத்தின் வாயிலாய் ஒத்துக் கொள்ள (acceptance) வழி வகுக்கையில், சமரச இணக்கமானது மனக்கசப்பு (despair) வாயிலாய் ஒத்துக்கொள்ள வழி வகுக்கிறது. இதற்கு மாறாகச் சமூக ஒருமைப்பாடு (social integration) ஒருவகையான இணங்கிப்போதலாகும். இது புரிந்துகொள்ளுதல் மூலம், கொள்கையினைச் சம்மதித்தலுக்கு இட்டுச் செல்கிறது. சமூக ஒருமைப்பாட்டில் விவாதமும் குழுத் தீர்மானமும் (group discussion) காணப்படுகின்றன. இவ் வேறுபாடுகள் ஆய்ந்து புரிந்து கொள்ளக் கூடியவை. எவ்விதக் குறிப்பான தீர்மானத்தையும், ஒரு குழு மற்றொரு குழுவின் மேல் சுமத்துவதில்லை. குழு முழுவதுமாக ஒரு நிலைமையைக் குறித்து விவாதித்து அக் குழு அங்கத்தினர்கள் அனைவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முடிவு ஒன்றைப் பெறலாம். ஆகையினால் சமூக ஒருமைப்பாடு மன அதிருப்தியைப் பின் விளைவாக (after effect) உண்டுபண்ணுவதில்லை. இங்கே தான் நாம் குழுச் சொல்லாட்டத்திற்கும் வாதத்திற்கும் (debate) உள்ள வேறுபாடுகளைக் காண்கிறோம்.

விவாதத்தின் நோக்கமென்னவெனில் சிறுபான்மையோரைப் பெரும்பான்மையோரின் நிலைமையை (position) எண்ணிக்கைப் பலத்தின் வாயிலாகவோ சொற்பொழிவாற்றல் வாயிலாகவோ ஒப்புக்கொள்ளச் செய்வதாகும். பாராளுமன்ற முறை இன்றியமையாத அளவு வாதத்தின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. பெரும்பான்மையோரின் முடிவு சமூகச் செயலுக்கு அடிப்படையாக அமைகிறது. இதன் விளைவாக எதிர்கட்சியினரிடத்து எப்பொழுதும் மன அதிருப்திக் காணப்படுகிறது. இன்றைய சட்ட மன்றங்கள், சபைகளைக் குழுக்களாக அமைத்துக் குழு முடிவு நுண்முறைகளைக் (group discussion techniques)

கையாளுகின்றன. இக் குழுநிலையில் கட்சியின் பெரும் பான்மை, சிறுபான்மை போன்றவை இயங்குவதில்லை. ஒரு குறிப்பிட்ட மசோதாவைக் (Bill) குறித்துப் பற்றற்ற புறவயச் சொல்லாட்டம் (objective discussion) நேர்கிறது. எவ்விதத் தோல்வியுமின்றி, ஆளும் கட்சி எதிர்க்கட்சியின் கருத்தேற்றங்களை அனுமதிக்கலாம். இவ்வாறு குழு விவாத அடிப்படையில் அமைந்த சமூக ஒருமைப்பாட்டில் எந்தத் தனியனும் தன் தரத்தை இழப்பதில்லை. ஏனெனில், இறுதியில் குழு முடிவேயன்றி எக் கட்சியின் அல்லது தனி மனிதனின் முடிவும் நிலைபெறுவதில்லை.

## சமூக இடைவினையின் இயக்கும் செயலமைவுத் திட்டங்கள் (Mechanisms of social interactions)

இப் பிரிவில், சமூக இடைவினையின் சில இயக்கும் செய லமைவுத் திட்டங்களை ஆழ்ந்தாராய்வோம். நம் இப்போ தைய அறிவுநிலையில், சமூக இடைவினை உள்ளடக்கியுள்ள இயங்கும் செயலமைவுத் திட்டங்களை (mechanism) விளங் கக் கூறுதல் மிகக் கடினமானதாகும். சமூக நடத்தையைப் பாதிக்கும் சில மிக அடிப்படையான பரந்த செயல் விளைவுடைய தெனக் கருதப்பட்ட சில இயக்கும் செயலமைவுத் திட்டங்களை ஒன்று சேர்க்க இங்கு முயல்வோம்.

அடுத்த பகுதியில் நாம் பார்க்கப் போவதுபோலச் சமூக நடத்தை பெருமளவில் கற்றலினால் அமைகிறது. ஆயினும், கற்றலைப்பற்றிய பிரச்சினைகளை நாம் எடுத்துரைக்கத் தேவை யில்லை. கற்றலின் அடிப்படை விதிகளை அறிவதற்குப் பொது உளவியல் அல்லது கல்வி உளவியல் நூலிலுள்ள கற்றல் அத்தி யாயத்தைப் பார்க்கலாம்.

### (a) ஆக்கநிலையிருத்தச் செயன்முறை (Conditioning process)

சமூக இடைவினையில் ஆக்கநிலையிருத்தத்தின் முக்கியத்து வம் வெகுகாலத்திற்கு முன்பே கண்டறியப்பட்டது. ஆக்க நிலையிருத்தலின் நவீனக் கோட்பாட்டை முன்னறிந்தது போலக் காணப்படும், சம்ஸ்காரா (Samskara) என்னும் இந்தியத் தத்துவத்தைப்(doctrine)பற்றிய குறிப்பிடலைக் காணலாம். உண்மையில் ஆக்கநிலையிருத்தலின் இயக்கும் செயல

மைவுத் திட்டங்களைப் (mechanism) பரிசோதனை முறை வாயிலாய் 1898ஆம் ஆண்டு பாவ்லாவ் (Pavlov) கண்டு பிடித்தார். அவர் பலமுறை ஆக்கநிலையிருத்தத் தூண்டுதலான மணியோசை மூலத் தூண்டலான (original stimulus) உணவுடன் நாய்க்குக் கொடுத்தார் (4). இதற்குப்பின் மணியோசைக்கு அந் நாய் உமிழ்நீர் வெளிப்படுத்தலைப் பாவ்லாவ் தன் சிறப்புப் பரிசோதனை மூலம் காட்டியுள்ளார். சிறிது காலத்திற்குப் பின்னர் 1912ஆம் ஆண்டில் வாட்சன் (Watson) என்பார் பயமுறுத்தும் தன்மையுடைய உலோக ஓசையுடன் எலியைக் காட்டினால், பின் அவ்வெலியைக் கண்டாலே குழந்தை அச்சுறுகிறது என்பதனைக் காண்பித்தார் (5). 1925ஆம் ஆண்டில் ஆல்போர்ட் (Allport) என்பார் குழந்தையின் பொதுப்பின்பற்றல் (imitative) நடத்தையையும் கற்றல் செயன்முறையையும் விளக்க, ஆக்கநிலையிருத்த நுண்ணமைப்புகளைப் பயன்படுத்தினார் (6). 1931ஆம் ஆண்டில் ஹோல்ட் (Holt) 'எதிரொலி' மூலக் கோட்பாட்டினை முறைப்படுத்தினார். அவர் எழுதியதாவது, 'ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குழந்தை ஒரு செயலைத் தாறுமாறாகச் செய்துகொண்டிக்கும் பொழுது, மற்றவர்கள் குழந்தை செய்ய முயலும் அதே செயலைச் செய்வதால் அக் குழந்தையின் ஏதேனும் ஒரு புலனுறுப்பைத் தூண்டினால் குழந்தை அச் செயலை எதிரொலிக்கக் (echo) கற்றுக் கொள்ளும்' (7). எடுத்துக்காட்டாக, ஒரு குழந்தை கையசைத்துத் தட்டும் (pat-a-cake) விளையாட்டைக் கற்றுக் கொள்ளும்பொழுது நேர்வது என்னவெனில், அது தாறுமாறான தட்டல் அசைவுகளை ஏற்படுத்துகிறது. பெற்றோர் இதனைக் கண்டு, தமது கையைத் தட்டி, 'கைத்தட்டு' (pat-a-cake) என அழைக்கிறார். பின்னர், குழந்தை எப்பொழுதாவது இவ்வாறான செயலைப் பார்த்தாலோ சொற்களைக் கேட்டாலோ கைத்தட்டத் தொடங்குகிறது.

வேறு சில ஆசிரியர்கள் முதனிலையான ஆக்கநிலையிருத்தலை நிறைவற்றதாகக் (inadequate) காண்கிறார்கள். இவ்வாசிரியர்கள் ஸ்கின்னர் (Skinner) என்பாரைப் பின்பற்றிப் பெரும்பாலான ஆக்கநிலையிருத்த நிகழ்ச்சிகளைக் கருவிசார் ஆக்கநிலையிருத்தம் (instrumental conditioning) மூலமாகவோ, திடப்படுத்தல் (reinforcement) மூலமாகவோ விளக்கினர். இவ்வழியின் முறைப்படி கற்றலானது வாழ்க்கை நலம், அன்பு, உணவு போன்ற மன நிறைவு அளிக்கும் வெகுமதிகளால்தான் உண்டாகிறது என்பது தெரிய வருகிறது. பிறப்பிலிருந்தே விலங்குகளிலும் மனிதர்களிலும்கூட ஆக்கநிலையிருத்தலின் துலங்கல்கள் ஏற்படுத்தப்

படுகின்றன. மர்ஃபி (Murphy) எழுதுவதாவது, 'குறிப்பிடு மளவிற்கு நம் மனவெழுச்சிசார் வாழ்வின் சிக்கலான அமைப்பு ஆக்கநிலையிருத்தலின் வாயிலாக எளிய மனவெழுச்சி முறையை விரிவுபடுத்தல் என்ற செயன்முறையினுல் அபிவிருத்தி செய்யப் படுகிறது' (8.157). நம் அன்ருட வாழ்வில் குழந்தையானது பல குறிகளுக்கு ஆக்கநிலையிருத்தமடைகின்றது. இத்தகைய குறிகள் அதன் வாழ்வில் முக்கியத்துவம் கொண்டவையாகவோ கருவி சார்படைந்தவையாகவோ அமைகின்றன. இவ்வாக்க நிலையடைதல்பற்றிய முக்கியமான பொருள்களில் ஒன்று என்ன வென்ருல், சிறு குழந்தையிடத்திலும், குழந்தையிடத்திலும் கற்றலைப்பற்றி உணர்வதற்கு முன்னரே, அதைப்பற்றி உணர் வில்லாமல் கற்றல் இருந்துகொண்டிருக்கிறது என்பதாகும். மேலும் வயது வந்தவர்களின் வாழ்விலும் கூட எவ்வாறு பெருத்த மாற்றம் ஏற்படும் என்பதை அறிய இவ்வாக்கநிலையிருத்தச் செயன்முறை நமக்கு உதவுகின்றது. 'மின் அதிர்ச்சிகளைத் தொடர்ந்து ஒழுங்காகக் கொடுக்கப்பட்ட சொற்கள் பின்வாங்கும் அசைவுகளையும் மின்னேட்ட தோல்சார் மறிவினையால் (galvanic skin reflex) காண்பிக்கப்பட்ட அகக் குலைவுகளையும் (internal disturbances) ஏற்படுத்துகின்றன. ஆட்படுநர், சொல் அதிர்ச்சியால் பின்பற்றப்பட்டது என நினைவு வைக்காம லிருந்தாலும், சொல்லானது அகக் குலைவுகளை ஏற்படுத்து கிறது. ஒருவன் வாய்மொழி மட்டத்தில் கற்காததை, உடலின் உள்ளுறுப்புகள் மட்டத்தில் (visceral level) கற்றுள் ளான். இவ்வாருன சமூகக் கற்றலானது விறைப்பு, அச்சம், சார்பெண்ண நிலைமை இவற்றில், கற்பவர்க்கு இவற்றின் இயல்பு விளங்காவிட்டாலும், மிக முக்கியத்துவம் கொண் டத்தாக அமையும்' (8.162-3).

இரு எடுத்துக்காட்டுகளாக 'பூஜை' (Pooja) அறையிலோ கோயிலிலோ குழந்தையின் நடத்தையும், உயர்சாதி மக்களைக் குறித்துக் குழந்தையின் நடத்தையும் எடுத்துக்கொள்ளலாம். நாம் அறிந்தாற்போலத் தாய் குழந்தையைத் தெய்வத்தன்மை வாய்ந்த உருவச் சிலையின் முன் தரையில் நெடுஞ்சாண்கிடையா கப் படுக்கவைக்கிருள். இவ்வரிசையான திரும்பச் செய்தல்களா னது குழந்தையையும் வயது வந்தோரையும் தெய்வத்துக்குரிய (sacred) பொருளையோ, மனிதரையோ பார்க்கும் பொழுதெல் லாம் இச் செயலைச் செய்ய வழிகாட்டுகின்றது. இதனுல் நடத் தையில் ஆக்கநிலையிருத்தலைவிட உயர்ந்த செயல் முறைகள் உட்படவில்லையெனப் பொருள் கொள்ளலாகாது. சமய நடத்தை போன்ற உயர்ந்த நடத்தை முறைகளிலும்கூட ஆக்கநிலை

யிருத்தலின் முதற்பொருள் உள்ளது என்பதனையே எடுத்துக் காட்டுகின்றோம். இதேபோன்று தாழ்ந்த சாதியின்கண் பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளை நமஸ்காரம் (namaskar) செய்யவும், தலையையும் தோள்களையும் மடிக்கும் சரியான தோரணையையும், பணிவான உணர்ச்சியையும் கற்றுக்கொடுக்கிறார்கள் என்பதை நாம் காண்கிறோம். குழந்தை, சமூக வேறுபாடுகளை உய்த்துணர்வதற்கென்றே உயர்ந்த, தாழ்ந்த சாதிகளினிடையே யுள்ள தொடர்பின் செயன்முறையினை மேற்கொள்ளத் தொடங்குகிறது. ஆனால் அவை சமூக வேறுபாடுகளைத் திடப்படுத்துகின்றன.

தூண்டல் புலனாகும் அளவிற்குக் கீழ்நிலையிலும் ஆக்க நிலையிறுத்தம்பற்றிய பரிசோதனைச் சான்று உள்ளது. எடுத்துக் காட்டாக, ஒரு எதிர்வினைக் காலப் (reaction time) பரிசோதனையில், ஆட்படுநர் அறிகுறிக்கேற்ப (signal) விசையினின்று தன் கையை எடுத்தல் வேண்டும் என அறிவுறுத்தப்பட்டார். பழக்கத்துடன் எதிர்வினைக் காலம் ஒரு வினாடியின் 0.2 பாகத்திற்குக் குறைந்தது. இந் நிலையில் பரிசோதனையாளர் விசையை அழுத்தினால் ஒலி எழும்பக்கூடிய ஒரு சிறிய உருளையைக் காதின் வெளிப்புறத்தில் நுழைத்தார். இவ்வொலி புலனாகும் குறையளவின் (minimal threshold) கீழ் இருந்தது. ஆட்படுநர் ஒருவரால்கூட எப்பொழுது இவ்வொலி தொடங்கியது அல்லது நின்றது எனக் கூற இயலவில்லை. அடுத்த எதிர்வினைக் காலப் பரிசோதனை வரிசையில், செவிப்புலனாகும் குறையளவிற்குக்கீழ் உள்ள தூண்டலானது ஒளித் தூண்டலிற்கு முன் ஒரு வினாடியின் பின்னமாக அளிக்கப்பட்டது. பழக்கத்துடன் எதிர்வினைக் காலம் வினாடியின் 0.1 பாகத்திற்குக் குறைக்கப்பட்டது. பிற சொற்களில், ஆட்படுநர் புலனாகும் குறையளவிற்குக் கீழுள்ள ஒலிக்கு ஆக்கநிலையிருத்தப்பட்டுள்ளார் (8.163).

'சமூக நிலையினை நாம் உள்ளுணர்வாக மதிப்பிடுதலின் பெரும்பகுதி, விளையாட்டில் கலந்துகொள்ள இயல்பூக்கமான தயக்கம், ஒரு மனிதனை நம்புதலில் நெஞ்சுறுதியுடன் கூடிய ஓர் உறுதியான தீர்மானம் இவையாவும் பெருமளவில் புலனாகும் குறையளவின்கீழ் உள்ள ஆக்கநிலையிருத்தத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன என்று சொன்னால் மிகையாகாது. சைகைகளின் பொருள், முகக் குறிப்புகள், குரலின் தொனி ஆகியவற்றை ஒவ்வொரு நாளாகக் கற்கிறோம். ஆனால் கற்றது பெருமளவு நம் நினைவின் தளத்திற்குக் கீழே செயலாற்றுகின்றது. அல்லது இன்றும் நாளையும் நம் நினைவின் புலனாகும் குறையளவிற்குக் (threshold) கீழாகச் செயலாற்றலாம்' (8.163-4).

வயது வந்தோரைவிட ஒரு நாயோ குழந்தையோ அந்நியனைச் சரியாக மதிப்பிடலாம் என்பது பொது அனுபவமே.

வழிநிலை ஆக்கநிலையிருத்தத்தைப் புகுத்துவதன் மூலம் ஆக்கநிலையிருத்த எதிர்வினை ஒன்றைத் தடை செய்யவோ (inhibit) தவிர்க்கவோ முடியும். கலைச் சொல்லாக இஃது, 'உட்தடை ஆக்கநிலையிருத்தம்' (inhibition conditioning) என வழங்கப் பெறுகின்றது. குழந்தை, இடியினால் (thunder) அச்சுறுத்தப்படுகிறது என நாம் அறிவோம். பெற்றோர்கள் கொஞ்சுவதோ மிட்டாய் கொடுப்பதோ இவ் வச்சத்தை அடக்கியாளக் குழந்தைக்கு உதவலாம். ஆனால், ஒரு மூன்றாவதான ஆக்கநிலையிருத்தமானது தடையை முறியடிக்கலாம். குழந்தை பெற்றோரால் தண்டனை அளிக்கப்பட்டால் மறுபடியும் இடியைக் கண்டு அச்சமடையலாம். இவ்வாறான மிகுந்த நடத்தைப் பிரச்சினைகளைக் குழந்தை ஆலோசனைகூறி வழிகாட்டும் மருத்துவ மனைகள் (child guidance clinic) காட்டுகின்றன. 'பரந்த எல்லையினை உடைய மற்றக் காரணிகளை, முக்கியமாகக் குறியீடுகளை உடைய மிகச் சிக்கலான நிலையில், சமய மறுமலர்ச்சி உயிரோடு தோல் உரிக்கும் கும்பல் அல்லது வலுவான தேசிய கருத்துகள்பற்றிய கலை என்றவற்றின் தூண்டலின்கீழ் உள்ள ஒரு மனிதன், தனது பழக்கமுடைய நினைவு அனுபவத்திலிருந்து வெகு நாள் அப்பாற்பட்டு நிற்கும் வலுத்தாக்குதல் எதிர்வினைகளை அல்லது அச்ச எதிர்வினைகளை அவன் தனது நினைவு நிலையில்லாமல் (கருதாமல்) வெளியிடுகிறான் என்பதனைக் காணலாம்' (3.99).

ஆக்கநிலையிருத்தம், உளமருத்துவ முறையிலும் (psycho therapy) பயன்பட்டு வருகிறது. யேட்ஸ் (Yates) என்பார் ஒரு பதினைந்து வயதுப் பெண்ணின் வழக்கினைப்பற்றி உரைக்கிறார். அப் பெண் ஆண்களுடன், குறிப்பாக தந்தையுடன் இருந்தால் கண்ணீர்விடும் பழக்கத்தினால் துன்புறுத்தப்பட்டாள். 'இதன் நிவர்த்தி (remedy) உளதளர்த்துதல், அமைதித்தன்மை, காப்புத்தன்மை இவற்றுடன் ஆட்படுநர்க்குக் குறிப்பாகப் பொருள் தருவதாக, இவ்வெடுத்துக்காட்டால் கையாளப்பட்ட 'அமைதி' என்னும் சொல், வலுவான இயைபுகளை (associations) ஏற்படுத்தலில் பதிந்தது' (9.91). மருத்துவ வல்லுநர் அவளைத் தளரச் செய்து 'அமைதி' என்னும் சொல்லை எண்ணும்படியாகவும் அதனைச் 'சமாதானம்', 'காப்புத் தன்மை', 'நன்மை' இச் சொற்களுடன் இயைபு ஏற்படுத்தும் படியும் அறிவுறுத்தினர், சிறிது பழக்கத்திற்குப் பிறகு, தனக்குத்

தானே 'அமைதி' என்ற சொல்லைக் கூறிக்கொள்வதன்மூலம், உடல் உளதளர்த்தலையும் மன அமைதியையும் உறுதிப்படுத்த முடிந்ததென்று அந் நோயாளி கண்டுகொண்டாள். நெருக்கடியைத் தவிர்த்து அமைதியையும் உள்ளச் சமநிலையையும் வெளிக்கொணரும் சொற்களான 'ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி'யின் பயன் இந்தியப் பண்பாட்டில் பரவலாகப் பழக்கத்திலிருந்து வருவதை இங்கு நாம் குறிப்பிடலாம்.

அடுத்ததாக, நாம் மக்டூகல் (Mc Dougall) (10) என்பார் திட்டமற்ற இயல்பாயமைந்துள்ள போக்குகள் என்று கூறும் இரக்கம், பின்பற்றல், கருத்தேற்றம் என்பவற்றை எடுத்துக் கொள்வோம். ஆல்போர்டு (Allport) கூறுவது போல '19ஆம் நூற்றாண்டின் பெரும்பாலான சமூக உளவியலார்கள் இணைக்கும் விளக்கங்களில் திகழ்ந்தனர். ஒவ்வொருவரும் தனக்குச் சமூக நடத்தையின் விசையைக் கொண்டதாகப்படும் ஓர் எளிய தலைமையான சமன்பாட்டைத் தேர்ந்தெடுத்து விரிவுபடுத்த முற்பட்டனர்' (11.9). சமூக நடத்தையை விளக்க மிகத் தலைமையானதொரு சமன்பாட்டைத் தரும் எந்த ஒரு செயன்முறையையும் கருதாமல் மக்டூகலின் (Mc Dougall) கருத்துகளை ஏற்று நாம் இங்குச் சமூக நடத்தை இடைவினையின் இம் மூன்று வழிமுறைகளையும் ஆழ்ந்தாராயலாம்.

## (b) ஒத்துணர்வு (Sympathy)

வெகுகாலத்திற்கு முன்பே ஆதாம் ஸ்மித் (Adam Smith) (1759) என்பவரும் ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer) (1870) என்பவரும் ஒத்துணர்வுவகைகளிடையே வேறுபாட்டைக் கண்டனர். முதலாவதாக, மற்றவர் உணர்வது போல உணர்வதற்குக் கிட்டத்தட்ட விரைவான துலங்கல் உள்ளது. எடுத்துக்காட்டாக ஒருவர் தடியாலடிக்கப் பட்டால் அவர் கெஞ்சும் பொழுது நாமும் கெஞ்சுதல் உணர்வினை அடைகிறோம். இது முன்னாசிரியர்களினால் இயல்பூக்கம் என்று விளக்கப்பட்டது. ஆனால் இன்றைய கருத்துகள் இதனை ஆக்கநிலையிலிருந்த மறிவினையின் மூலமாக விளக்க முயற்சிக்கின்றன. நாம் அடிக்கப்பட்டபொழுது கெஞ்சுகிறோம். பின்னர் பார்வை ஞாபக நுனிகள் (visual cues) அதே வழியில் துலங்க வழிகாட்டுகின்றன. மக்டூகல் (Mc Dougall) இதனை முதிரா நிலைக்குரிய செயலற்ற ஒத்துணர்வு (primitive passive sympathy) என்கிறார். மற்றவரின் துயரத்தைப் புலன்காணுதல் நம்மையும் அவ்வாறே உணரச் செய்கிறது.

ஆனுல், இது நம்மைச் சுற்றியுள்ளவர்கள் அனுபவிக்கும் உணர்ச்சி களையும் எழுச்சிகளையுமே கொள்ள வழி செய்யலாம். மக்டூகல் (Mc Dougall) சிரிப்பானது, இதனைத் தவிர்க்க நாம் பயன் படுத்தும் முன்னமைப்பு என்று வலியுறுத்திக் கூறுவதன் மூலம் இச் சிக்கலைத் தவிர்க்க முயற்சித்தார். மேலும் பல சந்தர்ப்பங் களில் ஒத்துணர்வினுல் கொணரப்பட்ட வலியானது நம்மையும் மீறி எவ்விதமான உதவியையும் தர இயலாதவராக்குகிறது. உன் தந்தை வாழைப்பழத் தோலினுல் வழுக்கி விழும்போது நீயும் அதே வலியை உணர்ந்து அவருக்குதவ விரையலாம். அல்லது உன் வலியினுல் அடக்கப்பட்டு அசைவதற்கும் உதவுவ தற்கும் முடியாமற்போகலாம்; அல்லது உன்னையும்கூடச் சிரிக்கச் செய்து உன் நடத்தையில் நீ வெட்கப்படவோ குற்றம் செய் தவன் போலவோ உணரலாம்.

ஒத்துணர்வின் இரண்டாவது மாதிரியானது ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் (Herbert Spencer) குறிப்பிடுவது போல மிக வும் சிக்கலானதும் பிரதிபலிக்கும் தன்மையானதும் ஆகும். நாம் மற்றவர்கள் உணர்வதுபோல் உணராவிட் டாலும் ஒத்துணர்வு மேற்கொள்ளல்கூடும். ஆதாம் ஸ்மித் (Adam Smith) நம் நீதியுணர்ச்சியை (sense of justice) ஒத்துணர்வின் நடைமுறையிலிருந்து தருவிக்க முயற்சித்தார்.

ஒத்துணர்வை அறிந்து கொள்ளுதலை நெருங்கி உறவுகொண் டது ஒத்தியக்கம் (empathy) ஆகும். அஃது, ஒருவர் தம்மை மற்றவர்களிடத்து வைத்து உணர்வதை அறியும் ஒரு திறமை யாகும். அது மற்றவர்களுடன் ஒன்றுதலின் திறமையாகும். நாம் இதன் எடுத்துக்காட்டுகளைக் குழந்தையின் விளையாட்டு வாழ்விலும், மேடையிலுள்ள நடிகர்களின் நாடக அங்கத்திலும் தொழில் பொருத்தப்பாட்டினிலும் (vocational adjustments) காண்கிறேம். ஒத்தியக்கம் கற்பனையில் மற்றவர்களின் அங் கங்கள் ஏற்றலை உட்படுத்துகிறது. மற்றவர்பால் தோன்றும் ஒழுக்கத்தினைக் கற்பனை செய்ய முடியவில்லை என்றுல் நாம் அவ்வொழுக்கத்தை மனிதத் தன்மையற்றதாகக் கொள்ளலாம். லூயி மர்பி (Lois Murphy) (1937) குழந்தை வளர்ப்புப் பள்ளியில் குழந்தைகளின் ஆயிரக் கணக்கான நடத்தை வழக்கு களைப் பாகுபடுத்தினுர். அவர் வலுவில் தாக்கும் செய்கைகளை யும் ஒத்துணர்வுசார் செயல்களையும் கண்டார். 'காப்பில் லாக் குழந்தை மிகவும் ஒற்றுணர்வு இல்லாததாக இருக்கலாம். அவனுடைய தேவைகளும் அச்சங்களும் மிகவும் அழுத்தமான தானதால், மற்றவர்களைப்பற்றி எண்ண அவை அவனை

அனுமதிப்பதில்லை. அவனது காப்பின்மை மறையும் பொழுது அவனுடைய ஒத்துணர்வு திடீரென அளவுமீறிய வளர்ச்சி அடைகிறது' (8.302). சில சமயங்களில் இனமயக்கொள்கை (ethno-centrism) ஒத்துணர்வுக்கும், ஒத்தியக்கத்திற்கும் எதிரான தாகக் காணப்படுகிறது. ஒரு தனியன் தன் குடும்பத் தையோ சமயத்தையோ நாட்டையோ ஒன்றினால் மற்றக் குழுக்களின் மக்களை ஒத்துணர்வுடன் உணர முடியாதவனாக ஆகி றான் என அவனே கண்டு கொள்ளலாம். இது சகிப்புத் தன்மையின்மைக்கு (intolerance) இட்டுச் செல்லுகிறது. ஆனால் இனமயக் கொள்கையாக இருந்தாலோ சர்வமயக் கொள் கையாக (universalism) இருந்தாலோ அடித்தளமான நிகழ்ச் சியானது ஒன்றேயாகும். ஒருசீர்த்தன்மை (homogeneity) ஒத்தியக்கத்தை எளிதாக்குகிறது. அது தடைப்படுத்தப்பட் டால், உட்குழுக்களுக்கும் மற்றச் சமய, தேசியக் குழுக்க ளுக்கும் பகைத்தன்மை உண்டாகின்றது. ஆனால், அது மனித இனத்தின் முழுமைக்கோ அண்டத்தின் முழுமைக்கோ எடுத்துச் செல்லப்பட்டால் சகிப்புத்தன்மையின்மையும் சார்பெண்ணங் களும் ஒழிந்துவிடும். 'புலன் காண்பவருக்கும் புலன் காணப் படுவோர் அல்லது பொருளுக்குமிடையே எவ்வளவு அதிகமாக ஒப்பு இருக்கிறதோ அவ்வளவு அதிகமாக ஒத்தியக்கம், புரிந்து கொள்ளல், ஒன்றுதல் ஆகியவை இடம் பெறுகின்றன' (12.9).

### (c) பின்பற்றல் (Imitation)

ஒத்துணர்வு என்பது மற்றவர்கள் உணர்வதை உணருவ தாகும். அதுபோன்று பின்பற்றல் மற்றவர் செய்வதைப் பின் பற்றிச் செய்வதாகும். முற்கால ஆசிரியர்களால் பின்பற்றல் இயல்பூக்கமான செயல்முறையாகக் காணப்பட்டது. சில சமூகவியலார்களினால் பின்பற்றல் எல்லாச் சமூக நடத்தைகளையும் விளக்கக்கூடிய தலைமையான கொள்கையாக நோக்கப்பட்டது. ஏன் பின்பற்றல் பரந்திருக்கின்றது என்பதை அறிந்துகொள்ள எல்லா மனிதர்களுக்குமுள்ள நரம்பு—தசை ஒழுங்கமைப்பின் (neuro muscular system) ஒப்பும், எல்லா மனிதர்களுக்கு மிடையேயுள்ள அடிப்படையான உறுப்புசார் (organic) உந்துக்களும் (drives) உதவுகின்றன. இவ்விரண்டும் இணைக் கப்பட்டதாகப் பண்பாட்டுச் சூழ்நிலையிலமைந்த ஒப்பு அமை கிறது, 'மனிதர் தம் கற்றலின் ஒன்றுசார் நுண்ணமைப்பு களையும், தனியரால் வெளிக் காண்பிக்கப்பட்ட சொந்த சமூக பண்பாட்டுச் சூழ்நிலைகளின் பொதுக் கோலங்களையும் ஒருவர்

மீட்டறிந்தால், ஏன் மனித நடத்தை வாழ்க்கையின் பல கூறுகளில் அமைப்பிலும் உள்ளடக்கத்திலும் ஒப்பாகவே உள்ளது என்பதை அறிந்து கொள்ளுவது கடினமன்று' (3.109-10). ஃபேரிஸ் (Faris) (13) என்பார் கூறுவதுபோன்று மூன்றுவித மான பின்பற்றல் நடத்தைகள் உள்ளன.

(a) மெதுவான தன்னறிவில்லாத பின்பற்றல்— குழவியும் குழந்தையும் வீட்டின் குழுக்களின் நடத்தைக் கோலங்களை மெது வான தன்னறிவற்ற முறையில் மேற்கொள்ளுகின்றன. நாம் நம் பேச்சையும் சைகைகளையும் ஒரு படிப்படியான வழியில் அடை கின்றோம். இவ்வழியில்தான் சமூக மரபுரிமையை அடைகிறோம்.

(b) இரண்டாவது விரைவான, உடனடியான, பிரதி பலிக்காத பின்பற்றல்—இஃது ஆண் பிள்ளைகளின் கும்பலிலும், வயதுவந்தோரின் திரள்களிலும் நிகழ்கிறது. பிரதிபலிக்கும் எண்ணங்களில்லாமல் திரளின் அங்கத்தினர்கள் என்ன செய் கிறார்களோ அதையே நாம் செய்கிறோம்; நன்கொடையளிப்ப தாக இருந்தாலும் சரி அல்லது சொத்துக்குத் தீ வைப்பதானாலும் சரி அதையே செய்கிறோம்.

(c) இறுதியாக நினைவு திரிந்த, வேண்டுமென்றே செய்கிற பின்பற்றலாகும் — நாம் மற்றவர்களின் நுண்முறையைப் பின் பற்றுகிறோம். வளர்ச்சியடையா ஆப்பிரிக்க நாடுகளின் தொழிற் பெருக்கமும் விவசாயத்தின் தேர்ந்த முறைகளும் மேற்கத்திய முறைகளின் வேண்டுமென்றே செய்த பின்பற்றலாகும். பின்பு காலக்கோலங்களின் பிரச்சினைகளையும் நோக்க வேண்டியதாய் உள்ளது. நாம் மற்றவர்களின் காலக் கோலங்களைத் (fashions) தன்மதிப்புடன் (prestige) பின்பற்றுகிறோம். இவ்வாறாகப் பின்பற்றலானது சமூக வளர்ச்சியில் வேறுபட்ட படிகளிலும் சமூக வாழ்க்கையில் வேறுபட்ட நிலைமைகளிலும் நடைபெறும் இடைவினையின் செயன்முறையாகும்.

## (d) கருத்தேற்றம் (Suggestion)

கருத்தேற்ற நிகழ்ச்சியானது ஒரு கருத்தைத் திறனாயாது ஏற்றுக்கொள்ளுதலென வரையறுக்கப்பட்டது. பல வேளைகளில் சில கருத்துகளை ஏற்றுக்கொள்ளுகிறோம். ஏனெனில் நாம் அவற்றைப் பற்றித் திறனாய்ந்து எண்ணவில்லையென்பதினாலல்ல. ஆனால் சில சூழ்நிலைகளினால்தான் ஏற்றுக்கொள்கிறோம். 19ஆம் நூற்றாண்டின்

இறுதியில் சார்கோட் (Charcot) என்பார் ஹிஸ்டீரியாவிலும் (hysteria) மற்றும் சில மனத்தின் பிறழ்வு நிலையிலும் கருதேற்றத்தின் செல்வாக்கைக் காண்பித்தார். லி பான் (Le Bon) என்பார் கும்பலின் நடத்தையிலும், கும்பல் ஹிஸ்டீரியாவிலும் கருத்தேற்றத்தின் செல்வாக்கினைக் காண்பித்தார். ஆகையால் இப் பொதுக் கருத்து மிக முக்கியமானதாகவும் சமூக உளவியலில் எல்லாப் பிரச்சினைகளுக்கும் விசையுள்ளதாகவும் நோக்கப்பட்டது. நாம் இப்பொழுது எவ்வாறு கருத்தேற்றம் சமூக நடத்தையில் செயல் புரிகிறதென்பதைப் புரிந்துகொள்ள முயல்வோம். கருத்தேற்றம் நேரிடையாகவோ மறைமுகமாகவோ செயல் புரியலாம். தாய் குழந்தையின்மேல் செல்வாக்குச் செலுத்த விழையுங்கால் நேரிடைக் கருத்தேற்றத்தினைப் பயன்படுத்துகின்றாள். அவள் எப்பொழுதும் 'இதைச் செய்', 'இதைச்செய்யாதே' என்றவாறு கூறுகிறாள். இதுபோன்று பள்ளியில் ஆசிரியர் மிகுதியான கருத்தேற்றங்களைப் பயன்படுத்துகின்றார். பெற்றோரிடமிருந்தும் பிறரிடமிருந்தும் குழந்தைப் பருவத்தில் வரும் கருத்தேற்றங்களினால் நமக்குப் பெருமளவு சமயத் திடநம்பிக்கைகள் (religious convictions) உள்ளன. ஆனால் நேரடிக் கருத்தேற்றங்கள் எப்போதுமே பயன்படுவதில்லை. எடுத்துக்காட்டாகத் தாய் 'தூங்கு' எனக் கூறினால் குழந்தை அதனை எதிர்க்கலாம். மாறாகத் தாய், 'இப்பொழுது தூங்கப்போகும் நேரம்' என மறைமுகமாகக் கருத்தேற்றினால் குழந்தை அதனை ஏற்றுக்கொண்டு தூங்கலாம். கருத்தேற்றம் முதற்தரமாக எண்ணத்தின் தடையினால் (inhibition) எழுந்தால் அது நேரடிக் கருத்தேற்றமென அழைக்கப்படுகிறது. மாறாக அது தொடர்பறுத்தலினாலென்றால் (dissociation) மறைமுகக் கருத்தேற்றமாகும். இவ்விருவிதமான கருத்தேற்றங்களை மேடைப்பேச்சாளரும் விளம்பரப்படுத்துவோரும் பயன்படுத்துவர். எடுத்துக்கட்டாக ஏலமிடுதலைத் தொழிலாகக்கொண்டவர் ஒரு நிமிடத்திற்கொன்றாகப் பத்து உருப்படிகளை ஏல விலையின் மதிப்பைப் பாராமல் விற்றுவிடுவதாக அறிவிக்கலாம். அவர்தம் கைக் கடியாரத்தை வெளியே எடுத்துவைத்து ஏலத்தைத் தொடங்கலாம். குழு முதன் முதலில் மந்தமாக இருந்து ஏல விலையை அழைக்காமலிருக்கலாம். ஏலத்தில் முதலிரண்டு அல்லது மூன்று உருப்படிகள் குறைந்த விலையில் விற்கப்பட்டால் கேட்போரவையின் உறுப்பினர் ஒருவருக்கொருவர் போட்டியிடுவதால் கடைசி ஐந்து அல்லது ஆறு உறுப்படிகள் பெருத்த தொகைக்கு விற்கப்படலாம். இது போன்று, கும்பலின் நடத்தையில், மனவெழுச்சிசார் கிளர்ச்சி சிந்தனையைத் தடைசெய்யும். துரிதத் செயலுக்கு அங்குத் தெளிவாகத் தெரிய வேண்டிய

தேவையுள்ளது. இங்கு அழுத்தமும் தன்னக்கரையும் உள்ளது. இதன் விளேவாகத் தலேவரால் புகுத்தப்படும் கருத்தேற்றத் தைக் குழுவின் அங்கத்தினர்கள் உடனடியாக ஏற்றுக் கொள்வர்.

மறைமுகக் கருத்தேற்றத்தினே ஆதரிக்கும் காரணிகளில் அக்கறைகளேயும் (interest) மரபு முறைப் பழக்கங்களேயும் (routine habits) ஒரு துறையின் பெரும்பான்மைக் கவர்ச்சி யுள்ள ஒரு மனிதன் அத் துறையைப்பற்றிய செய்திகளேப் பற்றி மிகவும் திறனுயும் தன்மையுடையவனுவான். ஆனல், மற்றத் துறைகளேப்பற்றிய கருத்துகளில் மிகக் கருத்தேற்றம் பெறுகிருன். இதுபோன்று நம் பழக்கங்கள் அவற்றுடன் ஒருமைப்படும் எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளச் செய்யும். ஒரு திருடன் காவலாளனின் உடுப்பை உடுத்திக்கொண்டு மக்களே அச்சுறுத்தலாம். வறுமையுள்ள மனிதனெருவன் முடவன் அல்லது நொண்டி போன்று மாறுவேடத்தில் நடித்துப் பிச்சை யெடுப்பதை வெற்றிகரமான தொழிலாக நடத்தலாம். மறை முகக் கருத்தேற்றமும் குறைவான நுண்ணறிவுள்ள மனிதர் களிடம் உடனடியாகச் செயல் புரியத் தொடங்குகிறது.

பல காரணிகள் சிந்தனேயைத் தடைசெய்வதினுல் மறை முகக் கருத்தேற்றத்துக்கு உதவுகின்றன. நாம் முன் பார்த்த வாறு மனவெழுச்சியின் கிளர்ச்சி உயர்த்தப்பட்ட கருத் தேற்றத்திற்கு இட்டுச் செல்கிறது. இதனே நாம் தனியனின் நடத்தையிலும் கூட்டத்தின் நடத்தையிலும் காண்கிறோம். 'தனியனுனவன் அச்சம், சினம், அவா இவற்றில் மற்றவர் செய்யாததையோ கூருததையோ கருத்தேற்றங்களுக்குத் துலங் கலாகக் கூறவும், செய்யவும் முற்படுகின்றுன்.' எடுத்துக்காட் டாகப் பகவத்கீதை ஒருமைப்பட்ட மனிதனெருவனே **'வித ராக பய க்ரோதஹா'** என்றவாறு பண்புள்ளவனுகிறுன் எனக் கூறுகிறது. அவன் அவா, அச்சம், சினம் இவற்றிலிருந்து தனிப்பட்டவனுகிறுன். நாம் மனவெழுச்சியினுல் மீறும்பொழுது பொய்யான கதைகளே நம்பி அவற்றை வலுவில் செயல் புரிகிறோம். இதுபோன்று கும்பல் நிலேமையில் மனவெழுச்சி யின் கிளர்ச்சியினுல் நம்பகம் பெற்று மக்கள் மூர்க்கத்தனத்து டன் எதிர்வினே புரிகின்றுர்கள். ஒரு மனிதன் களேப்புற்றவ னுகவோ அரைகுறைத் தூக்க நிலேயிலோ தூக்கக் கலக்கமான வனுகவோ இருக்கையில் மிக எளிதாகக் கருத்தேற்பவனுகிறுன். எண் அளவுகளின் தன்மதிப்புத்தான் மிக முக்கியமாகும். மக்கள் பெரிய எண்களினுல் கவுர்ச்சிடையப் பெறுகின்றனர். அளவிலும்,

பரும அளவிலும் (magnitude) தன்மதிப்பு உள்ளது. இது பொருள்களுக்கும் மக்களுக்கும் பொருந்தும். அரசியலில் குழுவின் அளவு கணக்கிடப்படுகின்றது. பொருளாதார வாழ்வில் மனிதனின் வருவாய்த் தொகை கணக்கிடப்படுகிறது. விளம்பரம் செய்பவர் பத்து இலட்சம் (million) மக்கள் தமது தொழில் விளைபொருள்களைப் பயன்படுத்துகிறார்கள் என வலியுறுத்திக் கூறுதலின் மூலம் விளைபொருளின் விற்பனையை அதிகரிக்கின்றனர். அளவும், பருமஅளவும் பிரதிபலிக்கும் எண்ணத்தைத் தடைசெய்து கருத்தேற்றத்திற்கு உதவியளிப்பது போலப் பொறுப்பினரின் தன்மதிப்புக் கருத்தேற்குமையைத் தருவிக்குமென நாம் காண்கிறோம். பொறுப்பின் மூலம் என்பது நிறுவப்பட்ட சமய நூல்கள், சிறப்புக் கொண்டாட்டங்கள் (சடங்குகள்), அரசனின் அல்லது குருவின் படாடோபம் (pomp), மந்திரியின் அலுவலக அறிவிப்பு அல்லது தத்துவமேதை அல்லது அறிவியல் மேதையின் சிறப்புக் கருத்து ஆகியவையாக இருக்கலாம். இதுபோன்று சமூகத்தின் சிறந்த பகுதி என்ன நினைக்கிறதோ எவ்வாறு நடக்கிறதோ அது மிகவும் செல்வாக்கு உடையதாக இருக்கின்றது. அச்சிட்ட சொல்லும் மேலாண்மை கொண்டுள்ளது, பேச்சின் முறையும், மேலாண்மைக்குரிய தொனியும் ஒரு மனிதனையோ குழுவையோ அடங்கி நடக்கும்படி பாதிக்கும். தன் மதிப்பிற்குரிய தன்னேற்றம் குழந்தை நடத்தையிலேயே வேரூன்றியிருக்கின்றது. குழந்தை கேள்வி கேட்காமல் பணிந்து நடக்க ஆயத்தப்படுகின்றது. நாம் சில மேலாண்மையின்மையின் செல்வாக்குப்பற்றிய மிகச் சுவையான பரிசோதனைகளைக் குறிப்பிடலாம்.

1935ஆம் ஆண்டில் ஷெரீ·ப் (Sherif) மாணவர்களை வரிசை முறையைப் (ranking method) பயன்படுத்தித் தங்களுக்கு முன்மதிக்கக்கூடிய (16) ஆசிரியர்களை வரிசைப் படுத்தச் சொன்னார். ஒரு மாதத்திற்குப் பின்னர் பதினாறு நூற்பகுதிகளை எடுத்துப் பதினாறு வேறுபட்ட ஆசிரியர்களின் பெயரிட்டு மாணவர்களுடைய தேர்ந்தெடுத்த தீர்ப்பைக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டார். நடை ஒன்றாயிருந்த போதிலும் ஆட்படுநர்கள் தாங்கள் முன்மதிப்பிட்ட ஆசிரியர்களைக் கொடுத்து நூற்பகுதிகளை வரிசைக்கிரமப்படுத்தினர் (14). 1936ஆம் ஆண்டில் லார்ஜ் (Lorge) என்பவர் இந்நூற் பகுதியைக் கொடுத்தார், 'ஒரு சிறிய கலகம் (rebellion) அவ்வப்பொழுது இருப்பது மிக நன்று', 'இவ்வுடல்சார் உலகில் (physical world) புயல் எவ்வாறு தேவையோ அவ்வாறு அரசியல் உலகில் கலகம் தேவையாகும் என நான் கருதுகின்

றேன்' இது தாமஸ் ஜெஃபர்ஸனின் (Thomas Jefferson) வாய்மொழியாகும். ஆசிரியரின் பெயர் தாமஸ் ஜெபர்ஸன் எனக் கூறப்பட்ட பொழுது அக் கூற்றுக்குப் பொதுவாக ஒப்புதல் அளித்து, **கலகம்** என்ற சொல்லைச் சிறிய கிளர்ச்சி (agitation) என விளக்கப்படுத்தினர். ஆனால் அதே பகுதி மற்றவர்களுக்குக் கொடுக்கப்பட்டு லெனின்தான் (Lenin) ஆசிரியர் பெயர் எனக் கூறப்பட்டபொழுது அவர்கள் அக் கூற்றை மறுத்து, **கலகம்** என்ற சொல்லை வெறியுள்ள புரட்சி (revolution) எனப் பொருள் கொண்டதாக விளக்கம் செய்தனர் (15). 1921ஆம் ஆண்டில் மூர் (Moore) என்பார் வல்லுநர் கருத்தின் மேல் தன்மதிப்புடன் எண்களின் பாதிப்பை ஒப்பிட்டார். ஆட்படுநர்கள், மொழிசார் சொற்றொடர்கள், அற நூல்சார் பொருட் கருத்துகள், இசைக்குரிய கூட்டமைப்புகள் இவை பற்றி அவர்களுடைய முன்மதிப்பிட்ட தீர்ப்புகளைக் கொடுக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்பட்டனர். பின்னர் அவர்கள் குழுவின் பெரும்பான்மையின் முன்மதிப்பீடுகளையும் வல்லுநர்களின் முன்மதிப்பீடுகளையும் ஒத்தவாறு மாற்றிக் கொண்டனர். மூர் (Moore) தன்மதிப்பிற்குரிய காரணி அற நூல்சார் மதிப்புகளின் களத்தில் மிக விளைவுள்ளதாகவும், இசைக்குரிய முன்மதிப்பீட்டில் குறைந்ததாகவும் இருப்பதாகக் கண்டார் (16).

## சமூக எளிதாக்கம் (Social facilitation)

எப். எச். ஆல்போர்டு (F. H. Allport) (6) என்பார் தம் பரிசோதனை ஆய்வின் அடிப்படையில் ஒரு தனியன் மற்றத் தனியன்களின் அதே அல்லது ஒப்பான செய்கைகளைப் பார்க்கும் பொழுது, அவன் செயலில் ஏற்படும் அதிகரிப்பைப்பற்றிப் பரிசோதனைச் சான்று தந்தார். மற்றவர்களின் செயலிலிருந்து வரும் பார்வைகளும் ஒலிகளும் ஒரு தனியனை அதிகவேலை செய்யத் தூண்டுகின்றன. இதுதான் நம்மீது துணையாளர்களின் பாதிப்பாகும். நாம் தனியாயிருப்பதைவிட மற்றவர்களின் சேர்க்கையின்போது அதிகமாக உண்ணவும் குடிக்கவும் செய்கிறோம். இதுபோன்று பெண்களும் பின்னல் (knitting) குழுவில் இருக்கும்பொழுது வேலை செய்வதைவிட வீட்டில் தனியாக இருக்கும்பொழுது வேகமாகப் பின்னும் திறமை பெறுகின்றனர். ஒரு தனியனின் செயல்களை எவ்வளவு தூரம் உடன் செயல்புரிக்குழு (co-acting) பாதிக்கிறது என அறியப் பரிசோதனைகள் நடத்தப்பட்டு வந்தன. ஒரு தனியன் தனியாக இருக்கும் பொழுதும் மற்றவர்களுடன் வேலை செய்யும்பொழுதும்

ஒரு செயல் புரிதலைப்பற்றி ஒப்புமைகள் செய்யப்பட்டன. இங்குப் போட்டியின் பிரச்சினையும் உள்ளது. ஆய்வுக்கூடப் பரிசோதனை களில் தனியர்களுக்கு மற்றவர்களுடன் போட்டியிட வேண்டா மெனத் தகுதியான அறிவுறுத்தல்கள் தரப்பட்டு இப்பிரச் சினையை ஆய முயற்சிகள் எடுக்கப்பட்டன. மேலும் தனிப்பட்ட செயல், உடன் செயல்புரிக் குழுவுடன் செயல், போட்டியுள்ள பொழுது செய்யும் செயல் இம் மூன்றினிடையேயுள்ள வேறு பாட்டை ஆய முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. நாம் பின்னர் பார்க்கப்போவது போலப் (பகுதி 14) போட்டியானது வெறும் உடன்செயல் குழுவைவிடச் செய்கையை அதிகரிக்கிறது எனக் கண்டுபிடிக்கப்பட்டது. நாம் **சூத்திரயக்ஞா** என்னும் நிறுவனத்துடன் பழக்கப்பட்டுள்ளோம். அங்கு மக்கள் அவையுடன் (audience) இருந்தோ இல்லாமலோ ஒருங்கே உட்கார்ந்து சர்க்காவிலிருந்து (charka) நூற் சுற்றுகிறார்கள். **சூத்திரயக்ஞா**வின் (Suthrayagna) நுண்முறை இரு காரணிகளைக் கொண்டது:

(a) சமூக வசதியளிப்பு— வேலையின் தொகையை அதி கரித்தல், அவ்வாறே தனியனின் விளைபொருள் தன்மையைப் பற்றிய நம்பகத்தைப் பாதித்தல். (b) சமூகக் காரணியான பின்பற்றலையும் குழு உரிமையையும் உட்படுத்துவது.

பல பரிசோதனைகள் 1930-35 ஆண்டுகளில் கூட்டல், எண்களை அடித்தல் போன்ற பலவிதமான செய்கைகளைப் பயன் படுத்தி நடத்தப்பெற்றன (17). வேறுவிதமான எல்லா ஆராய்வு களும் ஒருவாறான ஒப்பான முடிவுகளைக் கொடுத்தன. செயலின் வேகம் அதிகரித்தது. ஆனால், ஆட்படுநர்கள் மனவெழுச்சிக் கிளர்ச்சியையும் தெரியப்படுத்தினார்கள். மாறாகச் செயலின் குணம் மிகவும் மட்டமானதாக இருந்ததெனக் காணப்பட்டது. ஆகையால், தனிப்பட்ட வேலையைவிட உடன்செயல்புரிக் குழு வில் செயல் அதிகரிப்பைப் பரிசோதனைச் சான்று காண்பித்த தெனவும் ஆனால், திறமையும் வேலையின் குணத்தையும் குறைத் தது எனவும் காணப்பட்டது. குழுநிலைமையில் நான்கைந்து ஆட்படுநர்கள் ஒரே சமயத்தில் வேலை செய்தனர். ஆனால் தனிப்பட்ட செயலில் ஆட்படுநர் தனித் துறையில் இருந்தார். ஆல்போர்ட் (Allport) எதிர்ப்போட்டியின் விளைவுகளையும் மெய்வசதியளிப்பின் விளைவுகளையும் எதிர்ப்போட்டியானது (rivalry) மனவெழுச்சியின் திடப்படுத்தலின் மூலமாகச் செய்கையின் வலுப்படுத்தலுக்கு வழிசெய்கிறது என்று கண்டார். சமூக வசதியளிப்பு மற்றவர்கள் வேலை செய்வதின்

பார்வை, ஒளியின் நேரடி விளைவினால் செய்கையின் வலுப் படுத்தலுக்கு வழி செய்கிறது. இவ்வாறான நேரடி விளைவு, ஆக்கநிலையிருத்தலின் தூண்டல்களின் வழியாக ஒருவரின் செய்கைகளிலேயேகூடக் காணப்படலாம். ஒருவரின் சொந்தச் செய்கைகளின் பார்வையும் ஒலியும் பின்னர் செய்கைக்குத் தன் தூண்டுதல் (self stimulation) எனக் கூறப்படும் ஆக்கநிலையிருத்தலின் வழியாக வசதியளிக்கிறது. அதே வழியில் வேலை செய்யும் மற்றக் குழுக்களின் பார்வையோ ஒலியோ வசதியளிப்புக்கு எடுத்துச் செல்லும் பங்காகக் கொடுக்கும் ஆக்க நிலையிருத்தலின் தூண்டல்களாக அமைகின்றன. இத் தொடக்க நிலையான ஆக்க நிலையிருத்தலுக்குமேல் மனப்பான்மையின், பாதிப்புக்கூட இருக்கலாம். மற்றவர்களும் ஒப்பான வேலை செய்கின்றனர் என்று நமக்குத் தெரிவதால் ஆற்றலைப் பயன் படுத்துவோம். இவ்வாற்றலைப் பயன்படுத்துதல் எதிர்போட் டியை அதிகமாக்குகிறது. குழு நிலைமையில் ஏற்படும் கவனத் திருப்பங்கள் (distractions) ஈடுசெய்தலுக்கும் அதிகரித்த ஆற்றலுக்கும் நம்மை இட்டுச் செல்லுகின்றன. டாஷியல் (Dashiel) ஓர் ஆட்படுநர் தனியாகச் செய்யும் செய லுக்கும் மற்றவர்கள் தனித்தனியே அறையில் செய்யும் ஒப்பான செயல்களுக்குமிடையே வேறுபாடு கண்டார். பின் சொன்ன சூழ்நிலையில்கூட சமூக வசதியளிப்பு இருந்தது. வேறுவித மாகக் கூறினால் மற்ற மக்கள் செயல்புரிவதின் நேரடிப்பார்வை யும் ஒலியும் இல்லாவிட்டாலும்கூட மற்றவர்களுக்கும் செயல் புரிகிறார்கள் என்பதின் உணர்வு வசதியளிப்பினைத் தருகிறது (17). ஆகவே, போட்டியின் விளைவு தவிர்க்கப்பட முடியாது. தனியனின் செயலில் குழுவின் மற்றொரு விளைவானது, 'விளை வின் அளவுத்தரங்களை' (Output-norms) நிறுவுவதா கும். இப்பொழுது கூடிச் செயல்புரியும் பல வேறுபட்ட மனிதர்கள் கிட்டத்தட்ட ஒரே வேகத்தில் செயல்புரிவார்கள். முதன் விளைவாகத் தனித்த நிலைமையில் நன்கு செய்த ஒருவன் கூட்டுவேலை செய்யும் நிலைமையில் அதிகம் ஆதாயமடைய மாட்டான். அவ்வாறிருக்கையில் நினைத்த அளவில் குறைவான செயல்புரியும் ஒருவன் ஆராயுமளவிற்கு ஆதாயமடைவான். இவ்வாறாக உடன் செயல்புரிக் குழுவில் செயல்புரிவதுபோன்ற எளிய நிலைமையில்கூடப் பார்வைகளுக்கும் ஒலிகளுக்கும் மேலாக ஊக்குவித்தலின் காரணிகளினால் தூண்டுதல் ஏற்படலாம்.

## சமூகத் தடை (Social inhibition)

நாம் மற்றவர்களால் கவனிக்கப்படும் பொழுது நம் செயலில் குறைவு ஏற்படுகின்றது. இதுதான் சமூகத் தடையாகும். நன்கு தெரிந்தாற்போல மேடையச்சம் (stage fright) ஒருவனை புதுப் பேச்சளிக்கையிலோ பேட்டிக் குழுவின் முன்னரோ பற்றுர்வம் உடையவனுகச் செய்கின்றது. கேட்போரவை (audience) இருப்பதினுல் எவ்வாறு ஒரு செயல் பாதிக்கப்படுகிறது என்பதனை அறியப் ஆய்வு நடத்தப் பட்டது. கேட்போரவை இரு வகைகளாக இருக்கலாம். அது சலனமற்றதாகவோ விரைப்பாயுள்ள நிலைமையை உண்டாக்கி வேண்டுமென்றே அச்சுறுத்துவதாகவோ இருக்கலாம். பெரும்பாலான ஆராய்வாளர்கள் கேட்போரவையின் இருப்பினுல் ஒரு செயலின் தரம் குறைகிறது எனக் கண்டனர். கோம்ப்ஸ் என்பாரும் டெய்லர் என்பாரும் (Combs and Taylor) (18), ஒரு மொழியாக்கச் செயலில் தனித்தியங்கும் செயலுக்கும் கேட்போரவை முன்னர் செய்யும் செயலுக்கும் பெருத்த வேறுபாட்டைக் கண்டனர். பல ஆய்வாளர்கள், அளவில் குறைவிருந்தபோதிலும் பிழைகளின் அதிகரிப்பு இருக்கிறதெனக் கண்டனர். கோவென் (Cowen) (19) கேட்போரவை நிலைமையின் பிரச்சினையைத் தீர்ப்பதில் அதிகரிக்கப்பட்ட உறுதித்தன்மையைக் கண்டார். வழியில் இருவர் அல்லது மூவர் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது, அவர்களை நாம் கடக்கும்பொழுது அவர்களின் உரையாடலில் சிறிது தடைவிளைவு ஏற்படுவதை நாம் காண்கிறேம். மற்றவன் கடந்து செல்லும் நிலை, மேலும் அவன் இவ்வுரையாடலை ஒட்டுக் கேட்கக்கூடும் என்ற எண்ணம் இவ்வுரையாடலின் வேகத்தினைத் தடைப்படுத்தக்கூடும். இதனுல் உரையாடல் சில நிமிடங்களுக்கு நின்று பின்னர் மறுபடியும் தொடங்கலாம். சமூகத் தடையானது ஓரளவுக்குக் கடந்த ஆக்கநிலையிருத்தலின் காரணமாக இருக்கலாம். குழந்தை பணிவுடன் இருக்கக் கற்றுக்கொள்ளும் பொழுது பெற்றேர்களுக்கு முன்னுல் தன் சொற்றெடர்களைக் கட்டுப்படுத்துதல் வேண்டும். ஒருவன் வளர்ந்த பிறகு, மற்றத் தனியன் அல்லது தனியர்களின் குழுவின் முன்னிலையில் இதே தடையின் விளைவைக் கொடுக்கலாம். மேலும் இது கற்றலினுல், நாம் இவ்வாறுன தடையின் விளைவுகளை அடக்கியாளுவதைத் தடுப்பதில்லை. மற்ற மக்களின் முன்னிலையால் மனவெழுச்சியின் எழுகையினின்று வெளிவரும் தடையின் விளைவும், குறிப்பாக, நம் சிந்தனை செய்யும் முறை

களும் நாம் வெறுக்கும் அல்லது அச்சப்படும் மக்களின் முன்னிலையால் பாதிக்கப்படும்.

## ஒன்றுதல் (Identification)

உளப்பகுப்பு வல்லுநர்கள் (Psycho- analysts) ஒன்றுதலும் (identification), புறத்தெறிதலும் (projection) மிக முக்கியச் சமூக விளைவுகளைக் கொண்டுள்ளன எனக் காட்டியுள்ளனர். ஒன்றுதலில் தனியன் மற்றவர்களிடம், அவர்களைத் தன்னுடைய பகுதிபோலவே நினைத்து எதிர்வினை புரிகின்றான். புறத்தெறிதலில் தனியன் தன் நடத்தையையே புற உலகின் பகுதியாக அமைக்கிறான். வேறு வகையாகக் கூறினால் ஒன்றுதலில் மற்ற மக்களின் வெற்றியை நம்முடையதாகவே நோக்குகிறோம், ஆனால் புறத்தெறிதலில் நம் தோல்விகளை மற்ற மக்களின்மேல் சாட்டுகிறோம். நம் கல்லூரி கால்பந்து விளையாட்டில் வெற்றி பெற்றதென்றால் கல்லூரியின் ஒவ்வொரு மாணவனும் தான் வெற்றி பெற்றதாகவே பெருமைகொளுகிறான். அவன் தானே ஏதோ சிறந்ததொன்று செய்துவிட்டதாக உணர்கின்றான். சமூக ஒன்றுதல் என்பது வாழ்க்கையில் மிக முன்கூட்டியே, அதாவது குழந்தை தன் சூழ்நிலைக்குத் தக அமைக்கும் போதே தொடங்குகின்றது. ஆதரவற்ற குழந்தை பெற்றோர்களைத் தன் விருப்பங்களின் நிறைவின் ஒருவழியாகக் காண்கிறான். பெற்றோரும் இதில் உதவுகின்றனர். குழந்தையால் எது செய்யமுடியவில்லையோ அதனைப் பெற்றோர் செய்து அவனே அச் செய்கையைச் செய்து முடித்ததாக உணரச் செய்கிறார்கள். பள்ளியில் குழந்தை தன் பெற்றோர்களின் செயல் நிறைவேற்றத்தைப் பெருமையுடன் குறிப்பிட்டு அவ்வாறே தங்களது மேம்பட்ட தன்மையை நிலைநாட்டுகின்றனர் என்பதைப் பலமுறை காண்கிறோம். பெற்றோருக்கும் சிறந்த மாதிரி வகையான தோரணையாக இருப்பது தங்கள் குழந்தைகளைப் பயனுறுதியுடையதாக்க உதவியளிக்கிறது. வளர்ச்சி அடைய அடையக் குழந்தை தன் பெற்றோர்களுடன் உள்ள முன் கூட்டிய ஒன்றுதலைக் கைவிட்டுத் அவனைத் தோழர்களுக்கும் மற்றச் சமூகக் குழுக்களுக்கும் மாற்றுகின்றது. நாம் அறிந்தது போல மாணவர்கள் மட்டுமன்றி வயதுவந்தோரும் பல சங்கங்களில் சேர்ந்து தங்கள் மனத்தை (ego) மிகுதிப்படுத்துகின்றனர். இனம்சார்ந்த மேம்பாட்டின் கோட்பாடுகளும் (doctrines of racial superiority) கூட சமூக ஒன்றுதலில் ஆதாரம் கொண்டுள்ளன. ஒரு தனியன் தான் மேம்பட்ட இனத்தைச் சேர்ந்தவனென்பதால் தன்னை

மிக மேம்பட்டவனாக எண்ணலாம். ஒரு மனிதன் தன்னைப் புகழ்ந்து கொள்ளும்பொழுதோ மற்றத் தனியனைப் புகழ முயலும்போதோ ஒரு குழுவின் மனப்பான்மையை ஒப்பிட்டு முழுக் குழுவையே புகழ்வதைச் சமூகம் பொறுத்துக்கொள்கின்றது. குழு மற்றக் குழுவுடன் முழுமையாக ஒன்ற முடியும். தலைசிறந்த செயல் புரிந்துள்ள தனியன்களைத் தவிர மற்றபடி குறிப்பிட்ட தனியனுடன் ஒன்ற முடியாது. எடுத்துக்காட்டாகப் புத்தர், காந்தி, தாகூர் போன்ற மற்றத் தேசிய தலைவர்களைக் குறித்துப் பெருமையடையலாம். அவன் இத் தலைவர்களின் மேன்மையில் பங்கெடுத்துக்கொண்டதாக உணர்கிறான். நாம் பின்னர் பார்க்கப்போவது போன்று ஒன்றுதலின் நுண்ணமைப்பின் (mechanism) நற்குணங்களும் இடையூறுகளும் தனியனின் திட்டத்தையும், குழுவின் திட்டத்தையும் உருவாக்குதலில் இடம் பெற்று இருக்கின்றன.

சமூகப் புறத்தெறிதல் (social projection) ஒரு மனிதனின் நினைவுத் தன்மையின் சிறப்பியல்புகளில் ஒன்று புறவயக் குறிப்பிடல் ஆகும். நாம் நம்மைச் சுற்றியுள்ள ஆள்களையும் பொருள்களையும் அறிந்தவர்களாக இருக்கின்றோம். நாம் அவற்றைத் தவிர்த்தோ நோக்கியோ சென்றால் ஆள்களும் பொருள்களும் நிறைந்த உலகில் ஃபிராய்டு (Freud) கூறுவது போன்று இந்தப் புறவயக் குறிப்பிடலின் ஒரு கூறு புறத்தெறிதலாகும். புறத்தெறிதலில் தனியன் தன் குறைபாடுகளுக்கே துலங்கலளிக்கிறான். அவை தன் பகுதியென எண்ணாமல் புறவய உலகின் பகுதியாகவே எண்ணுகிறான். சாதாரண நடத்தையிலும் பிறழ்ந்த நிலையிலும் புறத்தெறிதல் அடிப்படையான நுண்ணமைப்பு என அறிதல் வேண்டும்.

நாம் எதிர்வினை புரியும் புறஉலகு முழுவதும் புற வயமானதன்று. புலன்காட்சிசார் செயன்முறையின் பகுப்பு, ஒவ்வொரு புலன் காட்சியிலும், நிகழ்தூண்டலிலும், கடந்த அனுபவங்களிலும் உட்பட்டுள்ளன என்பதைத் தெளிவாகக் காண்பிக்கிறது. வெகுகால முன்பே பண்டைய இந்தியச் சிந்தனையாளர்கள் 'சவிகல்ப பிரதியக்ஷா' — புலன் காட்சியுடன் குறை நிரப்புதல் என்பதுபற்றிக் கூறியுள்ளனர். இதன் விளைவாக நாம் துலங்கலளிக்கும் பொழுது அது புறவயத்தையும் அகவயத்தையும் கொண்டு இருக்கிறது. ஆகவே, நம்முடைய ஒரு பகுதியை மக்களுள்ளும் பொருள்களுள்ளும் புகுத்துகிறோம் எனக் காண்கிறோம். இஃது ஓரே சமயத்தில் பயனளிப்பதும் அபாயகரமானதுமாகும். புலன் காட்சி, தவறான புலன் காட்சி ஆகிய

இவ்விரண்டும் குறைவு நிரப்புதல் செயன்முறையினுல்தான் எனக் கூறலாம். சமூகப் புறத்தெறிதலில் நாம் நம்முடைய விருப்பங்களையும் எண்ணங்களையும் மற்றவர்களின்மேல் புறத் தெறிகிறோம். ஒரு துயரார்ந்த (melancholic) மனிதன் உலகைத் துயருள்ள இடமாகவும் மற்ற மனிதர்களைக் கீழ்த்தரமாகவும், தன்னலமுள்ளவர்களாகவும் பேராசைக்காரர்களாகவும் காண்கிறான். மாறாக, நாம் நன்னம்பிக்கைக் கோட்பாட்டைக் கொண்டிருக்கும் பொழுது எல்லா உலகத்தையும் மகிழ்ச்சி மிக்கதாக நோக்குகிறோம். நாம் நம் சக மனிதனை நம் அவாக்கள், விருப்பங்கள் வழியில் நடப்பது போலவே புலன்காணும் போக்குடையவர்களாக இருக்கிறோம். நாம் எதனை நம்ப விழைகின்றோமோ அதனை அவர்கள் வாய்மொழியிலும் செய்கைகளிலும் ஆய்கின்றோம். அரசியல் சிறுபான்மைக் குழுவின் மனிதன்கூட அவன் கருத்துத்தேற்றங்கள் அவை உண்மையாகக் குழு முழுவதிலும் இருப்பதைவிட அதிகமாகப் பரவி நிலவுவது போல மேற்கொள்ளுகிறான். ஒரு பதவிக்குத் தேர்தலில் போட்டியிடும் ஒவ்வொரு மனிதனும் தாம் அத் தேர்தலில் திண்ணமாகத் தேர்ந்தெடுக்கப்படுவோம் எனக் கருதுகின்றான் என்பது நாம் அறிந்ததொன்றாகும். அவன் தன் ஆதரவாளர்களின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியும் எதிராளிகளின் செல்வாக்கைக் கூடிய வரை சிறிதாக்கியும் நோக்குகின்றான். இல்லாவிடில் இவ்வளவு மனிதர் கட்சியாளராகவோ சுயேச்சையாகவோ தேர்தலுக்கு நிற்க முற்சிக்கமாட்டார்கள்.

சமூகப் புறத்தெறிதல் என்பது நம் புலன் காட்சியினைச் சமூக நிகழ்ச்சிகளின் பொருளில் உட்படுத்துகின்றது. எடுத்துக்காட்டாக, கம்யூனிஸ்டு எப்பொழுதும் புரட்சி மிக்கதாக எண்ணுகிறான். ஒவ்வொரு திரட்செறிவோ வேளாண்மைச் சார்பான சச்சரவோ அவனுக்குப் பரந்த உள்ளநிறைவின்மையின் குறியாகும். அவன் இவ்வாய்ப்புகளைத் தன் கட்சியின் வலுவைக் கட்டமைக்கப் பயன்படுத்துவான். ஒவ்வோர் அரசியல் கட்சியும் சமூக நிகழ்ச்சிகளை அதன் முற்சார்புநிலைகளின் (predilections) வாயிலாக விளக்குகிறது. சிறுபான்மை அல்லது பெரும்பான்மை அரசியல் கட்சிகளுக்கு இதுதான் பலவித வலிமையினைக் கொடுக்கிறது.

உளப்பகுப்பாய்வாளர்கள் கூறியது போலப் புறத்தெறிதல் தீர்க்க வேண்டிய அடிப்படைச் சச்சரவு உள்ள ஒரு தனியனிடம் உடனடியாக நிகழ்கிறது. எந்தத் தனியன் சச்சரவுகளிலிருந்து தனிப்பட்டவனுவான்? இதனுல்தான் புறத்தெறிதல்

பிறழ்ந்தநிலை நடத்தைக்குமட்டும் கட்டுப்படுத்தப் பெற்ற நிகழ்வு (phenomenon) அன்று. ஆனால் அஃது எங்கும் பரவலா யிருக்கும் (ubiquitous) ஒன்றாகும் என்று கருதப்படுகின்றது. நாம் நம் ஆளுமையின் மற்றப் பங்குடன் பொருந்தாத அவாக்கள் கொண்டிருப்பதால் சச்சரவு ஏற்படுகிறது.

இச் சச்சரவு மனவேதனை அளிக்கக்கூடியதாகும். இவ்விருப் பங்களை மற்றவர்கள் மீது ஏற்றி நோக்குதல் நாம் கையாளப் படும் முறைகளில் ஒன்றாகும். இவ்விருப்பங்கள் நம் அண்டை யோரின் சிறப்பியல்புகளாகக் கருதும்பொழுது நாம் அவர்களைக் கடுமையாகக் கண்டிக்கக்கூடும். இதுதான் குற்றஞ்சாட்டலின் (self-reproach) நோக்குதலைத் தவிர்க்க முயலும் வழியுமாகும். ஆதலால், இந்த ஆள் நோகுதலையும் பணிவாதலையும் மற்றவர்கள்மேல் தவற்றைப் புறத்தெறிதலினாலும், மற்றவர் களின் குற்றத்தைக் கண்டித்தலின் மூலமாகவும் பயனுறுதி உடையதாகத் தவிர்க்கலாம். இவ்வாறு புறத்தெறிலானது தன் குற்றச்சாட்டலின் கசப்பான அனுபவங்களுக்குப் பதிலான தாக அமைகிறது. இதனால்தான், ஒருவன் வெட்கப்படக் கூடிய தவறு அல்லது குறைபாடு பெற்றிருப்பினும், இதே குறைபாடுகள் பெற்றுள்ள மற்றொருவனிடத்தில் சகிப்புத்தன் மையின்மையை வெளிப்படுத்துகின்றான். நாம் புறத்தெறித லுள்ள ஒரு மனிதனைப் பார்க்கும் போதெல்லாம் அத் தனியாளே அத் தவற்றைக் கொண்டிருக்கலாமெனச் சந்தேகிக்கலாம்.

நாம் விரும்பத்தகாதத் தூண்டுதலைக் கண்டிக்கும் அறநெறிசார் மெய்ப்பாடுகளைப் புறத்தெறிதல் மற்றொருவகை யானப் புறத்தெறிதலாகும். இவ்வாறான மனிதன் கற்பனைத் திறனாய்வுகளை எதிர்த்து இடைவிடாது தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறான். அவன் எப்பொழுதும் எதிர்ப்பைத் தடுக்க ஆயத்தமாகிறான். அவன் மற்றவர்களின் சொற்களையும் செய் கைகளையும் தனக்குத் திரையிடப்பட்ட குறிப்புகளாக விளக்கு கின்றான். நோயறிமுறை (diagnosis) வழக்குகளில் இவ்வகை யான புறத்தெறிதல் மனமாறுட்டத்திற்கு வழி வகுக்கலாம். இந்நிலையில் நோயாளி தன்னை ஏசும் குரலைக் கேட்கலாம்.

எனவே, புறத்தெறிதல் உட்காட்சி இன்மையைக் குறிக் கிறது. நாம் நேர்மையாக இருந்தால் நம் உள்ளேயே இக் குறைபாடுகளைக் கண்டறியலாம். நாம் நம் சொந்தக் குறை பாடுகளைக் கண்டறியலாம். கண்டறிந்தால் புறத்தெறிதலை மேற்கொள்ளத் தேவையிருக்காது. 1936ஆம் ஆண்டில்

சீயர்ஸ் (Sears) (20) புறத்தெறிதலை ஆய மிகச் சுவையான தொரு பரிசோதனை ஒன்றை நடத்திஞர். அவர் ஒரு மக்கள் குழுவைத் தங்களையும் குழுவின் மற்ற அங்கத்தினர்களையும் பின் வரும் பண்பியல்புகளான கருமித்தனம் (stinginess), முரண்டுப் பிடி (obstinancy), ஒழுங்கற்றத்தனம் (dis-orderliness), நாணத் தன்மை (bashfulness) ஆகியவற்றைத் தரமிடச் சொன்ஞர். அவர் குறிப்பிட்ட பண்புகளில் தன் தரமிடுதலையும் கூட்டாளி களால் அவனுக்குக் கொடுக்கப்பட்ட சராசரி தரமிடுதலையும் ஒப்பிடுதலின்மூலம் உட்காட்சியின் புறவய அளவினை அடைய முயற்சித்தார். அவர் தனியன் மற்றவருக்களித்த சராசரித் தரமிடுதலின் அடிப்படையில் புறத்தெறிதலின் அளவினைக் கண்டுபிடித்தார். சீயர்ஸ் (Sears) பொதுவாக உட்காட்சியின் ஒப்புமையில் தங்களுள் உட்காட்சியில்லாதவர்கள் தங்கள் பண்புகளை மற்றவர்களுக்கு அளிப்பதாகக் கண்டுபிடித்தார். தன் தரமிடுதலில் திறமையுள்ளவர்கள் எதிரான பண்புகளைத் தங்கள் கூட்டாளிகளுக்குச் சாட்டினர் எனக் கண்டுபிடித்தார். எடுத்துக்காட்டாகத் தங்கள் சொந்த இணங்காத மனநிலைகளை உணர்ந்த மாணவர்கள் மற்றவர்களுடைய பண்புகளை நெகிழ் வுடையதாகவும், ஒப்புக்கொள்ளக்கூடியவையாகவும் நோக்க முற்பட்டனர். மேலும், சீயர்ஸ் (Sears) உட்காட்சியுடைய மக்கள் கருமித்தனத்தையும் முரட்டுத் தன்மையையும் குற்றம் கண்டுபிடிக்கக்கூடியவையாகக் கருதவில்லையெனக் கண்டார். உட்காட்சியில்லாதவர்கள் தாம் இவ்வாருன பண்புகள் உள்ள வர்களைக் குற்றம் கண்டுபிடிக்கத் தகுந்தவஞக நோக்க முற் பட்டனர்.

எனவே, நாம் தங்களுக்குள் உட்காட்சியுடையவர்கள் புறத் தெறிதலை அடக்கியாள முற்பட்டனர் என அறிகின்ரேம். நாம் இப்போது தன்னறிவின் வற்புறுத்தல் கிழக்கு நாடு களிலும் மேற்கு நாடுகளிலும் உள்ளதைப் புரிந்துகொள்கிரேம். தன்னறிவுள்ள ஆழ்ந்த தன்னுட்காட்சியுள்ள சமூக இடை வினைகள் மிக மெய்சார்புற்றதாகவும் புறவயமாகவும் படு கின்றன.

## மேற்கோள் நூற்பட்டியல்

1. MACIVER and PAGE, — *Society*. Macmillan, 1952.

2. MANHEIM, — *Man and Society in an Age of Reconstruction*. 1940.

3. KIMBALL YOUNG, Routledge and Kegan Paul, 1948. — *Handbook of Social Psychology.*

4. PAVLOV, Oxford University Press, 1927. — *Conditioned Reflexes.*

5. WATSON, (Carl Murchison, Ed.) Clark University Press, 1926. — *Psychologies of* 1925.

6. F. H. ALLPORT, Houghton Mifflin, 1924. — *Social Psychology.*

7. HOLT, 1934. — *Animal Drive and Learning Process.*

8. MURPHY and NEWCOMB, Harper, 1937. — *Experimental Social Psychology.*

9. BRITT, Rinehart, 1947, — *Social Psychology of Modern Life.*

10. MCDOUGALL, Methuen. — *Social Psychology.*

11. G. H. ALLPORT, (Lindzey, Ed). — *Handbook of Social Psychology. Vol. I.*

12. KRECH and CRUTCHFIELD, McGraw-Hill, 1948. — *Theory and Problems of Social Psychology.*

13. FARIS, Ronald, 1952. — *Social Psychology.*

14. SHERIF, 'An Experimental Study of Stereotypes', 1935, Vol. 29, — *Journal of Abnormal Social Psychology.*

15. LORGE, 'Prestige, Suggestion and Attitudes', 1936, 7, 386—402. — *Journal of Social Psychology.*

16. MOORE, 'The Comparative Influence of Majority and Expert Opinion', 32, 1921. — *American Journal of Psychology.*

17. DASHIELL, (Carl Murchison, Ed.) Clark University Press, 1935. — *Handbook of Social Psychology.*

18. COMBS and TAYLOR, 'The Effect of the Perception of Mild Degrees of Threat on Performance', 1952, 47, 420-4. — *Journal of Abnormal Psychology.*

19. COWEN, 'The Influence of Varying Degrees of Psychological Stress on Problem Solving Rigidity', 1952, 47, 512—19. — *Journal of Abnormal Social Psychology.*

20. SEARS, 'Experimental Studies on Projection', Vols. 6 and 8, 1936 and 1937. — *Journal of Social Psychology.*

# 7. சமூகத் தரங்களும், அங்கங்களும், சமூகநிலையும்

## (SOCIAL NORMS, ROLES AND STATUS)

**சமூகத் தரங்கள்** (Social Norms)

மனிதர்களின் இடைவினைகளின் போக்கிலே சமூகத்தின் தரங்கள் வளர்ச்சியடைந்து குழுவினர்க்குள்ளேயும், குழுவினங்களிடையேயும் நடத்தையை ஒழுங்குபடுத்துகின்றது. ஷெரிஃப் (Sherif) என்பார் கூற்றுப்படி 'ஒரு சமூக மதிப்பு அல்லது தரம், குறிப்பிட்ட குழுவின் திட்டமிட்ட நிகழ்ச்சிகளின் சில விளைவுகளைக் கொண்ட அம்சங்களின் தொடர்பில் மனித இடைவினையால் (human interaction) ஒரு நிலைபடியாக்கப் பெறுகின்றது (Standardized)' (1-27). எனவே, சமூகத் தரம் என்பது பொதுமையாக்கல் (generalization) எனலாம். மேலும், இது பற்றுதல் கொண்டதொன்றாகும். இது மதிப்புத் தீர்ப்பினையும் உள்ளடக்கியது. இதனால் ஒரு செயல் ஏற்கப் பெற்றதாகவும் ஏற்கப்பெறாததாகவும் அமைகிறது. இஃது ஓர் இலட்சியமாகக் கொள்ளப்பெறுகின்றது அல்லது கண்டிக்கப்பெறுகின்றது. எனவே, மனிதனின் செயல்களின் பொதுமைக் கருத்து நிலையிலும் (conceptual level), மொழியினைப் பயன்படுத்துதலினாலும் சமூகத் தரங்களை அமைத்தல் இயல்கின்றது. சமூகத்தின் தரங்கள் ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு மொழியின் வாயிலாக ஊடனுப்பப் (transmitted) பெறுகின்றன. எனவே, ஒவ்வொரு குழுவின் முன்னைய நடத்தை நிகழ்கால நடத்தையைப் பாதிக்கின்றது. முன்னைய தலைமுறையின் ஒரு நிலைப்படியான (standard) பொதுமையாக்கல்கள் (generalizations) தற்போதைய தலைமுறையின் நடத்தையைப் பாதிக்கின்றன.

சமூகத் தரம் என்பது சமூக ஒருநிலைப்படிகள் (standards), வழக்கங்கள், மரபுவழக்குகள் (traditions), விதிகள், நாட்டவர் வழிகள் (folkways), காலப் பாணிகள் (fads), காலக் கோலங்கள் (fashions) ஆகியவற்றைத் தன்

னகத்தே கொண்டதாகும். சுருங்கக் கூறின், காலப்பாணிகளும், காலக் கோலங்களும் அடிக்கடி மாறுவது போன்று சில சமூகத் தரங்கள் மாறும் தன்மையனவாக (transitory) இருக்கின்றன. நீண்டகாலமாகச் செயல்படுகின்ற சில சமூகத் தரங்களானது வழிகள், வழக்கங்கள், மரபுவழக்குகள் போன்று குழுவின் வாழ்க்கையில் வேரூன்றியிருக்கின்றன. இறுதியாக, சமூகத் தரங்கள் படைப்பினைச் சார்ந்தவையாகவும் (creative), ஆக்கச் சார்பானவையாகவும் (constructive) இருக்கின்றன. சில தனியன்கள் அல்லது குழுவினர், குழு வழக்கங்களின் அடிப்படையிலும் மரபு வழக்குகளின் அடிப்படையிலும் அமைந்த புதிய ஒருநிலைப்படிகளையும் (standards), புதிய சமூக மதிப்புகளையும் (social values) உண்டாக்கலாம். இதனுல் குழுவை ஆக்கச்சார்பான வழியில் முன்னுக்கு இட்டுச்செல்ல வழி அமைகிறது. மகாத்மா காந்தியும் (Mahatma Gandhi), விஞேபா பாவேயும் (Vinobha Bhave) ஒரு குறிப்பிட்ட சமூக மதிப்புகளுக்கு அவர்களுடைய ஆக்கச் சார்பான அணுகுதலின் (approach) வாயிலாக இந்திய வாழ்க்கையை மிகுதியாக மாற்றினர் என்பதை நாம் அறிவோம். ஆனுல் அவர்கள் இந்தியாவின் செயலறிவுகளையும் (experiences) மரபு வழக்குகளையும் சமூக மதிப்புகளுக்கு அடிப்படையாகக் கொண்டதால், இம் மாறுதல்கள் படிப்படியான வழியில் ஏற்கப்பெற்றன. அவர்களது தரங்கள் வேர்நிலையானதெனினும், அவர்களது வாழ்க்கையின் வழியினை முழுதும் மாற்றியதாக இவை தனியனுக்குக் காணப்படவில்லை. இந்தியர்கள் தங்களுடைய மரபு வழக்கமான வாழ்க்கையைத் தொடர்ந்து சிறிது மாற்றங்களுடன் நடத்துவதாக நினைத்தனர்.

சமூகத் தரங்கள் மதிப்பிடக் கூடியவை (evaluative). அவை மனிதர்கள், பொருள்கள் அல்லது நிலைமைகள்பற்றிய ஒரு குறிப்பிட்ட நடத்தை வகைகளின் மதிப்பீட்டை உள்ளடக்கியவை. நடத்தையின் எதிர்பார்ப்புகளைக் (expectations) கூட அவை அமைக்கின்றன. மற்றத் தனியன்கள் ஒரு தனியன் ஒரு குறிப்பிட்ட வழியில் நடக்க வேண்டும் என எதிர்பார்க்கின்றனர்.

சமூகத் தரங்கள் நடத்தையின் ஒவ்வொரு தன்மைபற்றியும் அமைக்கப்பெறவில்லை. குழு வாழ்க்கையின் சில பகுதிகளுக்குத் தரங்களாக அமைந்தவை அக் குழுவினைப் பாதிப்பதாகவும் அமையலாம். குழுவின் முதன்மையான நோக்கங்களையும், இலக்குகளையும் (goals), ஒரு குழுவுடன் மற்றக் குழுக்களுக்குள்ள தொடர்பினையும் இது சார்ந்துள்ளது.

சமூகத் தரத்தின் மற்ருெரு சிறப்புக்கூருனது பரந்த நோக்கத்திற்கு மிகுதியான அளவு இடம் அளிக்கின்றது என்ப தாகும். ஷெரிஃப் (Sherif) என்பார் குறித்துள்ளவாறு, 'சமூக மதிப்புகள் அல்லது தரங்கள் (social values or norms), ஒரு கருத்தினையோ நடத்தையின் ஒரு தனியான வழி யினையோ பெரும்பாலும் குறிப்பனவல்ல. அனைத்துப் பொதுமைக் கருத்துகளைப் (concepts) போன்றே தரங்கள் குழுவின ரால் அனுமதிக்கப்பெற்ற (tolerable — அனுமதிக்கப்பட்ட-permissible), நடத்தையின் வீச்சினைக் (range) கொண் டன. அனுமதிக்கப்பெற்ற நடத்தையின் வீச்சு (range of tolerable behaviour) தெளிவான தன்மையில் அல்லது அனுமதிக்கும் தன்மையில் (specificity or permissiveness) ஒரு தரத்தில், பொருளின் முக்கியத்துவம்பற்றியும், குழுத் தலைமையில் (group heirarchy) ஒரு குறிப்பிட்ட உறுப் பினரின் இடம்பற்றியும், பரவலாக மாறுதலடைகின்றது' (1.171). சில்லறை விஷயங்களில் அனுமதிக்கப்பெற்ற நடத் தைகள் மிகுதியானவை. ஆனல் குழுவின் வாழ்க்கை (existence), நிலையான தன்மையும்(stability)பற்றிய இன்றியமை யாத விஷயங்களில் குழுவினரின் வீச்சு (range) குறுகிய தாகும். எனவே, சமூகத் தரங்கள் இருப்பதால் சமூகத்தின் நடத்தை உறுதியானது என்று பொருள்கொள்ளல் முடியாது. இது பெருமளவுக்கு விரிவுக்கும்(latitude) மாறுமியல்புள்ள தன்மைக்கும்(variability) இடமளிக்கின்றது. குறிப்பாக இக்காலத்தில் வேறுபாடுகொண்ட சமூகங்களில் ஒரு தனியன் பல்வேறு குழுக்களைச் சேர்ந்தவனுக இருக்கின்ருன். இக் குழுக்கள் முரண்பட்ட அல்லது பொருத்தமற்ற தரங்களையும் உடையதாக இருக்கலாம். ஒருவன் தன் குடும்பத்தின் காரண மாக ஒரு குறிப்பிட்ட சமய நிறுவனத்தைச் சேர்ந்தவனுக இருக்கின்ருன். அவனுடைய தொழிலின் காரணமாக மற்ருெரு வகையான நிறுவனத்தைச் சேர்ந்தவனுக இருக்கின்ருன். அவனது செல்வத்தின் காரணமாக, உயர்ந்த தரத்தினையுடைய பொழுதுபோக்குக் குழுவில் (club) அவன் உறுப்பினனுகலாம். இக் குழுக்களனைத்தும் ஒரே வகையான தரங்களை மேற்கொள்ளா மல் இருக்கலாம். இது தனியனின் உள்ளத்தில் ஒரு போராட் டத்தினை விளைவிக்கலாம். ஒரு குறிப்பிட்ட நிறுவனங்களுடன் தொடர்புகொள்வதைத் தவிர்ப்பதன் மூலம் அவன் இப் போராட்டத்தைத் தவிர்க்க முயற்சிக்கலாம், அல்லது வேறுபட்ட குழுக் கோரிக்கைகளுக்குப் பொருந்தி அமைத்துக்கொள்வதன் மூலம் அவனது நடத்தையில் ஒரு குறிப்பிட்ட பொருத்தப் பாடுகளை ஏற்படுத்த முயற்சிசெய்யலாம்.

முறையிணையா அமைவுற்ற குழுக்களிலும் (informal organized groups) கூடச் சமூகத் தரங்கள் உருவாகலாம். சான்ருகத், தெருவில் கூடுகின்ற சிறுவர்களின் கூட்டாளிக் குழுக்கள் (street corner boys gangs) அவற்றிற்கான விதிகளையும் ஒழுங்குமுறைகளையும் உண்டாக்கிக்கொள்ளலாம். இதுபோன்றே அமைவுற்ற சமூகத்திற்குக் (organized society) எதிராகக் கிளர்ச்சி செய்கின்ற குழுக்கள் தங்களுக்கெனத் தரங்களை அமைத்துகொள்ளலாம். சான்ருக அரசியல்-புரட்சி செய்கின்ற குழுக்கள் (political revolutionary groups) மிகவும் கண்டிப்பான சமூகத் தரங்களை உடையவையாக இருக்கலாம். திருடர் குழு அல்லது கொள்ளைக் கூட்டத்தார்களும் கூடத் தங்களுக்கெனத் தரங்களை ஏற்படுத்திக்கொள்கின்றனர். மேலும், உண்மையான இக் குழுக்களிடையே அனுமதிபெற்ற நடத்தையின் வீச்சு (range of tolerable behaviour) மிக மிகக் குறுகியதாக இருக்கலாம்.

ஒரு குழுவின் தரங்கள் குழந்தைகளின் விளையாட்டு விதிகளைப்போன்று முறையிணையாததாக (informal) இருக்கலாம். அல்லது ஒருநிலைப்படியான (standardized) விளையாட்டுகளான வரிப்பந்து (tennis), மட்டைப்பந்து (cricket) மற்றும் இதுபோன்ற விளையாட்டுகளில் உள்ளதுபோன்று எழுதப்பெற்ற விதிகளாகவும் சட்டங்களாகவும் தொகுக்கப்பெறலாம். இதுபோன்றே கிராமத்தினர்க்கு இடையேயுள்ள குழு நடத்தையின் தரங்களும், சாதிக் குழுக்களுக்கு இடையேயுள்ள தரங்களும் எழுதப்படாமல் இருப்பதை நாம் காண்கிரேம். இஃது இவ்வாறிருக்கும்போது, குழு அதற்கே உரித்தான எழுதப்பெற்ற விதியையும் அரசியலமைப்பையும் பெற்று இருக்கலாம். பிரிட்டனில் (Great Britain) எழுதப்பெருத அரசியல் அமைப்பும், இந்தியாவில் எழுதப்பெற்ற அரசியலமைப்பும் (constitution) கொண்டுள்ளது நமக்குத் தெரிந்ததே. பொருளாதார விஷயங்களிலும்கூட எழுதப் பெற்ற விதி அல்லது எழுதப்பெருத விதியினுல் தரங்கள் ஒழுங்குப்படுத்தப்பெறுகின்றன என்பதை நாம் காண்கிரேம். நாம் கடன்பெற்ற பணத்தைத் திருப்பிச் செலுத்துவதற்கான ஒரு வாக்குறுதி, ஒரு வாய்மொழி வாக்குறுதியாக அல்லது சாதாரண ஒரு துண்டுத் தாளில் எழுதப்பெற்ற அல்லது அஞ்சல் தலையொட்டிய தாளில் எழுதப்பெற்ற வாக்குறுதியாக இருக்கலாம். எனவே, சமூகத் தரங்கள் ஓர் எழுதப்பெற்ற அமைவுற்ற அமைப்பினைக் கொண்டதாக இருக்கலாம். அல்லது அவை எழுதப்பெருததாக இருப்பினும் மிக வலிமையுள்ளதாக இருக்கலாம்.

ஒரு குழுவுக்கு எழுதப்பெற்ற விதிகள் இல்லையெனில் சமூகத் தரங்களை அது பெற்றுள்ளது என்பதை நாம் எவ்வாறு அறிவோம்? ஃபிரீடுமேனும் (Freedman) அவரது சகாக்களும் குறிப்பிட்டவாறு (2), குழுவிலுள்ள தனியன்களின் நடத்தையை உற்று நோக்குதலின்மூலம் வெவ்வேறு தனியன்களின் நடத்தையில் வியக்கத்தக்க ஒற்றுமைகளைக் காணலாம். சிலர் சொற்களால் வெளியிடமுடிவதோடு அவற்றைக் குழுவின் ஒருநிலைப்படிகளாகக் குறிக்கின்றனர். அல்லது அவர்கள் அவ்வாறு செய்ய முடிவதில்லையெனினும் அவர்கள் இத் தரங்களுக்கு உட்பட்டு நடக்கின்றனர். இரண்டாவதாக, குழு ஒரு குறிப்பிட்ட இசைவாணைகளைக் (sanctions) கொண்டதாக இருப்பதை நாம் காணலாம். குழுத்தரத்துக்கு ஒத்தியங்கும் (confirmity) நடத்தைப் பாராட்டுதலைப் பெறுகின்றது; குழுத்தரத்துடன் உடன்பாடற்ற நடத்தைக் கண்டிக்கப் பெறுகின்றது. குறிப்பிட்ட குழுவின் தரங்களுக்கேற்ப நடக்கும் ஒரு தனியன் புகழப்படுகின்றான்; தன் மதிப்பையும் உணர்வறிவையும் பெறுகின்றான். இதற்கு மாறாகக் குழுத் தரங்களிலிருந்து விலகி நிற்கும் தனியன் இகழ்ச்சிக்கு உள்ளாவதுடன் தண்டிக்கவும் பெறுகின்றான்.

சமூகத் தரங்கள் முறையமையாததாக இருப்பினும் மிகவும் ஆற்றல் உடையதாகக் காணப்படுகின்றது என்பதனை ஒரு கவனமான ஆய்வு வெளிப்படுத்தும். தொழிற்சாலையில் ஒரு குழுத் தொழிலாளர்கள் உற்பத்தியில் ஒரு குறிப்பிட்ட தரத்தினை அமைக்கலாம், இந்த எல்லைக்கு மேலாக எந்தத் தனியன் உற்பத்தி செய்கின்றானோ அவன் ஏளனம், பின்வாங்குதல் அல்லது உடற் தண்டனைகள் ஆகிய பல்வேறு வழிகளில் குழுவினால் தண்டிக்கப் பெறுகின்றான். குழு நடத்தைக்கு உடன்பட்டு அவன் நடக்க வில்லையெனில் அவன் மிகவும் வருந்தத்தக்க வாழ்க்கையைப் பெறுவான் என்பதைக் குழு அங்கத்தினன் உணர்கின்றான். அவன் உடன்பட்டு நடந்தால் குழுவின் மற்ற உறுப்பினர்களிடத்திலிருந்து ஏற்பு அல்லது புகழ்ச்சியையும் அன்பையுங்கூடப் பெறுகின்றான். ஒரு தொழிற்சாலைத் தொழிலாளர்களிடையே மட்டும் இந் நிலை காணப்படுவதோடன்றிப் பள்ளி ஆசிரியர்களிடையேயும் அல்லது மருத்துவநிலையத்திலுள்ள மருத்துவரிடையேயுங்கூட இதே நிலைமைதான் காணப்படுகின்றது. பள்ளிக்கு வருகின்ற பயிற்சி மேற்கொண்ட ஆசிரியன், அவன் ஆசிரியர் கல்லூரியில் கற்ற கல்வி முறைகளைத் தான் பணிபுரியும் பள்ளியில் கடைப்பிடிக்க முயற்சிசெய்யலாம். சிறிது காலத்துக்குள் இத்தகைய பயில்

முறைகளை (practices) அவன் பின்தொடர்ந்தால் குழுவில் அவனுடைய நடத்தை அனுமதிக்கப் பெருததாக இருப்பதைக் காண்கின்ருன். இறுதியாகப், பெரும்பாலான ஆசிரியர்களும் பள்ளியிலுள்ள குழுத்தரங்களுக்கு உடன்பட்டு நடப்பதன் வாயிலாக இதற்கு முடிவுகட்டுகின்றனர். சிறந்த இலட்சிய முள்ளவர்கள் பள்ளியைவிட்டு நீங்குதலின் வாயிலாகவோ, முன்னேற்றக் கருத்துகள்கொண்ட மற்ருெரு பள்ளிக்குச் செல்லுதலின் வாயிலாகவோ, அவர்களே ஒரு புதிய நிலை யத்தினைத் (institution) தொடங்குவதன் வாயிலாகவோ இந்த நிலைமையினைத் தவிர்க்கலாம். மருத்துவநிலையத்தி லுள்ள மருத்துவரிடத்தே இதுபோன்ற ஒன்றுபட்ட நடத்தைக் காணப்படுகின்றது. குழுத் தரத்தினுல் அமைக்கப்பெற்ற இந்தத் தடையினுல் மருத்துவத் துறையில் (medicine) அல்லது அறுவை மருத்துவத்தில் (surgery) புதிய பயில்முறைகள் (practices) எளிதாகப் பரவுவதில்லை. அண்மை ஆண்டு களில் ஒவ்வொரு பிரிவிலும் ஆராய்ச்சிக் குழுக்கள் (research units) அமைப்பதன் மூலமும், ஆராய்ச்சி அறிவிதழ்களை (research journals) வெளியிடுவதன் மூலமும், அவற் றைப் பயன்படுத்துதலின் மூலமும் புதிய பயில்முறைகளை யும் (practices) முன்னேற்றப் படிகளையும் தடுக்கின்ற இத் தன்மை யுடைய தடையைக் குறைக்க அல்லது விலக்க முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன. நாட்டில் வேளாண்மையில்(agriculture) முன்னேற்ற முறைகளைப் பின்பற்றுதலில் ஒரு பெரும்பகுதி யான தொல்லை சமூகத் தரங்களின் காரணமாகவே ஏற்படுவ தாகும். புதிய நுண் முறைகளைக் (techniques) கற்ற ஓர் இளம் குடியானவன் தன் கிராமத்துக்குச் சென்று இப் புதிய நுண்முறைகளைப் பயன்படுத்த முயற்சி செய்யும்போது, அவன் வெறுப்புடனும், ஏளனத்துடனும் நடத்தப் பெறுவதைக் காணலாம். அவனுடைய முறைகள் குழுவின் மற்ற உறுப்பினர் களால் ஏளனம் செய்யப்படுகின்றன. இம் முறையில் வெற்றி யடைய ஒரே வழி ஹோப்லி (Hobli) அல்லது டெசில் (Tehsil) வகுப்பிலுள்ள முன்னேற்றத் தன்மையுடைய குடியானவர் களின் ஒத்துழைப்பினுல் இயக்கப்பெறும் ஆராய்ச்சிக் குழுக்களை அமைத்தலாகும்.

எனவே, விலக்கம் (deviation) குழு நலத்திற்காக இருப் பினும் அல்லது இல்லாவிடினும் தரத்திலிருந்து விலக்கங்கள் குழு உறுப்பினர்களால் தடுக்கப்படுகின்றன. இது மாறுதல் ஏற்படுவதற்குள்ள தடைக்கு அடிப்படையாகும். தரங்களுக்கு ஏற்ற உடன்பாட்டினைப் பெறுவதற்காகக் குழு உறுப்பினர்

களால் எல்லாவகையான முயற்சிகளும் செயல்படுத்தப்படு கின்றன. மேலும், இம் முயற்சிகள் தரங்களின் இருப்பினைக் (existence) கூடக் குறிக்கின்றன. ஒரு தனியன், தரத்தினைக் கொண்டுள்ள குழு உறுப்பினனாகை இருக்கும்பொழுது மட்டுமே உடன்பாடும் விலக்கமும் பொருளுள்ளவை என்பது வெளிப் படையாகத் தெரிந்ததாகும். குழு ஓர் அயலானிடமிருந்து அதன் தரங்களுக்கு உடன்பாட்டினை அவனிடமிருந்து எதிர் பார்ப்பதில்லை. குழுவின் ஒற்றுமை, அதன் தரத்தினால் குறிப் பிட்ட வீச்சுக்குள்(range) அடங்கிய குழுவின் உறுப்பினர் களின் நடத்தையினால் குறிக்கப்படுகின்றது. ஆனால், உடன் பாட்டுக்கு ஒளிவு மறைவற்ற அழுத்தங்கள் (overt pressures) அல்லது வலுவந்தம் (coercion) ஓர் இன்றியமையாத சிறப்புக் கூறாக இருப்பின், குழுவின் ஒற்றுமை (solidarity) மிகவும் தாழ்ந்த நிலையில் இருப்பதை இது குறிக்கின்றது.

## சமூகத் தரங்களை அமைத்தல்
## (The Formation of Social Norms)

சமூகத் தரங்கள் எவ்வழியில் உண்டாகின்றது என்ற வழியை ஆய்வதன் மூலம் சமூகத் தரங்களின் தன்மையை அறிந்துகொள்ள சமூகத் தரங்களின் அமைப்புப்பற்றிய ஒரு படிப்பு மிகவும் பயனுடையதாகும். மேலும், தர அமைப்பின் (norm formation) ஆய்வின்மூலம் ஒரு தனியன் சார்ந்துள்ள குழுவின் ஒருநிலைப்படியான (standard) மதிப்புகளையும் (values), அவாவு நிலைகளையும் (aspirations) அவன் எந்தச் செயன்முறைகளின் வாயிலாகப் பெறுகின்றான் என்பதை மேலும் நாம் அறிந்துகொள்ளலாம். வளரும் குழந்தைக்கும், அமை வுற்ற குழுவின் (organized group) ஒரு புதிய உறுப்பினனுக்கும், சமூகச் சீர்திருத்தங்கள் முதலில் புறம்பானதாக இருக்கின்றது. தரங்கள், மற்ற மக்களின் செயல்களினாலும் சொற்களினாலும் வெளிப்படுத்தப்படுகின்றது. 1932ஆம் ஆண்டு ஸ்விஸ் உளவி யலாரான (Swiss psychologist) பியாகே (Piaget) என்பார் ‘சரி’, ‘தவறு’ ஆகிய குழந்தைகளின் எண்ணங்களது வளர்ச்சி பற்றிய தனது ஆய்வுகளை வெளியிட்டார் (3). அவர் குழந்தை யின் அறநெறி ஒழுக்கம், வளர்ச்சியின் பல்வேறு நிலைகளின் வாயி லாகச் செல்கின்றது எனக் காட்டினார். அவர் குழந்தைகள் கோலி (marbles) விளையாட்டினைக் கற்கும் வழியை ஆய்ந்தார். பியாகே (Piaget) சரி, தவறு ஆகியவற்றின் துலங்கலில் நான்கு படிகளைக் கண்டார். சிறு குழந்தைகள், பெரிய சிறுவர்கள் அவற்றை விளையாடுதலைப் பார்த்துக்கொண்டிருப்பதன்மூலம் முதலில்

கோலிகளை விளையாடத் தொடங்குகின்றனர். யார் வெற்றி பெற்றார்கள் என்று கேட்கும்பொழுது ஒவ்வொருவரும் வெற்றி பெற்றதாகக் கூறுகின்றனர். சுருங்கக் கூறினால் குழந்தை விளையாட்டை நன்கு அனுபவிப்பதோடு, வெற்றியும் தோல்வியும் பற்றிய அல்லது சரியான, தவறான முறைகளைப்பற்றிய எவ்வித மான தீர்ப்பையும் ஏற்படுத்துவதில்லை. குழந்தை 4-5 வயதில் இருக்கும்போது விளையாட்டின் விதிகளைக் கற்பதுடன் உறுதியாக அவற்றைக் கடைப்பிடிக்கவும் செய்கின்றான்.

இரண்டாவது படியில், கோலிகளைப்(marbles)பற்றிய நோக்கத்தினைப் போன்றே அறநெறி விதிகளும் நோக்கத்தினுடைய தாக இருக்கின்றன. ஒவ்வொன்றும் நோக்கத்தில் சரியாக இருக்கின்றது அல்லது தவறாக இருக்கின்றது. இவைதவிர, கோலிகளை வேறுவழியில் விளையாட இயலாது. பியாகே (Piaget) இந்தப் படியை அறநெறி மெய்மை (moral realism) உடையது எனக் கூறுகின்றார். கோலிகளை விளையாடுவதில் மற்ற இடங்களில் உள்ள குழந்தைகள் வேறுபட்ட விதிகளைக் கொண்டுள்ளார்கள் என்று ஒரு குழந்தை கூறப்பட்டால் அதை அவன் புரிந்துகொள்வதில்லை. அவனைப் பொருத்தவரை அவர்களின் கோலிகளின் உண்மையான விளையாட்டை விளையாடுவதில்லை.

மூன்றாவது படியில், அஃதாவது குழந்தை 7-8 வயதாக இருக்கும்போது அவன் விதிகள் மனிதர்களால் ஆக்கப்பெற்றவை என்பதை அறியத் தொடங்குகின்றான். அதனால் அவன் விதிகளை, மனித விருப்பங்களுக்கும் தேவைகளுக்கும் அப்பாற்பட்ட உறுதியானதும், முழுமையானதுமாகக் காண்பதில்லை. ஆனால் மனிதத் திட்டத்தினால் ஏற்படுத்தப்பட்ட ஒழுங்கமைப்புகளாகக் காண்கின்றான். இதனால் எது சரியானது, எது சரியற்றது என்ற அவனது முழுக் கருத்தினை மாற்றுகின்றான். எனவே, குழந்தை மற்றக் குழந்தைகளின் இடைவினையினால் முதிர்ச்சியடைவதுடன், அவன் பரிமாற்றத்தன்மை (reciprocity) எண்ணத்தினைப் பற்றுகின்றான். பரிமாற்ற இடைவினையின் (reciprocal interaction) செயன்முறையில் தரங்கள், ஒன்றுக்கொன்றான உடன்பாட்டின் அடிப்படையில் அமைந்தது என்பதைக் குழந்தை உணர்கின்றது. அவன் மேலும் விதிகளை மாற்ற முடியும் என்பதையும், புதியவற்றை உண்டாக்கவும் முடியும் என்பதையும் உணர்கின்றான். நான்காவது படி, இளையோர் பருவத்தில் காணப்படுகின்றது. பரிமாற்றத்தன்மை எப்போதும் நிகழக்கூடியதன்று என்பதைச் சிறுவன் உணர்கின்றான். பரிமாற்றத்தன்மை (reciprocity) ஒவ்வொருவரும் நீ விளையாடுவது போன்று இதே

வழியில் விளையாடுவாரெனில் நீ கோலி விளையாட்டை நீ விரும்பிய எந்தத் தோரணையிலும் விளையாடலாம் என்ற உணர்வைச் சார்ந்ததாகும். இவ் விதி அனைவருக்கும் உடன் பட்டு இருப்பின் அந்த விதி தகுதியானதாகின்றது. ஆனால், சில தனியன்களுக்கு இவ் விதிகளைப் பயன்படுத்த முடியாது. பரிமாற்றத் தன்மை நேர்மையான ஆராய்வுகளினால் பக்குவப் படுத்தவேண்டும். அதாவது சிறப்பான நிகழ்ச்சிகளை நினைவுகூர் தலையும், ஒரு கொடுக்கப்பட்ட தனியனின் தனிச் சிறப்பினைக் குறிக்கும் சிறப்புத் தேவைகளையும் கூறலாம். எனவே, இந்தப் படியில் தனக்குள்ளதைப்போன்றே மற்ற மக்களும் இதே உரிமை களை உடையவர்களாக இருக்கின்றனரென்பதை உணர்வதோடு மட்டுமன்றி, மற்ற மனிதனின் நிலைமை அவனுடைய நிலைமையி னின்றும் வேறுபட்டது என்று உணர்கின்ற தேவையினையும் பற்று கின்றான் (grasps). இஃது அறநெறி ஒழுங்கு தன்முனைப் பானதன்று. ஆனால், தனிமுறைக் காரணியைச் (personal factor) சார்ந்ததாகும் என்று கூற அவனை இயலச்செய்கின்றது.

வீட்டில் ஒரு குழந்தையின் 'சரி', 'தவறு' ஆகிய எண் ணங்கள் வளர்ச்சியின் ஓர் ஒருமித்த செயன்முறையினைப் பின் பற்றிச் செல்கின்றதெனப் பியாகே (Piaget) என்பார் காட்டி யுள்ளார். ஒரு பெண் தன்னையறியாமல் ஒரு தட்டுக் கோப் பைகள் மேல் (tray of dishes) மோதி அவற்றை உடைத்தால் அவளை என்ன செய்யவேண்டுமென ஒரு குழந்தையைக் கேட்கப் பட்டதில், அவள், அந்தப் பெண்ணைத் தண்டிக்க வேண்டும் என்று கூறினாள். மேலும், எத்தகைய தண்டனையை அவளுக்குக் கொடுக்கப்படவேண்டும் என்று அவளைக் கேட்டபோது, கொடுக் கப்படும் தண்டனை அவள் உடைத்த தட்டுகளைச் சார்ந்தது எனக் கூறினாள். எனவே, ஒரு குழந்தை இவ் வயதில் தவறு செய்வது என்பது புறவயமானதொன்றும் இதனை ஏற்பட்ட சேதத்திலிருந்து அளவிட முடியுமென அறிகிறது. அகவய ஆராய்வுகள், குழந்தையின் உள்நோக்கங்கள், மேலும் அவள் வேண்டுமென்றே தட்டுகளை உடைத்தாளா, இல்லையா என்று காணுதல் போன்றவை இந் நிலையில் தகுதியற்ற ஒன்றாகும். அவள் 6 அல்லது 7 வயதடைந்ததும் உடலியல் புறவயநிலைமை களுக்கு அப்பாற்சென்று ஏன் அந்தப் பெண் தட்டுகளை உடைத் தாள் என்று காண முயற்சிக்கின்றாள். இந்தப் புறவயச் செயல் உள்ளார்ந்த மனப்பான்மையின் வேறுபட்ட தன்மைகளிலிருந்து எழலாம். எனவே, பியாகே(Piaget)என்பார் சமூகத் தரங்கள் ஒரே போதில் பெறப்படவில்லை என்று குறிப்பிடுகின்றார். அவை வேறுபட்ட நோக்குகளையுடைய மக்களிடம் மிகுதியாகச் செய

லறிவு பெறுவதன் வாயிலாக இடைவினையின் ஒரு விளைவால் மெதுவாகவும், வேறுபட்ட தனியன்களின் தனிமுறைத் தேவைகளினாலும் ஏற்படுகின்றது.

## ஆய்வுக்கூடத்தில் தரத்தினை அமைத்தல்
(Norm Formation in the Laboratory)

1936ஆம் ஆண்டில் ஷெரிஃப் (Sherif) என்பார் எவ்வாறு தரங்கள் அமைக்கப்படுகின்றன என்று விளக்கிக்காட்ட ஒரு சோதனையைத் தோற்றுவித்தார். பொருட்தன்மை (objective) அமைப்பற்ற ஒரு தூண்டல் நிலைமையை அவர் பயன்படுத்தினார். அவர் இரண்டு பிரச்சினைகளை ஆராய்ந்தார். ஒன்று, தனித் தன்மையும் (individual) மற்றொன்று, சமூகத்தன்மையுமாகும். புறவயத் தூண்டல் நிலையில் எவ்வித ஒற்றுமையும் இல்லாத பொழுது பொருள்தன்மை ஓர் அமைப்பற்ற தூண்டல் நிலைமைப்பற்றித் தீர்ப்புக் கூறுமாறு கேட்கப்பட்டால், ஒரு தனியன் என்ன செய்வான்? இரண்டாவதாக, ஒரு குழு இத்தகைய நிலைகளில் எவ்வாறு எதிர்வினை புரியும்? அவர் இந்த ஆய்வுகளை நடத்தத் தானியங்கு (autokinetic) நிலைமையைப் பயன்படுத்தினார். ஒரு சிறு ஒளி முழுமையான இருட்டில் காட்டப்பெற்றால், இதில் கிடைக்கக்கூடிய செயலறிவு, ஒளி அனைத்துத் திசைகளிலும் ஒழுங்கற்று அசைவதுபோன்று தோற்றமளித்தாலும், ஒளியினைப் பார்க்கும் மனிதன், அவனுக்கும் ஒளிக்குமுள்ள தொலைவினைக் (distance) கணிக்க முடிவதில்லை. மேலும், ஒளி, அறையின் வெவ்வேறு இடங்களில் காணப்படுகின்றது. இஃது ஏனெனில், முழு அறையும் இருட்டாக இருப்பதால் ஒளி எந்த இடத்தில் இருக்கின்றது எனச் சரியாகக் கண்டுபிடிக்க முடிவதில்லை. எந்த ஒளி கண்டுபிடிக்கப்படவேண்டும் என்ற ஒரு குறிப்பும் இல்லை. இதன் விளைவாக ஒளி அசைவதுபோன்று தோற்றமளிக்கின்றது. இந்த நிலையற்ற அசைவு (apparent movement) ஒளி அசைவதில்லை என்று ஆட்படுநர் (subject) நன்கு அறிந்திருந்தபோதும்கூட ஏற்படுகின்றது. அசைவின்தன்மை தரங்களை அமைப்பதனை ஆய்வதற்கு ஒரு தன்மையளவுக் குறிப்பாகப் பயன்படுத்தப்படுகின்றது. ஒவ்வோர் ஆட்படுநரிடம் (subject) இருந்தும் 100 தீர்ப்புகள் பெறப்பட்டன. ஒளி 2 விநாடிகளுக்குக் காட்டப்பட்டது. இது பருப்பொருளாக நிலையானது (physically stationary). ஆட்படுவோர் ஒரு வீச்சினை ஏற்படுத்தத் தூண்டப்பெற்றனர் என்று இம் முடிவுகள் காட்டின. ஒவ்வோர் ஆட்படுநரும் தாமாகவே விரைவில் ஒரு தனிச் சிறப்பியல்பான தரத்தினை

அமைத்துக் கொண்டனர் என ஷெரிஃப் (Sherif) என்பார் கண்டார். சில ஆட்படுநர்கள் தங்களது அனைத்துத் தீர்ப்புகளையும் 1-லிருந்து 3 அங்குலம் வரையுள்ள வீச்சில் வெளியிட்டனர். மற்றவர்கள் 9-லிருந்து 11 அங்குலம் வரை எங்கு வேண்டுமானாலும் ஒளி அசைவதாக உணர்ந்தனர். தொலைவின் அசைவு பற்றிய தீர்ப்புகளுடன் தொடங்குதலில் இத் தீர்ப்பு மிகுதியும் வேறுபடுகின்றது. ஆனால், இதற்கு முன்னரே தன் அமைப்புப் பெற்ற (self-established) குறுகிய வீச்சு (narrow range) இருந்திருக்கின்றது. ஒரு தனியன் ஒரு சில திருப்பிக்காட்டல்களுக்குப்(repetition) பின்னர் ஒரு தொடர்பற்ற தூண்டலைக் கண்டறிந்தால் ஓர் எல்லையுள்ள வீச்சில் அவன் ஒரு தரத்தினை அமைக்க முடிகின்றது என இச் சோதனை காட்டியது. ஷெரிஃப் (Sherif) என்பார் தனியர்களுடன் கூட்டமாக இருக்கும்பொழுது அந்த நிலைமையில் எவ்வாறு தனியன் எதிர்வினை புரிகின்றான் என்று காண முயற்சித்தார். 20 ஆட்படுநர்கள் (subjects) தனிமை நிலையிலிருந்து (alone situation) தொடங்கினர். அவர்கள் தங்களது சொந்தத் தரங்களை அமைத்த பிறகு குழு நிலைமைக்கு உட்படுத்தப்பட்டனர். மற்றொரு பிரிவு 20 ஆட்படுநர்கள் குழு அமைவுகளுடன் (sessions) தொடங்கினர். பின்னர், அவர்கள் தனிமைக்கு உட்படுத்தப்பட்டனர். குழு அமைவுகளில், சில தருணங்களில் 2 பேரும், மற்றும் சில தருணங்களில் 3 பேரும் இருந்தனர். தனிமை நிலைமைகளில் தாங்களே தரங்களைச் சேகரித்தும் தனியன்களைக் குழுநிலைமைக்கு உட்படுத்தியதில் அவர்களது தீர்ப்புகளில் ஒரு நெருக்கம் (convergence) இருப்பது காணப்பட்டது. மேலும், குழுவுக்குப் புதிதான ஒரு தரம் உண்டாக்கப்பெற்றது. எனவே, தனியனது தரத்துக்கும் குழுத் தரத்துக்குமிடையே வேறுபாடு காணப்படுகின்றது. குழுநிலைமையில் தனியனின் தரம் எவ்வாறு இருப்பினும் ஒரு குழுத்தரம் அமைக்கப்படுகின்றது.

குழுநிலைமையில் தொடங்கப்பெற்ற தனியன்களின் வகையிலும் ஒருமித்த முடிவு காணப்பட்டது. அசைவின் தன்மையைப்பற்றி ஒவ்வொருவரும் அவர்களது சொந்தத் தீர்ப்பிலிருந்து தொடங்கினர். ஆனால், விரைவில் குழுத்தரம் அமைக்கப்படுகின்றது. அடுத்தபடியாக இந்தத் தனியன்கள் தனிமை நிலைமைக்கு உட்படுத்தப்பட்டபோது, குழுநிலைமையில் ஏற்படுத்தப் பெற்ற தரம் நிலையாக இருந்தது காணப்பட்டது. எனவே, புதிய குழுநிலைமையில் ஓர் இடைவினை ஏற்படுவதைக் காணலாம். மேலும், இவ் விடைவினையின் காரணத்தால் தரம் வெளிப்படுகின்றது. பின்னர் தனியன் தனியாகச் செயல் புரியும்

போதும் இந்த இடைநிலைத்துவ நிலைமையின் (interacting situation) விளைவு நிலைத்து நிற்கின்றது. சுருங்கக் கூறின் குழுத்தரம் ஒருமுறை ஏற்படுத்தப்பட்ட பின்னர் அது தனியன் களின் சொந்தத் தரமாக ஆகின்றது.

சமூகத்தரம் அல்லது குழுத்தரம் ஆதிக்கமுடைய மனித னால் ஏற்படுத்தப்பட்ட தரத்துக்கு ஈர்த்துச் செல்லுகின்றது என்பதை அவர் கண்டார். ஆனால், இத் தரம் ஒரு தனியாளின் ஆதிக்கத்தினால் மட்டும் ஏற்படும் விளைவன்று என்று ஷெரீஃப் (Sherif) என்பாரால் காட்ட முடிந்தது. குழுத்தரம் ஒரு முறை உண்டாக்கப்பட்ட பின்னர், தரத்திலிருந்து தலைவன் விலக்க மடைந்துவிடினும் குழு மாறுதலடைவதில்லை. எனவே, குழுத் தரம் ஒருமுறை உண்டாக்கப்பட்டுவிட்டால் அது மிகவும் சக்தி வாய்ந்த ஒன்றாக மாறிவிடுகின்றது. மற்றோர் ஆய்வில் (5) ஷெரீஃப் (Sherif) தனியன்களிடையே உள்ள தன்மதிப்புத் தொடர்கள் (prestige relationships) தரங்களின் மிகுதியான விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது என்று விளக்கிக் காட்டினார். ஆய்வின் ஆட்படுத்தப்பட்ட இரு தனியன்களில் ஒருவர் புதிய மனிதர்; மற்றவர் புதிய மனிதருடன் மிகுதியான தன் மதிப்புடைய ஆய்வாளரின் துணையாளர். புதிய ஆட்படுநர் சில ஒளி வெளிப்படுத்தல்களுக்குப் (exposure) பின்னர் அவளது சொந்தத்தரமாக 5 அங்குலத்தைக் குறிப்பிட்டாள். இதன் பின் னர் துணையாளர் 12 அங்குலம் என்று ஒரு தீர்ப்பினை வெளி யிட்டார். பின்னைய நிலைமையில் புதிய ஆட்படுநர் 8 அங் குலம்வரை தனது தரத்தை (standard) மிகுதிப்படுத்தினார், மேலும், துணையாளர் (collaborator), ஆய்வாளர் இப்போது அமைப்பினை மாற்றியுள்ளார். ஒளி 3 அங்குல வீச்சிலேயே அசைகிறது என்று விளக்கினார். இஃது ஒரு சுவையான நிலைமை யினை விளக்குகிறது. புதிய ஆட்படுநர் தமது தரத்தினை 12 அங்குலத்தில் இருந்து 3 அங்குலத்திற்கு மாற்றிச் சென்றாலும் கூட அவள் இந்த அமைவுகளில் (sessions) மிகுதியான எதிர்ப் பைக் காட்டினாள். மேலும், ஆய்வாளர்மீது பகைமையினை ஏற்படுத்துகின்றது. இந்தப் பகைமை மனப்பான்மையும், வெறுப் பும் மிகவும் நீண்ட காலத்துக்கு நிலைத்துநிற்கின்றது.

தனிமை நிலையில் தொடங்கிய, தங்களுக்கென்ற சொந்தத் தரங்களை ஏற்படுத்திக்கொண்ட தனியன்கள் குழு நிலைமைக்குப் புகுகின்றனர். அவர்களுடைய அகக் காட்சியறிக்கைகள் (introspective reports) சில தருணங்களில் அவர்கள் மற்றத் தனியர்களின் தீர்ப்புடன் பொருந்தி அமைக்கின்றார்கள் என்பதை

அறிவிக்கின்றன. ஆனுல், பெரும்பான்மையான தருணங்களில் தனியன்கள் அவர்கள் மற்றத் தனியன்களின் தரத்துடன் நெருங்கிச் செல்கின்றனர் என்பதை அறிவதில்லே என்பதைக் காட்டியுள்ளன. ஆனுல் தெரியும் தன்மை அல்லது தெரியும் தன்மையற்றநிலே இந்த நிலேமையினேப் பாதிப்பதில்லே. எந்த வகையிலும் குழு இடைவினே குழுத்தரம் வெளிப்படுவதற்கு வழியமைக்கின்றது. இந்த ஆய்வு நிலேயில் அக்கறைக்குரியது என்னவெனில் ஆட்படுநர்கள் குழுத் தரத்தை ஏற்படுத்துதற்காக எத்தகைய பொதுவான அக்கறை அல்லது அச்சுறுத்தலினுல் (threat) இசைவு செய்யப்படவில்லே. இடைநிலேத்துவ நிலேமை மட்டுமே குழுத் தரத்தினே ஏற்படுத்துதற்கும் அமைத்தற்கும் வழிவகுக்கின்றது. ‘இடைவினேயில் தனியன்களின் ஒரு பொதுத் தரத்திற்கான நெருக்கம் உடன்படுதலுக்கு ஒரு தாற்காலிகமான அடிப்படைத் தேவைபோன்று அல்லது உள்ளார்ந்த கருத்தேற்றுமை (inner suggestibility) போன்று எந்த ஒரு முதன்மையான காரணியினுலும் ஏற்படுவதன்று, ஆனுல், பொருள்தன்மையான தூண்டல் நிலேமையும் (objective stimulus situation) இடைவினேச் செயன்முறையும் ஆகிய தனியனிடத்து வருகின்ற எண்ணற்ற இடைத் தொடர்புள்ள காரணியினுல் ஏற்படுவதாகும் என்பது தெளிவு’ (1.266).

பிளேக் (Blake) என்பாரும், பிரெம் (Brehm) என்பாரும் பொதுவான தரங்கள் அறையில் மற்ற மனிதர்கள் உண்மையாக இல்லாதிருக்கும்பொழுதுகூட அமைக்கப் பெறுகின்றன என்று கண்டனர். அவர்கள் ஒரு நாடாவில் ஒலிப் பதிவுக் கருவியைப் (tape recorder) பயன்படுத்தி மற்ற மக்களின் தீர்ப்புகளே அதன் வாயிலாக வெளிப்படுத்தி, மேலும் அது யாருடைய குரல்களோ அவர்கள் அடுத்த அறையில் உள்ளனர் என்று ஆட்படுநருக்கு கூறப்பட்டது. இவ்வாறு குழுச் சூழ்நிலே குரலின் உதவியாலேயே உண்டாக்கப்படலாம். பல்வேறு கதைகளிலும் புராணங்களிலும் காணப்படும் கடவுள் குரலேப் பயன்படுத்தலால் அல்லது எங்கிருந்தோ கேட்கும் குரலேப் பயன்படுத்தலால் தனியன் நடத்தை மாறுகின்றது என்று கூறப்படுவதை அறிவோம். இதுபோன்ற தீவிரமான பழம் நினேவு இந்த நிலேமையில் ஏற்படுகின்றது. அறையில் தனியாக இருக்கும் ஒரு தனியனே வயப்படுத்துதற்கு வானெலி, தொலேக்காட்சி (television) ஆகியவற்றின் பயன்படுத்தலே இதற்குச் சான்ருக இன்று நாம் காண்கிருேம். எனவே, குழு நிலேமைக்கு அவசியமாக மனிதர்கள் உடனிருக்கத் தேவையில்லே என்பதனே வெளிப்படுத்துகிறது. இயல்பினரும் (normal), பிறழ்வினரும்

(abnormal) எங்கிருந்தோ வருகின்ற குரல்களினுல் வயப் படுத்தப்படுகின்றனர். ஷெரீஃப் (Sherif) என்பார் எவ்வாறு குழுத்தரம் தனியனுல் உளவயமாகத் தூண்டப்படுகின்றது என ஆய்வு வாயிலாகக் காட்டினுர். இதனுல் தனியனின் தலைமை நிலைமையில் இருக்கும்போதுகூடத் தரம் நிலைத்திருக்கின்றது என்று தெரிகிறது. ஷெரீஃப் எழுதுகின்றுர்: 'ஒருபடி சார் பெண்ணங்கள், காலக் கோலங்கள், வழக்கங்கள் (conventions), பழக்கங்கள் (customs), மதிப்புகள் (values) ஆகிய ஏற் படுத்தப்பெற்ற சமூகத் தரங்களின் உளவியல் அடிப்படையில் தனியன்களிடத்தில் உள்ள இடைவினையின் ஒரு மாற்ற விளைவாக உள்ள பொதுவான குறிப்புச் செய்திகள் அல்லது ஆதாரங்களை அமைத்தலாகும். ஒருமுறை இத்தகைய ஆதாரங்கள் தனியனுல் அமைக்கப்பெற்றுவிட்டால் அல்லது உள்மயமாக்கப்பெற்று விட்டால் அவன் பின்னர்த் தனிமையில் எதிர்ப்பீடும்—சமூக நிலைமையில் அல்லது மேலும் சமூகமற்ற நிலைமையிலும் அவனு டைய எதிர்வினைகளை நிருணயிப்பதில் அல்லது மாற்றுவதில் அவை முக்கியமான காரணிகளாக ஆகின்றது' (1.260).

தனியன்களும் குழுக்களும் அமைப்பற்ற நிலைமைகளை எதிர்ப் படும்பொழுது தனியனின் தரங்களும் குழுவின் தரங்களும் வெளிப்படுகின்றன என்பது ஷெரீஃப் என்பாரின் ஆய்வுப் பணியி லிருந்து வெளிப்படும் மற்ருெரு முக்கியமான உண்மையாகும். குழு நிலைமைகள் முக்கியமாக அமைப்பற்ற தன்மையினைச் சேர்ந்ததாக இருக்கின்றன. அங்கு வேறுபட்ட பழக்கங்களும், மரபு வழக்குகளும் (traditions), செயல்களும் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, நாம் என்ன உண்கின்ருேம், எவ்வாறு உண் கின்ருேம் என்பதைப்பற்றிக் கூறும்போது முழு நிலைமையும் அமைப்பற்று இருக்கிறது. மேலும், இதன் விளைவாகச் சமூகத் தரங்கள் வளர்ச்சியடைய நல்வாய்ப்பு இருக்கிறது. இது போன்றே மனிதநிலை வாழ்க்கையில் பல்வேறு நுணுக்கமான நிலைமைகளின்பாற்பட்ட பிறப்பு, திருமணம், இறப்பு, போர், கொள்ளைநோய் (pestilence) ஆகிய அமைப்பற்ற தன்மைகளைக் கூறலாம்.

உட்வொர்த் (Woodworth) என்பார் சமூகத் தரங்களின் முக்கியத்துவத்தை எவ்வழியில் ஒரு தனியன் தன் நடத்தை ஒழுங்குமுறையினை (code of conduct) உண்டாக்குகின்ருன் அல்லது எவ்வழியில் ஒரு தனியன் தன் குழுவில் ஒழுங்கு முறையைப் பின்பற்றுகிருன் என்பதில் நம் கவனத்தைத் திருப்பு தல் மூலம் சமூகத் தரத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகின்

ருர். எவ்வாறு குழுத்தரங்கள் தொடங்குகின்றன என்பதை அவர் காட்டியுள்ளார். எடுத்துக்காட்டாக, மேற்கத்திய சமூகத்தில் குறிப்பாக, அமெரிக்க சமூகத்தில் போட்டி (competition) வலியுறுத்தப்படுகின்றது. செல்வம் அல்லது ஆதிக்கத்தில் மற்றொருவரிடத்து மேம்படும் ஒரு தனியன் அவனுடைய உயர்வு மனப்பான்மையை வெளிப்படையாகத் தற்புகழ்ச்சி செய்து கொள்ளுகின்ருன். ஆனல், சான்ருக இந்தியாவில் சமூகத்தரம் வேறுபட்டதாக இருக்கின்றது. போட்டி வலியுறுத்தப்பெற்ருலும்கூட ஒரு தனியன் சமூக ஏற்பினையும், புகழ்ச்சியையும் ஊழியத்தின் வாயிலாகவும், பகையின் வாயிலாகவும் மட்டுமே பெறுகின்ருன். ஒரு தனியனின் சாய்ந்த தன்மைகளுக்கும் குழுத் தரங்களுக்கும் இடையே பொருத்தக்கேடு (disharmony) இருப்பின் ஆளுமை இக்கட்டுகள் எழலாம்.

## சமூக அங்கம் (Social role)

நாம் இடைவினை கொள்ளும் மற்றத் தனியன்களைப்பற்றிய நமது புலன் காட்சி சமூக அங்கத்தினைப் பின்பற்ற வழிகாட்டுகின்றது. சமூகவியலார் சமூக அங்கத்தைக் குழுவினுல் ஒரு தனியன் மேல் சுமத்தப்பட்ட ஒன்றெனக் கூறுகின்றனர். குறிப்பாக மரபு வழக்கான சமூகக் கோலங்களில் இது மிகவும் உண்மையானது. ஒரு பேரரசனின் (Monarch) புதல்வன் இளவரசனுக நடந்துகொள்கிருன்; பின்னர் ஒரு பேரரசனுக நடக்கிருன்.

இதுபோன்றே பழங்காலச் சமூகத்தில் வகுப்பு விதிகள் (caste rules) சில அங்கங்களின் சுமத்தலை ஏற்படுத்தின. தீண்டத்தகாத குழந்தை அவனுடைய பெற்ருேர்களால் பயிற்றுவிக்கப்படுவதோடன்றி மற்ற வகுப்புகளுக்கு ஒதுங்கிப்போகும் தன்மை காட்ட வேண்டும் என்று மற்றக் குழுவின் உறுப்பினர்களால் எதிர்பார்க்கப்படுகின்றது. இதுபோன்றே இன்றைய நாள்களிலும்கூட ஆடவரும் பெண்டிரும் பண்பாட்டினுல் சுமத்தப்பெற்ற ஒரு சில அங்கங்களை ஏற்பதை நாம் காண்கிருேம். சமூகம் என்பது சிறுமியின் தன்மையுடன் நடக்கும் ஒரு சிறுவனைப் போன்றதன்று. அல்லது பெண்தன்மையான முறையில் நடக்கும் ஒரு மனிதனைப் போன்றதன்று. இதுபோன்றே பெண் ஒரு ஆண்பாலுக்குரிய தன்மையில் நடந்துகொள்ளுதல் இடம் கொடுக்கப்படாததாகும். ஆனல், இந்த விளக்கங்கள், அங்கம் அகித்தல் தனியனுல் நிருணயிக்கப்பட்டது என்ற உண்மையில் இருந்து நம்மை மறைப்பதில்லை. உட்வொர்த் என்பார் எழுதியுள்ளவாறு, 'சமூகத்தைக் கடந்த நோக்குமுனையிலிருந்து (ultra-

social point of view) பார்த்தால் ஆளுமையென்பது குழுவினால் தனியன் மேல் சுமத்தப்பட்ட அங்கத்துக்கு அவனது துலங்கலாகும். தனியன் வேறுபாடுகளுள்ள ஒரு மாணவனுக்கு ஒவ்வொரு தனியனும் அவனது சொந்தச் சிறப்பியல்புகளுக்குரிய ஓர் அங்கத்தின்பால் ஈர்க்கப்பெறுவதுடன், இது தன் முனைப்பான குழுச் செயலினால் திணிக்கப்படுகின்றது என்பதை விட அவனாகவே, அவனுடைய அங்கத்தினைப் பெறுகின்றான் அல்லது ஏற்படுத்திக்கொள்ளுகின்றான் என்று பெரும்பாலும் காணப்படுகின்றது. ஓர் அங்கத்தில் அவன் ஒருமுறை இருந்தால் அந்த அங்கத்தின் தேவைகளுக்கும், வாய்ப்புகளுக்கும் ஏற்பத் தன்னை உறுதியாக விரிவுபடுத்திக்கொள்ளுகின்றான்' (17.180). எனவே, சமூக அங்கம் ஓரளவு சமூக நிலையைச் சார்ந்தும், ஓரளவு தனியனின் காரணியைச் சார்ந்தும் இருக்கின்றது.

வீட்டில் உள்ள குழந்தை விளையாடும் ஓர் அங்கத்தை உடையதாக இருக்கின்றது. அவனுடைய சமூக அங்கம், வலுவற்றும் சார்ந்தும் காணப்படுகிறது. அவனுடைய சமூக அங்கம் நேசிக்கப்படவும் புகழப்படவும் வேண்டும். ஆனால் விரைவில் இந்த அங்கத்தினின்றும் வெளிச் செல்லவும் வளரவும் மிக அதிகமான தன்னிலை அடையவும் வேண்டும். எனவே, பெற்றோர், குழந்தை ஆகிய இருவரும் வீட்டில் அவர்களது அங்கங்களை இயக்க வேண்டும். இவ்வங்கங்கள் சரிவர இயக்கப்பெறவில்லையெனில் பெற்றோர், குழந்தை ஆகிய இருவருக்கும் கஷ்டங்கள் ஏற்படுகின்றன. குழந்தையை ஒரே நிலையாக நேசிக்கவும் புகழவும் செய்து, இந்த அங்கத்தில் தொடர்ந்து வளர அனுமதித்தால் பின் அஃது ஒரு கெட்ட குழந்தையாக உருவாகிவிடக்கூடும். மாறாக, பெற்றோர்கள் குழந்தையின் நடத்தையில் கண்டிப்பான விதிகளையும் ஒழுங்குமுறைகளையும் சுமத்தினால் அவன் பின் கோழையாக ஆகிறான். குழந்தை மிக அன்புக்குரிய குழந்தையாக நடத்தப்பெற்றாலோ அல்லது தேவையற்ற குழந்தையாக வெறுக்கப்பட்டாலோ இடர்ப்பாடுகள் ஏற்படுகின்றன. இவை நமக்குப் பிரச்சினைக் குழந்தைகளைத் தோற்றுவிக்கின்றன. அட்லர் (Adler) என்பார் குடும்பத்தில் பிறப்பு வரிசையில் (birth order) குழந்தையின் இடத்திற்கு மிகப் பெரும் வலியிருத்தலைக் குறிக்கின்றார். பிறப்பு வரிசையின் காரணத்தினால் குடும்பத்தில் குழந்தை இயக்க வேண்டிய அங்கம் குழந்தையின் ஆளுமையை நிரந்தரமாகப் பாதிப்பதை அவர் நம்பினார். ஃபிராய்டு (freud) என்பார் குழந்தையின் வாழ்க்கையின் அங்கத்தின் முக்கியத்துவத்தைக் காட்டுதற்காக ஒன்றுதல் (identification) எனும்

பொதுமைக் கருத்தினைப் பயன்படுத்தினர். அவர், சிறுவன் அவனுடைய தந்தையைப் போன்று இருக்க வேண்டும் என்று விரும்புகிறன். சிறுமி அவளுடைய தாயைப் போன்று இருக்க வேண்டுமென்று விரும்புகின்றுள் என்று காட்டியுள்ளார். சமூக அங்கம் என்பது வீட்டினுள்மட்டும் முக்கியமானதன்று; வெளிப்புறத்திலும்கூட இது சிறப்பானதாக இருக்கின்றது. விளையாட்டுக் குழுக்களையும், தெருமுனைக் கூட்டாளிக் குழுக்களையும்பற்றிய ஆய்வுகள், குழந்தைக் குழுவில் அவனுடைய அங்கத்தைக் காண்பதாகக் காட்டின. குழந்தை அவனுடைய நண்பர்களுடன் இருக்கும்பொழுது ஒரு சார்ந்திருத்தல் (dependent) அங்கத்தினின்றும் தப்பிச் செல்வதோடு துணிகரச் செயல்களில் அவனுடைய விருப்பத்துக்கு வாய்ப்பு ஏற்படுகின்றது. சிறுவர்களின் கூட்டாளிக் குழுக்கள் பெரும்பாலும் தலைவர்களைக் கொண்டதாக இருக்கின்றன. ஒரு சிறுவன் கூட்டாளிக் குழுவின் 'மூளையாக'வும் (the brain of the gang), மற்றொருவன் 'துணிகர வீரனுக'வும் (dare devil) இருக்கலாம். மூன்றும் சிறுவன் நகைப்பூட்டுபவனுக, கோமாளியாகப் பங்கேற்றுக் கொள்ளலாம். எனவே, கூட்டாளிக் குழுவின் செயல்களுக்கு வெவ்வேறுபட்ட தன்மைகளான அங்கங்கள் தேவைப்படுகின்றன. மேலும் சிறுவன் அவனது திறமைகளைச் சார்ந்த தன்மையால் தகுதியான சமூக அங்கத்தினைப் பெறவும், இயக்கவும் செய்கின்றுன் என்பதை நாம் காணலாம். கூட்டாளிக் குழுவின் மேலான அங்கங்கள் போட்டியினுல்மட்டுமே பெறப்படுகின்றது என்று கூற இயலும். சுருங்கக் கூறின் கூட்டாளிக் குழுவின் அங்கங்கள் யாராவது ஒருவராலோ குழுவினராலோ தீர்மானிக்கப்படுவதில்லை. அவை பெரும்பான்மையான அளவு ஒவ்வொரு சிறுவனின் ஆளுமையாலும் திறமைகளினுலும் நிருணயிக்கப்பெறுகின்றன. ஒரு சிறுவன் ஒரு முறை ஓர் உகந்த அங்கத்தினைப் பெற்றுவிடின் இதன் மூலம் அவனுடைய அங்கத்துக்குப் பொருத்தமாக அவனுடைய ஆளுமையை வளர்த்துக் கொள்வது இயலுகின்றது.

சமூகத்திலுள்ள பெரும்பான்மையான அங்கங்கள் பரிமாற்றத் தன்மை (reciprocal) உடையவையாக இருக்கின்றன. பெற்றோர்—குழந்தை, கணவன்—மனைவி, ஆசிரியர்—மாணவன், தொழிலாளர்—தொழிலதிபர், தலைவர்—பின்பற்றுபவர், விற்போர்—வாங்குவோர் மேலும் இவை போன்றவையாகும். இங்கே ஒரு பரிமாற்றத் தன்மை இருப்பதை நாம் காண்கின்றோம். ஒவ்வொருவனும் சில எதிர்ப்பார்ப்புகளுக்காகவும் (expectations) கோரிக்கைகளுக்காகவும் அவனுடைய அங்

கத்தினை வகிக்கிருன். இங்குச் சில நிலைமைத்துவ அங்கங்களும் (situational roles) காணப்படுகின்றன, சார்ஜென்ட் (Sargent) (8) என்பார் கூற்றுப்படி இந் நிலைமைத்துவ அங்கங்கள் ஆளுமை மாறிகளைச் (personality variables) சார்ந்திருக்கிறது. சான்ருகக் காப்பற்ற மனிதன் அவனுடைய உணர்வு பெறுதலின் பெருந் தேவை காரணமாக உலகத்திலுள்ள ஒரு மனிதன் அங்கத்தை வகிக்கலாம் அல்லது அவன் ஒரு கொடுமைக்காரனுகவோ ஊடாடு பவனுகவோ (bully or flirt) ஆகின்ருன். சார்ஜென்ட் (Sargent) சமூக அங்கம், பண்பாட்டுத் தனிமுறை நிலைமைத்துவக் காரணிகளால் நிருணயிக்கப்படுகின்றன என்று குறிப்பிடு கின்ருர். வயது, பால் (sex), தொழில், வகுப்பு (class) ஆகியன சமூக இடைவினையின் கோலத்தைப் பாதிக்கின்ற மிக முக்கியமான காரணிகளாகும் என்பதை நாம் காணலாம். தனியன்கள் இணை எதிரான (corresponding) அங்கங்களைப் பின்பற்றுகின்றனர். எனவே, சமூகத் தேவைகள், தனியனின் தேவைகள் ஆகிய இரண்டும் ஒரு தனியனுல் ஏற்கப்பெற்ற அல்லது பாவித்த அங்கத்தை நிருணயிப்பதில் பங்கு வகிக்கின்றது. மொரீனே (Moreno) (9) என்பார் 'தம் விருப்ப அங்க வகிப்பு' (voluntary role taking) குணமுறையானது என்று காட்டியுள்ளார்.

நியூகோம்ப் (10) என்பார் கல்லூரிக் குழுவினைப்பற்றிய (college community) ஓர் ஆய்வில் புறவயமான அங்கங்கள் உற்று நோக்கக்கூடிய ஆளுமைச் சிறப்பியல்புகளின் அடிப்படையில் குழுவின் உறுப்பினர்களுக்கு ஒதுக்கிவைக்கப்படுகின்றது என்பதினைக் கண்டார். அவர் மேலும், தானுகவே ஒதுக்கிக் கொண்ட அகவய அங்கங்கள் இருப்பதையும் கண்டார். நிலைமையின் உண்மைகளைச் சார்ந்த அகவய அங்கங்களின் ஏற்பும், ஒருவனது சொந்த ஆளுமையின் வைளங்களும் (resources) தனியனின் நோக்குமுறையிலிருந்தும் ஒரு புறவயமான அங்கத்தின் ஏற்பின் ஒப்புமையில் சமூகத்தின் நோக்குமுனையிலிருந்தும் ஓர் உயர்வான நிலையில் இருக்கின்றன என்று கூற இயலும். உலகிலுள்ள பின்தங்கிய குழுக்களின் முக்கியக் காரணிகளில் ஒன்று மற்றவர்கள் தனியனின்மேல் அங்கங்களை மீண்டும் சுமத்தலாகும். மறுபுறம் ஒரு தனியனின் சிறந்த வளர்ச்சி, அவன் அவனுடைய திறன்களின் அடிப்படையிலும் குறைபாடுகளின் அடிப்படையிலும் அவனுடைய அங்கங்களைத் தீர்மானிப்பதால் மட்டுமே இயலுகின்றது.

சமூக அங்கம் என்பது கற்றலையும் உணர்ந்தறிதலையும் பற்றியது என்று நாம் காண்கிருேம். பரிமாற்ற அங்கங்களில்

ஒவ்வொரு தனியன்களும் மற்றத் தனியனை உறுதியான அங்கத்தில் அறிவதோடு அவனுடைய நடத்தையைப் பொருத்தமாக அமைத்துக்கொள்கிருன். இருப்பினும் குழுத்தரங்கள் ஒரு சில மிகவும் முக்கியமான பங்கினைப் பெறுகின்றன. விருந்தளிப்பவர், விருந்தினரிடம் அன்பாக இருக்க வேண்டும் என்று அன்புடன் வரவேற்கின்றனர். இதற்குப் பரிமாற்றமாக விருந்தாளி தகுதியான நடத்தை வாயிலாக அவனுடைய அங்கத்தை வகிக்கிருன். இந்த அங்கங்கள் கற்கப்பட வேண்டியனவாகும். செயலறிவின் மூலமாகமட்டுமே நாம் தகுதியான முறையில் நடந்துகொள்ள முடியும். மரபு வழக்கான சமூகம் (traditional society) தனியன்களை அவர்களது அங்கங்களுக்குப் பொருத்துதலுக்குப் பயிற்சி அளிக்க விரிவான படிகள் மேற்கொள்ளப்பட்டதை அறிந்திருப்பினும்கூட, மரபு வழக்கமான சமூகத்தில் இந்த அங்கங்கள் பிறப்பினுல் அல்லது பிறப்பிற்கு முன்னர் முன் நிருணயிக்கப் பெற்றது என்று மேற்கொள்ளப்பட்டது.

சார்ஜென்ட் (Sargent) என்பாரின் சமூக அங்கம் என்ற சிறப்புச் சொல்லின் வரைமுறையை நாம் ஏற்றுக் கொள்ளலாம். 'ஒரு மனிதனின் அங்கம் என்பது குழுவிலுள்ளோரின் கோரிக்கைகள் எதிர்பார்ப்புகள்பற்றி நிலைமையில் அவனுக்குத் தகுதியாகக் காணப்படுகின்ற சமூக நடத்தையின் ஒரு கோலம் அல்லது வகையாகும்' (8.360). எனவே, சமூக அங்கங்கள் சமூக இடைவினையின் ஓர் அம்சமாகக் காணப்படுகின்றது. ஆளிடைத் தொடர்புபற்றிய ஒன்றினுல்மட்டும் தான் ஓர் அங்கம் என்பது பொருளுடையதாக இருக்கின்றது. எவ்வாறு ஒவ்வொரு தனியனும் ஒரு கொடுக்கப்பட்ட நிலைமையில் மற்றத் தனியன்களுக்கு எதிர்வினை செய்கின்ருன். எனவே, மற்றவர்களின் கோரிக்கைகளும் எதிர்பார்ப்புகளும் ஒரு மிகவும் முக்கியமான பங்கினை வகிக்கின்றன. நாம் கோரிக்கைகளையும், எதிர்பார்ப்புகளையும் அறிந்துகொள்ளக் கற்பதோடு தகுதியான நடத்தை மொழிகளையும் வளர்த்துக்கொள்கின்ருேம், மேலும், சமூக அங்கத்தின் ஒரு முக்கியமான சிறப்புக்கூறு உள்வயமாக்குதலாகும். கத்ரீ (Guthrie) என்பார் நீண்ட காலத்துக்கு முன்னரே குறிப்பிட்டுள்ளவாறு, 'நாம் நம்மைப் பற்றிய விளக்கத்தை அறிகின்ருேம். நமது பண்புகளையும் (attributes), ஒரு வகுப்பில் நமது உறுப்பினர் பதவியையும் ஒப்புக்கொள்கின்ருேம். மேலும், சிந்தனையைத் தொடர்ந்த தகுதியான நடத்தையையும் ஒப்புக்கொள்கின்ருேம்' (11.139). ஒரு மனிதன் அவனுடைய உடைகளை அணியும்பொழுதோ அவனுடைய துணிகளை வாங்கும் பொழுதோ அவனுடைய

நிலைக்கேற்றவற்றை அவன் ஏற்றுக்கொள்ளவும், மற்றவற்றை அவன் மறுக்கவும் செய்கின்றான். நியூகோம்ப் (Newcomb) அங்க மனப்பான்மையை (role attitude) ஒரு மனிதனின் குறிப்பிடப்பட்ட அங்கத்துக்கும் உண்மையான அங்க நடத்தைக்கும் இடையே உள்ள ஓர் இடையிடும் மாறியாகக் (intervening variables) குறிப்பிடுகின்றார். முதலில் பெற்றோர் அல்லது மற்றவர்கள் தகுதியான நடத்தைப்பற்றித் தனியனுக்குக் கற்றுக் கொடுக்கலாம். விரைவில் இஃது உள் வயமாக்கப்படுவதுடன் தனியன் தகுதியான முறையில் நடந்து கொள்ளவும் கற்கின்றான்.

குழந்தை பல்வேறு அங்கங்களைக் கற்கின்றது என்பதை மனத்திற்கொள்ள வேண்டும். குழந்தை வளரும்போது அஃது அதன் சொந்த அங்கங்களோடும் அவனைச் சுற்றியுள்ள வயது வந்தோர் எடுத்துக்கொண்ட தரங்களோடும் அதிகமான பழக்கத்தை ஏற்படுத்திக்கொள்கின்றது. உண்மையில் குழந்தை அவனுடைய விளையாட்டில் இந்தப் பழக்கங்களில் பலவற்றைக் கடைபிடிக்கின்றது. அவன் சமயலறைக்குத் தாயுடன் அல்லது பணியாளருடன் சென்று, தட்டுகளை வைத்தும் பானைகளை வைத்தும் சிறு கரண்டிகளை (spoon) வைத்தும் விளையாடுகின்றான். விளையாட்டுச் சாமான் உற்பத்தியாளர்கள் சமயலறை விளையாட்டுக்காக விளையாட்டுச் சாமான்களை உற்பத்திச் செய்கின்றனர். பெற்றோர்கள் அவற்றை வாங்கிக் குழந்தைகளுக்குக் கொடுக்கின்றனர். விருந்தினர் வீட்டிற்கு வந்ததும், தாய் விருந்தினர்களுக்குத் தேனீரளிக்கும்பொழுது இரண்டு அல்லது மூன்று ஆண்டுக் குழந்தை அவளுடைய விளையாட்டுத் தேனீர் கோப்பைகளைக்கொண்டு வருகின்றது. தாய் குழந்தைக்கு எவ்வாறு தேனீரை, அவனுடைய விளையாட்டுத் தேனீர் கோப்பையினால் விருந்தினருக்கு அளிக்க வேண்டும் என்று உண்மையில் கற்றுக் கொடுக்கிறாள். விருந்தினரும் பாசாங்கு செய்து தேனீர் அருந்துகின்றனர். குழந்தை சரியான முறையில் இதனைச் செய்யும்பொழுது புகழ்ச்சியுடனும் அன்புடனும் பரிசளிக்கப்படுகின்றது. குழந்தை தவறான முறையில் செய்திருப்பின் பெற்றோராலும் வீட்டிலுள்ள மற்றவர்களாலும் எவ்வாறு செய்ய வேண்டுமென்று கற்றுக்கொடுக்கப்பெறுகின்றது. குழந்தை பேசக் கற்கும் பொழுது அங்கவகுப்பு (role taking) மிக மிக விரிவடைகின்றது. குழந்தை செயல்களைமட்டும் செய்வதில்லை; ஆனால், பொருத்தமாகப் பேசவும் முற்படுகின்றது. குழந்தை தான் இடைவினைகொள்ளுகின்ற பல்வேறு மனிதர் அங்கங்களையும் நடத்திக் காட்டுகின்றது. 'குழந்தை தாயாக, தாதியாக,

புகைவண்டி ஓட்டுபவனாக, விமான ஓட்டியாக நடிக்கின்றது. ஆனால், இதைவிட மிகவும் முக்கியமானது, அடுத்தடுத்து அவனே பல்வேறு அங்கங்களில் நடித்தலாகும். கற்பனை விளையாட்டில் அவன் முதலில் பாவிக்கப்பட்ட ஒருவனைப்போலும் பின் மற்ற வனைப்போலும், அதன் பின்னர் அவனைப் போலவும் பேசுகின்றான். மற்றவர்களிடத்திலிருந்து அவனுக்குள்ள உரையாடல்களையும், அவர்களுக்கு அவனுடைய பதிலையும்பற்றி அது ஒத்திகை செய்கின்றது. அவன் ஒருபொழுதில் பண்டகசாலைப் பொறுப் பாளனாகவும், மற்றப் பொழுதில் ஒரு கடைக்காரனாகவும் ஆகின் றான். அவன் கற்கண்டு விற்கும் பாசாங்குச் செயலாக (make-believe) இடைவினையை மேற்கொள்கின்றான். அவன் பாது காவலனாக (Policeman) வேடம் பூண்டு தன்னையே சிறை செய்கிறான்; பிரயாணம் செய்வோனாக வேடம் பூண்டு அவனு டைய போலி அனுமதிச் சீட்டினைப் (make-believe ticket) பின்னர் ஊர்தித்துணைவனாக (conductor) வேடம் பூண்டுள்ள நிலையில் தனக்கே கொடுத்துக்கொள்கின்றான். இந்தப் பல்வேறு குழுக்களில் சில உண்மையான, சில கற்பனையான தூண்டல் களும், துலங்கல்களும் தனித்தனியான அங்கங்களில் பரவலான வீச்சில் (wide range) அமைக்கப்பெறுகின்றன. அவை வீட்டிலுள்ள நிலைமைகளுக்கும், விளையாட்டு மைதானம் பள்ளி போன்றவற்றில் எங்கெங்குக் குழந்தை அடிப்படையான சமூக ஆக்கநிலையிருத்தலைப் பெறுகின்றதோ அங்கெல்லாம் காணப் படும் நிலைமைகளுடன் தொடர்பு கொண்டுள்ளன' (12.136-7). இந்த வழியில்தான் குழந்தை சமூக அங்கங்களுடன் பழக்கமுடைய தாக ஆகின்றது. அவன் தான் என்ன செய்ய வேண்டும் என்ப தைப்பற்றிமட்டும் அறிவதில்லை. ஆனால், பிறர் என்ன செய் கின்றனர் என்பதைப்பற்றியும் இடை—அங்க—பழக்கத்தினையும் (inter-role familiarity) குழந்தை பெற்றவனாகின்றான். சமூக அங்கங்களில் இவையிரண்டும் இன்றியமையாதன. நாம் என்ன செய்ய வேண்டுமென்பதை அறிவதுடன் மற்றவர்கள் என்ன செய்யவேண்டும் என்று நாம் எதிர்பார்க்கின்றோமோ அதைப் பற்றியும் அறிந்திருத்தல் வேண்டும்.

இந்த இடைச் சார்ந்திருத்தல், (inter-dependance) உரிமைகளும், கடப்பாடுகளும் (obligations) அடி வழி கோலுகின்றது. உரிமைகள் என்பது மற்றவர்களிடத்திலிருந்து உரிமையுடன் எதிர்பார்த்தலாகும். எனவே, சமூக அங்கங் களுடன் புலன் காட்சியின் வாயிலாகவும் இடைவினையின் வாயி லாகவும் நெருங்கிய பழக்கத்தினை நாம் காணலாம். அங்க வகிப்பு ஊக்கியை உள்ளடக்கியதாகும். இது தனியன், நிலைமைகளில்

சரிவர நடந்துகொள்ளும்பொழுது மன நிறைவளிக்கின்றது. ஏனெனில், நடத்தை தேவை குறைப்புக்கு வழி அமைப்பதால், இது தனியனையும் மனநிறைவு பெறச் செய்கிறது. அங்கங்களின் போராட்டங்கள் ஊக்கியின் போராட்டங்களை ஏற்படுத்துகின்றன என்பது இயலுகின்ற ஒன்றாகும். இன்றைய குழந்தையின் சமூக வாழ்க்கையிலிருந்தும், இளையோரின் சமூக வாழ்க்கையிலிருந்தும் ஒரு விளக்கத்தினைக் கொடுக்கலாம். முதன்முதலாக இந்தியாவில் குழந்தைகளைப் பள்ளிகளுக்கே அனுப்பப்பெறாத குடும்பங்களிலிருந்தும் பெருவாரியான குழந்தைகள் பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் வருகின்றனர். கிராமங்களிலும், நகரங்களில் சேரியில் வாழுவோரின் குழந்தைகள் இளையோர்கள் ஆகியவர்களின் சமூகத் தரங்கள் வீணாகத் திரிகின்றதேயாகும். ஆனால், புதிய சமூகத்தரம் அவர்களை வகுப்பறையில் உட்காரவும், படிப்புகளில் கவனம் செலுத்துமாறும் கட்டாயப்படுத்துகின்றது. இதுவும் அங்க வகுப்பின் ஒரு பிரச்சினையாகும். கல்வியறிவு பெற்ற குடும்பங்களில் வளர்க்கப் பெற்ற ஒருவன் வீட்டிலும் பள்ளியிலும் ஒரு மாணவனாக அங்கம் ஏற்றுக் கற்கிறான். ஆனால் கல்வியறிவு பெறாத பெற்றோர்களால் வளர்க்கப்பட்ட மற்றக் குழந்தைகள் அவர்கள் பயிற்சி பெறாத அங்கங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும். கல்வியறிவு பெற்ற இல்லத்திலிருந்து வருகின்ற குழந்தை அதன் இரண்டாம் ஆண்டிலேயே ஒரு புத்தகத்தை எடுத்துப் படிப்பதாகப் பாவனை செய்கின்றது. இது கல்வியறிவற்றவரின் குழந்தையினால் எப்பொழுதும் செய்யப்படுவதில்லை. எனவே, பள்ளிகளிலுள்ள இக் குழந்தைகளுக்கும், கல்லூரிகளிலுள்ள இவ்விளையோரும் அவர்களது படிப்பில் போதுமான கவனத்தைச் செலுத்துவதில்லை. இதன் விளைவாகத் தரங்கள் குறைகின்றன என எழும் கூக்குரல் காணப்படுகின்றது. மற்றொரு விளக்கம் கூறினால் மாணவர்களின் ஒழுங்கீனம்பற்றிய பிரச்சினை அங்கமேற்பதைப்பற்றியதாகும். ஆங்கில ஆட்சிக்கு எதிராகச் **சத்தியாகிரகம்** (Satya graha) நடந்த காலங்களில் மாணவர்கள் தேசீய விடுதலையாளர்களாக (national liberators) அங்கம் ஏற்றனர். சுதந்திரம் அடைந்த பின்னருங்கூட மாணவர்கள் விடுதலையாளர்கள் அங்கத்தை ஏற்றுத் தொடர்கிறார்கள். இது சமூகத்திற்கும் அரசாங்கத்திற்கும் மிகுந்த அச்சத்தை ஏற்படுத்துகிறது. எனவே, தேசியத் தலைவர்கள் குறிப்பாக ஆளுங்கட்சியின் தலைவர்கள் இப்போது மாணவர்களைச் சமூகத்தைச் சீர்படுத்த முயற்சிக்கும் தலைமை உறுப்பினர்களுக்கான அங்கத்தினை ஏற்காமல் மாணவர்களாகவே அங்கம் வகிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றனர்.

மற்றவர்களது எதிர்வினைகளில் சரியான தீர்ப்பிடல்களைச் செய்ய ஆற்றலற்ற மக்கள் தங்கள் ஊக்கிகளை (motives) அவர்களிடத்துக் காண்கின்றனர் என்பதை நாம் காணலாம். இதுதான் புறத்தெறிதலின் செயன்முறையாகும். சியர்ஸ் (Sears) (13) என்பார் மற்றவர்கள் அவர்களை அளவிடுதல் போலத் தங்களையே அளவிட்ட மாணவர்கள் புறத்தெறிதலுக்குக் குறைந்த போக்கினை உடையவர்களாக இருந்தனர் என்று கண்டார். சுருங்கக் கூறினுல், மற்றவர்களது அங்கத்தை வகிக்கக் கூடிய மனிதன் அவனை மற்ற மனிதனினிடத்தில் வைத்து அவனது சிந்தனைகள், உணர்வுகள், புலன் காட்சிகள் ஆகியவற்றை முன்னறியக்கூடிய பொருத்தப்பாடு மனிதனுக இருக்கின்முன். அவன் மற்றவர்களைப் புரிந்துகொள்ள முடியும். இல்லாவிடில் அவன் மற்ற மக்களைத் தவருகப் புரிந்துகொள்ளுகின்முன். ஹார்னி (Horney) (14) என்பார் நரம்பு நோயினனை அவர் மற்றவர்களுக்குத் தோற்றமளிக்கும் வழியைப்பற்றியே எப்பொழுதும் தொடர்புடையவனுகக் குறிப்பிடுகின்முர். இவ்வாறு நரம்பு நோயினன் தன்னைப்பற்றியே நினைவுடையவனுக இருக்கின்முன். இந்தத் தன்—நினைவு (self-consciousness) அவனுடைய தொந்தரவுகளுக்கு வழியாகின்றது. ஓர் இயல்பான தனியன், அவனுடைய அங்கம் வகித்தல்பற்றிய நினைவினைப் பெரும்பாலும் இல்லாதவனுக இருக்கின்முன். மேலும் அவன் ஒரு மென்மையான வழியில் நடக்கக் கற்றுக்கொள்கின்முன். நாம் ஒரு புதிய தொழிலே ஏற்கும்பொழுது நமது அங்கங்களைப்பற்றிய நினைவினைப் பெறுகின்ருேம். எதனை ஒருவன் செய்ய எதிர்பார்க்கின்ருனே அதைச் செய்வதற்கான ஒரு முயற்சி காணப்படுகின்றது. சான்ருக, படையில் சேர்க்கப்பட்ட ஒரு புதிய ஆள் எப்பொழுதும் அவனுடைய புதிய அங்கத்தின் தேவைகளை அறிந்திருக்கின்முன். ஆனுல் மிகுந்த செயலறிவின் வாயிலாக அவன் தன்—நினைவின்றி அவனுடைய பணியை வழக்கமாகச் செய்கின்முன்.

## சமூக ஏற்றநிலே (Social status)

ஃபிளாரென்ஸ் பி. மொரீனே (Florence B. Moreno) (15) என்பார் ஒரு குழந்தைப்பள்ளிக் குழுவில் குழந்தைகளின் சமூக அளவை ஏற்றத்தின் ஓர் ஆய்வில், ஆளிடைத் தொடர்புகள் நு. ஈ. (I. Q.), குடும்பத்தின் மதிப்பு, குடும்ப வருமானம் போன்ற காரணிகளைச் சார்ந்திருக்கின்றது எனக் கண்டார். குழந்தைகளிடையே சிறப்பியல்பான ஏற்றக் கோலங்கள் இருந்தன எனவும், அவை நிலேத்திருந்தன எனவும் காணப்பட்டது.

இது போன்றே பள்ளிக் குழந்தைகளிடத்தும், கல்லூரி இளையோரிடத்தும் வயது பாகுபாடு தன் மதிப்பு நிலைகளில் உள்ளடக்கப் பெற்றது. உடலியல் வளர்ச்சியின் இவ்வாண்டுகளில், உரு அளவு, வலிமை, அறிவு, செயலறிவு ஆகிய அனைத்தும் வயதுடன் நெருக்கமாகத் தொடர்புடையனவாக இருக்கின்றன. இதன் விளைவாகப் பள்ளியில் ஒரு வகுப்பில் உள்ள சிறுவர்கள் உயர் வகுப்பிலுள்ள சிறுவர்களை மேல் வகுப்பினராகக் காணுவர். கல்லூரி வகுப்புகளிலுங்கூட நாம் இதே இயல் நிகழ்ச்சியினைக் காணலாம். கல்லூயில் மேல் வகுப்பு மாணவர்கள் கீழ் வகுப்பு மாணவர்களால் உயர்ந்த ஏற்றம் கொடுக்கப்படுகின்றனர். குடும்பத்திலுங்கூட, கணவன் மனைவியிடையேயும், பெற்றோர் குழந்தைகளிடையேயும் வேறுபட்ட வயதுகளையுடைய குழந்தைகளிடையேயும் ஏற்ற வேறுபாடுகள் இருக்கின்றன. 'ஆயினும், மிகுந்த முறையணையாக் குழுக்களில்கூட எல்லா விதச் சமூக இடைவினையின் வரம்பிலும் ஏற்றச் சலுகைகள் முழுமையாகப் புகுவதால், ஒவ்வோர் உறுப்பினர்களும் அவர்களுடைய செயல்கள் திறமையுள்ளனவாகவும், குழப்பமற்றவையாகவும் இருப்பதற்குத் தம் சொந்த ஏற்றத்தின் தெளிவான அறிவு, செயல்துறையில் உண்மையான தேவையாக அமைகின்றது' (16.259). ஒரு நிலையான குழுவில் பெரும்பாலான உறுப்பினர்கள் ஒருவரையொருவர் அறிவர். மேலும், ஏற்றத்தின் தனிச் சிறப்புகள் (status distinction) மக்களின் உளவியல் பின் அடிப்படையில் அமையப்பெற்றுள்ளன. சான்றாகக் கிராமத்தில் வாழும் மக்கள் ஒவ்வொரு மனிதனையும் அறிவர். இது போன்றே ஓர் அலுவலக அமைப்பில் அல்லது ஒரு தொழிற்சாலையின் குழுவினுள் ஒவ்வொரு மனிதனும் ஒரு திட்டமான இடம் பெறுகிறான். இந்த நிலை குழுவின் மற்ற உறுப்பினர்களால் அறிந்த ஓர் ஏற்றத்தை அளிக்கிறது. அவன் ஆட்கொண்ட இடத்தின் அடிப்படையில் அமைந்த ஏற்றச் சலுகைகளுக்கு மேலாக, மக்களின் உளவியல் பின் அடிப்படையில் ஏற்றச் சலுகைகள் எழலாம். ஓர் அலுவலகத்தில் அல்லது ஒரு தொழிற்சாலையில் தாழ்ந்த அலுவலாக ஏற்றமுடைய ஒரு மனிதன் அவனுடைய திறமை, உளவியல்பு, ஆளுமையின் இத்தகைய மற்ற அம்சங்கள் ஆகியவற்றினாலும் குழுவிலுள்ள மற்ற மக்களின் மதிப்பினைப் பெறலாம். ஆனால், நிலையற்றதாகவும் குறுகிய காலமே உள்ள குழுக்களில்கூட இந்த ஏற்றச் சலுகைகள் இருக்கலாம். அயலாரிடத்துங்கூட அவர்களது இடைவினையில் ஏற்றச் சலுகைகள் எழலாம். அவை உடை, கைக்கடிகாரம், பேனா, மோதிரம் ஆகியவை போன்ற தெளிவான சொந்த உடைமைகள், தெளிவான குறிப்புகளின் அடிப்

படையில் அமைகின்றன. இஃது அவன் பயன்படுத்தும் வண்டிகளின் வகையின் அடிப்படையிலும் அல்லது அவன் வாழ்கின்ற வட்டார வகையின் அடிப்படையிலும் அமையலாம். பொதுவாக, மக்கள் அயலாராய் இருப்பினுங்கூட உயர் ஏற்றத் தரத்தில் பொருளாய குறிப்புகளைத் தாங்கும் ஒரு மனிதனுக்கு இணக்கத்தினை அளிப்பர். குறிப்பாக இந்தியாவில் ஒரு தனியனின் உடைகள் அவனது ஏற்றத்தை மிகவும் தெளிவாகக் காட்டுகின்றன. ஒரு மனிதன் ஏழ்மையான உடையிலிருப்பின் அவன் உடனடியாக ஒரு தாழ்வான ஏற்றத்தினை உடைய மனிதனகக் கருதப்படுகின்றான். நாம் அறிந்தது போன்று ஈஸ்வர சந்திர வித்யாசாகர் என்ற பெரியார் நன்கு உடையுடுத்தப் பெற்ற ஒரு மனிதனல் புகைவண்டி நிலேயத்தில் ஒரு கூலியாளாகத் தவருகக் கருதப்பட்டார். இக் காரணத்தினல்தான் சமூகத்தில், ஏற்றப்புலன் காட்சிக்கான குறிப்புகள் சீருடைகளினல் அளிக்கப்படுகின்றன. அலுவலகத்தின் பணியாள், காவலாளன் (policeman), தபால்காரன், புகைவண்டிக் காவலர் (guard) ஒவ்வொருவரும் அவருடைய சொந்த சீருடைகள் உடையராய் இருப்பதால் இடைவினைகள் மிகவும் மென்மையாகவும் எளிதாகவும் அமைகின்றன.

சமூகத்தின் உறுப்பினர்கள் ஒரு விரிவான வழியில் பாகுபடுத்தப்படுகின்றனர். மேலும், நாம் ஒவ்வொருவரைப்பற்றிய எதிர்பார்ப்புகளையும், எதிர்நோக்குகளையும் அமைக்கின்ருேம். வெவ்வேறு வகையாகப் பாகுபடுத்தப்பட்ட மக்கள் வெவ்வேறு வகையாக நடக்க முற்படுகின்றனர். இஃது ஏனெனில், ஒவ்வொருவரும் குழுவின் நலனுக்குப் பங்களிக்கின்றனர். உலகத்தின் வேறுபட்ட சமூகங்களில் வெவ்வேறு வகையான நிலேகளும் அல்லது ஏற்றங்களும் இருப்பினும் அனைத்துச் சமூகங்களுக்கும் பொதுவாகச் சில நிலேகளும் உள. எடுத்துக்காட்டாக லின்டன் (Linton) (17) ஏற்றநிலேயின் பட்டியலேப் பின்வருமாறு அளிக்கின்ருர்:

1. வயது-பால்; குழவி-சிறுவன்; பெண்; இளேயமனிதன்; இளேயபெண்; வயதானஆள்; வயதானபெண்;
2. தொழில் சார்ந்த.
3. தன்மதிப்பு—தலேவன் அல்லது அடிமை-படிமரபு.
4. குடும்பம், வகுப்பு அல்லது குடும்பம் சார்ந்தவை.
5. இயைபுக் குழுக்கள்—பொதுவான அக்கறைகளின் அடிப்படையில் அமைந்தது.

நிலமானியச் (feudal) சமூகங்களில் தலைவன், உயர் மனிதன், அடிமை போன்ற பிறப்பின் அடிப்படையில் அமைந்த தன்மதிப்பின் ஒருபடி மரபு இருக்கின்றது. இதுபோன்றே நம் சமூகத்தில், வேறுபட்ட சமூகத் தரங்களையுடைய வேறுபட்ட சாதியின் உறுப்பினர்கள், குறிப்பாகத் இப்போதைய கிராமக் குழுக்களின் சாதி ஒழுங்கமைப்பின் அடிப்படையில் அமைந்த ஒரு படி மரபினைப் பெற்றிருக்கின்றனர்.

பண்படாக் குழு போன்ற மிக எளிய சமூகங்களிலுங்கூட இத்தகைய ஏற்றங்கள் காணப்படுகின்றன. இங்கு லின்டன் (Linton) என்பார் ஏற்றமென்ற கலைச் சொல்லை ஒரு மிகவும் விரிந்த பொருளில் பயன்படுத்துவதால் அது தன்மதிப்பு மட்டுமல்லாமல் தொழில், வயது, பால் போன்ற மற்ற ஒழுங் கமைப்புகளையும் ஏற்றம் என்ற சொல்லாலேயே வழங்குகிறார் என நாம் அறிகிறோம். எடுத்துக்காட்டாக, நியூகோம்ப் போன்ற சில உளவியலார்கள் 'நிலை' (position) என்ற கலைச் சொல்லை லின்டன் ஏற்றம் என்ற கலைச் சொல்லைப் பயன்படுத்தும் பொருளிலேயே பயன்படுத்துகின்றனர். சான்றாக வயது, பால் அல்லது பிறப்பு இவற்றினால் பெறும் ஏற்றத்துக்கு, ஏற்றம் என்ற சொல் சாட்டப்படலாம். மறுபுறம், ஏற்றம் அடையவும் பெறலாம். பழங்காலத்தில் சமூகத்தில் பல்வேறு நிலைகள் மரபுரிமையாகப் பெறப்பட்டன. ஒரு மனிதன் பிறப்பின் அடிப்படையில்மட்டுமே அரசனாகவோ அமைச்சராகவோ ஒரு புரோகிதனாகவோ பூசாரியாகவோ சம்போவாகவோ(shambogh) படேலாகவோ (patel) அமைகின்றான். இந்தத் தொழில்கள் மரபு நிலையானது. நவீன சமூகத்தில் மரபுநிலையிலிருந்து அடைவுக்கு (achievement) ஒரு மாற்றம் காணப்படுகின்றது. இன்று உலகில் மிகச் சில முடியரசுகளே உள்ளன. சான்றாக இந்தியாவில் சுதந்திரத்திற்குப் பின்னர், ஓர் இளவரசன்கூட இல்லை. பல்வேறு மாநிலங்களில் சம்போகு (shambogh), படேல் (patel) ஆகியோரின் ஊழியங்களைக்கூட மரபுநிலை ஊழியங்களாக அல்லாமல் நியமன ஊழியங்களாக ஏற்படுத்த சட்ட ஆக்கம் ஏற்பட்டு வருகின்றது. முன் மதிப்பிடல் மூலமாக (preferences) ஒரு மனிதன் ஏற்றத்தையுடைய ஒரு மூன்றாவது வழியும் உள்ளது. ஒரு மனிதன் தேர்வின் மூலமாகக் களிக்குழுவின் (club) அல்லது ஒருவகையான சங்கத்தில் (association) உறுப்பின னாக அமையலாம். ஆனால், மற்றவற்றில் எடுத்துக்காட்டாக, சுழற்சித் தொடர்புடைய களிக் குழுவில் (rotary club) உறுப்பமைவு (membership) முன் மதிப்பிடலினால்மட்டுமே அமைவதில்லை. இஃது அடைவுடனும் முன் மதிப்பிடலுடனும்

கூடிய ஒரு கூட்டினுல் ஆகும். நவீனச் சமூகங்களில் நிலைகள், அடைவு, முன் மதிப்பிடல் ஆகியவற்ருல் பெரும்பாலும் நிருணயிக்கப்படுகின்றன என்று கூறலாம். வயது, பால், குடும்பக் குழுக்கள் இவை முதற்றே ஏற்றம் சாட்டப்படுகின்றன எனக் காண்கின்ரேம்.

இந் நூலாசிரியர் மூன்று மாறிகளின் அடிப்படையில் சமூக பொருளாதார ஏற்றத்தை அளவிட ஓர் அளவீட்டை (scale) அமைத்தார். அவையாவன: தொழில், கல்வி, வருவாய் (18). இவ்வாருகத் தெர்ந்தெடுக்கப்பட்ட மாறிகள் அடைவின் விளைவாக ஆகின்றன. இன்று இந்தியாவில் அனைத்து நவீன சமூகங்களில் உள்ளது போன்று சமூக, பொருளாதார ஏற்றம் பிறப்பில் மட்டுமன்றி அடைவின் அடிப்படையிலும் அமைகின்றது.

## மேற்கோள் நூற்பட்டியல்

1. SHERIF and SHERIF, Harper, 1950. — *Outlines of Social Psychology.*

2. FREEDMAN et al, Holt, 1952. — *Principles of Sociology.*

3. PIAGET, Kegan Paul, 1932. — *The Moral Judgement of the Child.*

4. SHERIF, Harper, 1936. — *The Psychology of Social Norms.*

5. SHERIF, 1937, 1, 90-99. — *An Experimental Approach to the Study of Attitudes-Sociometry.*

6. BLAKE and BREHM, 'The use of Tape Recording to Stimulate a Group Atmosphere', 1954, 49, 311-13. — *Journal of Abnormal* social *Psychology.*

7. WOODWORTH and MARQUIS, Methuen, 1948. — *Psychology.*

8. SARGENT, 'Conceptions of Role and Ego in Contemporary Psychology', Harper, 1951. — *Social Psychology at Cross roads.*

9. MORENO, Beacon House, 1946. — *Psychodrama.*

10. NEWCOMB, Dryden, 1934. — *Personality and Social Change.*

11. GUTHRIE, Harper, 1938. — *Psychology of Human Conflict.*

12. KIMBALL YOUNG, Routledge and Kegan Paul, 1948. — *Handbook of Social Psychology.*

13. SEARS, 'Experimental Studies in Projection', Vols. 6 & 8, 1936 & 1937. — *Journal of Social Psychology.*

14. KAREN HORNEY, Norton, 1937. — *The Neurotic Personality of our Time.*

15. FLORENCE B. MORENO, 'Sociometric Status of Children in a Nursery School Group', 5, 1942, 395-411. — *Sociometry.*

16. FARIS, Ronald Press, 1952. — *Social Psychology.*

17. RALPH LINTON, Appleton-Century, 1945. — *The Cultural Background of Personality.*

18. KUPPUSWAMY, 'A scale to Measure Socio-Economic Status', 35, 1959, 1-10. — *The Indian Journal of Psychology.*

# 8. மொழியும் குறியீடுகளும்

## (LANGUAGE AND SYMBOLISM)

குழந்தையும் வயது வந்தவரும் பிற தனியன்களின் குறியீட்டுத் தூண்டுதலுக்குமட்டும் அல்லாமல், குறியீடற்ற தூண்டுதலுக்கும் (non-symbolic stimuli) எதிர்வினை அளிக்கின்றனர், பிரம்பைக் காட்டிப் பயமுறுத்தல், பிரம்பால் அடிப்பதைப் போலப் பயனுள்ளதாகவும், ஏன்? அதனைவிட மிகுந்த சக்தி வாய்ந்ததாகவும் அமையலாம். பிரம்பின் பயமுறுத்தலுக்கு எதிர்வினை தரும் குழந்தை, அவ் வேளையில் குறியீடான சிலவற்றிக்காகவே எதிர்வினை அளிக்கிறது. அதுபோலவே, புருவத்தினை மேலேற்றிக்கொண்டு அல்லது சொற்களைக் கொண்டு அடிப்பதாகப் பயமுறுத்துதல் குறியீடான ஒன்றேயாகும். குறியீடாக இருப்பினும் பயமுறுத்தலானது உண்மையாக அடிப்பதைப் போலவே சக்தி வாய்ந்ததாக அமையும். குறியீட்டு எதிர்வினைகளின் மூலக் காரணங்களை ஆக்கநிலையிருத்தச் செயன்முறையில் (conditioning process) கண்டுகொள்ளலாம் என்பதனைப் பாவ்லவ் (Pavlov) காட்டியுள்ளார். ஆக்கநிலையிருத்தச் செயன்முறையால் குழந்தை மொழியைத் தெரிந்து கொள்கிறது என்பதனை ஆல்போர்ட் (Allport) (1) நீண்ட காலத்திற்கு முன்னரே விளக்கியுள்ளார். சமூக இடைவினையில் மொழியின் சில முக்கிய அம்சங்களைப்பற்றி விவாதிப்பதற்கு முன்னால், நாம் குறியீடுகளைப் (symbolism) பற்றிச் சிறிது பார்ப்போம்.

நடனக்கலை குறியீட்டுமையை அடிப்படையாகக்கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. நீண்ட காலத்திற்கு முன்பே பரதரைப் (2) (Bharatha) போன்ற இந்திய அறிஞர்கள் குறியீட்டு அசைவுகளுக்குச் சில விதிகளை ஏற்படுத்தியுள்ளனர். மேடையில் நடிகன் அல்லது நடனமாடுவோன் மண்வெட்டியால் வெட்டுவது போன்ற அசைவுகளில் ஈடுபட்டால், அச் செயல் குறியீடாக அமைகிறது. ஆனால், நிலத்தில் உழவனின் வேலை குறியீடு அன்று; உண்மையானது. இவ்விரண்டு செய்கைகளும் ஒன்றுக்கொன்று ஒத்தவையாக உள்ளன. ஆனால், ஒன்றில் செயலானது நடிப்பாகவும், மற்றதில் உண்மையான வேலை

யாகவும் உள்ளது. நாட்டியக்காரனின் அல்லது நடிகனின் அசைவுகள், சபையில் உள்ளோர் அவனது செயல்களுக்கு விளக்க முரைக்கவோ எதிர்வினை அளிக்கவோ முற்பட்டால்தான் பொருள் உடையனவாகும். மனிதரின் இடைவினையில் எவை யெல்லாம் குறியீடுடையவை, எவையெல்லாம் குறீயீடற்றவை எனப் பாகுபடுத்தல் மிகவும் கடினமானதென்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். எவையெல்லாம் குறியீடுகள், எவையெல் லாம் குறியீடுடற்றவை எனப் பகுத்துக் கோடிட்டுக் காட்ட வியலாத அளவு மனித சமுதாயத்தில் மொழி முக்கியப் பங்கு வகிக்கிறது. சமஸ்கிருதத்தில் 'பொருள்கள்' என்பதற்கு நேர் சொல் 'பதார்த்த' (padartha) என்பதாகும். சரியாகச் சொன்னால் 'பொருள்' என்பதே அச் சொல்லுக்குரிய சரியான பொருள் ஆகும். குறியீட்டுமை, உலகில் மற்ற உயர்ந்த பண்பாடுகளில் பெற்ற முக்கியப் பங்கினைப் போன்றே, இந்தியப் பண்பாட்டிலும் முக்கியப் பங்கினைப் பெற்று ஆட்சி செலுத்தி யுள்ளது. மனிதன் ஒருவனின் பெயர் உண்மையிலேயே ஒரு குறியீடாகும். நாம் அறிந்துள்ளது போல் நம் பெயர்கள் மனிதர்களாகிய நமக்கு மிகவும் முக்கியமானவையாகும். இந் நூல் ஆசிரியர் புகைவண்டிப் பயணத்தின்போது நிகழ்ந்த ஒரு நிக்ழ்ச்சியினை இங்கு நினைவு கூறுகிறார். இரண்டு வெளிநாட்டுப் பெண்கள் 5 வயதுடைய ஒரு இந்தியப் பெண் குழந்தையோடு ஒரே பெட்டியில் பயணம் செய்து கொண்டிருந்தனர். அக் குழந் தைக்குத் தமிழ்மட்டுமே தெரியும். அதுபோன்றே வெளி நாட்டுப் பெண்டிர் இருவரும் ஆங்கிலம்மட்டுமே அறிவர். புகைவண்டி புறப்படும் பொழுதே அக் குழந்தை அழுதுகொண்டு இருந்தாள். வெளிநாட்டுப் பெண்கள், இரக்கப்பட்டுச் செய்ய முற்பட்ட எதனாலும் அக் குழந்தை தேறுதல் அடையவில்லை. அக் குழந்தையை அவளது தாய் பராமரிக்க இயலாத நிலையில் இருந்த காரணத்தால் அனாதை ஆசிரமம் ஒன்றிற்கு எடுத்துச் செல்வதாகக் கூறினர். அப் பெட்டியில் இருந்த இந்தியப் பெண் மணி ஒருத்தி அக் குழந்தையோடு தமிழில் பேசி, சமாதானப் படுத்த முற்பட்டும், அம் முயற்சி தோல்வியே அடைந்தது. சிறிது நேரம் கழித்து அவள் அக் குழந்தையின் பெயரைக் கேட்க, அக் குழந்தை தன் பெயர் 'இந்திரா' என்று கூறியது. அந்த இந்தியப் பெண்மணி, வெளிநாட்டுப் பெண்கள் இருவரிட மும் அக் குழந்தையின் பெயரைப் பயன்படுத்திப் பேசும்படி அறிவுறுத்தினாள். 'இந்திரா' என்ற பெயரால் அழைக்கப் பட்ட பொழுது, அக் குழந்தையின் நடத்தையில் பெரிதும் மாறு தல் தென்பட்டது. துக்கத்தையும், பயத்தையும் அவளால் கட்டுப்படுத்திக்கொள்ள முடிந்தது. அதற்கும் முன்னால் அவள்

பெற்றிருந்த பழத்தை உண்ணவும் கொடுக்கப்பட்டிருந்த பொம்மையை வைத்து விளையாடவும் முடிந்தது. தனது பெயர் அவளுக்கு அவ்வளவு முக்கியமானதாக இருந்தது.

நம் சமூக வாழ்க்கைப் பெருமளவு மொழி சம்பந்தமானதும், மற்றதுமான குறியீடுகளின் பயன்படுத்தலையும், கையாளலையும் பொருத்துள்ளது. பெரும்பான்மையான ஆளிடைத்தக அமைப்புகள் (inter-personal adjustments) சொல், குறியீட்டுத் தூண்டல்களால் நிகழ்த்தப்படுகின்றன. குறியீடற்ற நடத்தைக் குறியீட்டின் வழியாலேயே கட்டுப்படுத்தப்படுகிறது. இது மனித சமுதாயத்திற்குமட்டுமல்லாமல் மற்றச் சமுதாயத்திற்கும் பொருந்தும் என்பதனை உணர்ந்துகொள்ள வேண்டும். மிருகங்களை அடக்குதல் அவற்றைக் குறியீடுகளுக்கு எதிர்வினை தருமாறு பழக்குவதிலேயே அடங்கியிருக்கிறது. பறவை, பசு, நாய் ஆகிய யாவும் எவ்வளவு தூரம் குறியீடுகளுக்கு எதிர்வினை தருகின்றனவோ அவ்வளவு தூரம் கட்டுப்படுத்தப்படுகின்றன. பொருத்தமான ஆக்கநிலையிருத்தலாலும் பரிசுகளாலும், தண்டனைகளாலும் இம் மிருகங்கள் சைகைகளுக்கு மட்டுமல்லாமல் மொழிக்கும் எதிர்வினை தருமாறு செய்யப்படுகின்றன. வீட்டில் பெற்றோர், தொழிற்சாலையில் மேற்பார்வையாளர், பள்ளியில் ஆசிரியர், அலுவலகத்தில் மேலதிகாரி, சாலை வளைவில் காவலர் (policeman) ஆகிய அனைவரும் மனித சமுதாயத்தில், சைகைகளையும், மொழியையும் பயன்படுத்தி மற்றவரின் நடத்தையினைப் பெரிதும் கட்டுப்படுத்துகின்றனர். ஆனால், நம் மனத்திற்கொள்ள வேண்டிய முக்கியமானதொன்று என்னவென்றால் குறியீட்டு நடத்தை, குறியீடற்ற செய்கைகளைக் கட்டுப்படுத்துகிறதினால் சக்தி வாய்ந்தது என்பதேயாகும். இல்லையெனில் குறியீட்டு நடத்தைப் பயனற்றதாகிவிடும். குறியீட்டு நடத்தை ஒரு வழியேயாகும். அதனின் முடிவு மனிதருக்கு மனிதர் தக அமைத்துக்கொள்ளல் அல்லது மனிதர் உலகத்துக்குத் தக அமைத்துக்கொள்ளல் ஆகும். மானிடர் மட்டுமல்லாமல் குழுவும் குறியீடற்ற நடத்தையினால் நீடித்து நிற்கிறது. அதனால் சமுதாயம் குறியீடாக மாற, மாற, நடத்தையானது மேலும் மேலும் செல்வாக்கடைகிறது.

## சைகை (Gestures)

பொதுவாகச் சைகை எனும் கலைச் சொல், சொற்கள் சார்பற்ற எல்லாவித வெளிப்படையான குறியீட்டு நடத்தைகளையும் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தப்படுகின்றது.

நாட்டியமாடுவோரும், நடிகனும் பொருளைப் புலப்படுத்துவதற்குச் சைகைகளைப் பயன்படுத்துகின்றார்கள். குறிப்பாக, **'பரதநாட்டியத்தில்'** சைகைகள் சம்பிரதாயப்படுத்தப்பட்டுள்ளன. ஆனால், இஃது ஒரு விதிவிலக்காகும். சாதாரணமாகச் சைகைகள் சொற்களைப் போன்று சம்பிரதாயப்படுத்தப்படவில்லை. அதனால் தான் அவை சொற்களைப் போன்று துல்லியமாகப் பொருளைப் புலப்படுத்த முடியவில்லை. சாதாரணமாக நாம் சிலபல சைகைகளை, சொற்களை நிறைவுபடுத்தற்கெனப் பயன்படுத்துகிறோம். இச் சைகைகள், சொற்களின் பொருளைச் சிறப்பாக்கவும், அனுபவத்தினை முழுமையாக்கவும் செய்யலாம். பல தடவைகளில் சைகைகள் சொற்களின் பொருளையுங்கூட மாற்றலாம். எடுத்துக்காட்டாக, ஒரே குறிப்பானது புன்னகையோடு இணையும்போது முழுமையும் வேறுபட்ட எதிர்வினையைத் தரலாம். புன்னகையோடு கூடிய ஒரு திட்டுதல் எளிய முறையில் எடுத்துக்கொள்ளப்பட்டுப் புன்னகையற்ற அல்லது கடுமையான சைகைகளோடு கூடிய அதே திட்டுதலோடு பெரிதும் வேறுபடுகின்றது.

பழக்கப்பட்ட நாய் நம்முடைய சைகைகளுக்கு ஏற்ப மிகவும் குறிப்பிடும்படியான அளவு எதிர்வினை அளிப்பது ஒரு பொதுவான அனுபவமாக உள்ளது. நம்முடைய முகப் பாவனைகளை (facial expression) அடிப்படையாகக் கொண்டு நம் மனநிலைக்கு ஏற்ப நாய் எதிர்வினையளிக்கிறது. இதுபோலவே குழந்தைகள் நம்முடைய சொற்களைக் காட்டிலும் சைகைகளுக்குப் பெரிதும் தக்கவாறு இயங்குகின்றன. இரண்டு வயதிலும், அதற்குப் பின்னருமே குழந்தை தாய் பயன்படுத்தும் சொற்களில் சிலவற்றைப் புரிந்துகொள்கிறது. அப்படிச் சொற்களைப் புரிந்துகொண்டிருந்தாலுங்கூடக் குழந்தை, முதல் சில மாதங்களில் சைகைகளுக்குத் தக்கவாறே இயங்குகிறது.

வயது வந்தவர் நிலையிலும் மேற்கண்டதே உண்மையாக உள்ளது. ஒரு மனிதனைப்பற்றிய முதற்பதிவு (first-impression) அவனுடைய முகப் பாவனைக்கும் சைகைகளுக்கும் நாம் தரும் எதிர்வினை அடிப்படையாகக் கொண்டே அடிக்கடி அமைகிறது. குணவியல்பைப் படித்தலானது (character reading) சைகைகளுக்கான இத்தகைய விரைவான எதிர்வினைகளையே பெருமளவு அடிப்படையாகக் கொண்டுள்ளது. இங்குச் சைகைகளுக்கு எதிர்வினையளிப்பதைத் தனியன் அறியாமலிருக்கிறான். ஹோவல் (Howell) (3) என்பார் முகப் பாவனைகளில் வாய், கண்களைவிட அதிகம் தெரிவிப்புச் செய்கின்றது எனக் கண்டுள்

ளார். அதுபோலவே கிலேனும்(Kline),ஜோஹன்சனும்(Johannson) (4) தோள்களும், கைகளும், முன்கைகளும் மனவெழுச்சித் தெரிவிப்புகளை அடையாளம் கண்டுபிடித்தலில் முகத்தைவிடப் பெரிதும் உதவுகின்றன எனக் கண்டுள்ளார்கள். கடையில் விற்பனை செய்வோன் வாடிக்கையாளரின் கருத்து, மதிப்பின் அமைப்பு (frame of values), செல்வநிலை இன்னும் பிறவற்றை அவர்களது முகத் தோற்றத்திலிருந்தும் சைகைகளிலிருந்தும் மதிப்பிட வேண்டும். அதுபோலவே வாடிக்கையாளர் எவ்வளவு தூரம் விற்பனை செய்வோரின் சொற்கள் உண்மையாவை, எவ் வளவு தூரம் அவை மேலீடான (superficial) விற்பனைத் தன்மை யுடையன என்பவற்றை அவர்தம் சைகைகளினின்று முயன்று மதிப்பிடல் வேண்டும்.

பேட்டி காண் தேர்வில் (selection interview)பேட்டி நடத்தும் குழுவானது பேட்டியிடுவோனது உண்மையான செய்திகளால் மட்டுமல்லாது, அவனது ஆளுமைக் கூறுகளை விட்டுச் செல்லும் சைகைகளாலும் பதிவு செய்கின்றது. சைகைகளை அடிப்படை யாகக் கொண்டு நாம் கொள்ளும் உளப்பதிவுகளும் (impress-ions), மிக விரைந்த முடிவுகளும் பழுதுள்ளதாக அமையலாம் என்பதனையும் உணர வேண்டும். ஒரு மனிதனைப்பற்றி இயைந்த, நேர்மையான, திறமையான மனிதன் என்று முடிவெடுக்கும்படி அவனுடைய ஒழுக்கங்களும் தெரிவிப்பும் நம்மை நடத்திச் செல்லலாம். ஆனல், பின்னர் அந்த மனிதன் நேரெதிரிடையான வகையில் தன்னை நிரூபித்துக் கொள்வதனையும் நாம் காண் கிறோம். அதே போல, முதலில் கடுமையானவன் அல்லது நம்பிக்கையற்றவன் அல்லது தன்னலம் வேண்டுவோன் என முடிவு செய்யப்படும் ஒரு மனிதன் பின்னர் மிகுந்த இயைவும், நேர்மையும், நம்பிக்கையும் கொண்ட மனிதனுக நடைமுறையில் வெளிப்படலாம். இவையெல்லாம் சைகைகள் தரப்படுத்தப் படாமையாலேயே ஆகும். மேலும், தனியவனின் நோக்கமற்ற சைகைகள் நமக்குச் சில உளப்பதிவுகளை அளித்தாலும் அவ்வுளப் பதிவுகள் உண்மையாக அத்தனியவனல் ஒரு பொழுதும் கருதப் பட்டிருக்கமாட்டா. ஒரு சிலர் தங்களுடைய சைகைகளைக் கட்டுப் பாட்டில் வைத்துள்ளனர். வியத்தகு பொதுமேடைப் பேச் சாளரான சிலர் தங்களுடைய தோரணை, கை அசைவுகள், முகப் பாவனைகள் ஆகியவற்றைத் தெரிந்தெடுத்து மற்ற மக்களை ஆட்படுத்தப் பயன்படுத்துகின்றனர். அவர்தம் சைகைகள் அவர்கள் பயன்படுத்தும் சொற்களைவிட மிகுந்த சக்திவாய்ந்த னவாக அமையலாம், அதுபோலவே விலைமகள் ஆழ்ந்தாராய்ந்த சைகைகளையே மக்களை வசீகரித்தற்கெனப் பயன்படுத்துகிருள்.

நாம் கடந்து செல்லும்பொழுது, வெவ்வேறு மொழிபேசும் 2 அல்லது 3 குழந்தைகளை உடைய ஒரு குழு பொது ஊடகம் (medium) ஒன்றும் இன்றிச் சைகைகள், முகத் தோற்றங்கள், சரியான அசைவுகள் ஆகியவைமட்டுமே கொண்டு மகிழ்ச்சியாக விளையாட இயலும் என்ற உண்மை நம் கவனத்திற்கு வரலாம்.

சில குழு வேறுபாடுகளும்கூட உள்ளன. எடுத்துக் காட்டாக, பொதுவாகப் பார்த்தால் வட இந்தியர், தென்னிந்தியரைவிட அதிகம் தெரிவிப்புகளில் ஈடுபடுகின்றனர் என்பதனை நாம் காண்கிறோம். இரண்டு தென்னிந்தியர் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது உள்ளார்ந்த (solemn) **நமஸ்காரம்** (Nameskar) என்று வாழ்த்துத் தெரிவிக்கின்றனர். அவர்கள் உடல் அசைவுகளைவிட, அதிகம் சொற்களையும் முகத் தோற்றங்களையுமே தங்கள் மகிழ்ச்சியை அறிவிப்பதற்குப் பயன்படுத்துகின்றனர். இது போன்ற ஒத்த நிலைமைகளில், இரு வட இந்தியர் தம் மனவெழுச்சியை ஒருவரை ஒருவர் தழுவிக்கொள்வதன் மூலமே வெளிப்படுத்துகின்றனர். ஐரோப்பிய மத்தியதரை இனத்தவருக்கும், நார்டிக் இனத்தவருக்கும் இடையே கூட வேறுபாடுகள் உள்ளன. இத்தாலியர், ஸ்பானியர், பிரஞ்சுக்காரர் ஆகியோர் சைகைகளைப் பெருமளவு பயன்படுத்துவதன் மூலம் மனவெழுச்சி மிக்க மக்கள் என்ற முறையில் நோக்கப்படுகின்றனர். ஆனால், சீனர்கள் அதிகம் தெரிவிப்பில் ஈடுபடாததால் 'உணர்ச்சிகுன்றிய' (impassive) மக்கள் என்ற முறையில் நோக்கப்படுகின்றனர். இவற்றால் நாம் தவறான வழிக்குச் சென்று சேர்தல் கூடாது. சீனர்கள் தங்கள் உணர்ச்சிகளைச் சைகைகளின் மூலம் அறிவிப்பதில்லை என்றும் நினைத்தல் கூடாது. 'உணர்ச்சிகுன்றிய' என்றால் சீனர்கள் பயன்படுத்தும் சைகைகள் மற்றவர்கள் பயன்படுத்தும் சைகைகளைவிடப் பலமற்றும் தெளிவில்லாமலும் இருக்கின்றன என்பதே பொருள் ஆகும். மேலும், இச் சைகைகள் சமூகத்தின் வழி கற்றுக்கொள்ளப்பட்டவையாகும். சீனக் குழந்தை உள்நாட்டு மொழியைப் பயின்றுகொள்வதைப் போன்றே சைகைகளையும் தெரிந்து கொள்ளுகிறது. இத்தாலியரும், ஸ்பானியரும் இவ்வண்ணமே செய்கின்றனர். இவ்வேறுபாடுகள், உடன்பிறந்த இனவேறுபாடுகள் என்று கொள்ளலாகாது. இவ்வேறுபாடுகள் கற்றுக் கொண்டவையாகும்.

மனிதக் குழந்தை எவ்வாறு சைகைகளின் மூலம் தன்னை அறிவிக்கக் கற்றுக்கொள்கின்றது? இரண்டாவதாக, மனிதக் குழந்தை மற்றவருடைய சைகைகளுக்குத் தக்கவாறு இயங்க

எப்படிக் கற்றுக்கொள்கிறது? ஒரு சில பத்து ஆண்டுகளுக்குமுன் இவ் வினுக்களுக்கு விடை பின்பற்றலாக (imitation) இருந்தது. சுற்றிலுமுள்ளோர் புன்னகையோடு இருத்தலைக் கண்ட குழந்தை புன்சிரிப்பை மேற்கொள்கிறது என்றே எண்ணப்பட்டது. ஆனால் இன்று சுற்றிலுமுள்ளோர் புன்னகைக்குத் தக்கவாறு இயங்குதலாலேயே, குழந்தை புன்சிரிப்பைக் கற்றுக்கொள்கிறது என்ற கருத்தே நிலவுகிறது, தாய் குழந்தைக்கு ஊட்டும்போதும், குழந்தையைக் கொஞ்சும்போதும் புன்சிரிப்போடு விளங்குகிருள். அவள் சைகைகளோடு ஒலிகளையும் பயன்படுத்துகிருள். இவ்வொலிகள் பொருள் அற்றும், பொருளோடும் இருக்கலாம். இவ்வாறு குழந்தை சைகைகளுக்கும் ஒலிகளுக்கும் இருவித உளப்பதிவுகளைப் பெறுகிறது. புன்சிரிப்போடு கூடிய கொஞ்சுதலால் குழந்தை புன்சிரிப்புக்குத் தக்கவாறு இயங்கக் கற்றுக் கொள்கிறது. தாய் எப்பொழுதும் புன்சிரிப்போ அல்லது கடுமையான பார்வையோ காட்டாதிருந்தால் சைகைகளுக்குத் தக்கவாறு இயங்குவதற்குக் குழந்தை பெறும் பயிற்சியினைக் கற்றலில், சில தடைகள் நிகழக் கூடும். இப் பயிற்சியில் குறைபாடு உள்ள சில வயதுவந்தவரும் (adults) உள்ளனர். தாய் சைகைகள் மூலம் தெரிவிப்பினைச் செய்யாதவளாயிருந்தால் குழந்தையும் சைகைகளுக்குத் தக்கவாறு இயங்குதல் செய்யாமல் இருக்கலாம். லேப்பியரும், பார்ன்சுவொர்தும் (La Piere and Farnsworth) எழுதுவதைப் போன்று, 'இதன் முடிவு ஒருவிதச் சமூகக் கிட்டப் பார்வையாகவும், மனிதனுக்கு மனிதன் கொண்டுள்ள தொடர்புகளில் சைகைகள் மூலம் மிக வெளிப்பட்டுத் தெரியும் சிலவற்றை நழுவவிடும் ஒரு மனப் போக்காகவும், அவர்கள் என்ன பார்க்கின்றனர் என்பதனை அறியாத காரணத்தால் அவர்கள் என்ன சொல்கின்றுர்கள் என்பதுபற்றி அசாதாரணமாய் நேரடியாக அமையும் ஒரு தொடர்புடைய விருப்பமாகவும் அமையும்' (5.9).

கடுமையும், அபாயமும் நிறைந்தது எனச் சொல்லப்படும் நடத்தையின் அடிச்சுவட்டை ஆராய்ந்தால் அஃது அடுத்தவரது சைகைகளுக்கு உணர்ச்சியற்றதான அடிச்சுவட்டையே அடிக்கடி பெறுகின்றது. குழவி பின்னர் குழந்தை புன்னகை, அழுதல், கத்துதல், கை கால் அசைத்தல் மேலும் இன்ன பிற சைகைகளின் மூலம் தன்னை வெளிப்படுத்துகின்றது. அடிப்படையாக நலமின்மைத் தெரிவிப்புகளும், இன்பம், திருப்தி ஆகியவற்றின் தெரிவிப்புகளுமே உள்ளன. வலி அல்லது நலமின்மை உள்ளபோது 'அழுதலாகிய தெரிவிப்பு' எழுகின்றது. குழந்தை தன் முகத்தை 'முறுக்கிக்' கொள்கிறது. உடம்பை

'நெளித்தலும்' அங்கு இடம் பெறுகின்றது. லேப்பியரும், பார்ன்சுவொர்த்தும் (La Piere and Farnsworth) 'இந்த அங்க அசைவுகள் குறையீட்டு நடத்தை அன்று. ஆனால் விரிந்து பரந்த பல்வேறு வகைப்பட்ட உள்ளமைந்த பொதுமையான துலங்கல்கள் ஆகும். அழுதலும் நெளிதலும் குழந்தையின் உடல் சமநிலையில் ஏற்பட்டுள்ள தொந்தரவுகளையே குறிக்கும்' எனக் குறித்துள்ளனர் (5.96). தாய் இத்தகைய தூண்டுதலுக்குத் துலங்குகிறாள். குழந்தையின் பசி அல்லது நலமின்மை அல்லது வலி ஆகிய தேவைகளுக்குக் கவனம் செலுத்தி ஆவன செய்வதன் மூலம், தாய் அதன் குறியீடற்ற நடத்தையின் பொருளையும் அறிந்துகொள்கிறாள். இது பலப்படுத்தலுக்கு (reinforcement) இட்டுச் செல்கின்றது. இறுதியில் குழந்தை சைகைகளைக் தொடர்புகொள்ளுதற்கும் பயன்படுத்துகிறது. இதே பொருளில்தான் குழந்தை, தாய் தன்னைக் கவனிக்கும் வரை அழுதலை மேற்கொள்கிறது. இதேபோல்தான் குழவியும், குழந்தையும் இன்பத்தினை அல்லது திருப்தியை வெளிப்படுத்துதற்குச் சைகைகளையும் பயன்படுத்தக் கற்றுக்கொள்ளுகின்றன. குழந்தை உடல் சமநிலை சரியாக இருக்கும்போது அமைதியாகவும், அது பிறழும் பொழுது அழவும் செய்கிறது. இது தாயின் செயலுக்கும், தாயின் செயல் சமநிலையின் பாதுகாப்பிற்கும் இட்டுச் செல்கின்றது. திருப்திகரமான ஒலிகளும், புன்னகைபோன்ற திருப்தியின் முக பாவனைகளும், தாய் இத் தெரிவிப்புகளைப் பார்த்து அறிந்துகொள்வதாலும், உற்சாகமளித்தலாலும் பலப்படுத்தப்படுகின்றன. இவ்விதமாகக் குழவி, குழந்தை ஆகியோரின் ஒழுங்கீடான நோக்கமற்ற அடைவுகள் நாளாவட்டத்தில் தாய்க்கு நலமின்மையையும், இன்பத்தையும் அறிவிக்கும் சைகைகளாக ஆகின்றன.

பிறவிச் செவிடும், ஊமையுமாயுள்ளோர் சிறந்த ஒழுங்குபடுத்தப்பட்ட சைகை மொழியினைப் பெற்றுள்ளனர் என்பது மிகத் தெளிவு. அவர்கள் தங்களுக்குள்ளேயும் அடுத்தவரிடையேயும் எளிதாகத் தொடர்புகொள்ள முடிந்தவர்களாக உள்ளனர். செவிட்டு ஊமைகளில் கைரேகை பார்ப்போர் சிக்கலான செய்திகளையும் சைகைகளின் மூலம் மக்களுக்கு அறிவிக்கும் ஆற்றல் பெற்றுள்ளனர்.

## மொழி (Language)

குழவியின் நோக்கமற்ற அசைவுகள், வலி அல்லது நலமின்மை, இன்பம் ஆகியவற்றின் சைகைகளாக மாறுவதை

நாம் முன்னரே கண்டோம். இதுபோன்று குழந்தையின் நோக்கமற்ற ஒலிகள் பேச்சாகின்றன. குழந்தை செய்யும் முதல் ஒலி அழுகையாகும். மிகப் பல்வேறு வகைப்பட்ட தூண்டல்களுக்கு அழுகையானது ஒரு கட்டுப்படுத்த இயலாத பொதுமையான துலங்கலாக அமைகிறது. பசி அல்லது நலமின்மை விலக்கப்படும் பொழுது, குழந்தை அமைதிக்கும் உறக்கத்திற்கும் திரும்புகிறது. முதல் வாரத்தினைவிடக் குழவி பின்னர் வரும் சில வாரங்களில் அதிகம் விழித்திருக்கும் காலத்தினைப் பெற்று இருக்கிறது. பின் குழவி பல ஒலிகளை எழுப்பத் தொடங்குகிறது. மேலும், குழவிக்கு ஊட்டும் போதும் பராமரிக்கும் போதும் தாய், 'பேசுதலில்' ஈடுபட்டாக வேண்டியுள்ளது. ஆகையால், ஊட்டும் போதும், நலமின்மையை நீக்கும்போதும் தாய் செய்யும் ஒலிகளுக்குக் குழவி துலங்குகிறது. தாய் குழந்தையின் ஒலிகளுக்கேற்பத் துலங்குவதைப் போன்ற அதே வகையில், தாயின் ஒலிகளுக்கேற்பக் குழந்தை துலங்குகிறது. தாய் குழந்தை ஆகிய இருவரிடையில் பேச்சு இடம் பெறுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே ஒருவருக்கொருவர் செய்யும் ஒலிகள் இருவரும் தொடர்பு கொள்ளும் கருவியாக அமைகின்றன. குழந்தை பல்வேறு வகையான ஒலிகளை ஏற்படுத்துகிறது. மிகச் சிறந்த பன்மொழிப் புலவரும், மானிடவியலாருமாகிய பிரான்ஸ் போவாஸ் (Franz Boaz) (6) ஒலிப்பு முறை சார்ந்த கூறு பகுப்பில் (phonetic analysis) கீழ்க்கா ணும் விதிகளை எடுத்துக் கூறியுள்ளார்:

1. பல்வேறு மொழிகளில் உள்ள ஒலிகளின் எண்ணிக்கை கணக்கிலடங்காது. ஆனால்,

2. ஒரு தனிப்பட்ட மொழியில் திட்டவட்டமான வரையறையுள்ள ஒலிகளின் குழுக்கள் உள்ளன.

இவ்விதமாக ஒவ்வொரு மானிட மொழியும் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள, இயலுகின்ற பல உச்சரிப்புகளைத் தேர்ந்தெடுத்து அவற்றைப் பொருள் உள்ளவையாக எண்ணுகின்றன. அவை குறிப்பிட்ட மொழி அமைக்கப்பட்டுள்ள ஒலியின் அடிப்படை மூலங்களை அமைக்கின்றன. இதனின்றும் இரண்டு விளைவுகள் தொடர்கின்றன. குறிப்பிட்ட மொழி பயன்படுத்தும் அந்த உச்சரிப்புகள் குழந்தைப் பருவத்தில் பலப்படுத்தப்பட்டும் குழந்தையால் தொடர்ச்சியாகப் பயன்படுத்தப் பட்டும் வருகின்றன. குழந்தை செய்யும் மற்ற ஒலிகள் வழக்கத்தில் பலப்படுத்தப்படாமையால் விட்டுவிடப்படுகின்றன. இதன் விளைவாகவே நாம் வளர்ந்த பின்பு மற்ற மொழிகளைத்

தெரிந்துகொள்வது நமக்கு மிகுந்த சிரமமானதாக உள்ளது. மற்ற மொழிகளில் உள்ள ஒலிகள் மிகவும் விசித்திரமானதாகவும், நம்மால் அவற்றைக் கற்றுக்கொள்வது இயலாத ஒன்றாகவும் தோன்றுகிறது. அடுத்த வகையில் பார்த்தால் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மொழிகளை, அம் மொழிகள் குழந்தையானது வளரும் குழுவில் பயன்படுத்தப்பட்டால் குழந்தை சிரமமில்லாமல் தெரிந்துகொள்கிறது. மஹாராஷ்டிர அல்லது வங்காள அல்லது பஞ்சாபிக் குழந்தை மைசூரில் வளர்ந்தால் கன்னடத்தை எளிதில் பேச முடிகிறது. அத்தகைய குழந்தையின் உச்சரிப்பு அடுத்த கன்னடக் குழந்தைகளின் உச்சரிப்பினின்று வேறுபட்டும் அமைவதில்லை. ஆனால், மஹாராஷ்டிர அல்லது வங்காள அல்லது பஞ்சாபியான ஒரு வயதுவந்தவர் மைசூரிலேயே குடியேறியிருப்பினும் கன்னடத்தைக் கற்க மிகவும் சிரமமானதாக உணர்கிறார். கன்னடத்தைத் தெரிந்துகொள்வதில் அவர் வெற்றி பெற்றாலும் அவருடைய உச்சரிப்பினின்று அவர் பேசும் கன்னடத்தில் குறைபாடுகள் உள்ளதை எப்பொழுதும் கண்டுகொள்ளலாம். ஏனெனில், குழந்தைப் பருவத்தில் பல்வேறு ஒலிகளை எழுப்பும் சக்தி உள்ளது. ஆனால், வாளர்ச்சியுடன் நம் தாய் மொழியான குறிப்பிட்ட மொழியில் இணையாத ஒலிகளை எழுப்பும் சக்தி மறைந்துவிடுகிறது என்பதே யாகும். இதனை உறுதிப்படுத்த இன்னுமோர் எடுத்துக்காட்டினை நாம் கொடுக்கலாம். இந்தியாவின் பல்வேறு மாகாணத்தவரும் ஆங்கிலத்தைப் பேசும்பொழுது, ஒரு மனிதன் எம் மொழி இனத்தைச் சேர்ந்தவன் என்பதனை அவன் ஆங்கிலப் பேச்சினின்று உடனே தெரிந்துகொள்ளலாம் என்பது மிகவும் தெளிவாக அறிந்த ஒன்று. ஆங்கில மொழியினை நாம் கற்றுக்கொள்வது நம்முடைய தாய் மொழியின் ஒலியத்தினால் (phonemes) பாதிக்கப்படுகின்றது. இக் காரணத்தால்தான் ஆங்கிலத்தை உச்சரிக்கும் முறையிலிருந்தே நாம் அம் மனிதன் தமிழனா, மஹாராஷ்டிரனா, வங்காளத்தவனா என்பதனை உடனே குறிப்பிட முடிகின்றது.

பேச்சு, நன்கு சம்பிரதாயப்படுத்தப்பட்ட சொற்சார்ந்த ஒலி வடிவங்களைக் கொண்டிருக்கிறது. இந்த ஒலிகள் பேசுவோருக்கும் மற்றவருக்கும் வரையறையான பொருளைத் தருகின்றன. சம்பிரதாயப்படுத்தப்பட்ட குறையீடுகளின் மூலம் தொடர்பு கொள்ளும் ஓர் ஒழுங்கே மொழி என வரையறுக்கலாம். மொழியின் தோற்றம்பற்றிய பல்வேறு கோட்பாடுகள் (theories) உள்ளன. ஒரு தத்துவம் சொற்களின் ஒலிகள் இயற்கையின் ஒலிகளை ஒத்துள்ளன என்று உறுதி

செய்கின்றது. 'இஸ்...ஸ்...'க்கூ', 'களகள', 'க்கூஊக்கூஊ', 'காகா' போன்ற நாம் பெற்றுள்ள பல சொற்கள் மிருகங்கள் ஏற்படுத்தும் ஒலிகளையோ அவை மேற்கொண்ட நடத்தை யின் மூலம் தெரிவிக்கும் ஒலிகளையோ மிகவும் ஒத்துள் ளன என்பதில் ஐயமில்லை. மற்றுமொரு தத்துவம் சில குறிப் பிட்ட பொருள்களுக்கும் அவற்றிற்குப் பொருத்தமான குரல் துலங்கலுக்கும் இடையே உள்ள தொடர்பினையே மொழி பிரதி பலிக்கிறது எனக் கூறுகின்றது. மேலும், அவை நிரந்தர மாகத் தொடர்புபடுத்தப்பட்டுள்ளன என்கிறது. மொழியின் தோற்றம்பற்றிய எந்தத் தத்துவமாயினும் சமூகக் காரணியை (social factor) அடிப்படைக் காரணியாக எடுத்துக்கொள்ள வேண்டும்.

பேச்சுச் சமூகவயமானது. மொழி குழந்தை பிறந்துள்ள குழுவினைச் சார்ந்துள்ளது. மொழி சமூக இடைவினையின் விளைவு. பேச்சுக் கற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். அக்பரைப் பற்றிய ஒரு சுவைமிக்க சிறுகதை உண்டு. அக்பரின் காலத்தில் கடவுளின் மொழி அரபு மொழியா பர்சிய மொழியா என்ற பெரிய கருத்து மாறுபாடு (controversy) இருந்த தாகத் தெரிகிறது. செயற்பிரியரும், தனித்த பேரரசருமான அக்பர் சில குழவிகளை, அவர்கள் வளர்ந்த பின்பு என்ன மொழி பேசுவார்கள் என்பதனை அறியத் தனிமையில் வளர்த்துவர ஏற் பாடு செய்தார். அக் குழவிகளைப் பராமரித்த வயது வந்தோர் (adult) அவற்றுடன் ஒருபொழுதும் மொழியின் மூலம் தொடர்பு கொள்ளவில்லை. அக் குழந்தைகள் ஒரு மொழியும் பேச இயலாதவர்களாகவே வளர்ந்திருந்தார்கள் என்பதே விளக்கமான முடிவாக அமைந்தது. சைகை மொழியே அக் குழந்தைகள் கற்றுக்கொண்டிருந்த ஒரே மொழியாக இருக்க லாம். இக் கதையின் சிறப்பு, மொழி சமூக இடைவினையால் கற்றுக்கொள்ளப்படுவது என்பதனை அறிவுறுத்துவதேயாகும். பல வேளைகளில் நாம் நம் 'தாய்மொழியின்' மேல் அதிகப் பற்றுக் (sentiment) கொள்ளுகிறோம். தாய் மொழியையும் நாம் **கற்றுக்** கொண்டுதான் ஆக வேண்டும் என்பதனை மறுத்தல் கூடாது. கைவிடப்பட்ட ஒரு குழந்தை தற்செயலாக வேறு மொழி பேசும் ஒரு குடும்பத்தில் வளர்க்கப்பட்டால் அம் மொழியே குழந்தையின் 'தாய்மொழியாக' அமைகிறது. அக் குழந்தையினை வளர்க்காத சொந்தத் தாயின் மொழி 'தாய் மொழியாக' அமைவதில்லை.

குழந்தை ஒரு மொழியினைப் பெறுவதில் (acquisition) இரண்டு நிலைகள் உள்ளன. முதலாவதாக, குழந்தை தாயிடமிருந்தும் மற்ற வயதுவந்தவரிடமிருந்தும் (adult) பெறும் சொற்சார்ந்த தூண்டல்களுக்குத் துலங்கக் கற்றுக்கொள்கிறது. குழந்தை இரண்டாவது வருடத்திலும், அதற்குப் பின்னருமே சொற்களைப் பயன்படுத்தும் திறனைப் பெறுகிறது. குழந்தையின் வாழ்க்கையின் முதல் நாளிலிருந்து தாய் குழந்தையுடன் பேசுகிருள். குழந்தை சமூகவயமாவதற்கும், நாம் பின்னல் பார்க்கப் போவதைப் போன்று குழந்தை மொழியினைப் பெற்றுக் கொள்வதற்கும், தாயின் பக்கத்தில் அமையும் இந் நடத்தை மிகவும் முக்கியமானதொன்ருக அமைகிறது. தாயின் குறியீடற்ற நடத்தையோடு குழந்தை சில குறிப்பிட்ட ஒலி வடிவங்களை இணைத்துக்கொள்கிறது. தாயின் குரல், குறியீட்டு மதிப்பையும் இன்ப மதிப்பையும் விளைவிக்கிறது. ஏனென்ருல் தாய் குழந்தைக்கு ஊட்டும்போது பேசவும், பாடவும் செய்கின்ருள். தாய் கூறுபவைக் குறியீட்டு முக்கியத்துவம் பெறுகின்றன. ஏனென்ருல் தாய் அதனையே செய்கின்ருள். இதேபோன்ற வழியில் தடைக்கும், விலக்கத்திற்கும் உரிய சொற்கள் தமக்குரிய முக்கியத்துவத்தைப் பெறுகின்றன. ஏனென்ருல், தாய் நடைமுறையிலேயே மேற்கொள்கின்ருள். இதன் காரணமாகக் குழவியும் குழந்தையும் தொடக்கத்தில் சொற்களுக்கும் அவற்றின் பொருளுக்கும் துலங்குவதைவிட ஒலி வடிவங்களுக்கே துலங்குகின்றன. இது விலங்குகளின் நடத்தைக்கும் குழந்தைகளின் நடத்தைக்கும் பொதுவான ஒன்ருக உள்ளது.

பழக்கப்பட்ட பறவை அல்லது விலங்கு சொந்தக்காரனின் பேச்சுக்குத் துலங்கல் தருகிறது. ஆனல், ஒலிகளைப் போன்று பொருள் உள்ள சொற்கள் முக்கியத்துவம் பெறவில்லை என்பது நன்கு அறிந்த ஒன்றேயாகும். வளைதலும், பிறவகையான சைகைகளும் தூண்டல்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. அதன் காரணமாகச் சொற்சார்ந்த துலங்கலின் வளர்ச்சியின் முதல் நிலைகளில் குழந்தைக்குக் குரட்பண்பே சொற்சார்ந்த வடிவங்களைக் காட்டிலும் முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது. படிப்படியாகக் குழந்தை மேலும் மேலும் சொற்சார்ந்த வடிவங்களுக்குத் தானகவே துலங்குதலை மேற்கொள்கிறது. 10-12 மாதங்களில் குழந்தை ஒன்று அல்லது இரண்டு சொற்களைப் பொருளோடு பயன்படுத்த முடிகிறது என ஆய்வுகள் காட்டுகின்றன. இரண்டு வயதில் குழந்தை 300 சொற்களையும் மூன்று வயதில் 800 சொற்கள் வரைக்கும் ஐந்து வயதில் 2,000 சொற்கள் அளவிலும் பயன்படுத்த இயலுகிறது. இவ்வகையான வேகத்தில் குழந்தை

மொழியில் தேர்ச்சி பெறுகிறது. குழந்தை சொற்களுக்குப் பதில் கூறவும், இச் சொற்கள் வாயிலாய்த் தன் எண்ணங்களை வெளிப் படுத்தவும் அறிந்துகொள்கிறது. மற்ற வயதுவந்தோருடன் கொள்ளும் இடைவினையின் பரப்பு மிகுவதன் காரணமாகக் குழந்தை தன் சொல் அகராதியினை விரிவுப்படுத்திக்கொள்கிறது.

படிப்பதற்கும், எழுதுவதற்கும் குழந்தை திறமை பெறும் பொழுது இடைவினையின் பரப்பு மேலும் அதிகமாகிறது. இன்றைய செய்தித்தாள்களையும், புத்தகங்களையும் அச்சிடும் முறைகள் மேலும் இடைவினையின் பரப்பினை அதிகமாக்குகின்றன. வயது வந்த பருவத்திற்கு (adulthood) நீண்ட காலத்திற்கு முன்பே அடுத்த மனிதரோடும், குழுக்களோடும், பல வயதினரோடும், தேசத்தவரோடும் குழந்தை பெருமளவு தன் இடைவினையின் பரப்பினை அதிகமாக்கிக்கொள்கிறது. மொழி, சமூக இடை வினைக்கும், தனியவனோடு சமூகத்தின் வளர்ச்சிக்குமென மனிதன் படைத்துள்ள சொற்களால் ஆக்கப்பட்ட ஒரு பெரிய கருவி என நம்பிக்கையோடு உறுதி கூறலாம். சொற்களின் மூலமாகவே தனியவன்மட்டுமன்றிக் குழுக்களும் கட்டுப்படுத் தப்படுகின்றன. தாயின் தாலாட்டே குழவியைத் தூங்கச் செய்கிறது. மேலும், சொற்களைப் பயன்படுத்தலாலேயே அரசியல் தலைவர்கள் தூங்கிக் கிடக்கும் நாட்டைக் கிளர்ந்தெழச் செய்கின்றார்கள். பிரதேச மொழிகளை இடையீடாகக் கொண்டே காந்திமகான் இந்திய மக்கள் உரிமை, பொறுப்புணர்ச்சிகளை உணர்ந்து கிளர்ந்தெழுமாறு செய்தார் என்பது வரலாறு முக்கியத்துவம் பெற்ற ஓர் உண்மையாகும். அகில இந்திய காங்கிரஸ் ஆங்கிலத்தை ஊடகமாகப் (medium) பயன்படுத்தியதால், காந்திய சகாப்தத்திற்கு முன்னால் வகுப்புகளின் ஒரு வெறும் இயக்கமாகவே இருந்தது. இந்தியாவின் பிரதேச மொழிகளைப் பயன்படுத்தியது காந்தியின் மேதைத் தன்மையாகும். அதன் மூலமே தேசிய சுதந்திரத்திற்கும், வளர்ச்சிக்குமான பொது மக்கள் இயக்கம் நாடு முழுவதும் அமைந்தது.

பேசும் சொற்களுக்கு ஏற்ப மிருகங்கள் துலங்கல் தரக் கற்றுக் கொள்கின்றன என்பதனை நாம் மேலே கண்டோம். ஆனால், ஏன் மனிதக் குரங்குகள் எடுத்துக்காட்டாக, எவ்வித மொழியையும் வளர்த்துக்கொள்ள முடிவதில்லை. உடற்கூற்றின்படி வாலில்லாக் குரங்குக்கும் மனிதனுக்கும் மிகுந்த ஒற்றுமை உள்ளது. நாம் முன் கண்டபடி வாலில்லாக் குரங்குகளும் குரங்குகளும் குழுக்களாக வாழ்கின்றன. இருப்பினும் அவற்றால் ஒரு மொழியினை வளர்த்துக்கொள்ள முடிவதில்லை. கெல்லாக்

கும் (Kellog) அவர் மனைவியும் (7) தங்கள் குழந்தையுடன் ஒரு வாலில்லாக் குரங்குக் குட்டியையும் வளர்த்து வந்தார்கள். அக் குட்டி மனித வழிகளில் பலவற்றைக் கற்றுக்கொண்டதை அவர்கள் கண்டார்கள். அக் குட்டி மனிதக் குழந்தையைக் காட்டிலும் வலுவும் சுறுசுறுப்பும் உள்ளதாக இருந்தது. ஆனால், குழந்தைக்கும் அக் குட்டிக்கும் மிகுந்த வேறுபாடு இருந்தது. இரண்டும் சொற்களுக்குத் துலங்கின. ஆனால், குழந்தை சொற்களுக்குத் துலங்குவதிலும், தன்னை வெளிப்படுத்த சொற்களைக் கையாளுவதிலும் குரங்குக் குட்டியினைவிட மிகப் பெருமளவு முன்னின்றது. மனிதக் குரங்குத் தாய், வெளி உலகுக்குத்தக்கபடி பொருந்திக்கொள்வதற்கு மானிடத் தாயைப் போன்றே தன்னுடைய சந்ததிக்குக் கற்றுத் தருகின்றது என்பதனைக் யெர்க்ஸ் (Yerkes) காட்டியுள்ளார் (8). வாலில்லாக் குரங்குத் தாய் வெகுமதிகளையும், தண்டனைகளையும் பயன்படுத்துகின்றது. குறியீடுகளை விளங்கிக்கொள்ளும் சக்தியின்மையே வாலில்லாக் குரங்கின் பெரியதொரு குறைபாடு ஆகும். இதன் காரணமாக நிகழ்காலத்தின் அனுபவங்களினின்று வாலில்லாக் குரங்கு கற்றுக் கொள்வது கட்டுப்படுத்தப்படுகின்றது. எதிரிடையாக மனிதக் குழந்தை நிகழ்காலத்தில் மட்டுமல்லாமல் இறந்தகாலம், எதிர்காலம் ஆகியவற்றிலும் தன் கற்றலை விரிவுப்படுத்த முடிகிறது. சொற்சார்ந்த குறியீடுகளின் ஊடகத்தின் மூலம் தாய், மாதிரி மனிதர்களை (model persons) அமைக்க முடிகிறது. அவர்தம் குறிகோள்களும், ஆவல்களும், அரும்பெரும் செயல்களும் குழந்தையின் நடத்தையினைப் பாதிக்கின்றன. தாய் இறந்துப்பட்ட பாட்டன் பாட்டியைப்பற்றிப் பேசலாம். இறந்து பட்ட அல்லது இப்பொழுது வீட்டில் இல்லாத பாட்டன் பாட்டியின் குறிக்கோள்களையும், அரும்பெரும் செயல்களையும் குழந்தை ஆவலோடு செவிமடுக்கலாம். இதே போலத் தாய் எண்ணற்ற மனிதர்களை, மாதிரி மனிதர்களாக அமைப்பதற்காகப் புராணத்தையும் வரலாற்றையும் வாழ்க்கைச் சரிதங்களையும் பயன்படுத்துகிறாள். இராமாயண, மகாபாரதத்தின் தலைவர்கள், இந்தியர்களின் நடத்தையினைத் தொடர்ச்சியாகக் காலமெல்லாம் வசப்படுத்தி வந்திருக்கிறார்கள். இதுவே சொற்களின் ஆற்றல் ஆகும்.

சொற்கள் குறியீட்டு மாதிரிகளை அமைக்க முடியும். அவை குழந்தையின் நடத்தையினையும் மாற்றுகின்றன. இவ்விதமாகக் குழந்தை அனுபவத்தால்மட்டுமல்லாமல், இருப்பவர் இடத்தும் இல்லாதவரிடத்தும் உண்மையில் வாழ்ந்தேயிராதவர் இடத்தும் கொள்ளும் இடைவினையாலும் பாதிக்கப்படுகின்றது. இந்தக் குறியீட்டு மாதிரிகள் தனியவனின் வளர்ச்சிக்கு

உதவி புரிகின்றன. சுற்றுப்புறத்தில் வளர்ந்தவர் மனத்தில் போற்றப்பட்டு உறைகின்ற மனிதரைப் 'போன்று இருக்க' குழந்தை முயல்கிறது. போற்றப்பட்டு மனத்தில் உறைகின்ற மனிதர்களை ஒத்திருக்க முயல்வதன் மூலம் குழந்தை தனக்கெனப் புகழ்ச்சியினை அடைய முயல்கிறது. தாயாலும், குருவாலும் அமைக்கப்பட்ட மாதிரியின் பாங்கிலே அமைந்தது சிவாஜியின் வாழ்க்கை. மாற்றாக, இவ்வனைத்து நூற்றாண்டுகளிலும் சிவாஜியே இந்தியாவில் இலட்சக் கணக்கானோருக்கு ஒரு மாதிரியாக அமைந்துள்ளார்.

சமூக இடைவினை சொற்களின் அகராதிப் பொருளால் அல்லது எடுத்துக்காட்டுப் பொருளால்மட்டுமல்லாமல் பிற வற்றினாலும் பாதிக்கப்படுகின்றது. வளைவும் உச்சரிக்கும் முறையும் கருத்தும் மிகவும் முக்கியத்துவம் பெற்று, ஏன்? சொற்கள் தாமாகத் தரும் உண்மையான பொருளைவிட மிகவும் முக்கியத்துவம் பெற்று உள்ளன. இந்த மாறுபாடுகள் சில வேளைகளில் 'குரல் சைகைகள்' (vocal gestures) என்று குறிக்கப்படுகின்றன. கவிஞரும், இசைத் தொகுப்பாளரும், அரசியல் வாதிகளும் சொற்களை அவற்றின் அகராதிப் பொருளில் மட்டுமல்லாமல், குறியீட்டுப் பொருளிலும் பயன்படுத்துகின்றனர். நீண்ட காலத்திற்கு முன்பே இந்தியத் திறனாய்வாளர்கள் சொற்களின் இத் 'த்வொனி' அம்சத்தைப் (9) (dhwani aspect) பற்றிப் பேசியுள்ளார்கள். பொதுவான இடைவினையிற்கூட சொல்லைப் பயன்படுத்தும் பாங்கு நடைமுறையில் சொல்லைவிட முக்கியத்துவம் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாக, புகழ்ந்து உரைக்கும் சொற்களை நிந்தனை செய்வனவாகவும் அல்லது கோப மூட்டுகின்ற சொற்களை இன்பமூட்டுவனவாகவும் அவற்றைக் கையாளும் பாங்கால் அமைக்கலாம் (10 part I).

## மேற்கோள் நூற்பட்டியல்

1. ALLPORT, F. H., — *Social Psychology*. Haughton Mifflin, 1924.

2. MANMOHAN GHOSH, — *The Natyasastra*. Royal Asiatic Society of Bengal, Calcutta, 1950, 148-97.

3. HOWELL, 'A Study of Ability to Recognizing Faces', 33, 1938. — *Journal of Abnormal and Social Psychology.*

4. KLINE and JOHANNSON, 'Comparative Role of the Face and of the Face-Body-Hands as Aids in Identifying Emotions', 29, 1935. — *Journal of Abnormal and Social Psychology.*

5. LA PIERE and FARNSWORTH, McGraw-Hill, 1949. — *Social Psychology.*

6. FRANZ BOAZ, — *Introduction to Handbook of American Indian Languages, Washington,* 1911.

7. KELLOG and KELLOG, McGraw-Hill, 1933. — *The Ape and the Child.*

8. YERKES, Yale University Press, 1945. — *Chimpanzees.*

9. K. KRISHNAMURTHY, Oriental Book Agency, Poona, 1955. — *Dhvanyaloka or Theory of Suggestion in Poetry.*

10. HARTLEY and HARTLEY, Knopf, 1952. — *Fundamentals of Social Psychology.*

# 9. சமூகம் நம்மை மனிதனுக்குகிறது

**(SOCIETY MAKES US HUMAN)**

## அனைத்துச் சமூகங்களின் சில பொது சிறப்புக் கூறுகள்

(Some common features of all societies)

மனித சமூகம் ஒன்றிற்கொன்று,கணக்கற்ற மனத்தில் பதிய தக்க வழிகளில் வேறுபட்டுள்ளன என்பது தெளிவானதோர் உண்மையாகும். ஆனால், இவ்வேறுபாடுகளின் அடித்தளத்தே மனித சமூகம் அனைத்திலும் குறிப்பிடத்தக்க சில சிறப்பியல்பு களை நாம் கண்டுபிடிக்கலாம். ஒவ்வொரு சமூகத்திலும் சிக்கலானதோர் அமைப்பு உண்டு. அங்கு அவற்றின் உறுப் பினர்கள் குடும்பம், குலம், வயது, பால் குழுக்கள் ஆகிய கிளைப் பகுதிகளாக இணைந்துள்ளனர். எல்லா உறுப்பினர்களும் ஒரு வருக்கொருவர் ஒரே தன்மையான, ஒருபடித்தான பிரிவாக (homogenous unit) எந்த ஒரு மனித சமூகமும் இல்லை. இரண்டாவதாக எல்லாச் சமூகமும் தொழிலில் ஈடு பட்டுள்ளதைக் காண்கிறோம். கருவிகள், திறமைகள் ஆகியவற் றின் உதவிகொண்டு மானிடர், தமக்கும் பிறர்க்கும் உணவு, உறையுள், உடை ஆகியவற்றை அளிக்கின்றனர். பொருளா தாரத்தைப் பெருக்க மனிதக் குழுக்களில் வீட்டைச் சார்ந்த மிருகங்கள் பெருமளவில் வளர்க்கப்படுகின்றன. இதற்கு இந்தியா ஓர் எடுத்துக்காட்டாகும்.

மனித சமுதாயத்தின் மற்றோர் அம்சம் அதன் உறுப்பினர் கள் கலைசார் செயல்களில் விருப்பம் கொண்டுள்ளது ஆகும். அவர்கள் ஆடவும் பாடவும், தங்களை அணி செய்யவும், கலைப் பொருட்களை ஆக்கவும் செய்கின்றார்கள். மானிடரது மற்று மொரு பொதுவான அம்சம் சரி அல்லது தவறு இவற்றின்வழி நடப்பது ஆகும். ஒவ்வொரு சமூகமும் தனக்கென அறச் சட்டங்களையும் (code of ethics), மதிப்பு அளவுகளையும் (scale of values) பெற்றுள்ளது. மேலும், உலகத் தோற்றம், அரசியல் அமைப்பு ஆகியவற்றைப்பற்றிய கொள்கைகளையும், நம்பிக்கை களையும் ஏற்படுத்த ஒவ்வொரு சமூகமும் முயற்சி செய்துள்ளது. ஒவ்வொரு சமூகமும் தன்னுடைய வரலாறுபற்றிய சில

கருத்துகளை (notions) வளர்ப்பதற்கு முயற்சி செய்கின்றது. இறுதியாக, எடுத்துக்காட்டுகள், கட்டளைகள் மூலமாக ஒவ்வொரு மனித சமூகத்தின் உறுப்பினர்களும் சமூகத்தின் வழக்கங்கள், திறமைகள், நம்பிக்கைகள் ஆகியவற்றை இளையோருக்கு அறிமுகப் படுத்துகின்றனர். ஆகையால், ஒவ்வொரு சமூகத்திலும் சிலவகையான கல்வித் திட்டம் இடம் பெற்றுள்ளது. அக் கல்வித் திட்டம் சம்பிரதாயப்படுத்தப்படாமல் இருக்கலாம். ஆனால், அது சமூகத்தில் இருக்கிறது. இத்தகைய எந்தச் செயலும் மொழியின்றி அமையாது என்பதனை வற்புறுத்த வேண்டும். நாம் முன்னர் பார்த்ததுபோல் மனிதன் அமைத்துள்ளதொரு மிக முக்கியக் கருவி மொழியாகும். அம் மொழி மனிதனை மற்ற விலங்குக் குழுக்களினின்று வேறுபடுத்துகிறது. மனிதர்களால் நிரந்தரமாக இணைந்துள்ள ஒவ்வொரு குழுவிலும், முழுமையான ஒழுங்கு பெற்ற சமூக வாழ்க்கை உள்ளது என்பதனை மேற்கண்ட சமூக உண்மைகள் காட்டுகின்றன. சமூகத்திற்குச் சமூகம் வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால், எல்லாச் சமூகத்திலும் மாறாத சில குறிப்பிட்ட இயல்புகள் உள்ளன.

## அசமூகக் குழவியினின்றும் சமூக வயது வந்தோனாக உருமாற்றம்

## (The transformation of the non-social neonate into the social adult)

இத்தகைய எல்லாச் சமூகச் செயல்களும், அவற்றின் விளைவுகளும் சமூக உறுப்பினன் ஒவ்வொருவனிடமும் நிகழும் உளவியல் சார்ந்த நிகழ்ச்சிகளின் மூலமாகவே இடம் பெற முடிகிறது. மனிதன் பேசவும், கருவிகளைச் செய்யவும், உறவுமுறை, செல்வம் இவற்றின் விதிகளைக் கவனிக்கவும், புனிதம், புனிதமற்றவற்றை வேறுபடுத்தவும் செய்கிறான். இத்தகைய சமூக உண்மைகளின் உளவியல் அடிப்படைகளை அறிவதே சமூக உளவியல் மாணவராய நம் பிரச்சினையாக உள்ளது. சமூக நிகழ்ச்சிகளின் உளவியல் மூலக்காரணங்கள் யாவை? இக் கேள்விக்கு விடை கூறுவதில், தனியவர்கள் சமூக நிலைகளுக்குத் துலங்கத்தக்க உயிரியல் அமைப்புடன் தொடங்குகிறார்கள் என்பதனை மனத்திற் கொள்ளவேண்டும். ஆனால், இங்குத் தொடர்புள்ள சமூக அம்சங்கள் (social aspects) உயிரியல் அம்சங்கள் (biological aspects) என்பனவற்றில் எவையேனும் ஒன்றைப் புறக்கணித்தாலும் நாம் இப் பிரச்சினையை அறிந்துகொள்ள முடியாது.

சமூகவயமற்ற சிசு, சமூகவய வளர்ந்தோனுக மாறுவது தான் இந்த அடிப்படை உண்மையாகும். குழவி, சமூகவய மற்ற உயிரியல் சார்ந்த ஒன்ருகப் பிறக்கிறது. பின்னர் அவன் சமூக வயமடைந்தவனுக வளர்ந்து விடுகின்ருன். உயிரியல் சார்ந்த உயிரி சமூக அனுபவத்தின் காரணத்தால் மனிதனுக மாறுகின்ருன். இதனை ஆஷ் (Asch) என்பார் கீழ்க்கண்டவாறு குறிக்கிருர்: 'மனிதர் இயற்கைக் பொருள்களோடுமட்டும் அல்லாமல், பிற மனிதரோடும் கொள்ளும் எதிர்ப்பாட்டினுல் மானிடராக மாறுகின்றனர் என்பது மிக முக்கியமான உண்மையாகும். மற்றவருடைய சூழ்நிலையும், அவருடைய உழைப்பின் விளைவுகளும், சக்தி வாய்ந்த, புரிந்துகொள்ளும் பகுதிகளின் ஆற்றல்களாக மாறுகின்றன. அவற்றின் ஊடே ஒவ்வொரு தனியவனும் செயல்படவும், வாழவும் செய்கிருன். இங்கு ஒவ்வொரு மனிதனும், மானிடர் இருப்பதையும், அவர்தம் சிறப்பியல்புகளையும் அறிந்துகொள்வதோடு, அவற்ருேடு கட்டுப்படவும் செய்கிருன். இங்கு அவன் தன்னைப்பற்றிய உண்மை நிலையையும், வேலை, கலை, எண்ணம் என்பனவற்றின் உண்மை நிலையையும் கண்டு கொள்கிருன்' (1.119).

இவ்வாருகக் குழவி, குழுவாழ்க்கை நிலைகளின் அடியில் மானிடனுக மாறுகிறது. நாம் நடைமுறையில் சமூகத்தில் காணும் விளைவுகளை ஒரு தனி மனிதன் உண்டாக்க முடியாது. இதனுல் நாம், குழவி சமூகவய வளர்ந்தோனுக மாற குழு வாழ்க்கையின் உண்மை நிலைக் காரணமாகிறது என்று சொல்ல முடியுமா? முன்னர் (அத்.4) குழுவாழ்க்கை மானிடருக்கே ஒரு விந்தையான நிகழ்வு அன்று என்று நாம் கண்டோம். விலங்குகளிடத்தும் சமூக வாழ்க்கை உண்டு. ஆனுல், எந்த ஒரு விலங்குக் குழுவிலும், ஏன்?, வாலில்லாக் குரங்குகளிடையேகூட நாம் மேலே கொடுத்துள்ளவை போன்ற சமூக வாழ்க்கையின் சிறப்பியல்புகளைக் காண்பதில்லை. நாம் மேலே பார்த்ததுபோன்று, மொழி இடைவினையின் குறியீட்டு விரிவுக்கு உதவுகின்றது. பின்னர் இஃது எல்லா மானிடரையும் வேறுபடுத்தி அறியத்தக்க சிறப்பியல்புகளுக்கு இட்டுச் செல்கிறது. மேலும், மொழி மிக நீண்ட இறந்த காலத்திற்கும், மிகத் தொலைவான எதிர்காலத்திற்கும் விரிந்து நிற்கும் துறையொன்றில் மானிடர் வாழ வகை செய்கின்றது. எடுத்துக்காட்டாக, நிலத்தை உழுதல் அல்லது குடிசை கட்டுதல் போன்ற மிகச் சாதாரணமான செயல்கள்கூட இறந்த காலத்தோடு, எதிர்கால நிகழ்ச்சிகளின் சார்புகளையும் தெரியப்படுத்துகின்றன. ஆகையால், இங்கு மானிடன் தனிப்பட்டு எப்பொழுதும் எதிர்வினை அளிப்பதில்லை. நிலைமைக்கு

எதிர்வினை காலம், இடைவெளி ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு அவன் ஒரு முழுநிலைமைக்கு எதிர்வினை புரிகின்றான். தொழில் துறையின் முன்னேற்றத்தால் மனிதன் ஆகாய விமானங்களையும், ஜெட் விமானங்களையும் கொண்டு விண்வெளியைக் (space) கைப்பற்றியதுமட்டுமல்லாமல், மற்ற விண்வெளிகளை, ஏவுகணைகளைக் (rockets) கண்டுபிடித்ததன் மூலம் கைப்பற்றவும் முனைந்துள்ளான்.

## மனிதக்குரங்கு சமூகத்திற்கும் மனித சமூகத்திற்கும் உள்ள வேறுபாடு

(The difference between the ape society and human society)

மானிடரிடத்தில் உளவியற்றுறை (psychological field) விரிவடைவதானது தேவைகள், மனவெழுச்சிகள் (emotions) ஆகியவற்றின் அமைப்பையும், உட்பொருளையும் பாதிக்கின்றது. மானிடர் முழுவதும் உடனடித் தேவைகளால் ஆட்சி செலுத்தப்படுவதில்லை. ஏனென்றால், எதிர்காலத்தில் அவர்தம் செயல்களின் விளைவுகளை அவர்களே எதிர்நோக்க முடிகிறது. மேலும், அவர்கள் சில குறிப்பிட்ட செயல்களின் விளைவுகளை இறந்த காலத்திலும், மற்ற மானிடரின் தேவைகள், மனவெழுச்சிகள் ஆகியவற்றிலும், மற்றத் தேவைகளின் துறைகளில் உடனடித் தேவைகள் இருப்பதிலும், தங்களுடையதும் மற்றவருடையதுமான எதிர்காலம், இறந்தகாலம் இவற்றிலும் எதிர் நோக்க முடிகிறது. இறந்த காலத்தின் வெற்றிகளும், தோல்விகளும் எதிர்காலத்திற்கு வேண்டிய அவாவு நிலையைப் பாதிப்பதோடு, தனியவனை ஒரு நோக்கத்திற்காகத் திட்டமிடுவதற்கோ ஆழ்ந்த, மனமுறிவு (frustration), பயனின்மை (futility) உணர்வினைக் கொள்வதற்கோ கொண்டு செல்கின்றன. இதன் காரணமாகவே நாம் மானிடருக்கும், நன்கு வளர்ந்த நிலையில் நிற்கும் மனிதக்குரங்குகளுக்கும் இடையே மிகப் பெரிய வேறுபாட்டினைக் காண்கிறோம். பெரும்பாலும் முழுமையாகச் செயல்களும், உணர்ச்சிகளும் மனிதக்குரங்குகளிடை உடனடி நிகழ்காலத்திற்கே சேர்க்கப்படுகின்றன. உறுப்புசார் இசைவே (organic rhythm), நடத்தையின் விரிவுபடுத்தப்பட்ட வகைக்கு இட்டுச் செல்கிறது. கலவிக்குப்பின் ஆண் பெண்ணுக்குக் காவலனாக அமைகிறது. இளைய ஒன்றின் பிறப்பிற்குப் பிறகே தாய்மையைப் பேணுதல் தோன்றுகிறது. ஆனால், படிப்படியாக அக் குடும்பம் கலைந்துவிடுகின்றது. இவ்வாறாக ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எழுப்பப்பட்ட உட்துடிப்புகள் (impulses) மூலம் மனிதக் குரங்குகளின் நடத்தையின்

விரிவுபடுத்தப்பட்ட வகைகள் (patterns) பெருமளவு கட்டுப் படுத்தப்படுகிறது என்பதனை நாம் ஒவ்வொரு முனையிலும் காண் கிறோம். ஒரு சிம்பன்சி நோயால் அவதிப்படும் தோழனைக் காணும்போது 'பெருமளவு மானிட வழியிலேயே' துலங்கல் தரலாம். ஆனால், இந்த ஒத்துணர்வு (sympathy) அந் நேரத்தில் எழுந்த தூண்டல் மூலம் செயல்படுகின்றது. கோலர் (Kohler) கீழ்க் கண்டவாறு குறிக்கிறார்: 'நோய்வாய்ப்பட்ட (அல்லது இறந்துபட்ட) மிருகத்தின் தற்காலிக (அல்லது நிரந்தர) மறை வானது, அம் மிருகம் பார்வைக்கு அப்பால் கொண்டு செல்லப் பட்டும், தன் துன்பத்தை, வலியின் சப்தமிட்ட அனத்தலால் தெரிவிக்காமலும் இருந்தால், மற்ற மிருகங்களின்மீது ஒரு சிறிது விளைவையே கொள்கிறது . . . . . . . . . சந்தேகத்துக்கு இடமில்லா மல் நேற்றுப் புதைக்கப்பட்டபோது குரங்குகள் பார்த்திருந்த சில பழங்கள் மீதான அவர்களது இன்றைய விருப்பம், நேற்று இருந்த குழு உறுப்பினன் ஒருவனைக் கொண்டுசென்றுவிட்டாலும், அவன்தன் அறையினின்று வெளிப்படாவிடினும் அவன்மீது கொள்ளும் விருப்பத்தைக் காட்டிலும் பெரியதாகும் என்பதனை நான் பன்முறை கண்டுள்ளேன்' (2.241).

இவ்விதமாகச் சிம்பன்சியின் பார்வைக்கு அப்பாற்பட்டது அதன் மனத்திற்கும் அப்பாற்பட்டிருக்கின்றது என்பது பெரு மளவு உண்மையாகும். அடுத்த வகையில், மானிடரில் ஒரு மானிடனது இறப்பு, அவனுக்கான நமது தேவையை அழித் தொழித்துவிடுவதில்லை. நாம் அவனை இழந்துதான் விடுகி றோம். நாம் துக்கத்தால் துவண்டு விடலாம். இதுபோலவே, நம் பெற்றோர்கள் நம் எதிர்காலத்தின்மீது கொண்டிருந்த நம்பிக்கைகளாலும் (hopes), நல்லது அல்லது தீயதாலும் நாம் பாதிக்கப்படலாம். இறந்த, எதிர்காலங்களைத் தெரிந்திருத் தலும், தன்னை அறிந்திருத்தலும் அடுத்தவர்பாற் கொண்டுள்ள கடமை உணர்ச்சியும் ஒரு மானிடனை, ஒவ்வோர் உந்தும் அது தோன்றும் வண்ணமே அதற்குத் துலங்கமுடியாத தன்மைக்கு இட்டுச் செல்லலாம். உடனடித் தேவைகளை அவன் தன் மற் றைய தேவைகளுக்கும், மற்றவருடைய தேவைகளுக்கும் கீழ்ப்படியச் செய்ய வேண்டியவனாக உள்ளான். இதன் காரண மாக அவன் ஊக்கிகளின் (motives) மேல் பிரதிபலிக்க வேண்டி யவனாகிறான். சமூகச் சந்தர்ப்பங்களில் தனது நன்னிலைக்காக அவன் அவற்றின் திறன் அறிந்து வாழும் வண்ணம் கற்றுக் கொள்கிறான். மீண்டும் ஆஷின் (Asch) கீழ்க்கண்ட சொற் களை மேற்கோளாகக் காட்டலாம்: 'அனுபவங்கள் தமது பூர்த்தி யற்ற தன்மையை இழந்து, அநேக நிலையான அமைப்புகளை,

ஓரளவில் நிலையான பொருட்களைச் சுற்றி மிக நிலையான அமைப்புகளை அமைக்கின்றன. நிலையில்லாத உந்துக்கள், மனவெழுச்சிகள் ஆகியவற்றின் இடங்களில், சம்பந்தமுள்ள பொருட்களைச்சார்ந்து தாங்கிக்கொள்ளும் பற்றுகள் (sentiments) எழுகின்றன. தற்பொழுது, குறைந்த நாள் இருக்கக் கூடியதும், உறுப்பினுல் இயங்கக் கூடியதுமான செயல்களுக்காகத் தந்தை, குழந்தை, கணவன், மனைவி ஆகிய நிரந்தரமான உறவுகள் மாற்றுகப் பயன்படுத்தப் படுகின்றன. இவ்வாருக மனிதர், தங்களது அனுபவங்களின் தனித்தன்மையிலும், நோக்கமற்ற தன்மையிலும் மேம்படுவதோடு (overcome) தாங்கள் செயல்படத்தக்கதும், பிரதிபலிக்கத் தக்கதுமான சுட்டுகளை உடைய நிலையான ஒழுங்குமுறைகளாக அவற்றை இணைக்கின்றனர். இத்தகைய படிகளால், திட்டமிடுவதும் வேண்டித் தேர்ந்து எடுத்தலும் இயலுகின்றது (1.123).

## சமூகவயமாதலே ஒரு வடிவமைந்த தொடர்ச்சியான செயன்முறை

(Socialization is a patterned and continuous process)

சமூக வயமாதல் ஓர் எளியதோ தனித்ததோ ஆன செயன்முறை அன்று. அது சார்ந்த வழியில் இயங்குவதும் இல்லை. அது பல்வேறு வகைப்பட்ட செயன்முறைகளைக் கொண்டுள்ளது. ஏனென்ருல், அது பல்வேறு வகைப்பட்ட சமூகத் தரங்களைக் (social norms) கொண்டுள்ளது. சமூகம் எதிர்பார்ப்பவற்றை நிறைவேற்றுதற்காகத் தனியவன் வேறுபட்ட சமூக அங்கங்களை (social roles) ஏற்று நடப்பதையும் அது கொண்டுள்ளது. இதன் காரணமாகத் தனியவர்களை முழுமையும் வீட்டிலோ அண்மையிலோ பள்ளியிலோ உள்ள எந்த ஒரு குறிப்பிட்ட பாதிப்பும் பாதிக்கும் என்று எண்ணுவது மிகையானதாகும். இதனை அறிந்துகொள்ளத் தவறுவது பெரும்பாலான மக்களைப் பள்ளியில் முறையான கல்வியின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்தி மதிப்பிடும் வண்ணம் நடத்திச் செல்கிறது. இஃது ஓர் உண்மையான அபாயமாகும். குறிப்பாக, இந்தியாவில் கிட்டத்தட்ட 50% குழந்தைகள் இன்னும் பள்ளிக்கு வருவதில்லை. 7-8 வயது வரையாவது தொடக்கப்பள்ளியில் தனியவர் பெறும் தொடர்ச்சியான கல்வியானது, தனியவன் சமூகவயமாவதற்கு மிகப் பெரிய பயன் விளைக்கும் என்பது உண்மையென்பதில் ஐயமேதும் இல்லை. தனியனைச் சமூக வயமாக்குதற்குப் பள்ளியில் அவன் பெறும் பாதிப்புகள் மட்டுமே போதும் என்று கற்பனை செய்வது மிகையான மதிப்பீடு ஆகும். மானிடன் பல சக்திகளின் விளைவு ஆவான் என்பதனை உணர்தல்

வேண்டும். குழந்தையின் சமூக வயமாதலில், குறிப்பாகக் குடும்பத்தில் அவன் பெறும் பாதிப்புகள், அடுத்த வளர்ந்தவரிடம் பெறுபவை, அண்டையிலுள்ள குழந்தைகளிடம் பெறுபவை ஆகியன மிகப் பெரிய மதிப்பினைக் கொண்டுள்ளன. ஆகையால், கிராமங்கள், பட்டணங்கள், நகரங்கள் ஆகியவற்றில் உள்ள வளர்ந்தவரைப் பாதிக்கும் முறையில் சமூகக் கல்வித் திட்டங்கள் எடுத்துக்கொள்ளப்படாவிட்டால், வெறும் பள்ளி மட்டுமே குழந்தையிடத்து மிகப் பெரிய மாறுதல்களை ஏற்படுத்தாது. பள்ளியின் பாதிப்புகள், வீட்டில் பெற்றோரின் பாதிப்புகளோடும், அண்மையில் உள்ள அடுத்தவரின் பாதிப்புகளோடும் முரண்பட்டிருக்கக் கூடாது. இதுபோலவே, இந்த உண்மையை அறிந்து கொள்ளாது ஒதுக்கிவிடுவதானது முறையாளர்களைத் திரைப் படம், வானொலி இவற்றின் தீய விளைவுகளை வகைப்படுத்திக் கூறத் தூண்டுகிறது. திரையின் வாயிலாகப் பெறும் அனுபவங் களுக்குக் குழந்தை எப்படி எதிர்வினை தருகிறது என்பது அவன் திரையில் பார்ப்பதைப் பொறுத்துமட்டுமல்லாமல் வீட்டிலும், பள்ளியிலும் அவன் பெறும் பாதிப்புகளையும் பொறுத்து அமை கிறது. *(அத். 12ஐப் பார்க்க)*

கலாச்சாரத்திற்கான ஒரு வெற்றுக் கொள்கலனன்று தனிய வன் என்பதனையும் உணர்ந்து கொள்ளவேண்டும். எப்படிக் குழந்தை சமூகவயச் செயன்முறைக்கு எதிர்வினை தருகிறது என் பது கடந்தகால, நிகழ்காலச் சந்தர்ப்பங்களின் பாதிப்புகளைப் பொறுத்துள்ளது. **சம்ஸ்காரங்கள்** (samskaras) என்ற கருத் தினை உருவாக்கிய பழங்கால இந்தியச் சிந்தனையாளர்களால் இப் பெரிய உண்மை அறியப்பட்டிருந்தது. வழிவழி வந்த நோக்கத் தின்படி **சம்ஸ்காரங்கள்** இரண்டு நிலைகளைக் கொண்டுள்ளன. இவ்வாழ்வின் கடந்தகால அனுபவங்கள், முற்பிறப்புகளில் தொடர்ந்த வாழ்க்கையின் அனுபவங்கள் என்பவை இவ்விரண்டு மாகும். முற்பிறப்பு வாழ்க்கைகள்பற்றிய துணிபுகளின் செல்லுந் தன்மையை விவாதிப்பது நம் நோக்கத்திற்கு அப்பாற்பட்ட தாகும். ஆகவே பழங்கால இந்தியச் சிந்தனையாளர்கள், இவ் வாழ்க்கையில் கடந்தகால அனுபவங்கள் பெறும் முக்கியப் பங் கினைச் சமூகவயச் செயன்முறையினை அவை மாற்றும் வகையில், அறிந்திருந்தார்கள். இதன் காரணமாகச் சமூகவயமாதல் என்பது ஒரு வெறும் மந்தமான செயன்முறையன்று. அங்குச் சமூகவயச் செயன்முறைக்கும், தனியவனுக்கும் இடையே செயலும், எதிர் வினையும் நடைபெறுகின்றன. கடந்தகாலச் சமூகவயத்தின் கூறுகளுக்கும் நிகழ்காலச் சந்தர்ப்பங்களின் கூறுகளுக்கும் இடையே செயல்களும், எதிர்வினைகளும் நடைபெறுகின்றன.

தனியவன், கடந்தகால அனுபவங்கள், நிகழ்கால அனுபவங்கள் என்ற மூன்று மூலக் கூறுகளின் இடைவினையின் விளைவாகவே சமூகவயமாதல் செயன்முறை தன் முக்கியத்து வத்தைப் பெறுகிறது. இவ்வாறாகச் சமூகவயமாதல், ஒரு வகையான, தொடர்ச்சியான செயன்முறை என்பதனை நினைவிற் கொள்ளவேண்டும். இது பிறப்பு முதல் இறப்பு வரை தொட ரும் ஒரு செயன்முறையாகும். எந்த ஒரு வினாடியிலும் மனிதன் முழுமையை அடைந்துவிட்டான் என்று கூறுவதற்கு இல்லை. எந்த ஒரு சமூகமும் கூறும் வண்ணம், தனியவனிடத்தில் முழுமை நிலையை அடைவதற்கான முன்னேற்றத்திற்கு என்றும் இடமுண்டு.

## சமூகவயமாதலை தனித்தன்மையின் இழப்புக்கும் ஒரு தன்மைத்தான செயலுக்கும் வழிகாட்டுவதில்லை
(Socialization does not lead to uniformity and loss of uniqueness)

இதனைக் கொண்டு சமூகத் தன்மைபெற்ற செயன்முறை எந்த ஒரு குழுவின் உறுப்பினரும், உயிரற்ற ஒத்தநிலையான நடத்தையில் ஈடுபடுவதைக் கொணர்வதில்லை என்பதனை நாம் உணரலாம். தனியனின் தனித்தன்மை நாம் மேற்குறித்துள்ள மூன்று சக்திகளின் செயற்பாட்டாலேயேயாகும். ஒரே தாய் தந்தையரைப் பெற்றோராகக் கொண்ட, ஒரே குடும்பத்தில் வாழும் குழந்தைகள் ஒத்த அல்லது ஒரே தன்மையான சந்தர்ப் பங்களில் வெவ்வேறுவிதமாக எதிர்வினை தருகின்றனர். இஃது ஒவ்வொரு தனியவருக்கும் உரித்தான உடல்வாகுக் காரணிகளின் (constitutional factors) காரணமாகவும், அத் தனியவன் நிகழ்கால அனுபவங்களால் தாக்குறுவதாலும் அமைகிறது. இளங்குற்றங்கள்(juvenile delinquency)பற்றிய படிப்புகள் இவ் வுண்மையின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டுகின்றன. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் பெறும் பாதிப்புகளுக்கு ஒரே குடும் பத்தில் அல்லது ஓர் அண்டை வீட்டில் வாழும் எந்த இரு தனியவரும் ஒரே வழியில் எதிர்வினை தருவதில்லை. இதன் காரணமாகவே இரு சகோதரர்களில் ஒருவன் இளங் குற்ற வாளியாகவும், மற்றவன் குழுவால் மதிக்கத்தக்க உறுப்பினனாக வும் இருக்கலாம், (அத். 20ஐப் பார்க்க).

## சமூகவயமாதலையில் உள்ளடங்கிய முரண்பாடுகள்
(Conflicts involved in socialization)

நாம் மேலே கூறியவற்றிலிருந்து தனியவனின் பங்கில் சமூகவயமாதல் மந்தமானதொரு செயன்முறையன்று என்பது

தெளிவு. குழவியும், குழந்தையும், இளையோனும் சமூகவய மாதல் செயன்முறைக்குப் பல்வேறு வழிகளில் எதிர்வினை செய்கின்றனர். மேலும், சமூகவயமாதல் தனியவனின் எதிர்ப்பையும் சந்திக்கிறது. குழந்தையின் ஊட்டுகின்ற நேரத்தை ஒழுங்குபடுத்த முயல்வதும் மலம், சிறுநீர் கழித்தல் செயன்முறைகளை ஒழுங்குபடுத்த முயல்வதும், தாய், குழந்தை இருவரிடையே முரண்பாட்டை ஏற்படுத்துகிறது. குழந்தை வளர்ப்பு ஒரு சுமுகமான அனுபவமன்று. முரண்டு பிடிக்கும் குழவி அல்லது குழந்தையுடன் தாய் பலமுறை சினம் கொள்கிறாள். மிகுந்த நெளிவோடும், பொறுமையோடுமே தாயும் தந்தையும் குழந்தையின் நடத்தையில் வேண்டிய மாற்றங்களை ஏற்படுத்தவும், அதன்மூலம் அவனைக் குழுவின் ஒப்புக்கொள்ளப்பட்ட உறுப்பினனாக்கவும் முடியும். இதுபோலவே குழந்தைப் பள்ளியில் (nursery school) மாணவர், ஆசிரியரிடையேயும், தொடக்கப் பள்ளியிலும், மற்றும் பிற இடங்களிலும் முரண்பாடு இருந்தே வருகின்றது. உண்ணுதல், உறங்குதல் மற்றும் பிற உயிர்ச் செயல்களின் தரப்படுத்தப்பட்ட கால அட்டவணைக்கு இணங்கிப் போதல் வயது வந்தவர்க்கே மிகுந்த சிரமமாக உள்ளது. நாம் பசியுடனிருந்தாலும், விருந்துக் குழுவில் உணவு பரிமாறப் பட்டுக்கொண்டு இருக்கும்பொழுது நாம் முதலில் உண்ணத் தொடங்கக் கூடாது என்று சமூக ஆச்சாரம் கட்டுப்படுத்துகிறது. ஒரு பொருத்தமான அறிவிப்பின் பின்னரே அனைவரும் உண்ணத் தொடங்க வேண்டும். தூங்குதல், கழிவுப் பொருள் நீக்கம் போன்ற இன்னபிற உயிர்ச் செயல்களில் மட்டுமல்லாமல் நாம் எப்படிப் பேச வேண்டும், நாம் எப்படி நம் மனவெழுச்சிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதிலும் சமூக ஆச்சாரம், மதிப்போடு கூடிய நன்மையாகக் கடைப்பிடிக்கப்படுகின்றது. குழுவின் சமூக மாதிரிகளுக்கும், எதிர்பார்ப்புகளுக்கும் இணங்கிய வழிகளில் அன்றி ஒரு தனியவன் அச்சம், சினம் இவற்றிற்கு ஆட்பட்டபோதிலும், அவற்றை வேறு வழிகளில் தெரிவிக்கக் கூடாது. 'ஒரு தனியவனின் எதிர்ப்புகளைக் காட்டிலும் பயன் படுத்தப்படும் சரிப்படுத்தல்களை (correctives) வலுவுள்ளவையாகப் பயன்படுத்தும் வரை அல்லது சமூக மதிப்புகளோ மாதிரிகளோ அவனால் மனத்தில் வைத்துப் போற்றப்படும் மதிப்புகளாக மாறும்வரை, தனியவன் தான் சமூகவயமாதலின்போது அடிக்கடி இணங்கிப் போதலை எதிர்க்கிறான்' (3.7).

ஆனால், சமூகப் பாதிப்புகள் (social influences) எப்பொழுதும் வலுக்கட்டாயப்படுத்துபவையாக இருக்கும் என்று எடுத்துக்கொள்வது தவறாகும். சமூகவயநிலைச் செயன்முறை

யினைப் பொறுத்துப் பொதுவாக மேற்கொள்ளும் இருவகை யான தவறுகளை நாம் விலக்க வேண்டும். நாம் மேலே கண்டதுபோல், தனியவன் கலாச்சாரத்தினை ஏற்றுக்கொள்ளும் ஒரு மந்தமான கொள்கலன் என்று கொள்ளல் தவறாகும். கட்டா யப்படுத்தும் சமூகத்திற்கும், எதிர்ப்புத் தெரிவிக்கும் தனியவ னுக்கும் இடையே நடைபெறும் ஒரு போராட்டம் சமூக வயமாதல் என்று முடிவு எடுப்பதும் தவறாகும். உண்மையில், தனியவன், சமூகம் ஆகிய இரண்டும் ஒன்றுக்கொன்று இணங் கியே சமூகவயமாதற்குத் துலங்குதல் தருகின்றன. சமூகம் தன் பங்கில் தனியவனை உருவாக்க முனைகிறது. தனியவனும் குழுவோடு ‘இடம்பெறப்’ பெறும் உழைப்பை மேற்கொள்கி றான் என்பதும் உண்மையாகும். குழுவில் இடம் பெற்றாலும், குழு உறுப்பினர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டாலும் அஃது அவனுக்குப் பாதுகாப்பும், திருப்தியும் நல்கும் என்பதைத் தனி யன் அறிந்துள்ளான். இதன் காரணமாகத் தனியவன் தன் குழுவின் சமூக மாதிரிகளைத் தன்னுடையதாக ஆக்கிக்கொள் கிறான். ஒரு தனியவன் குழுவின் வளர்ந்த உறுப்பினனாக மாறும்போது இது மிகப் பொருத்தமாக அமைகிறது.

பொறுப்பான நிலையில் உள்ள ஒரு வளர்ந்தவன் தான் குழந்தையாகவும், இளையோனாகவும் இருந்தபோது எதிர்த்த அதே தரநிலைகளைத்தான் (standards) இன்று கடைப்பிடிக்க வேண்டியுள்ளதைக் காண்கிறான். ஆசிரியனாகும் ஓர் இளைஞன் பல வழிகளில் தன் நடத்தையினை மாற்றிக்கொள்ள வேண்டிய வனாகிறான். இந்நிலை, அவன் மாணவனாக இருந்தபோது எதிர்த் தவற்றையும்கூட இன்று ஒப்புக்கொள்ளுமாறு அவனைக் கொண்டு செல்லலாம். இதுபோலவே, ஒரு தனியவன் தந்தையாகும் போதும், தன் குழந்தையைச் சமூகவயமாக்கும் பொறுப்பை மேற்கொள்ளும்பொழுதும் நடைமுறையில் காணப்படும் சமூகத் தரங்களின்பால் (social norms) அத் தனியவன் கொண்டுள்ள மனநிலையில் குறிப்பிடத்தக்க மாற்றம் நிகழ்கிறது. முந்தைய தலைமுறைகளில் சமூகம் என்னவாக இருந்ததோ அதன் வெறும் நகலே இன்று அஃது என்று எந்தக் காலத்திலும் கற்பனை செய்யக் கூடாது. எந்த ஒரு குழுவும், அஃது எவ்வளவு பழமை விருப்பம் உடையதாகத் தோன்றினும் அல்லது அவ்வாறே பழமை விருப் பம் உடையதாயினும் மாற்றத்தின் தொடர்ச்சியான அறிகுறி களை அது நிச்சயம் காட்டும். இது சமூகக் குழுவின் வளர்ச்சி யையும், உயிர்த் தன்மையையும் காட்டும் ஓர் அறிகுறி யாகும்.

## வீட்டிற்குரிய விலங்குகள் (Domestic animals)

மானிடருக்கு மட்டும் உரித்தான ஒன்று சமூகவயமாதல் என்று குறுகலாக அமைக்க வேண்டியதில்லை. ஏறக்குறைய, வேண்டுமென்றே அளித்த பயிற்சியின் விளைவால் உயிரிகளில் (organisms) மாற்றங்களை விளைவிப்பதனைக் கொண்டுள்ள ஒரு பரந்த கருத்தாகவும் இதனைப் பயன்படுத்தலாம். மனிதன் சில விலங்குகளைத் தன் தோழனுகவோ தனது திறமையான வாழ்விற்குரிய கருவியாகவோ பயன்படுத்தி வருகிறுன். மக்கள் திகைப்புற அல்லது குதூகலித்தற்கெனச் சர்க்கஸ்காரன் மிருகங்களுக்குக் கற்றுத் தந்துள்ள விசேடத் தந்திரங்களின் மேல் நாம் நம் கவனத்தை ஒருமுனைப்படுத்த வேண்டியதில்லை. மனிதனுல் பழக்கப்படும் விலங்குகளின்மீது மட்டும் தற்பொழுது நம் கவனத்தை நிறுத்துவோம். இத்தகைய விலங்குகளின் நடத்தை, மானிடரால் வேண்டுமென்றே வளர்க்கப்படாத அதே இன விலங்குகளின் நடத்தையினின்று தெள்ளிதாக வேறுபட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, வீட்டில் வளர்க்கப்பட்ட நாய்க்கும், ‘தெரு நாய்க்கும்’ உள்ள வேறுபாட்டினை நாம் எடுத்துக் கொள்ளலாம். இந்தியாவில், சந்தைகளிலும் (market place) மக்கள் வாழுமிடங்களிலும் மிகப் பல நாய்கள் திரிகின்றன. இந் நாய்கள் யாருக்கும் உரிமையானவை அல்ல. அவை வெறும் உட்துடிப்புகள் (impulse) கொண்ட ஜந்துக்களாகவும், எங்கு இயலுகிறதோ அங்கு உணவினைப் பறிப்பவையாகவும் மற்ற நாய்களுடன் சண்டையிடுபவையாகவும் உள்ளன. இதற்கு எதிரிடையாக வீட்டில் வளரும் நாய் அதன் பெயருக்குத் துலங்குவதையும், குறித்த நேரத்தில் தனக்கே உரித்தான இடத்தில் உண்பதையும், குடும்ப உறுப்பினரிடத்தில் பிரியம் காட்டுவதையும், அவரிடமிருந்து பிரியத்தைப் பெறுவதையும் நாம் காண்கிறேம். இவ்விரண்டின் நடத்தையிலும் காணப்படும் இந்த மாறுபாடு சமூகவயமாதலின் பாதிப்பைக் காட்டுகிறது. மேலும் இது, சமூகவயமாதல் வெறும் பயிற்சி மட்டுமன்று என்பதனையும் காட்டுகின்றது. மனிதனுக்கும் நாய்க்கும் இடையே உள்ள பிரியமான தொடர்பினை இது கொண்டுள்ளது. நாயானது ஒழுங்கான வெகுமதிகளாலும் தண்டனைகளாலும் ஒரு தனிப்பட்ட விதத்தில் வாழ்வதற்குப் பயிற்சியளிக்கப்படுகிறது. ஆனுல், தன் எசமானனிடமிருந்து பிரியத்தைப் பெருத நாயானது குடும்பத்தில் ஓர் உறுப்பினனுக இல்லாமல், ஒரு சில தந்திரங்களுடன்(tricks)கூடிய சர்க்கஸ் மிருகத்தைப் போன்றே உள்ளது. இக் குணங்களை நன்முறையில் வளர்க்கப்பட்ட பெரும்பாலான நாய்களிடம் நாம் காண்கிறேம்.

## மனிதக்குரங்கும், குழந்தையும்
(The ape and the child)

மேலும், கெல்லாக் (Kellog) என்ற உளவியலாரும், அவர் மனைவியாரும் ஒரு மனிதக் குரங்கினை வளர்ப்பதற்குச் செய்த முயற்சியின் பரிசோதனை முடிவுகளை நாம் தரலாம் (4). டொனல்டு (Donald) என்ற அவர்கள் மகன் 10 மாதம் நிரம்பியவனாக இருந்தபோது $7\frac{1}{2}$ மாத வயதுடைய குவா (Gua) என்ற ஒரு பெண் மனிதக்குரங்கை அவர்கள் தத்து எடுத்துக்கொண்டார்கள். மானிடருடன் வளர்க்கப்படுவதோடு பெற்றோர் தங்கள் குழந்தைகளுக்குத் தரும் பயிற்சியினை அளித்தால், மனிதக்குரங்கு எப்படி வளரும் என்பதனை அறிவதே அவர்கள் நோக்கமாக இருந்தது. உணவையும், துணிமணிகளையும், படுக்கையையும் இன்ன பிறவற்றையும் ஒரே விதத்தில் அளித்து, அவர்கள் குழந்தையையும், மனிதக்குரங்கையும் இரு குழந்தைகளைப் போன்றே நடத்தினர். அவ்விருவரும் ஒழுங்காக நீராட்டப்பெற்றும், குழந்தை வண்டிகளில் வெளியில் கொண்டு செல்லப்பட்டும், கழிவுப் பயிற்சி (toilet training) அளிக்கப்பட்டும், ஒரே வகையில் பேசவும், சீராட்டவும், முத்தமிடவும்பட்டு வந்தனர். கைதான நிலையிலிருந்த—தாய் ஈன்றதும் பிரிக்கப் பட்ட குவா முதலில் தன் புதிய சுற்றுப் புறத்தால் நிலைகுலையவும் பின்னர் படிப்படியாகத் தானாகவே தக அமைத்துக்கொள்ளவும் செய்தாள். இவ்விரு குழந்தைகளும் மிக நெருங்கிய 'நண்பராயினர்'. குவா, துண்டுகளையும் காலணிகளையும் அணிந்துகொள்ள ஒரு வாரத்திற்குள் கற்றுக் கொண்டாள். ஓர் உயர்ந்த நாற்காலியில் அமர்ந்துள்ளபோது ஒரு கிண்ணத்தினின்றும், கரண்டியினின்றும் அவள் ஊட்டப்பட்டாள். கறி தவிர மற்ற உணவுகள் அனைத்தையும் அவள் சுவைக்கக் கற்றுக் கொண்டாள். அன்றாடம் குளிப்பதையும் அவள் அனுபவிக்கக் கற்றுக் கொண்டாள். நாலாவது வாரத்தில் பற்றூரிகையைப் (tooth brush) பயன்படுத்த அனுமதிக்கப்பட்டாள். குவா $2\frac{1}{2}$ மாதங்கள் சிறியவளாயினும், அவள் ஒரு முதிய சகோதரியாகவும், பாதுகாவலனாகவும் உடைய அங்கத்தினைப் பெற்றாள். குவா மிகப் பெருத்தும், வலுவோடும் இருந்தாள். 10ஆவது மாதத்தில், டொனல்டு இரண்டே பற்களைப் பெற்றிருந்தபோது குவா எல்லாப் பற்களையும் பெற்றிருந்தாள். குதித்தல், நடத்தல், ஓடுதல் ஆகியவற்றில் அவள் டொனல்டைவிடச் சிறந்திருந்தாள். நேராக நிமிர்ந்து நடக்கவும் அவள் கற்றுக்கொண்டாள். குவா, $7\frac{1}{2}$ மாதத்தில் தன் நாற்காலியில் தொற்றி ஏறவும், உட்காரவும் செய்தாள். ஆனால், டொனல்டு $18\frac{1}{2}$

மாதத்திலேயே இவற்றைச் செய்ய முடிந்தது. 13ஆவது மாதத்தில் அவள் கரண்டியால் தனக்குத் தானே உண்ண முடிந்தது. $17\frac{1}{2}$ மாதத்தில்தான் டொனல்டால் தானே உண்ண முடிந்தது. குவா தன்னைக் காட்டிலும் மூத்த டொனல்டைவிடக் கரண்டியை நல்ல முறையில் கையாளக்கூடிய தன்மையைப் பெற்றிருந்தாள். இவ்வாறாக மனிதக் குரங்குக் குட்டி, தெளிவாக ஒரு மனிதனாகவே தோற்றத்தினை நல்கியது. ஆனால், பல வழிகளில் டொனல்டு குவாவைவிடச் சிறந்திருந்தான். பேசுவது எப்படியென்பதை டொனல்டு கற்றுக் கொண்டான். ஆனால், குவா கற்கவேயில்லை. வெறுப்பு, பசி, வலி, அசௌகரியம் ஆகிய நான்கையும் தெரிவிக்க அவள் 4 வகையான அறிகுறிகளைப் பயன்படுத்தினாள். குவா $16\frac{1}{2}$ மாத வயதுடையவளாயிருக்கையில் இப் பரிசோதனை தொடரப்படாமல் விடப்பட்ட போது, 'படுக்கையின் கீழ் இருந்து வெளியே வா', 'உன் தாயிடம் செல்', 'கொம்பினை ஊது' போன்ற இன்னபிறவற்றை மறைமுகமாகக் குறிப்பிடும், வேறுபட்ட 58 முற்று வினையற்ற சொற்றொடர்களுக்கு (phrases) குவா சரியாகத் துலங்குதல் தர முடிந்தவளாக இருந்ததைக் கெல்லாக் கண்டார். டொனல்டு பொம்மைகளைக் கவனிக்கவும், மனிதரின் செயல்களை மிக நெருங்கிக் கவனிக்கவும் செய்வான். ஆனால் குவா பொறுமையிழந்து மற்றச் செயல்களுக்காக வெளியே சென்றுவிடுவாள். தலை வாருதல், டிராயரை மூடுதல், தரையைப் பெருக்குதல், கைகுலுக்குதல், மேலும் பலவான வயது வந்தவரின் நடத்தைகளை டொனல்டு கண்டு பாவனை (imitation) செய்தான். மனவெழுச்சி வளர்ச்சியிலும்கூட அங்குப் பெரும் வேறுபாடு இருந்தது. டொனல்டு மனவெழுச்சிகளை உள்ளடக்குதலில் சிறந்திருந்தான். குவா தன் 'பெற்றோருடனும்', 'உடன் பிறந்தோனுடனும்' ஆழ்ந்த நெருக்கம் கொண்டிருந்தாலும் அவளுடைய நெருக்கமானது முரட்டுத் தனமானதாக இருந்தது. உணவு ஒன்றைத் தவற விட்டுவிட்டால், அது தன் உணவை மூர்க்கத் தனமாக விழுங்கும். சினம் அல்லது அச்சம் கொண்ட நேரங்களில் அவளுக்குத் தன் மூத்திரப்பை மீதும், குடல் மீதும் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லை. அடுத்தவகையில் மனிதக்குரங்கு வெளியாட்கள் முன்னிலையில் எப்பொழுதும் கூச்சப்பட்டதில்லை. ஆனால், குழந்தை கூச்சத்தைக் கொண்டிருந்தது. மானிடனாக நடத்தப்பட்டபொழுது, அக் குரங்கு மனித வழிகளைக் கற்றுக்கொண்ட வியக்கத்தக்க வேகத்தினை இப் பரிசோதனைக் காட்டுகிறது. வளர்ச்சி, பயிற்சி இவற்றின் குறுகிய தன்மைகளையும் இச் சோதனைக் காட்டுகின்றது. குவா கிட்டத்தட்ட முழுமையும் மனித வழிகளில் நடந்தாலும், அவளை முழுமையும் மானிடனாகவே மாற்ற இயலவேயில்லை.

## வேறுபட்ட சமூகங்களில் வளர்தல்
## (Growing up in different societies)

வேறுபட்ட சமூகங்களின் மனிதக் குழவிகள் (human infants) அனைத்தும் உயிரியல் சார்பில் ஒரே தன்மையுடைய தாகும். ஒரே பெற்றோர்களின் குழந்தைகளிடை வேறுபாடுகள் உள்ளது போன்றே குழந்தைக்குக் குழந்தை தனியாள் வேறு பாடுகள் உள்ளன என்பதில் ஐயமில்லை. இருப்பினும் சில ஆண்டு களில் வேறுபட்ட சமூகக் குழுக்களின் குழந்தைகள், அவ்வக் குழுவின் முறையான உறுப்பினராகவும், அம்மொழியைப் பேசு பவராகவும் பொதுவாக அக் குழுவுக்கே உரித்தான தனித்த வழிகளில் நடப்பவராகவும் ஆகின்றனர். குழந்தை 8-10 வயதி னனாக ஆவதற்குள் அவன் பிறந்த அக் குழுவின் தனித்த உறுப்பி னனாக நிச்சயம் மாறிவிடுகிறான். பயிற்சி அடிப்படை ஆளுமை அமைப்பை (basic personality structure) எவ்விதம் மாற்று கிறது என்பதனை வேறுபட்ட சமூகங்களைப் படித்த மனித வியலாரின் (anthropologist) அறிவிப்புகள் காட்டுகின்றன. மார்கரெட் மீடு (Margaret Mead) என்பார் நியூகினியா வில் (New Guinea) உள்ள அரப்பேஷ் (Arapesh) என்றதொரு சிறிய விவசாய இனத்தைப்பற்றி விவரித்துள்ளார். அவர்கள் சாந்தமும், பெருந்தன்மையும், நன்மையில் உறுதியும் கொண்ட மக்கள் அக் குழுவில் சண்டைகள் இருந்தாலும், அவர்கள் வன்முறையாளர்கள் அல்லர். அங்குக் கடுமையான ஆக்கிரமிப்பும் இல்லை. முறையாக இணைக்கப்பட்ட அரசாங்கத்தை அவர்கள் கொண்டிருக்கவில்லை. அவர்கள் அத்துமீறுவோனைத் தண்டிப் பதற்குத் தலைவனையோ நீதிபதியையோ பெற்றிருக்கவில்லை. இருப்பினும் அவர்கள் இசைந்த (harmony) வாழ்வே வாழ் கின்றனர். அங்கு ஒவ்வொரு மனிதனும் தன்னைக் குழு முழு வதற்கும் சொந்தமானவனாக உணர்கிறான். அரப்பேஷ் மக்கள் உடமையைப் பொறுத்தவரை அவற்றின் உரிமையாளர்கள் அல்லர். வேட்டையாடலோ, வீடுகட்டுதலோ யாதாக இருப்பி னும் அங்குப் பல மக்களும் ஒத்துழைக்கின்றனர். வேட்டையாடப் பட்ட மிருகமும், அறுவடை செய்யப்பட்ட தானியமும் அக் குழுவின் மற்ற உறுப்பினராலும் பங்குகொள்ளப்படுகின்றன. ஒருவிதக் கணக்கும் இன்றிப் பரிசுகள் வழங்கப்படுகின்றன. குழந்தைகள் பெற்றோர்களால்மட்டுமன்றி, மற்ற வயது வந் தோராலும், கிராமத்திலுள்ள மற்றக் குழந்தைகளாலும் மிகவும் பிரியமாக அன்பு செலுத்தப்படுகின்றனர். குழந்தை மிக விரைந்து வளரும் பொருட்டு ஊக்கமளிக்கப்படுவதில்லை. முதிர்ச்சி (maturity) அடையும் போது மட்டுமே இளைஞர்கள்

தங்களைத் தாங்களே கவனித்துக்கொள்கின்றனர். முறை யற்ற குறிப்புகள் (informal instructions) மட்டுமே அங்கு உள்ளன. அரப்பேஷ் மக்கள் அமைதியும், ஆக்கிரமிப்பற்ற தன்மையும் கொண்டவர் என்பதே இதன் கருத்து ஆகும். ஆக்கிரமிப்புத் தன்மையில் (aggressive) உள்ள ஒரு மனிதனை அவர்கள் 'அவன் நடிக்கிறான்' என்று எண்ணியே பார்க்கின்றனர். இவ்விதமாக அரப்பேஷ் மற்ற மனிதக் குழுக்களினின்று, குறிப் பாக மண்டுகோமர்கள் (Mundugomors) எனப்படும் பயங்கரத் தலைகொல்லிகளான அண்டை மக்கள் குழுவினின்று தெளிவாக வேறுபட்டு நிற்கிறது. இவ்வாறாக ஒவ்வொரு குழுவும் ஒரு சில சமூகத் தரங்களை எடுத்துக்கொண்டுள்ளது. அத் தரங்கள் அக் குழுவிலுள்ள தனியவர்களின் நடத்தையினைப் பாதிக்கின்றன.

## அசமூகமற்ற மனிதர்களின் சில நிகழ்ச்சிகள்
(Some instances of non socialized persons)

### (a) அவிரானின் பண்படாத சிறுவன் (The wild boy of aveyron)

குடும்பம், அண்டை இடம் ஆகியவற்றின் முக்கியத்து வத்தை எந்த மனிதர்களின் பராமரிப்பும் இன்றித் தன்னிச்சை யாக விடப்பட்ட மானிடர்பற்றிய இரு நிகழ்ச்சிகளின் விவரிப் பின் மூலம் அறிந்துகொள்ளலாம். முதல் அறிக்கையானது அவிரான் பண்படாச் சிறுவனைப்பற்றிக் கூறுகிறது. பிரஞ்சுப் புரட்சிக்குப் (1799) பத்தாண்டுகளுக்குப் பின்னர் மூன்று வேடுவர் 11-12 வயது மதிக்கத்தக்க ஒரு நிருவாணமான சிறுவனைக் தாங்கள் கண்டதாக அறிவித்தார்கள். அச் சிறுவன் ஒரு மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டான். பல பிரஞ்சு விஞ்ஞா னிகள் கவனமாக அவன்மீது ஆய்வினை நடத்தினர். ரூசோவின் (Rousseau) 'உயர்தரமான நாகரீகமற்றவன்' (noble savage) என்பதிலிருந்து ஓர் எடுத்துக்காட்டினைக் காணப் பிரஞ்சு மக்கள் ஆர்வம் உள்ளவராக இருந்தனர். மனிதன் இயற்கைச் சுற்றுப்புறங்களில் (natural surroundings) வளர்க்கப் பட்டால், அவன் குறிக்கோள் வடிவான மனிதனாக (ideal person) ஆவான் என்று ரூசோ உறுதியாகக் கூறியிருந்தார். ரூசோவின் கூற்றுக்கு மாறாகப் பிரஞ்சு மக்கள், அவிரானின் பண்படாத சிறுவனிடத்துக் கூண்டிலடைக்கப்பட்ட மிருகத்தைப் போன்று முன்னும் பின்னும் அசையும் இழுப்போடு கூடிய ஒரு வெறுக்கத்தக்க அழுக்குக் குழந்தையையே கண்டார்கள். தன்னை எதிர்த்தவரை அச் சிறுவன் கடிக்கவும், கீறவும் (scratch) செய் தான். அவனுடைய நலத்தைக் கவனித்தவரிடத்து அவன் எவ்

விதப் பிரியமும் காட்டவில்லை. அவன் மிருகத்தைப் போன்று தனக்குக் கிடைத்த ஒவ்வொரு பொருளையும் மோப்பம் பிடிக்கவும், உணவைப் பறித்து அதனை ஒரு மூலைக்கு இழுத்துச்சென்று அதனை விரைந்து விழுங்கவும் செய்தான். துப்பாக்கியால் அவனருகே சுட்டபோதிலும் அவன் அச்சத்திற்கான அறிகுறிகளை எப்பொழுதும் காட்டவில்லை. மூக்கினுள் பொடி திணிக்கப்பட்டாலும் அவன் தும்பவில்லை. குளிரையும், மழையையும் அவன் இலட்சியம் செய்யவும், தூங்கும்போது எவ்விதமான போர்வையைப் பயன்படுத்தவும் இல்லை. இழிந்த சப்தங்களைக் கொண்ட ஓர் ஊமை உயிரியாக அவன் இருந்தான். எவ்விதமான தனித்த ஒன்றின் மீதும் கவனம் செலுத்தாமல் நீண்ட நேரத்திற்குப் பூங்காவில் அவனால் அமர்ந்திருக்க முடியும். நாற்காலியின் மீது அமரவோ, கதவைத் திறக்கவோ அவனால் முடியாது. அநேகமாக 4-5 வயதிற்குள் அவன் ஏதோ சில விபத்துகளின் மூலம் காடுகளில் விடப்பட்டிருக்கலாம் என்று ஊகிக்கப்பட்டது. அவனுடைய உடம்பில் மிருகங்களின் கடியைக் காட்டும் வடுக்கள் பல இருந்தன. பீனல் (Pinel) எனும் சிறந்த பிரஞ்சு உளவியலார் 11 வயதுடைய அவனது நடத்தை, அவன் சராசரி ஒரு வயதுக் குழந்தை ஒன்றின் நுண்ணறிவினும் மிகுந்தவனன்று என்பதைக் காட்டி, அதன் காரணமாக, அச் சிறுவனை 'ஒரு பிறவி பித்தன்' (congenital idiot) என்று அறிவித்தார். அடுத்தவகையில் இடார்டு (Itard) என்பார் உளத்திறன் குன்றிய (feeble minded) சிறுவனையின் அவன் காட்டு வாழ்க்கையின் துன்பங்களிடையே உயிர் வாழ்ந்திருக்க முடியாது என்று நினைத்தார். ஆகையால், அச் சிறுவனின் இன்றைய நிலை, மனித சமூகத்தை அவன் இழந்திருத்ததாலேயே என்று அவர் உணர்ந்தார். அன்பாலும், பொறுமையாலும், விடாப்பிடியாலும் அச் சிறுவனை 'மானிடனாகப்' பயிற்றுவிக்க முடியும் என்று இடார்டு நம்பினார். எனவே, அவர் இக் காட்டுமிராண்டியை நாகரிக மனிதனாக்குகின்ற பணியினை மேற்கொண்டார். அச் சிறுவனைப் பராமரிக்க ஒரு தாதி அமர்த்தப்பட்டாள். தாதியும், இடார்டும் அச் சிறுவன் மீது அன்பைப் பொழிந்தனர். வெதுவெதுப்பான துணிமணிகளால் அவனைப் போர்த்துதல், நன்கு வெப்பப்படுத்தப்பட்ட வீட்டில் அவனை இருத்துதல், 2-3 மணி நேரத்திற்கு ஒவ்வொரு நாளும் அவனை வெந்நீரிற் குளிப்பாட்டுதல் ஆகியவற்றின் மூலமும், அச் சிறுவனின் புலனுணர்ச்சிகளுக்குக் கல்வியைப் புகட்ட அவர்கள் தொடங்கினர். அச் சிறுவன் தன் நினைவுடன் வெப்பத்தை அறியவும், குளிரை வெறுக்கவும் தொடங்கினான். காலையில் அவனைக் குளிரில் காட்டுவதன் மூலம், இன்று குளிரை வெறுத்தலினால், அவனே உடைகளை

அணிந்துகொள்ளுமாறு மெதுவான செயன்முறையால் கற்பிக்கப்பட்டான். இதுபோலவே மிகுந்த பொறுமையோடு அச் சிறுவன் வழவழப்பையும், சொர சொரப்பையும், மென்மையையும், கடினத் தன்மையையும் பிரித்து அறிந்துகொள்ளக் கற்பிக்கப்பட்டான். இந்த உண்மை அனுபவங்கள் அனைத்தும் நமக்கு 'இயற்கை'யாகத் தோன்றினும் உண்மையில் அவை பயிற்சியால் விளைந்தவையேயாகும். 'பயிற்சிகளாக நோக்கப்படாமலேயே' இப் பயிற்சிகள் குழந்தைகளுக்குக் கொடுக்கப்படுகின்றன. அவிரானின் பண்படாச் சிறுவனைப்பற்றிய இடார்டின் உழைப்பு, அச் சிறுவனின் கடந்த கால அனுபவங்கள் இத்தகைய அனுகூலங்களைக் கவர்ந்துகொண்டதால், மனித வாழ்க்கையில் சாதாரணமான பங்கினைப் பெற்றுள்ள புலனுணர்வுகளின் மதிப்புகளை (value of sensations) அவன் மதிப்பிடும் வண்ணம் செய்ய நீண்ட காலம் பிடித்தது என்பதனைத் தெளிவாகக் காட்டுகிறது.

மேலும், அச் சிறுவனின் உணர்ச்சிகள் மகிழ்ச்சி, சினம் எனும் இரு மனவெழுச்சிகளுக்குள்ளேயே அடக்கப்பட்டிருந்தன என்பதும் கண்டுபிடிக்கப்பட்டது. நீண்டதொரு முயற்சியின் மூலமே இடார்டு அச் சிறுவனின் மனவெழுச்சிகளையும், உணர்ச்சிகளையும் தூண்ட முயன்றார். படிப்படியாக அச் சிறுவன் இடார்டுடனும், தாதியுடனும் ஈடுபாடு கொண்டான். தாதி சினம் கொண்டால் அவன் அழவும், பிரிவிற்குப் பிறகு அவள் திரும்பி வந்தால் அவன் மகிழவும் செய்வான். அவன் மருத்துவரை மகிழ்வாக வரவேற்கவும், அவருடைய கைகளைச் ஆட்டவும் செய்வான். மருத்துவர் கடுமையாக இருந்தால் அவன் அழவும், அவனை மன்னிக்காவிட்டால் சினம் கொள்ளவும் செய்வான்.

அவன் பேசுவதற்குக் கற்கச் செய்த முயற்சிகள் அனைத்தும் வீணாயின. அவனால் எந்தவிதமான சப்தமான குறிகளையும் பயன்படுத்த முடியவில்லை. பால் வேண்டும்போது அவன் கிண்ணத்தைத் தருவான். ஆனால் பால் என்னும் சொல்லை உச்சரிக்க அவனால் முடியவில்லை. அவன், தன்னுடைய சில தேவைகளைச் சைகைகளின் மூலம் வெளிப்படுத்தக் கற்றுக்கொண்டான். தான் உலாவச் செல்ல விரும்பினால் அவன் மேல் சட்டையும் (coat), தொப்பியையும் தாதிக்குக் கொணர்ந்து தருவான். பொருட்களின் ஒரு வகுப்பிற்குப் பிரதிநிதியாக விளங்கும் சொற்களைவிட, தனிப்பட்ட பொருட்களின் தொடர்புள்ள சொற்களுக்கே அவன் துலங்கலைத் தருவான். ஐந்து ஆண்டுகளுக்குப் பின் இடார்டு பொறுமையான அப் பயிற்சியினை விட்டுவிட்டார்,

ஏனென்றால், அவர் அச் சிறுவனை மேலும் சீர்திருத்த முடியாது என்பதனை உணர்ந்துகொண்டார். 'பண்படாத ஒரு காட்டு மிராண்டியான விக்டர், மானிட சமூகத்தில் எப்படி வாழ்வது என்பதனைக் கற்றுக்கொண்டான். தன்னுடைய சில எளிய விருப்பங்களை எழுத்துவாயிலாகத் தெரிவிக்கவும் கற்றுக்கொண் டான். ஆனால், அவன் தன்னை ஒத்த வயதுடைய மற்றச் சிறுவர் களின் திறமையை எப்பொழுதும் அடைய முடியவில்லை. முன் குழந்தைப் பருவத்தில் (early childhood) மனித சமூகத் தின் விலக்கமானது, மிகப் பெரும் உழைப்பால் ஒரு சிறிதே பெறும் வண்ணம் அச் சிறுவனைப் பின் நிறுத்திவிட்டது. அப் பொழுது 40 வயதினனாக இருந்த விக்டர் 1828-ல் இறக்கும் வரை அன்பான பேணுதலைப் பெற்றிருந்தான்' (7.63).

(b) **வங்காளத்தின் ஓநாய்க் குழந்தைகள்** (The wolf children of Bengal)

மிட்னப்பூரில் (Midnapore) அனாதை ஆசிரமம் ஒன்றை நடத்திவந்த பாதிரி ஜே. சிங் (Rev. J. Singh) (8) 1920-ல் கல்கத்தாவுக்கு அண்மையில் உள்ள ஒரு காட்டில் 'மனித ஆவி' ('man-ghost') ஒன்றைப்பற்றி அறிந்தார். அவர் சிலருடன் அக் காட்டிற்குச் சென்றார். நீண்ட நேரம் காத்திருந்ததில், ஓர் ஓநாய், இரு வளர்ந்த ஓநாய்கள், இரு குட்டிகள், இரண்டு குழந்தைகள் ஆகியன பின்தொடர ஒரு குகையினின்று வெளிப் பட்டதைக் கண்டார். பின்னர், இந்த இரு குழந்தைகளும் கைப்பற்றப்பட்டு ஒரு கிராமவாசியின் பராமரிப்பில் விடப்பட் டன. ஒரு வாரத்திற்குப் பின் சிங் திரும்பி வந்தபோது, அந்த மனித ஆவிக்கான அச்சத்தால் கிராமம் முழுவதும் காலியாகிக் கிடப்பதையும், அந்த அனாதரவான குழந்தைகள் பசியாலும், தாகத்தாலும் சாவின் எல்லையில் நிற்பதையும் கண்டார். எட்டு வயதுள்ள மூத்தவள் கமலா என்றும், 1½ வயதுடைய இளையவள் அமலா என்றும் பெயரிடப்பட்டனர். விக்டரைப் போன்றே இவ்விரு குழந்தைகளும் மனிதத் தன்மையை இழந்திருந்தார்கள். ஆனால், இவ்விரு குழந்தைகளும் ஓநாய்கள் போன்ற நடத்தையில் ஈடுபட்டனர் என்பதே விக்டருக்கும் இவர்களுக்குமுள்ள வேறு பாடு ஆகும். அவர்களால் நேராக நிமிர்ந்து நடக்க முடியவில்லை. இரவில் நடமாடும் மிருகங்களைப் போன்று நண்பகலில் அவர் களால் தங்கள் கண்கள் முழுதையும் திறக்க முடியவில்லை. அவர்கள் பகலில் பெரும்பாலும் அசைவின்றியும், இரவில் சஞ்சரித் தும் வந்தனர். ஓநாய்கள் போன்று சப்தமிட்டனர். அவர்கள் பச்சை மாமிசம் உண்பதில் அதிக ஆர்வம் காட்டினர். ஓநாய்

களைப் போன்று பாலை நக்கிக் குடித்தனர். ஒருவர்மேல் ஒருவர் கிடந்தே தூங்கினர். அவர்கள் பகல் வெப்பத்தில் வியர்க்கவோ, இரவின் குளிருக்கு நடுங்கவோ இல்லை. தன்னுடைய குட்டி களைப் பேணும் போதே ஓநாய் முதல் குழந்தையைக் கொணர்ந் திருத்தல் வேண்டும். ஆனால் அதே ஓநாய் சில ஆண்டுகளுக்குப் பின் மற்ருேரு மனிதக் குழந்தையைப் பேணியிருத்தல் வேண்டும் என்பது விந்தையானதொன்ருகும். திருமதி சிங் இவ்விரு குழந் தைகளை வளர்க்கும் பொறுப்பை மேற்கொண்டு, பெருமளவில் அன்பையும், கவனத்தையும் அவர்கள்பால் செலுத்தினுள். அவர் களுக்கு ஊட்டுவதோடும் (feeding), பராமரிப்பதோடும் அல்லா மல் அவள், அவர்கள் தசைகளைத் தளர்த்துவதற்காக அன்ருடம் உடம்பைப் பிடித்துவிடவும் செய்தாள். படிப்படியாகக் அவ்விரு குழந்தைகளும் தங்கள் தாதியை விரும்ப ஆரம்பித்தனர். ஆனல் அவர்கள் மற்றக் குழந்தைகளைத் தவிர்க்கவும் அல்லது அவர்களைக் கடிக்கவும், கீறவும் செய்தனர். அவர்களைக் கொணர்ந்த 11 மாதங்களுக்குப் பின் அமலா வயிற்றுக் கடுப்பால் இறந்தாள். அநேகமாக அவள் இயல்பாக (normal) ஒரு பெண்ணுக வளர்ந் திருக்கலாம். ஏனென்ருல் அக் குறுகிய காலத்திலேயே அவள் தண்ணீர் என்பதற்கான வங்காளச் சொல்லைப் பயன்படுத்தி அதனைக் கேட்கக் கற்றுக் கொண்டிருந்தாள்.

அமலாவின் இறப்பால் கமலா மிகவும் வருத்தப்பட்டாள். அமலா இறந்த இடத்தினின்று அவள் அசையவில்லை. இரண்டு நாள்களுக்கு உணவையும், நீரையும் அவள் மறுத்துவிட்டாள். பின்புதான், அவள் திருமதி சிங்கின் அன்பிற்கு நல்ல முறையில் துலங்குதல் தந்தாள். படிப்படியாக அவள் அக் குழுவின் ஒப்புக் கொள்ளப்பட்ட உறுப்பினளாயினுள். அவள் பிரியத்தைப் பெறுவதோடு, அதனை மற்றவர்க்குக் கொடுக்கவும் செய்தாள். குழந்தைகளைப் பார்த்துக்கொள்வது, பங்கா இழுப்பது போன்ற சிறு செயல்களைச் செய்ய அவள் கற்றுக்கொண்டாள். இருட்டில் அலையும் விருப்பத்தினை விட்டுவிட்டாள். இருட்டைக் கண்டு அச்சம் கொள்ளக்கூடத் தொடங்கினுள். அனுதை ஆசிரமத் திற்கு அவள் வந்த 5½ வருடங்களுக்குப் பின்னரே தன் கால் களால் மட்டும் அவளால் நடக்கக் கற்றுக்கொள்ள முடிந்தது. ஆனுலும், பின்னர்கூட அவளால் நேர்த்தியாக நடக்கமுடியவில்லை. ஓட வேண்டியபோது அவள் கால்களோடு கைகளையும் பயன் படுத்தினுள். அவள் பேச்சு வளர்ச்சியும் மிக மெதுவாக இருந் தது. 45 சொற்களை மட்டுமே அவளால் கற்க முடிந்தது. 15 வயதிற்கூட அவளால் ஓர் இரண்டு வயதுக் குழந்தையைப்

பேன்றே பேச முடிந்தது. 17 வயதுடையவளாக இருந்த போது 1929-ல் அவள் இறந்துவிட்டாள்.

## சீக்கிரமே சமூகவயாக்கலின் முக்கியத்துவம்
## (Importance of early socialization)

அவிரான் பண்படாச் சிறுவன், வங்காள ஓநாய்க் குழந்தைகள்பற்றிய இரு கதைகளிலும் வெளிப்பட்டு நிற்கும் சில முக்கிய அம்சங்களை நாம் இப்பொழுது ஒருங்கே இணைக்கலாம். அவை நம்புவதற்குச் சிரமமானவையாக இருக்கலாம். ஆனால் அவை நம்பத்தக்கவையாக உள்ளன. மேலும், அவை மிக அபூர்வமானவையும் அல்ல. அநேகமாக, உலகின் ஒவ்வொரு பகுதியிலும் பண்படாக் குழந்தைகள்பற்றிய அறிக்கைகள் உள்ளன. சில வருடங்களுக்கு முன்னால் ஓர் ஓநாய்ச் சிறுவன் அலகாபாதில் கண்டுபிடிக்கப்பட்டான்.

விக்டர், கமலா ஆகியவர்களிடம் வெளிப்பட்டு நிற்கும் ஓர் அம்சம், அவர்கள் பேச முடியாமையே. சில சைகைகளைப் பயன்படுத்தவும், மிருகங்களைப் போன்று கத்தவும்மட்டுமே அவர்களால் முடிந்தது. அவர்கள் சமூகத்தை வெறுப்பது இரண்டாவது அம்சமாகும். நீண்டகாலப் பேணுதற்கும், அன்பிற்கும் பின்பே அவர்களால் மானிடரிடத்துப் பற்றுதலை வளர்த்துக்கொள்ள முடிந்தது. அத்தகைய பண்படாக் குழந்தைகள், அவர்களுக்கெனப் புலனுறுப்புகள், தசைகள், நரம்பு மண்டலம் ஆகியவற்றைப் பெற்றிருந்தார்கள். ஆனால், மனித சமூகத்தின் வழிகாட்டலும், பேணுதலும் இன்றி இப்பண்படாக் குழந்தைகள் முன்னேறவில்லை. குழந்தைகளின் புலன்களுக்குக் கல்வி புகட்டத் தாய் எவ்வளவு செய்கிறாள் என்பதனை நாம் அறிவதில்லை. ஆதிவாசிகளின் சமூகங்களிற்கூடத் தாய் பெருமளவு குழந்தையை மானிடனுக்க உதவுகின்றாள். நல்ல ஆடைகளை அணிவிப்பதாலும், குளிப்பாட்டுவதாலும், சீராட்டுவதாலும், முத்தங்களாலும் தாய் குழந்தையைத் தூண்டுகிறாள். மாண்டிசோரி (Montessori), உளத்திறன் பற்றாக்குறையுள்ள குழந்தைகளுக்குக் (mental defective) கற்பித்தபோது புலன்களின் பயிற்சி முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தார். இக் குழந்தை அடிப்படையிற்கொண்டே புலன் பயிற்சி அளிப்பதற்காக இன்று ஒவ்வொரு குழந்தைப் பள்ளியிலும் தனியாக உபகரணங்களும், நுண்முறைகளும் (techniques) பயன்படுத்தப்படுகின்றன.

இவ்வழியிலேயே, மிக்க பொறுமையோடு தாய்ப் பாலைவிட மற்ற உணவுகளைக் குழந்தை ஏற்கும்படி செய்கின்றாள். பால்,

மற்றும் பால் போன்ற மற்றவற்றை உட்கொள்வதிற்கூடக் குறிப்பிட்ட அளவு பயிற்சிக்குப் பின்னரே குழந்தை சப்புதலி னின்று குடித்தற்கு மாறக் கற்றுக்கொள்கிறது. 3 வயதுடைய சில குழந்தைகள் டம்ளரிலிருந்து பாலைக் குடிக்க மறுப்பதையும் கூட நாம் இயல்பாகக் காண்கின்றோம். பாலூட்டும் புட்டியை (feeding bottle) இவ் வயதிற்கூடக் குழந்தை கொள்ளும் வண்ணம் விட்டு வைத்திருப்பது தாயின் குற்றமாகும். இதே வழியில் சரியான அளவு பொறுமையான பயிற்சியின் பின்னரே தாய் பலவகையான உணவுகளைக் குழந்தை அனுபவிக்கக் கற்றுத் தரு கிறாள்.

பண்படாக் குழந்தைகளின் மற்றுமொரு சிறப்பியல்பான அம்சம் வெப்பத்திற்கும், குளிர்ச்சிக்கும் அவர்களின் உணர்வற்ற தன்மையாகும். அவர்கள் வெப்பமானதொரு பகலில் வியர்க் கவோ, குளிர் மிகுந்த இரவில் நடுங்கவோ இல்லை. ஆடைகள் அணிவதை அவர்கள் வெறுத்தார்கள். தக்கதோர் அளவு பயிற்சிக்குப் பின்னரே அவர்கள் தங்கள் ஆடைகளை உடுத்திக் கொள்ளவும், வெப்பம், குளிர்ச்சி ஆகியவற்றின் புலனுணர்ச்சி களை (sensations) உணரவும் செய்தனர். அவர்களால் நிமிர்ந்து நடக்க முடியவில்லை. நிமிர்ந்து நடக்க மிகுந்த பயிற்சி தேவை யாயிற்று. நடப்பதற்கு அவர்கள் கற்றுக்கொண்டிருந்தாலும், ஓட நேர்ந்தபோது கைகளையும், கால்களையும் பயன்படுத்திய முன்னைய நிலைக்கே சென்றுவிடுவர்.

அவர்களது மனவெழுச்சி அனுபவங்கள், சினம், அச்சம், மகிழ்ச்சி என்ற மூன்று முதனிலை மனவெழுச்சிகளுக்குள்ளேயே கட்டுப்படுத்தப்பட்டிருந்தன. அவர்களால் சமூக வாழ்க்கை யில் முக்கியமான பங்கினை வகிக்கும் இரண்டாந்தர மனவெழுச் சிகளை அனுபவிக்கவோ, அவற்றை வெளிப்படுத்தவோ முடிய வில்லை. பல வருடங்களின் பொறுமையான பயிற்சிக்குப் பின்னர்கூட விக்டரோ, கமலாவோ எந்த அளவிலும் இம் மனவெழுச்சிகளை அனுபவிக்க முடியவில்லை. குழந்தைப் பரு வத்தில் கவனத்தைக் கவராத சாதாரண வகையில் கற்றுக் கொண்டிருக்க வேண்டியவற்றை, நீண்ட பயிற்சிக்குப் பின்னரும் அவர்களால் கற்க முடியவில்லை. இது குழந்தை வாழ்க்கையின் முதல் இரண்டிலிருந்து மூன்றுவரையான ஆண்டுகள், குழந்தை யின் மனவெழுச்சி வாழ்க்கை வளர்ச்சியில் எவ்வளவு முக்கிய மானவை என்பதனைக் காட்டுகின்றது.

மனித சமூகத்தினின்று விலகி நிற்கும் தனிமை, உள வளர்ச்சியைப் பாதிக்கும் வழியில் குழந்தைக்கு மேலும் அழிவைத் தருகிறது என்னும் உண்மை மேற்கூறியவற்றிலிருந்து தெளிவாகிறது. மிகுந்த புத்திக் கூர்மையும், பொறுமையுமான பயிற்சியாற்கூட ஒரு சிறு குழந்தையின் உளநிலைக்கு மேல் அவர்களால் (விக்டராலும், கமலாவாலும்) வளர முடியவில்லை. அர்னுல்டு கெஸ்சல் (9) (Arnold Gesell) பயிற்சியின் முடிவில் விக்டரின் நுண்ணறிவு ஓர் ஆறு வயதுக் குழந்தையின் நுண்ணறிவிற்கு ஒப்பானதாகவும், கமலாவின் நுண்ணறிவு $3\frac{1}{2}$ வயதுக் குழந்தைக்கு ஒப்பானதாகவும் இருந்தது எனக் கணக்கிட்டுள்ளார். இவ்விதமாக மனிதரால் ஆரம்ப ஆண்டுகளின்போது முறையாகப் பேணவும், பிரியம் வைக்கவும்படாததானது வளர்ச்சியை நிரந்தரமாகப் பாதித்துவிடுகின்றது.

இந்தப் பண்படாக் குழந்தைகளால், கவனமான பயிற்சிக்குப் பின்னரும் மற்றக் குழந்தைகளைப் போன்று வாழவும், விளையாடவும் முடியவில்லை. மற்ற மானிடர்களுடன் அவர்கள் உண்மையான நட்பை வளர்த்துக்கொள்ளவும் முடியவில்லை. அன்றியும் சமூக உறவுகளின் முழுமையான கருத்தை அவர்களால் அறியவும் முடியவில்லை. மிருகங்கள் அல்லது பிறந்த குழந்தைகளைப் போன்று, இப் பண்படாக் குழந்தைகள், அவர்கள் விருப்பப்பட்டனவற்றை அறநிலை அல்லது நீதி—தர்மம் இவற்றின் சிந்தனையின்றிச் செய்தார்கள். இதனின்று மானிடர் தனிமையில் வளர்க்கப்பட்டால் (isolation) மிருகத்தைப் போன்று வாழவும், நடக்கவும் செய்கின்றனர் என்பதனை நாம் காண்கிறோம். இந் நடத்தை, நாம் முன்னரே பார்த்துள்ளது போல் வீட்டிற்குரிய விலங்குகளின் நடத்தையைப் போலல்லாது, கொடிய மிருகங்களின் நடத்தையைப் போல் உள்ளது. பழக்கப்படுத்தப்பட்ட விலங்குகள் சமூகவயமாதலின் பயனை வெளிப்படுத்துகின்றன. மிகப் பின்தங்கியுள்ள ஆதிச் சமூகங்கள்கூடக் குழந்தைகளின் மீது ஆழ்ந்த செல்வாக்குகளைக் கொண்டுள்ளன. சமூகத்தின் செல்வாக்கு இன்றித் தனிமையில் வளர்க்கப்பட்டால் குழந்தை மனிதத் தன்மையை அடைய முடியாது என்பதனைக் கமலா போன்ற பண்படாக் குழந்தைகளின் வாழ்க்கைகள் தெளிவாகக் காட்டுகின்றன. இந்தப் பண்படாக் குழந்தைகளின் விதியானது நம் வளர்ச்சிக்குச் சமூகம், எவ்வளவில் பங்குகொள்கின்றது என்பதனைக் காட்டுகின்றது.

## இந்தியாவின் சமூகவயநிலைச் செயன்முறையின் சில அம்சங்கள்

(Some aspects of socialization process in India)

**தர்மம்** (Dharma)

இந்தியாவில் சமூகவயமாதல் செயன்முறை **தர்மம்** என்ற அடிப்படைக் கருத்தைச் சுற்றியே ஒருமுனைப்படுத்தப்பட்டுள்ளது. மகாபாரதத்தில் உள்ள ஒரு புகழ்பெற்ற செய்யுள் இந்தியாவில் சமூகத் தரத்தினைப் பரந்த வழியில் அமைத்துள்ளது. 'அரசனோ அரசாங்கமோ செங்கோலோ (இதன் மூலம் அதிகாரமுடையோர் சட்டங்களை மீறுபவர்களைத் தண்டிக்கின்றனர்) செங்கோலைத் தாங்கியுள்ளவனோ மக்களை ஆள்வதில்லை. தர்மம் ஒன்றின் மூலமே மக்கள் ஒருவருக்கொருவர் பாதுகாப்பைப் பெறுகின்றனர்' (10).

இவ்விதமாக, அதிகாரமோ தண்டனையோ சமூக நடத்தையை ஆள்வதில்லை. ஆனால், **தர்மமே** ஆள்கிறது என்ற நோக்கு இச் செய்யுளில் தெரிவிக்கப்பட்டுள்ளது. இப்போது **தர்மம்** என்பது என்ன என்பதனை நோக்குவோம். இது 3,000 ஆண்டுகளுக்குமேல் இந்தியாவில் நிலைத்து நிற்கும் ஒரு கருத்தாகும். பல சீரிய சிந்தனையாளர்கள் இதனை வரையறுக்க முற்பட்டு, வரையறுக்க முடியாமல் தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டுள்ளனர். பிரபுவால் (Prabhu) கூறப்பட்டுள்ள **தர்மம்** பற்றிய கீழ்க்காணும் நோக்கினை நாம் எடுத்துக்கொள்ளலாம்: 'தன் செயல், மனப்பான்மை, பேச்சு ஆகியவற்றால் மற்றவர் தம் நலத்திற்கே தான் என்று உள்ளத்தாலும் மற்றவர்தம் நலத்திற்கு இடையறாது உழைப்பதாலும், ஒருவன் காட்டினால் அவன் **தர்மத்தை** அறிந்திருக்க வேண்டும் என்று கூறலாம்' (11.27). விரிவாகக் கூறினால், இந்தியாவில் இந்தக் கொள்கை தனியவர்களின் சமூகவயமாதலைப் பாதிக்கும் ஒரு சமூக மாதிரியினைப் போன்று அடிப்படையானது என்று நாம் சொல்லலாம்.

மனிதனது வாழ்க்கை, ஒழுக்கம் ஆகியவற்றைப் பாதிப்பவையாகக் கீழ்க்காணும் நான்கு காரணிகளை இந்துமதச் சிந்தனையாளர்கள் கருதியுள்ளார்கள். அவை (1) **தேசம்** (இடம்), (2) **காலம்** (நேரம்), (3) **சிரமம்** (முயற்சி), (4) **குணம்** (இயற்கைப் பண்புகள்) என்பவையாகும்.

மகாபாரதத்தில் பீஷ்மர் காலம், இடம் (காலம்-தேசம்) ஆகியவற்றைப் பொறுத்தது **தர்மம்** என்று போதிக்கிறார். இடம்

காலம் இவற்றின் மாறுதல்களை ஒருவராலும் அறுதியிடமுடியாத தால், இந்தியச் சிந்தனையாளர்கள் இவ்விரண்டிற்கும் தனிப் பட்ட மாதிரிகளை அமைக்க முயற்சி செய்யவில்லை. 'தர்மத்தின் மூலம் மனித வாழ்க்கையின் ஒழுக்கம், நடத்தை ஆகியவற்றை வழிப்படுத்தவும், ஒழுங்குபடுத்தவும் **சாஸ்திரக்காரர்கள்** (Sastra-karas) முயற்சிக்கின்ற உண்மையால் அவர்கள் **தர்மத்தைப்** பாதிக்கும் முக்கியக் காரணிகளாகத் தேசம், காலம் இவற்றை உணர்ந்து மௌனமாக ஒப்புக்கொண்டுள்ளனர். **தர்மம்** இணக்கமற்ற மாறுதலொரு கொள்கை என எடுத்துக்கொள்ளப் படாமல், உள்ளிடம், காலம் இவற்றால் சொல்லப்பட்ட நிலைகளுக்குப் பொருந்துமாறு, தனது இயக்கத்திற்காகக் குறிப்பிட்ட அளவு பிடிவாதமற்றதும், மாறுகின்றதும், சலனச் சக்தியும் ஆகிய தன்மைகளுக்கு இடமளிக்க வேண்டும்' (11.74).

**ஆசிரம தர்மம்** (Ashrama dharma)

**சிரமத்தை** (முயற்சி) நோக்குவதைப் போன்று ஆசிரம தர்மம் மனித வளர்ச்சியின் பல்வேறு படிகளில் நோக்கப்படு கிறது, (ஆசிரம தர்மம்—வாழ்க்கைப் படிகளுக்கு உரிய கடமைகள்). வாழ்க்கையில் நான்கு படிகள் உள்ளன. அவை **பிரமச்சரியம்** (மாணவனாக உள்ள காலம்), **கிரகஸ்தன்** (குடும்பத்தைக் கொண்டுள்ள நிலை), **வனப்பிரஸ்தம்** (காட்டில் வாழும் நிலை), **சந்நியாசம்** (துறவு வாழ்க்கை) என்பவையாகும். இவ் விதமாக முதல்நிலை படிப்பிற்கும், கட்டுப்பாட்டிற்கும் உரிய காலம் என நாம் காண்கிறோம். குழந்தைப் பருவத்திலும், இளமைப் பருவத்திலும் தனியவன் குடும்பத்தைக் கொள்வதற்கு வேண்டிய காரியங்களுக்காகத் தன்னை ஆயத்தப்படுத்திக்கொள் கிறான். இந்தியச் சிந்தனையாளர்கள் வீட்டிலும், பள்ளியிலும் பெறும் கல்வியினைக் குழந்தை வாழ்வில் ஓர் இன்றியமையாத படியாகக் கருதினும் 80% மேலாகக் குழந்தைகள் முறையான கல்வி வசதியினைப் பெற்றிருக்கவில்லை என்பதனை உறுதியாக ஒப்புக்கொள்ள வேண்டும். 1950ஆம் ஆண்டில்தான் இந்திய அரசியல் சட்டம் இலவசமான கட்டாயக் கல்வி 14 வயது வரை எல்லாக் குழந்தைகளுக்கும் பிறப்புரிமை என்று அறிவித்தது. 1960ஆம் ஆண்டில்கூட பள்ளிச் செல்லும் வயதடைந்த குழந் தைகளில் 50 சதவீதத்துக்குக் குறைவாகவே பள்ளிகளில் இருந் தனர். இந்தியச் சமூகத்தில் கொள்கைக்கும் நடைமுறைக்கும் உள்ள வேறுபாட்டினைக் காட்டும் எடுத்துக்காட்டுகளில் இஃது ஒரு சிறப்பான எடுத்துக்காட்டாகும். ஒரு சிறிய சிறுபான்மை யோரிடம் மட்டுமே இக் கொள்கை ஒரு சமூகத் தரமாக இருந்

தது. பெருமளவில் பொதுமக்கள், தங்கள் சமூகத் தரங்களின் பங்காகக் கல்வியினைப் பெறவில்லை. நம் நகரங்களில் இலவசக் கல்விக்கான சலுகைகள் அளிக்கப்பட்டிருப்பினும் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளிகளுக்கு அனுப்பாததன் காரணம் என்னவெனில் அவர்கள் குழுவில், பள்ளிக்கு அனுப்புதல் சமூகத் தரமாகக் கருதப்படவில்லை.

**கிரகஸ்த** நிலையை எடுத்துக்கொண்டால், தனியவன் தன் கல்வியை அல்லது தொழிலைக் கற்கும் நிலையை முடித்துத் திருமணம் செய்துகொண்டு குடும்பத்தை அமைக்கின்றான். தொழிலால் தன் வாழ்க்கைக்குச் சம்பாதிக்கவும், தனது குடும்பத்தைப் பராமரிக்கவும் செய்கிறான். ஒவ்வொரு தனியவனின் வாழ்விலும் திருமணம் ஒரு கடப்பாடாக (obligation) மதிக்கப்படுவதை இங்கு நாம் காண்கிறோம். மூன்றாவது நிலையில், சமூகத்திற்கும் குடும்பத்திற்கும் தன் கடமைகளைச் செய்த பின்பு வாழ்க்கையினின்றும், அதன் பொறுப்புகளினின்றும் ஓய்வுபெற்ற மனிதன் தன் மனைவியுடன் காட்டிற்குச் செல்வதன்மூலம் வாழ்க்கையையும் அதன் பிரச்சினைகளையும்பற்றி அவற்றோடு ஒட்டாத வழியில் நின்று அவன் படிக்கவும் ஆழ்ந்து யோசிக்கவும் இயலுகிறது. இப்படியானது, பழங்காலத்திலோ இக் காலத்திலோ ஒரு பொதுவான கொள்கையாகக் கடைப்பிடிக்கப்படுவதில்லை. அடுத்ததாக, மனித வாழ்க்கையின் இறுதிப் படியாகச் **சந்நியாசத்தை** நாம் பெற்றுள்ளோம். இந் நிலையில் மனிதன் எல்லா உலகப் பந்தங்களையும் உதறிவிட்டுத் தன்னைச் சமூக உதவிகள், சமூக பந்தங்கள் ஆகிய எல்லாவற்றிலிருந்தும் விடுவித்துக்கொள்ள வேண்டும். இத்தகைய ஒரு மனிதன் ஒரு குடும்பத்தையோ குழுவையோ சார்ந்தவனல்லன். மனித இனத்தைச் சார்ந்தவன் கற்பனைக்கும் எட்டாத காலத்திருந்தே இந்தியாவில் நாம் உண்மையான சந்நியாசிகளையும், பல **போலிச் சந்நியாசிகளையும்** பெற்று வருகிறோம்.

டூப் (Dube) கீழ்க்காணுமாறு எழுதுகிறார், 'வயதான காலத்தில் மக்களுக்குத் தங்கள் குடும்பத்தையும் உடைமைகளையும் ஒதுக்கித் தள்ளுவது அரிதாக இருப்பினும் வயதான ஆண்களும், பெண்களும் பெருமளவு உலகப் பொருட்களின் மீது அதிக பற்றுதல் கொண்டுள்ளதானது பெருமளவு குறித்துரைப்புக்கும் (remark), மக்கள் அவற்றைப்பற்றி, 'இம் மனிதர்கள் சாகும் போது தங்கள் செல்வத்தைத் தங்களோடு மறு உலகுக்குமா எடுத்துச் சென்றுவிடுவார்கள்?' என்று அடிக்கடி குறை கூறும்படியும் செய்கிறது. இவ்வயதான காலத்தில்தான் அவர்கள்

எண்ணங்கள் பெருமளவு சமயத்தின்பாலும், வரும் வாழ்க்கையில் அவர்கள் ஆன்மா பெறும் விதியின்பாலும் திரும்புவதோடு, அவர்கள் இந் நிலையில்தான் பொதுவாகப் புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரைகளை மேற்கொள்கின்றனர். **ஆசிரமத்** தத்துவத்தின் பரந்த அடிப்படைகள், ஒரு வகையில் சொல்லப்பட்டால், இந்து மதக் கிராமவாசிகளின் வாழ்க்கையிலும், எண்ணத்திலும் வியாபித்துள்ளன எனலாம். கிராமத்தில் உள்ள முகமதியர்களும்கூட தங்கள் இந்து அண்டை வீட்டாருடன் இத்தகைய சமூக மனபான்மையில் பங்கு பெற்றுள்ளனர். இஸ்லாமுக்கு மாறும் மக்கள் தங்கள் மத நம்பிக்கையை மாற்றிக் கொள்கின்றனர். ஆனல், அவர்கள் வாழ்க்கையின் சமூக-கலாச்சார வட்டத்தில், ஏறக்குறைய இந்துக்களைப் போன்றே, அதே அடிப்படை மனபான்மைகளைத் தொடர்ந்து கொண்டுள்ளனர்' (23.132).

**வருண தர்மம்** (Varna dharma)

மனிதனின் உள்ளடங்கிய உளவியல் ஆயத்தங்களைக் குறிக்கும் குணம் என்பதனைப்பற்றி ஆய்கையில், இந்தியச் சமூகம் **வருண தர்மத்தைப்** பின்பற்றுகிறது. இந்த மானிடக் குழு நான்கு கிளைக் குழுக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கற்றலுக்கெனத் தம்மை அர்ப்பணித்துள்ள ஒரு சிலரைப் பிராமணர்கள் என்றும், இராணுவ வாழ்க்கைக்கும், அரசாங்கத்தின் அரசியல் அமைப்புகளுக்கும் தம்மை அர்ப்பணித்துள்ள ஒரு சிலரைச் சத்திரியர்கள் (kshatriyas) என்றும், செல்வத்தைப் படைத்தல், பரப்புதல் ஆகிய பொருளாதாரச் செயல்களில் ஈடுபட்டுள்ள சிலரை வைசியர் என்றும், மேற்கண்ட மூன்று பிரிவிலும் அடங்கும் திறமைபெறுத பெரும்பாலான மனிதர்கள் சூத்திரர் (sudras) என்றும் அழைக்கப்படுகின்றனர். இவ்விதமாக வருண தர்மம் மனிதனின் திறமைகளிலும், வேலையிலும் வேறுபாடுகள் உள்ளன என்று அறிந்துள்ளது. இதைக் கீதை, 'குணம் (பண்புகளும், நாட்டங்களும்—traits and aptitudes), கர்மம் (வேலைகள்) ஆகியவற்றின் பகுப்பிற்கேற்ப நான்கு வருணங்களும் என்னல் படைக்கப்பட்டன' என்று கூறுகின்றது (12. IV. 13). வருண தர்மத்தின் மேலெழுந்த கருத்தே சாதி-குலமாகும். குடும்பம் அனுசரித்து வரும் தொழில் வகையினைப் பொறுத்து இந்தியாவில் எண்ணற்ற சாதிகள் உள்ளன. இக் கருத்துகளின் வண்ணமே தனியவர்கள் தங்கள் சாதியின் நிலையினுக்கேற்பத் தங்களுடைய தொழிலை அனுசரிக்க வளர்க்கப்படுகின்றனர். அண்மைக் காலத்தில் இந்தியர்களின் கண்ணோட்

டத்தில் பெரும் மாறுதல் ஏற்பட்டுள்ளதை நாம் காண்கிறோம். சூத்திர சாதியினரும், பஞ்சமரும் (தீண்டத்தகாதவர்) குடும்பத்திலும், சமூகத்திலும் உள்ள சமூக மாதிரிகளால் சுமத்தப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை எதிர்த்துக் கலகம் விளைத்தனர். இதன் காரணமாக, இந்திய அரசியல் அமைப்பு, சாதியின் அடிப்படையில் எந்த ஒரு மனிதனும் வேறுபடுத்தி வைக்கப்படக் கூடாது என்று விதித்தது. இதனையே வேறு சொற்களால் கூறின், பெற்றோர் எந்தத் தொழிற் குழுவினைச் சார்ந்தவராயிருப்பினும், அவர்களின் குழந்தைகள் தங்களால் மேற்கொள்ளக் கூடிய எந்த ஒரு தொழிலுக்கும் பயிற்சி பெறும் உரிமையைப் பெற இந்திய அரசியலமைப்பு வழி வகுத்துள்ளது. நாட்டின் எல்லாவிதக் கிளைக் குழுக்களாலும் பிடிவாதமாகப் பின்பற்றப்பட்டு வந்த சமூகத் தரமாகிய சாதியானது இப்பொழுது கைவிடப்பட்டுத் தனியவனது ஆற்றலுக்கும், விருப்பத்திற்கும், தகுதிக்கும் ஏற்ற வகையில் பெறும் கல்வியை, சுதந்திரத்தை வலியுறுத்தும் புதிய தரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**புருஷார்த்தங்கள்** (Purusharthas)

கற்பனைக்கெட்டாத காலந்தொட்டு இந்திய மக்கள் நான்கு மனிதத் தேவைகளைப் (human needs) **புருஷார்த்தங்கள்** என்று போற்றி வந்திருக்கின்றார்கள். அவை **செல்வம்** (artha—**அர்த்தா**), இன்பம் (kama—**காமம்**), அறம் (dharma—**தர்மம்**), முக்தி (moksha—**மோட்சம்**) என்பவையாகும். 'இத் தேவைகள் ஒரே வகையானவை அல்ல. அவற்றின் இறுதி முடிவு மட்டுமே மிக உன்னத முடிவாகும் (**சம்மம் போனம்**—summum bonum); மற்றவை சிறிய முடிவுகளாகும். அர்த்த-காமம் (artha-kama), செல்வமும், இன்பமும் தன் இயல்பான நன்மைகள் அல்ல. கடமை (**தர்மம்**—dharma) வாழ்வுக்கோ நேர்மையான வாழ்வுக்கோ அவை நடத்திச் செல்லும் வரை நல்லவையாக இருக்கின்றன' (13.66). பல வகைப்பட்ட மனிதத் தேவைகளுக்கிடையில் கடோபநிடதம் (katopanishad) ஒரு வேறுபாட்டினை உண்டாக்குகிறது. 'வேற்றுமையே நன்மை. வேற்றுமையே உண்மையில் இன்பம் பயப்பது. இவ்விரண்டும் தங்களுக்குப் பின்னே வேறுபட்ட நோக்கங்களைக் கொண்டுள்ளன. நல்லதை ஏற்றுக்கொண்ட ஒருவனுக்கு இது நன்மையாக அமைகிறது. ஆனால், இன்பம் பயப்பதைத் தேர்ந்தெடுக்கும் ஒருவன், அதன் நோக்கத்திற்கு அப்பால் விழுந்து விடுகிறான். நல்லது, இன்பம் பயப்பது இரண்டையும் மனிதன் சந்திக்கிறான். அறிவுள்ள ஒருவன் இரண்டையும்

எல்லா வழிகளிலும் கொண்டு, அவற்றை வேறுபடுத்தி அறியவும் செய்கிருன். அறிவாளி இன்பம் பயப்பதற்காக நல்லதைத் தேர்ந்தெடுக்கிருன். அறிவற்றவன் உடைமையைக் கைக்கொள்ள வேண்டும் என்ற விருப்பத்தால் இன்பம் பயப்பதைத் தேர்ந்தெடுக்கிருன்' *(14.* ii. *1-2).*

**அடிப்படை நற்பண்புகள்** *(*Cardinal virtues*)*

ஒவ்வொரு மனிதனுலும், **வருணம், ஆசிரமம்** இவற்றைக் கவனியாது விளைவிக்கப்படும் அடிப்படை நற்பண்புகளைப் *(**சாதாரண தர்மங்கள்**)* பழைய இந்திய நூற்கள்கூட வலியுறுத்துகின்றன. விரிவாகக் கூறினல் 5 நற்பண்புகள் வலியுறுத்தப்படுகின்றன. தூய்மை (soucha — சௌக்யம்), தற்கட்டுப்பாடு (self-control*)*, பற்றற்ற நிலைமை (detachment*)*, உண்மை (truth*)*, பலாத்காரமின்மை (non-violence*)* ஆகிய ஐந்துமே அவையாகும். கீதை சமூகத் தரங்களைக் கீழ்க்காணுமாறு தொகுத்துக் கூறுகிறது:

'அச்சமின்மை, தூய மனது, அறிவின் விவேகமான பகுத்தளிப்பு, ஒருமுனைப்படுத்தல் ஆகியன; ஈகை, தற்கட்டுப்பாடு, தியாகம் ஆகியன; சமய நூல் தொகுதிப் படித்தல், நேர்மை, மிக்க எளிமை இவற்றின் பயிற்சி, பலாத்காரமின்மை, உண்மை, சினத்தினின்று விடுபட்டிருத்தல், துறவு, சாந்தம், குற்றங் காணலை வெறுத்தல், உயிரிகளின்மேல் இரக்கம் (compassion*)* ஆகியவற்றில் வழுவாது நிற்றல், விழைதல் (covetousness*)*, நீக்கம், பெருந்தன்மை, அடக்கம், உறுதி (சலன புத்தியின்மை) ஆகியன' *(12.334).*

நாம் அறிந்துள்ளதுபோல், காந்தி இந்த அடிப்படை நற்பண்புகளின் மீது மிகவும் பெரியதோர் அளவில் கவனம் செலுத்தினர். விளக்கமான வழியில் அவர் இந் நற்பண்புகளை விவரித்துள்ளார் (15). தென் ஆப்ரிக்காவிலும், இந்தியாவிலும் அவர் **ஆசிரமங்களை** நிறுவி, இச் சமூகத் தரங்களை அகில உலக வயமாக்குதற்கு, நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் தலைவர்களைப் பயிற்றுவித்தார். இந்தியத் தேசீய இயக்கத்தின் வெற்றிக்குக் காரணமாய் அமைந்தவை சொந்த மதிப்புகளும் இந்தச் சமூகத் தரங்களை அன்ருடம் எண்ணம், சொல், செயல் (காயம்-வாக்கு-மனசு — kaya — vacha — manasa*)* இவற்றில் பயன்படுத்தியமையும் என்று எந்த எதிர்ப்பின் அச்சமும் இன்றி உறுதியாகச் சொல்லலாம். இத்தகைய கொள்கைகளைப்

பயின்று வருதல் இந்திய வழி வாழ்க்கையின் ஒரு சிறப்பியல் பாகும். இஃது ஏனென்றால், பெற்றோர் கற்றவரோ கல்வியறி வற்றவரோ இந்து மதம் அல்லது முகமதியம் அல்லது கிருத்துவம் என்பவற்றில் ஒன்றைப் பின்பற்றுபவரோ எவராக இருந்தாலும் இந்தியாவின் ஒவ்வொரு குடும்பத்திலும் இந்தச் சமூகத் தரங்க களும், சொந்த மதிப்புகளும் புகட்டப்படுவதால் அவை இந்தியர்களைத் தனிப்பட்டவராக்குவது இயலுகின்றது. வெளி நாட்டுப் பார்வையாளர்கள் இவற்றை இந்தியனின் ஆன்மீக நடத்தையைப் போலப் பார்க்கின்றனர்.

**சமூக இணக்கமும், தனிப்பட்ட தன்மையும்** (Social conformity and uniqueness)

கற்பனைக்கும் எட்டாத நாளிலேயே இதியோப்பியர்கள் (utopians) ஒவ்வொரு தனியவனின் நடத்தையையும், முழு மையான தர இயல்புகளைக் (normative attributes) கொண் டிருக்கும் ஒரு சமூகத்தை அமைப்புதற்காக ஆய்ந்துள்ளார்கள். வேறு வகையாகக் கூறின், சமூகவயமாதல் முறைகளை வளர்ப் பதே அதன் நோக்கம். இதனால் ஒவ்வொரு சந்தர்ப்பத்தில், ஒவ்வொரு மனிதன் எப்படி நடந்து கொள்வான் என்பதனை முன்கூட்டியே சொல்லவும், சமூகம் ஏற்றுக்கொண்ட வழிகளில் நடக்கவும் இயலும். மற்றொரு வகையில் கூறினால் ஒவ்வொரு தனியவனும் தனிப்பட்டவன். இந் நடத்தை அவனது ஆளுமை யினை நேரடியாகத் தெரிவிப்பது என்றதொரு கருத்து உள்ளது. இவ்விதமாகச் சமூகவயமாதல் பிரச்சினையானது இரு நோக்கங் களைக் கொண்டுள்ளது. அவையாவன:

(a) சமூகத் தரங்களுக்கேற்ற வண்ணம் சமூகம் ஏற்றுக் கொள்ளப்பட்ட வழிகளில் குழந்தை நடக்குமாறு அவனை வளர்ப்பது.

(b) தன்னுடைய ஆளுமையினையும், தனித்தன்மையினையும் குழந்தை அவனே வளர்த்துக்கொள்ளும் வழியில் வளர்ப்பது. நாம் அவன்தன் நடத்தையில், இயந்திரம் போன்றும், பிடிவாத மாயும், ஒருபடிவார்ப்பின்றியும் (stereotyped) இல்லாமல் தன்னிச் சையாக இருக்க வேண்டும் என விரும்புகிறோம். இவ்வாறு குறிப் பாக நன்கு முன்னேறியுள்ள சமூகங்களிலும், நிறுவனங்களிலும் இவ்விரு செயல்களை அடைவதற்காகப் பழக்க வழக்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன என்பதனை நாம் காண்கிறோம்.

வகுப்பற்ற சமுதாயத்தை அமைக்கும் தனது திட்டத்தில் கார்ல் மார்க்ஸ்கூட (Karl Marx) இந் நோக்கத்தைக் கொண்

டிருந்தார். புதியதொரு சமூகத்தினை அமைக்க சில காலத்திற்கு வன்முறை (force) பயன்படுத்தப்பட வேண்டும் என்பதனை அவர் அறிந்திருந்தார். ஆனல், அவர் இத்தகைய சமூகத்தில் வளரும் குழந்தைகள் ஓரிரு தலைமுறைக்குப் பின் புதிய வாழ்க்கை ஒழுங்கோடு இயைந்தும், அதனை உட்கவர்ந்தும் கொள்வதால் அங்குக் காவலாளனின் (police) பயமுறுத்தல், சிறைச்சாலைகள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் ஆகியன இல்லை என்பதனையும் கருதியிருந்தார். ரஷ்யா கம்யூனிச நாடாகி இன்று இரண்டு தலைமுறைக்கு மேலாயினும் இன்னும் காவலன், சிறை இவற்றின் தேவை எவ்விதத்திலும் சோவியத் புரட்சி தொடங்கிய பொழுது இருந்த தேவையைப் போன்றே இருக்கிறது. இன்றுகூட, அமைச்சர்களாகவும், முதல் அமைச்சர்களாகவும் இருந்த சோவியத் கட்சியின் உறுப்பினர்கள் கட்சிக்கு முரண்பட்டு நடந்தால் மாஸ்கோவிற்கு வெகு தொலைவில் உள்ள மாநகரங்களில் சிறிய பதவிகளை வகிக்க அனுப்பப்படுகின்றனர் அல்லது சுட்டுத்தள்ளப்படுகின்றனர்.

நடைமுறை வாழ்வில், தக்கதோர் அளவு இணக்கத்தையும், விலக்கத்தையும் நாம் காண்கிறோம். இந்த விஷயத்தில் இந்தியச் சமூகம் எடுத்துக்காட்டாக நிற்கிறது. மரங்களையும், பாம்புகளையும் வணங்கும் மனிதன், **விஷ்ணு** அல்லது **சிவனை** உருவ வழிபாடு செய்யும் மக்கள் அல்லது **நிர்குண பிரமத்தைத்** தியானிக்கும் மானிட அல்லது வேதத்தின் மேலோ கடவுள் மேலோ நம்பிக்கையற்று **நாத்திகராக** உள்ளோர் ஆகிய அனைவரையும் 'இந்து' என்றே கொள்கிறோம். இதுபோலவே உண்பதில், நாற்காலியில் அமர்ந்து மேசைகளில் பரிமாறப்பட்ட உணவைக் கரண்டிகள், முட்கரண்டிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தி உணவு உட்கொள்ளும், முழுவதும் மேற்கத்திய வழிகளையே கொண்டிருக்கும், ஒரு குடும்பத்தினரையும் தரையில் அமர்ந்து இலைபோட்டுத் தன் கையால் உணவைப் பிசைந்து சாப்பிடும் ஒரு குடுபத்தினரையும் இந்துக்களாகவே நாம் காண்கின்றோம். வேலை, திருமணம் இன்னோரன்ன வேறுபட்ட துறைகளை நாம் சிந்திக்கலாம். இவற்றில் குடுபத்துக்குக் குடும்பம் அல்லது ஒரே குடும்பத்தில் உள்ள தனியவருக்குத் தனியவர் குறிப்பிடத்தக்க மாறுபாடு கொண்டிருத்தலை நாம் காண்கிறோம். இதனல் வெளிநாட்டுப் பார்வையாளர்கள் இந்தியர்களைப்பற்றிக் குறிப்பாக இந்துக்களைப்பற்றிப் பொதுவான அம்சங்களைக் கூறுவதற்கு மிகுந்த சிரமப்படுகின்றனர். பேவர்லீ நிக்கோல்ஸ் (16) (Baverley Nichols) என்பார் ஒரு 'இந்தியனை'க்கூடத் தான் காண முடியவில்லை என்ற தன் மனக் கசப்பை வெளியிடு

கிறார். முகமதியர்களையும், இந்துக்களையும், பஞ்சாபிகளையும் அல்லது வங்காளிகளையும், பிராமணர்களையும் அல்லது சார்மர்களையுமே பார்த்ததாகவும் ஓர் 'இந்தியனை'யும் சந்திக்கவில்லை என்றும் எழுதுகிறார். இவ்விதமாக இந்தியாவில் சமூகவயமாதல் செயன்முறை சமூகக் குழுக்களிடையேயும், தனியவரிடையேயும் மிகுதியான அளவு வேறுபாட்டிற்கு இடமளிக்கின்றது. இஃதிந்திய வாழ்க்கை முறையின் மதிப்பாகவும் அதே சமயத்தில் ஒரு சில வேளையில் குறைபாடாகவும் காணப்படுகின்றது. படைப் பிரிவும், ஒத்த நிலையும் (regimentation and uniformity) அவ்வவற்றின் சிறப்புகளையும், குறைபாடுகளையும் பெற்றிருப்பதைப்போன்று அதே வகையில் மாறுபடும் (diversity) தனக்கென நன்மைகளையும், குறைபாடுகளையும் பெற்றுள்ளது என்பதனை நாம் உணர வேண்டும்.

## சமூகக் கட்டுப்பாடு (Social control)

### குழுத்தரங்களைச் செயற்படுத்தும் பல்வேறு முறைகள் (Various methods of enforcing group norms)

ஒவ்வொரு குழுவிலும், சமூகவயமாதலில் விளையும் தவறுகளைச் சரிப்படுத்த இயங்கும் சமூகக் கட்டுப்பாடுகள் உள்ளன. நியமிக்கப்பட்ட அங்கத்திற்கும், சமூகத் தரத்திற்கும் இணங்கும்படி தனியவனை இந்தக் கட்டுப்பாடுகள் கட்டாயப்படுத்துகின்றன. பெற்றோர்களும், ஆசிரியர்களும், மற்றவரும் பல வழிகளில் குழுவின் வழிகளுக்கு இணங்கும்படி தனியவனுக்கு வேண்டுகோள் விடுக்கின்றனர். அவர்கள் அவனது ஒரு புறம் சாரும் தன்மைக்கும், அவனது தற்பெருமைக்கும், குழுவிற் பெறும் நிலைக்கான விருப்பத்திற்கும் வேண்டுகோள் விடுக்கலாம். அவர்கள், சலுகைகளை எடுத்துக்கொள்வதன் மூலம் அல்லது பிரியமில்லாமல் தனித்து விட்டுவிடுவதன் மூலம் அல்லது தொடர்புகொள்ளாமல் விடுவதன் மூலம் அவனைத் தண்டிக்கலாம். குழுத் தரங்களுக்குத் தனியவனை இணங்கச் செய்ய பல்வேறு வகைப்பட்ட தூண்டுகைகளைப் (incentives) பயன்படுத்தலாம் என்பதை நாம் காணலாம். மேலும், 'மற்றவர்கள் என்ன நினைப்பார்கள், சொல்வார்கள் என்பதற்கான கவலையும்', 'மற்றவர்கள் நமக்கு என்ன நிச்சயமாகச் செய்வார்கள் என்பதற்கான கவலையும்' நம் நடத்தையில் மாற்றங்களைக் கொணரும் சக்திவாய்ந்த பிரதிநிதிகள் போல இயங்குகின்றன. வேறுவகையில் கூறினால், சமூகத் தரங்களை நாம் உட்கவரும் போது, கட்டுப்பாடு நிச்சயம் உள்ளிருந்தே வரு

கிறது. ஆனால், இது வெளியிலிருந்து பெறும் சமூகக் கட்டுப் பாடுகளைவிடக் குறைந்ததொரு சமூக விளைவு அன்று. எடுத்துக் காட்டாகக் குடும்பத்தில் ஒரு சிறுவன் வெகு நேர்மையாக இருக் கலாம். ஆனால், அவன் அண்மையிலுள்ள கூட்டத்தில் (gang) உறுப்பினனாவதன் மூலம் தன்னுடைய சில விருப்பங்களைத் திருப்தி செய்துகொள்கிறான். அவனுடைய நண்பர்கள் அவனைக் கோழை என்று நினைப்பதை விரும்பாத காரணத்தால், இந்தக் கூட்டத்தில் உறுப்பினாகிய அவன், சில உடைமைகளை அழிக்கவும் செய்யலாம். இவ்விதமாக, அச் சிறுவன், இத்த கைய சந்தர்ப்பங்களில் அவனது குடும்பத்தின் சமூகத் தரங் களுக்கும், நண்பர்களின் சமூகத் தரங்களுக்கும் இடையே அவனுள் ஒரு முரண்பாட்டினைப் (conflict) பெற்றிருக்கலாம். (அத்தி யாயம் 20ஐப் பார்க்கவும்).

## குழு மனவுறுதி (Group morale)

ஒரு குறிப்பிட்ட வகையில் தனியவனின் நடத்தையைக் குழு ஒழுக்கம் மாற்றுகின்றது என்பதனை நாம் காண்கிறோம். இது 'குழு மன உறுதி' எனக் குறிக்கப்படுகிறது. குழுவினுக்கு, அதன் உறுப்பினர்கள் கொண்டிருக்கும் மதிப்புப்பற்றிய பொது வான அளவினை 'மனவுறுதி' (morale) குறிக்கிறது. குழுவின் உறுப்பினராக உள்ள அவர்கள் தற்கட்டுப்பாடும், தன்னுறுதி யும், கட்டுப்பாட்டு உணர்வினையும் (sence of discipline) கொண்டிருக்கிறார்கள் என்பதனை இது குறிப்பாக உணர்த்து கிறது. குழுவின் உறுப்பினனாக இருப்பதற்குத் தனியவன் தரும் முக்கியத்துவத்தின் மீதே இது சார்ந்திருக்கிறது. குழுவின் உறுப் புப் பெரிதும் மதிக்கப்படும் பொழுது, குழு தனது தரங்களை அமுல் நடத்த இயலுகிறது. குழுவினனாக இருப்பதற்குத் தனியவன் அதிக மதிப்பினை வைத்திருப்பதால், பிறகு அவன் அக் குழுவின் தேவைகளைத் திருப்தி செய்ய நிச்சயம் கடினமாக உழைப்பான். மாறாக அவன் குழுவின் உறுப்பினனாக இருப்ப தில் அக்கறையில்லாதவனாக இருந்தால், தன்னைக் குழுவின் தரங்களுக்குக் கீழ்ப்படியச் செய்துகொள்ளமாட்டான். 'உறுப் பினர்கள் பொதுவாக ஒருவருக்கொருவர் ஆழ்ந்து ஒன்றி யிருந்தாலும் (identification), குழுவின் செயல்களுக்கு மற்ற எல்லோரும் தங்களுடைய முழுத் திறமையாலும் உதவி யளிக்கின்றனர் என்று ஒவ்வொருவரும் உணர்ந்தாலும், குழுச் செயல்களின் வடிவங்கள் எல்லாம் விரும்பப்படுகின்ற பயன் தரு பவை என்று அங்கு ஒரு பொதுவான உடன்பாடு இருந்தாலும் மட்டுமே மனவுறுதி (morale) மிகுந்திருக்கும். குழு உறுப்பினர்

இடையே கருத்து வேறுபாடு, சச்சரவு இன்ன பிற வடிவங்களில் அவர்களிடையே முரண்பாடு (interpersonal conflict) இருப்பினும், குழுத் தலைவர்களின் நோக்கங்களிலோ திறமை களிலோ அவநம்பிக்கை இருப்பினும், குழுவின் எதிர்காலம்பற்றிய நிலையற்ற தன்மை, குழுத் தரங்களின் உண்மை நிலைபற்றிய ஐயம் ஆகியவை இருப்பினும் உறுப்பினர்களின் ஒன்றுதல் (identification) வலுவற்றும், ஒருவித ஒழுக்கச் சிதைவு தோன்றியும் விடுகின்றன' (17.274). ஒரு குழுவில் ஒழுக்கச் சிதைவு இருக்கும் பொழுது கிளைக் குழுக்கள் தங்களுக்கெனக் கிளைத் தலைவர்களைக் (sub-leaders) கொண்டு சிறு குழுக்களை (cliques) அமைத்துவிடுதலை நாம் காண்கிறோம். அத் தலைவர்கள் தங்களுக்குள்ளும், அங்கம் முழுமைக்கும் எதிர்ப் பைத் தெரிவிப்பவர்களாக நிற்கலாம். இது முழுக் குழுவின் திறமையைக் குறைக்கின்றது. மற்றக் காரணங்களுக்காகச் (other causes) செயற்படும் ஒரு குழுவானது அந் நேரத்தில் மிகுந்த கட்டுப்பாட்டோடும், இணைப்போடும் இருப்பது எளி தாக இயலுகிறது. உலகப் போரின் போது நடந்த ஆய்வுகள் (studies), பயிற்சி முகாமின்போது மிக உயர்ந்த மனவுறுதி யுடையனவாகத் தரப்படுத்தப்பட்ட காலாட்படைப் பிரிவுகள் கூட போர்க்களத்தில் ஒற்றுமை குலைந்து இருந்ததாகக் காட் டின. இவ்விதமாக மனவுறுதி இலக்கினைக் கொண்ட சிக்கலான தொரு நிகழ்ச்சியினை உண்டாக்கியிருக்கிறது.

நல்லதொரு, மனவுறுதிக்குக் கீழ்க்காணும் 5 காரணிகளை இன்றியமையாதனவாகப் பல சமூக உளவியலார் வலியுறுத்தி யுள்ளார்கள்:

குழு அடைவதற்கான ஒரு நேரிடையான குறிக்கோள் (direct goal) இருத்தல், குழு உறுப்பினரிடத்தில் ஒருமித்து நிற்கும் உணர்ச்சி, குழுவுக்கு வரும் அபாயத்தைத் தெரிந்திருத் தல், நிலைமைகளைச் சீர்திருத்தி இலக்குகள் அடைய முடியும் என்ற திட நம்பிக்கை, இறுதியாகக் குழுவின் குறிக்கோளை நோக்கி முன்னேறுவதை அறிந்திருப்பது ஆகியனவாகும் (18). இந்தியாவில் அண்மை ஆண்டுகளில் காந்தி, நேரு போன்ற தலைவர்கள் ஒரு நேரிடையான இலக்கு உண்டு என்பதனைத் தனியவர்கள் உணர்வதன் மூலம், அந் நேரிடையான இலக்காக முன்பு அரசியல் சுதந்திரத்தையும், அண்மை நாளில் சமூகப் பொருளாதாரச் சுதந்திர வளர்ச்சியையும் அமைத்துத் தனியவர் களை, ஏன்? இளைஞர்களையும், குடிமக்களையும்கூட நாடு முழுதும் ஒன்றாக இத்தகைய தகுதிமிக்க குறிக்கோளை அடைவ

தில் முன்னேறுகிறது என்பதனை உணருமாறு செய்து, குழு மனவுறுதியை நிலைநிறுத்த முடிந்தது என்பதனை நாம் காண்கிறோம்.

குழு மனவுறுதியினைப் பாதிக்கும் சில காரணிகளை நாம் இப்பொழுது சுருக்கமாகக் காணலாம். பொதுவாக வெற்றி, குழுவின் மனவுறுதியை முன்னேற்றவும், துன்பம் குறைக்கவும் செய்கிறது என்பதனை நாம் அறிவோம். செழுமையான குடும்பத்தின் உறுப்பினர்கள் சமூகப் பொருளாதார அளவில் குடும்பம் முன்னேறும் போது ஊக்கத்தோடும், நம்பிக்கையோடும் ஒற்றுமையாக உழைப்பார்கள். இதுபோலவே, களிக்குழு (club) வளரும் போது, அதன் உறுப்பினர்கள் மிகுந்த ஊக்கத்தோடு இருப்பார்கள். களத்தில் வெற்றியடைந்துள்ள படையானது அடுத்த காரியத்தில் நுழையும்போது, தோல்வியின் பக்கம் நிற்கும் படையைக் காட்டிலும் மிகுந்த ஆர்வத்தோடு நுழையும் என்பது தெளிவானதோர் உண்மை. ஆனால், மிகுந்த மனவுறுதியும், வெற்றியும் ஒரே ரீதியில் இணைந்தவை என்று நாம் முடிவு செய்யக்கூடாது. மிகுந்த மனவுறுதி (high morale) வெற்றிக்குக் கொண்டு செல்லலாம். ஆனால் வெற்றி மனவுறுதி சிதைவிற்கும்கூட இட்டுச் செல்லலாம். சிறந்த வெற்றியின் காரணமாகத் தனியவன் தன் நிலையை இழப்பது போன்றே ஒரு குடும்பம் அல்லது ஒரு படை மனவுறுதிச் சிதைவுக்கும், அதன் ஆதாரங்களின் சிதைவிற்கும் காரணமாகின்றது. இது போன்றே இன்னல் உள்ள ஒரு குடும்பம், தன்னுடைய சிரமங்களுடன் இணைந்துபோகப் பெருமளவு போராட வேண்டியுள்ளது. ஆங்கிலேயர் டன்கிர்க்கிற்குப் (Dunkirk) பின் வாங்கியபோது, அவர்கள் மனவுறுதி அதிகமாயிற்று. பரந்து நின்ற ஜெர்மானியப் படையைப் பின்னர் அவர்களால் சமாளிக்க முடிந்தது என்பது ஒரு சிறந்த எடுத்துக்காட்டிற்கு உரியதாகும். இதுபோலவே ஸ்டாலின்கிராடில் (Stalingrad) இருந்த ரஷ்யர்கள் பரந்த ஜெர்மானியப் படைகளுக்கெதிராகப் போராடியது மட்டுமல்லாமல், இறுதியாக ஸ்டாலின்கிராடைமட்டுமன்றி ரஷ்யாவையும்கூடச் ஜெர்மன் கைப்பற்றுதலினின்று காத்தனர். ஒரு சிறிய படை மிகப் பெரிய படையை முறியடித்த இத்தகைய நிகழ்ச்சிகளை இந்திய வரலாறு நிறையப் பெற்றுள்ளது. இவ்வாறாக, வெற்றி அல்லாத பிற காரணிகளும் குழு மனவுறுதியை நிருணயிப்பதில் இடம் பெற்றுள்ளன. இக் காரணிகளுள் குழுவின் பரம்பரை வழக்கங்களும், அதன் தலைவரின் நடத்தையும் மிக முக்கியமானவை. துன்பத்தில் (in the face of adversity), நீண்ட பழமை

யோடும், சிறந்த பரம்பரை வழக்கங்களோடும் உள்ள குழு வானது மிகுந்த மனவுறுதியைப் பாதுகாக்கும். இதற்குக் காரணம் அக் குழுவின் உறுப்பினர்கள் சமூகவயப்படுத்தப்பட்டும், குழுவின் உயரிய பரம்பரை வழக்கங்களை மதிக்கக் கற்பிக்கப் பட்டும் இருந்ததினால் ஆகும். மாறாக, புதிதாகத் தோன்றிய குழு துன்பவயப்படும்போது எளிதாக ஒழுக்கச் சிதைவினை அடையலாம். சமூகவயமற்ற நிலை இதற்கு ஒரு காரணியாகும். ஒரு புதிய களிக் குழுவிலோ (club), வியாபாரத்திலோ, இராணுவத்திலோ புதிதாக நுழையும் ஓர் உறுப்பினன், அக் குழு வெற்றியின்பால் இருக்கும் வரை மிகுந்த மனவுறுதியினைக் கொண்டிருக்கலாம். ஆனால், அதே குழு துன்பவயப்படும்போது மிகுந்த ஒழுக்கச் சிதைவிற்கு ஆளாகலாம். இதன் காரணமாகக் குழுவோடு ஒன்றுவதற்கு நீண்ட காலச் சமூகவயமாதல் மிகவும் அவசியமாகிறது. இதன் பின்னர்தான், தனியவன் குழுத் தரங்களோடு ஒட்டிச் செல்லவும், குழுவின் விருப்பங்களுக்காகத் தன்னைத் தியாகம் செய்யவும் தயாராகிறான். இதற்கு மாறாக, ஒரு புதிய குழுவில் அல்லது நிறுவனத்தில் நுழையும் ஒரு மனிதன் தன் சொந்தப் பயனையும், உடனடி நன்மைகளையும் கருதியே தன் உறுப்பினர் பதவியை மதிப்பிடுகிறான். இவ்வாறு கத் தன் தொழிற்பயிற்சிக் (apprenticeship) காலம் இரு வழிகளில் பயனளிக்கின்றது. இது தனியவன் நுண்முறைகளைக் கற்பதற்குச் சாத்தியத்தை அளிக்கிறது. ஆனால் இதனினும் முக்கியமானது குழுக் குறிக்கோளுடனும், வழிகளுடனும் தனியவன் தன்னை ஒன்றியமைத்துக்கொள்ளச் சாத்தியமளிக்கிறது. இதனை முன்னாள் இந்தியச் சிந்தனையாளர்கள் சம்பிரதாயம் (sampradaya) என்று அழைத்தார்கள்.

குழு மனவுறுதியைப் பாதிப்பதில், தலைமையும்கூட (leadership) பெருமளவில் மதிப்பிடப்படுகின்றதுது. நீண்டதொரு பரம்பரையினைப் பெற்றுள்ள குழுக்களில் தலைமை, புதிதான குழுக்களைப் போன்று முக்கியமாக மதிக்கப்பெறாமல் அமையலாம். வெற்றியிலும், தோல்வியிலும் குழு மனவுறுதியை நிலைநிறுத்த தலைவன் சிறப்பானதொரு பங்கு வகிக்க வேண்டியவனாக உள்ளான். நாம் மேலே பார்த்தது போன்று, குழு வெற்றியின்போதும், தோல்வியின் போதும் ஒழுக்கச் சிதைவு நிகழலாம். ஒழுக்கச் சிதைவினைத் தடுப்பதில் பரம்பரையைப் போன்றதொரு முக்கியமான பங்கினைத் தலைவன் வகிக்கிறான். குழு உறுப்பினர் முயற்சிகளின் வெளிப்பாட்டால், அவர்களிடத்தில் அவன் நம்பிக்கையை ஊட்டலாம்.

மிகுந்த மனவுறுதியோடு கூடிய ஒரு குழுவின் செயல்களில் பங்கு பெறுதலானது, குழுவின் உறுப்பினர்களைத் தூண்டவும், திருப்திப்படுத்தவும் செய்கிறது. இதற்கு மாறாக, ஒழுக்கச் சிதைவை உடைய ஒரு குழுவின் செயல்களில் பங்குபெறுதலானது, அதைரியப்படுத்தவும், பயப்படுத்தவும் செய்கிறது. தனியவர்கள் தங்களது முழு முயற்சியுடன் ஈடுபடவும், விருப்போடும், ஊக்கத்தோடும் குழுத் தரங்களுக்கு இணங்கவும் செய்வர். அவர்கள் குழுக் கட்டுப்பாடுகளுக்குத் துலங்கவும், குழு உறுப்பின் தேவைகளுக்குத் தங்கள் நலங்களைக் கீழடக்கவும் செய்வர். ஆனால், குழுவில் ஒழுக்கச் சிதைவு இருந்தால் பெரும்பாலான உறுப்பினர்கள் அதிகாரத்திற்கெதிராகவும், தலைவர்களுக்கெதிராகவும் கலகம் விளைக்க முனைவர். அச் சமயத்தில் அவர்கள் குழுத் தரங்களை மீறி குழு நலங்களுக்கு மேலாகத் தங்கள் சொந்த நலங்களை முதன்மையாகக் கருதுகின்றனர். இவ்விதமாகச் சமூகக் கட்டுப்பாடுகளின் முக்கியத்துவம், குழுத் தரங்களின் தன்மையைச் சார்ந்ததுமட்டுமல்லாமல், குழு மனவுறுதியின் நிலையையும் சார்ந்துள்ளது என்பதனை நாம் காண்கிறோம்.

## முறையற்ற சமூகக் கட்டுப்பாட்டின் தன்மை
## (The character of informal social control)

முதனிலைக் குழுவில் (primary group) இசைவினை (harmony) நிலை நிறுத்த ஒவ்வொரு தனியவனின் நடத்தையையும் மிகுந்த உறுதியோடு கட்டுப்படுத்த வேண்டியது அவசியமான ஒன்றாகும். அத்தகைய கட்டுப்பாடு முறைகளை அனுசரியாமலும் (informal), விநயமாகவும் அமைய வேண்டும். இதற்கு மாறாக இது மிகவும் முறையற்று அமைந்தாலும், அங்கு ஒரு சிறிதும் கட்டாயமில்லாவிட்டாலும் முதனிலைக் குழு இறுதியாக உடைந்துவிடும் என்பதே இயன்றதொன்றாகும். 'முதனிலை உறவுகளை ஆளும் இந்த முறையற்ற சமூகக் கட்டுப்பாடு, மற்றவர்கள் எதிர்பார்ப்பவை என்று அவன் எதை நம்புகிறானோ, அவற்றிற்கு ஏற்ப அவன் தன் நடத்தையை அமைக்கும் ஒவ்வோர் உறுப்பினனின் கவனமான தற்கட்டுப்பாட்டின் அடிப்படையின்மேல் அல்லாமல், இவற்றைவிட அவன் தவறுகளை முன்னரே கண்டு கொள்ளவும், அவற்றை விலக்கவும் சுறுசுறுப்பான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்பதன் மேலும் இயங்குகிறது.........' (19.266).

முதனிலைக் குழுவின் இறுதியான தண்டனை விலக்கி வைத்தல் ஆகும். ஆனால், மிக முன்னரே ஓர் உறுப்பினனை மற்ற உறுப்பி

னர்கள் விலக்கி வைத்திருந்தால், அதனுல் முதனிலைக் குழுவே அழிந்துபடலாம். மிகப் பெரிய நிகழ்ச்சிகளில், முதனிலைக் குழுவினின்று செய்யப்படும் இத்தகைய விலக்கமானது தனியவனின் வாழ்க்கையில் இணைப்புச் சிதைவிற்கும் (disorganization), உளச் சிதைவிற்கும் (mental breakdown) கொண்டு செல்லலாம். இதன் விளைவாக அத் தனியவன் தற்கொலைகூட செய்துகொள்ளலாம். முறையற்ற சமூகக் கட்டுப்பாடு மற்றுமொரு வழியில் உறுப்பினர்களின் பங்கின் மேலான தவறுகளைத் தண்டிக்கலாம், அவ்வழி குற்றவாளியுடன் கூடிய உறவில் நெருக்கத்தைக் குறைப்பதன் மூலம் உள்ளது. நெருங்கிய உறவுகள் விலக்கப்பட்டு, உறவுகள் மிகவும் முறையோடு அமையலாம். முறையற்ற சமூகக் கட்டுப்பாட்டின் மற்றுமொரு வழி கேலி செய்வது ஆகும். ஆனுல், இவையெல்லாவற்றையும்விட மிக நுண்ணியவை, புருவங்களை மேலேற்றுதல், குரலின் தன்மையில் குளுமை, இன்ன பிற போன்ற உடன்படாமையின் (disapproval) சைகைகளாகும். இவை உண்மையில் வரப்போகும் பெரிய தண்டனைகளின் முன் எச்சரிக்கைகளாகும்.

சாதுரியம் (tact), சமூக நுண்ணறிவு (social intelligence), சமூகத் திறமை (social skill) போன்ற பல்வேறு கலைச் சொற்கள் இத்தகைய முறையற்ற சமூகக் கட்டுப்பாடுகளுக்குத் தனியவன் எதிர்வினை தருகின்ற வழியினைக் காட்டுவதற்குப் பயன்படுகின்றன. இத்தகைய முறையற்ற சமூகக் கட்டுப்பாடுகளை அறியாத குருட்டுத் தன்மையை ஒரு மனிதன் பெற்றிருக்கலாம் என்பது இயலுகின்ற ஒன்றேயாகும். மேலும், அவன் பெரிய துன்பத்தில் சிக்கிக்கொண்டிருக்கலாம். சமூகத் திறமையுடன் அல்லது சமூக நுண்ணறிவுடன் இருக்கும் மனிதன் மற்றத் தனியவர்களுடைய எதிர்வினைகளை உணர்ந்துகொள்பவனுகவும், அவர்தம் சைகைகளைப் புரிந்துகொண்டு அவற்றிற்கேற்ப முதனிலைக் குழுவில் தன் நடத்தையினை மாற்றி அமைப்பவனுகவும் இருக்கிறுன். நடைமுறையில் தண்டனைகளை அனுபவிப்பதன் மூலம் அவன் தவறுகளை நிச்சயம் தவிர்க்க வேண்டும் என்பது அவசியமானதொன்றல்ல. சரியான எதிர்பார்ப்புகள் மூலம் அவன்தன் நடத்தையை மாற்றி அமைத்துக்கொள்ளலாம். அவனுடைய சொந்தப் பிழைகளும், மற்றவரிடத்து அவன் காணும் தவறுகளும், அவர்கள் அனுபவிக்கும் தண்டனைகளும் அவனுடைய எதிர்பார்ப்புக்கு அடிப்படையாக அமையலாம். இத்தகைய எதிர்பார்ப்புகளின் காரணமாகவே தனியவன் தவறுகளைத் தவிர்க்கிறுன். நன்கு மக்களிடத்தில் அறிமுகமாகிறுன். 'பலன்களை அடையும் மனிதனுலேயே தொடர்ந்தறிய முடியாத அல்லது

தூண்ட முடியாத பல பெரிய வழிகளில் சமூகத் திறமைகள் பயன்பெறுகின்றன என்பது சாத்தியமானதொன்றேயாகும். எதிரிடையாக அசடானதொரு மனிதன், தன் சமூகத் தவறு களுக்குத் தான் அளிக்கும் தண்டனைகளின் தூரத்தையும், பரப் பையும் என்றும் அறிய முடியாது' (19.268).

நாம் முன்னரே கண்டது போல், சமூகத் திறமைகளை அடை தற்குரிய ஒரு சக்திவாய்ந்த வழி, அங்கமேற்றலாகிய (role-taking) செயன்முறைமூலம்—அடுத்தவரின் பங்கினை ஏற்றுக் கொள்வது. மேலும், நாம் புகழும் மனிதரை மிஞ்சப் போட்டி யிடுவதன் மூலம் கிட்டும் சில உதாரணங்களை மேற்கொண்டு நடப்பதன் மூலம் நாம் சமூகத் தவறுகளை விலக்கலாம். இலட்சிய மனிதர்களைப் (ideal men) போன்று நடப்பதாகிய வழியினை மேற்கொள்ளலாம். இந்தியாவில் இராமாயணம், மகாபாரதம் போன்ற காவியங்கள் எழுத்தறியாக் கிராமவாசிக்கும், மிகச் சிறந்த கல்விமானுக்கும் பூரணத்துவத்தின் உதாரணங்களை (models of perfection) அளித்திருக்கின்றன. **கீதையில் ஸ்திதப் பிரக்னம்** (Sthithapragna) என்னும் இலட்சிய மனிதனின் விவரிப்பிற்கு நம் கவனம் ஈர்க்கப்படலாம் (12. II 54-72). ஹேவிகஸ்டும், டாபாவும் (Havighurst and Taba) 'நான் இருக்க விரும்பும் மனிதன்' என்பதுபற்றிய கட்டுரை ஒன்று இளையோரை எழுதும்படி கேட்ட பொழுது, அவர்கள் பல மக்களின் சிறப்பியல்புகளையும் சேர்த்த 'இலட்சிய அகத்தின்' (ideal self) கலவையான படத்தினைக் கொடுத்தார்கள்' எனக் காட்டியுள்ளார்கள்' (20.80).

ஒரு நிலையான சமூகத்தில் பயமுறுத்துதல் அல்லது கேலி செய்தல் அல்லது புருவங்களை மேலேற்றுதல் போன்ற முறை யற்ற சமூகக் கட்டுப்பாட்டின் நுண் முறைகள், உடல் ஆற்றலை விட மிகவும் பெரியவையாக அமையலாம். குழுத் தரங்களுக்கு இணங்குதல் மூலம் ஒரு மனிதன் மிகக் குறைந்த மன முறிவுக ளுடன் தன் வாழ்க்கையில் நடந்து செல்கிறான். சமூகம் சிறிய தாகவும், தனித்தும், ஒருபடித்தானதாகவும் உள்ள நம் கிராமங் களில், முறையற்ற சமூகக் கட்டுப்பாடு மிகுந்த சக்தி வாய்ந்ததாக உள்ளது என்பது நன்றாகத் தெரிந்த உண்மையாகும். சட்டங்கள், காவலாளன், இன்னபிற போன்ற சமூகக் கட்டுப்பாட்டின் முறை யான நுட்பங்கள் அங்குத் தேவையில்லை. அங்கு முறையற்ற சமூகக் கட்டுப்பாட்டின் நுட்பங்கள் இருந்தாலும், அவை முறை யாகத் தன்வயமாக்கப்படாமலும், உட்கவரப்படாமலும் இருந் தால், அவை சக்தி வாய்ந்தவையாக இருக்கமாட்டா.

சமூகத் தரங்களாகத் தன்வயமாக்கப்படாத சட்டம் சக்தி யற்றதாக இருக்கும். இதன் எடுத்துக்காட்டுக்கு நாம் இந்தியா வின் பல மாகாணங்களில் மதுவிலக்குத் தோல்வியான நிகழ்ச் சியை எடுத்துக்கொள்ளாலம். மது அருந்துவதைக் கட்டுப் படுத்தும் சட்டம் உள்ளது. மதுவிலக்கு அமுலில் இருந்தாலும், மக்கள் தொடர்ந்து சட்டத்தை மீறிக் கொண்டேயிருக்கிறார்கள். இஃது ஏனென்றால், முறையான சட்டம், முறையற்ற சமூகக் கட்டுப்பாடுகளினால் ஆதரவளிக்கப்படாமையாலேயேயாகும். வீட்டில் பெற்றோரும், பள்ளியில் ஆசிரியரும், சமூகத்தில் தலைவர் களும் குடியின் தீமைகளை நிந்திக்காமலும், முறையற்ற சமூகக் கட்டுப்பாட்டைப் பயன்படுத்தாமலும் இருக்கும் வரை, மது விலக்கு வெற்றிகாண முடியாது. அலுவலகத்திலும், தொழிற் சாலையிலும், இராணுவத்திலும் இன்ன பிற கழகங்களிலும், உறுப் பினர்களைக் கொண்ட குழுக்களின் முறையற்ற மதிப்புகளின் மூலம் முறையான விதிகள் முறிவு கொள்ளலாம் என்பதனைக் காட்டுவதற்குக் கணக்கற்ற நிகழ்ச்சிகள் உள்ளன. முறையான விதிகளை மீறுவதற்கு ஒப்புக்கொண்டதைக் காட்டும் வழியில், தனியவர்களைக் கொண்ட குழுக்கள் நடக்கும் பொழுது, பிறகு முறையான விதிகள் அறுதியாக எவ்விதப் பயனையும் தருவதற்கு முடியாது. இதன் காரணமாக, முறையற்ற முதனிலைக் குழுக் களின் சமூகத் தரங்களில் சட்டங்களை இணைக்காமல் வெறுமனே அவற்றைச் சட்டப் புத்தகத்தில் வைத்திருப்பதன் மூலம் மட்டும் எந்த ஒரு சமூகமும் திருப்திகொண்டு அமைதியாயிருக்க முடியாது.

## அடிப்படை ஆளுமைக் கோலம்
(Basic personality pattern)

### மனிதத்தன்மை (human nature) எனும் சொல் தவறான வழி காட்டுகிறது

சமூக நடத்தையினை அறிந்துகொள்வதற்கு 'மனிதத் தன்மை' (21) எனும் சொல் உதவியளிக்காது என்பதனை அண்மைக் காலத் திய மனிதவியல் ஆய்வுகள் (anthropological investigations) காட்டியுள்ளன. 'மனிதத் தன்மை'யெனும் சொல் இயற்கை யான சில இருந்து அஃதாவது உயிரியல் சார்ந்த சில, நம்மைத் தனிப்பட்ட வழிகளில் நடக்குமாறு செய்கின்றன என்பதனைக் குறிப்பாகக் காட்டுகிறது. மானிடர் உயிரியல் சார்ந்தவர் என்பது உண்மையே. அவர்கள் குழுக்களில் ஒன்றாக வாழவும், உண்ணவும், சந்ததியைப் பெருக்கவும், இறுதியாக இறக்கவும் செய்கின்றனர். இவ்வண்ணமே மிருகங்களும் செய்கின்றன.

இதன் காரணமாக, இச் சொல் ஒரு வகையில் மனிதர் விலங்குகளிடை உள்ள வேறுபாடுகளை அறிந்துகொள்ளவும், அடுத்த வகையில் மானிடரின் பல்வேறு குழுக்களிடையிலுள்ள வேறுபாடுகளை அறிந்துகொள்ளவும் நமக்குச் சாத்தியமளிக்கவில்லை. சில குறிப்பிட்ட மக்கள் குழுக்கள் கொடுமையும், போர்த் தோற்றத்தையும் பெற்றிருக்கும் அதே வேளையில், மற்றக் குழுக்கள் அன்பாகவும், ஒற்றுமையாகவும் இருப்பதை நாம் நினைவிற்கொண்டுள்ளோம் (அத்தியாயம் 14 பார்க்க). மனிதக் குழுக்களிடையே உள்ள இத்தகைய வேறுபாடுகள் உயிரியல் சார்ந்ததான சிலவற்றால் என்று மேலும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும். நீண்ட காலத்துக்கு முன்பு மிகச் சிறந்த உயிரியலாராகிய டார்வின் (Darwin) மிருகங்களை வளர்ப்போன், தேர்ந்தெடுத்த வளர்ப்பின் (selective breeding) செயன்முறைகளின் மூலம் குதிரைகள், நாய்கள், கோழிகள் ஆகியவற்றின் வேறுபட்ட வகைகளை அதிகமாக்குகிறான் என்பதனைக் காட்டினார். இது போலவே, மிக்க போஷாக்கு அளிக்கும் ஊட்டமும், வளமும் உடைய வேறுபட்ட பழங்களை உற்பத்தி செய்கிறான். பல்வேறு குழுக்களிடையேயுள்ள சமூக நடத்தையின் வேறுபாடுகளைப்பற்றி இதனையே நாம் கூற முடியாது. ஏனென்றால், அவ் வேறுபாடுகள் 'தேர்ந்தெடுத்த வளர்ப்பின்' விளைவுகள் அல்ல. குழுவின் சமூகத் தரங்களுக்கு இணையாத நடத்தைச் சிறப்பியல்களோடு கூடிய தனியவர்களை உண்டுபண்ணுவதைத் தடை செய்தல் அல்லது இறந்துபடச் செய்தல் என்பதில் எந்த ஒரு சமூகமும் ஈடுபடுவதில்லை. மாறாக, ஒவ்வொரு சமூகமும் என்ன செய்கிறது என்றால் அக் குழுவில் பிறந்த குழந்தைகளைக் குழுத் தரங்களோடுகூட ஒத்த வழிகளில் நடப்பதற்கு உருவாக்குகிறது. நாம் மேலே பார்த்தது போன்ற இத்தகைய குழுத் தரங்கள் தனியவர்களில் உட்கவரப்பட்டு அவர்களின் செயலில் அவை இயற்கையாக வருகின்றன.

### தனியவர்கள் ஒருவருக்கொருவர் வேறுபடுகின்றனர் (Individuals differ from one another)

இது மனிதவியலார்களின் ஆய்வுகளின் மூலம் தெளிவாக உறுதி செய்யப்பட்டுள்ளது (5). சமூகத் தரங்கள் மட்டுமல்லாமல் அவற்றால் ஊக்குவிக்கப்பட்ட குழந்தை வளர்ப்பு முறைகளும் ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமிட்ட வகைகளுக்கு இட்டுச் செல்கின்றன என்பதனை அவர்கள் காட்டியுள்ளார்கள். கார்டினரும் (Kardiner) (22) மற்றவரும் இத்தகைய வேறுபாடுகளைக் குறிப்பதற்காக 'அடிப்படை ஆளுமை வகை' (basic

personality pattern) அல்லது 'அடிப்படை ஆளுமை இனம்' (basic personality type) என்ற தொடரைப் பயன் படுத்தியுள்ளனர். எல்லாச் சமூகக் குழுவின் ஆளுமைச் சிறப் பியல்புகளும் பல வழிகளில் வேறானவை என்ற உண்மையினை இச் சொல் காட்டுகிறது. தனியவர்கள் ஒருவருக்கொருவர் வேறுபட்டுள்ளார்கள் என்ற உண்மையையும் இது காட்டுகின் றது. இவற்றில் சில வேறுபாடுகள் தோற்றத்தில், தனியவனை யும் மற்றும் சில சமூகத்தையும் கொண்டுள்ளன. எந்தக் குழுவிலும் தனியவர்களிடத்து வேற்றுமைகளைக் காண்பது போன்றே, இதன் காரணமாக, நாம் குழுவிற்குக் குழு வேற் றுமைகளைக் காண்கிறோம். சமூக உளவியல் மாணவராய நாம், சமூக நடத்தையிலுள்ள தனியாள் வேற்றுமைகளுக்கான காரண மாய் அமையும் நிலைகளையும், குழு வேற்றுமைகளையும் அறிந்து கொள்ள வேண்டும். ஒரு கொடுக்கப்பட்ட குழுவில் உள்ள வேறுபட்ட குடும்பங்களிடையே வளர்ப்பு முறைகளில் சில குறிப்பிட்ட பொதுவான விசேட அம்சங்கள் உள்ளன. நாம் குழு வேறுபாடுகளைப் பெறுவதற்கு இதுவே காரணம். அவை நற்சமூகத் தரங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளன. இங்கு நாம் இந்தியச் சமூகத்திலிருந்து ஓர் எடுத்துக்காட்டினைப் பார்க்க லாம். ஒரே சாதி அல்லது கிளைச் சாதியைச் சேர்ந்த தனிய வர்கள் திருமணம் செய்யலாம் என்பது உண்மையாக இருக்கும் போது, ஒரே சாதியைச் சேர்ந்த தனியவர்கள் வேறுபட்ட மொழிக் குழுக்களைச் சேர்ந்தவராயின் திருமணம் கூடாது என்ப தும்கூட உண்மையாக உள்ளது. இந்தியச் சமூகத்தில் சாதி எளிய உருவத்தில் இயங்குகிறது என்று சொல்வது உண்மைக்குப் புறம்பானதாகும். வேறுபட்ட மொழிவாரியான பரப்புகளில் (areas) வேறுபட்ட சாதிக் குழுக்கள் வேறுபட்ட சமூகத் தரங் களைக் கொண்டுள்ளன. இதன் காரணமாக, ஒரே மொழி வாரியான பரப்பிற்குள் திருமணம் புரியும் வழக்கம், இரு மொழி மண்டலங்களைத் தவிர மிகுந்த உறுதியுள்ளதாக மாறிவிட்டுள் ளது. மாறுபட்ட சாதிக் குழுக்கள், மாறுபட்ட மொழிக் குழுக்கள் இவற்றிடையே சமூகத் தரங்கள் மேலும் மேலும் ஒரு முகமாகும் போது, திருமணம்பற்றிய நிபந்தனைகள் பிடிவாதம் குறைந்து அமையலாம். உண்மையில் மதம் மாறலின் அடிப் படையில் அமைந்துள்ள நம்பிக்கைகளுள் ஒன்று ஒரே சமயத் தின் உறுப்பினர்களாக மனிதக் குழுக்களை ஆக்குவதன் மூலம், அவற்றை ஒன்றாக்க முடியும் என்பதேயாகும். ஆனால், முகமதி யத்தின் வரலாறும், கிருத்துவத்தின் வரலாறும், இஃது ஒரு கற்பனை என்பதனைத் தெளிவாகக் காட்டுகின்றது. இருப்பினும் கூட நிச்சயம் வேறுபடும் அநேகச் சமூகத் தரங்கள் அங்கு உள்ளன.

இதன் காரணமாக நாட்டில் உள்ள எல்லா வேறுபட்ட குழுக்கள் அல்லது உலகம் முழுமையும் உள்ள குழுக்கள் ஏதாவது ஒரு காலத்தில் முழுதும் ஒத்த சமூகக் காரணிகளை நிச்சயம்கொள்ளும் என்று கற்பனை செய்வது பயனற்ற ஒன்றாகும். மேலும், இது விரும்பத்தக்கதொன்றும் அன்று. மாற்றத்தின் மூலமாக அல்லாமல் பலாத்காரத்தின் மூலமாகக் கம்யூனிசம் அதனையே செய்ய முயலுகின்றது. ஆனால், கம்யூனிசம்கூட இன்று வெவ்வேறு நாடுகள் வெவ்வேறுவிதமான கம்யூனிசத்தின் தங்களுக்கான மாதிரிகளைக் (brand) கொண்டிருத்தலை உணர்ந்து கொண்டுள்ளது. ரஷ்யா, தன்னைப் போன்று ஒரே மாதிரியான கம்யூனிசக் கொள்கைகளை வெவ்வேறு கம்யூனிச நாடுகளில் பெறும் முயற்சியில் வெற்றி காண முடியவில்லை. பழங்காலத்திலேயே இந்தியச் சிந்தனையாளர்கள் இத்தகைய கனவுகளின் இயலாத் தன்மையினை உணர்ந்திருந்தார்கள். அதனால்தான் இந்தியக் கலாச்சாரத்தின் அடிப்படை விசேட அம்சங்களில் ஒன்றான, குழுவிற்குக் குழு உள்ள வேற்றுமைகள், அடிப்படைகளைப் போன்றும், விரோதத்தையும், ஒருவருக்கொருவர் நிர்மூலமாக்குதலையும் இயக்கும் ஊக்குச் சக்திகளைப் போன்றும் எண்ணுதற்கு நம்மை இட்டுச் செல்லக் கூடாது.

## சமூகவயமாதல் ஒற்றுமைகளுக்கும் வேற்றுமைகளுக்கும் இட்டுச் செல்கிறது (Socialization leads to resemblances and differences)

ஆளுமையின் (personality) தனித் தன்மைக்குக் குழுவில் உள்ள தனியாள் வேறுபாடுகள் (individual differences) பொறுப்பாகின்றன. ஒரே வீட்டில் வளர்க்கப்பட்ட உறுப்பினர்களிடையேகூட உயிரியல் சார்ந்த அடிப்படையை உடைய ஒற்றுமைகளும் வேற்றுமைகளும், சமூகவயமாதலின் மேல் அடிப்படை பெற்றுள்ள ஒற்றுமைகளும், வேற்றுமைகளும் இடம் பெற்றுள்ளதை நாம் காண்கின்றோம். மனிதனின் தனித்தன்மை, இத்தகைய வேறுபட்ட உயிரியல் சார்ந்ததும், உளவியல் சார்ந்ததுமான வேற்றுமைகளின் ஒரு விளைவாகும். ஒரே குழுவில் உள்ள தனியவர்களின் நடத்தையில் உள்ள ஒற்றுமைகளையும், குழுக்களிடையே உள்ள வேற்றுமைகளையும் அறிந்துகொள்ள நமக்கு இந்தச் சமூகவயமாதல் கருத்து உதவுகிறது. குழுவினுள்ளும், குழுக்களிடையேயும் உள்ள இத்தகைய வேற்றுமைகளை அறிந்துகொள்ளுதலாகிய ஒன்று சமூக இசைவை அமைப்பதில் நீண்ட வழி நிச்சயம் செல்லும்.

# மேற்கோள் நூற்பட்டியல்

1. ASCH, — *Social Psychology.*
Prentice-Hall, 1952.

2. KOHLER, — *The Mentality of Apes.*
Pelican, 1957.

3. SHERIF and SHERIF, — *Outlines of Social Psychology.*
Harper, 1956.

4. KELLOG and KELLOG, — *The Ape and the Child.*
McGraw-Hill, 1933.

5. MARGARET MEAD, — *Sex and Temperament in Three Premitive Societies.*
Routledge, 1935.

6. ITARD, — *The Wild Boy of Aveyron.*
Century, 1932.

7. EISENBERG, — *Why We Act as We Do.*
The World's Work, 1950.

8. SINGH and ZINGG. — *Wolf-Children and Feral Man.*
Harper, 1942.

9. ARNOLD GESELL, — *Wolf-Child and Human Child.*
Methuen, 1941.

10. MAHABHARATHA,
Shantiparva, Ch. 14.

11. PRABHU, — *Hindu Social Organization.*
Popular Book Depot,
Bombay, 1954.

12. RADHAKRISHNAN, — *Bhagavadgita.*
Allen & Unwin, 1948.

13. MAHADEVAN, Chetana, 1956. — *Outlines of Hinduism.*

14. KATHOPANISHAD, Ch. 11, 1-2. —

15. GANDHI, Navjivan, 1955. — *Ashram Observances in Action.*

16. BEVERLEY NICHOLS, — *Verdict on India.*

17. LAPIERE and FARNSWORTH, Mc Graw-Hill, 1949. — *Social Psychology.*

18. WATSON, Houghton Mifflin, 1942. — *Civilian Morale.*

19. FARIS, Ronald, 1952. — *Social Psychology.*

20. HAVIGHURST and TABA, Wiley, 1949. — *Adolescent Character and Personality.*

21. COOLEY, Scribner 1902. — *Human Nature and Social Order.*

22. KARDINER ET AL, Columbia University Press, 1945. — *The Psychological Frontiers of Society.*

23. DUBE, Routledge and Kegan Paul, 1959. — *Indian Village.*

# 10. சமூக ஊக்குவிப்பும் தூண்டு விசைகளும்

## SOCIAL MOTIVATION AND SOCIAL INCENTIVES

### மனித நடத்தை என்பது உயிர்த் தோற்றமும் சமூகத் தோற்றமும்

### (Human behaviour is biogenic and sociogenic)

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் புறவய, அகவய தூண்டல் காரணிகள் சேர்ந்து இயங்குவதால் நுகர்வறிவும் நடத்தையும் அமைகிறதென்பது இப்போது பொதுவாக ஏற்றுக்கொள்ளப் படும் உண்மையாகும். நடத்தை என்பது குறிக்கோளை நோக்கி ஊக்குவிக்கப்படுவது என்றும் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படு கிறது. இவை உயிரிகளின் திசுவின் தேவைகளைச் சார்ந்த உயிரித் தோற்ற ஊக்கிகளாகும். இதன் காரணமாக இந்த ஊக்கிகள் மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் பொதுவானவை யாகும். ஆகவே, சமூகவய நிலைச் செயன்முறை ஊக்குவித்த லின் செயன்முறையைச் சார்ந்ததாகும். குழந்தைகளுக்குக் காப்பான பெற்றோர்களும் மற்றவர்களும் தெரிந்தோ தெரியாமலோ ஊக்கிகளின் அடிப்படையில் சமூகவயநிலைச் செயன் முறையினை அமைக்கின்றனர். இதனால், சமூக உளவியலுக்குத் தொடர்புடைய இந்த ஊக்குவித்தலின் பிரச்சினைகளைப்பற்றிய படிப்பு நமக்கு இன்றியமையாதது ஆகும்.

இங்கு 'இயல்பூக்கங்களின்' பிரச்சினைபற்றிய கருத்து மாறு பாட்டுக்குச் சில எடுத்துக்காட்டுகளைக் கூறலாம். டிராட்டர், (Trotter) (1) போன்ற சிந்தனையாளர்கள் மந்தை இயல் பூக்கம் (herd instinct) என்பது ஒரு முக்கியமான சமூக இயல்பூக்கம் என்றும் அதன் அடிப்படையிலேயே சமூக வாழ்க்கை அமைகின்றது என்றும் நம்புகிறார். மெக்டூகல் (2) என்பார் சமூக வாழ்க்கை மந்தை இயல்பூக்கத்தினால் மட்டுமன்றி மேலும் மற்ற இயல்பூக்கங்களாகிய தாய்மை இயல்பூக்கம், தன் உரி மையை வற்புறுத்தல், தற்பணிவு, கவர்ச்சி, பால் ஆகிய பல இயல்பூக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டது என்று

கூறுகின்ருர். கடந்த 50 ஆண்டுகளாக 'இயல்பூக்கம்' என்ற கலைச் சொல்லானது வழக்கத்தில் இல்லை. ஏனெனில், மனித நடத்தையில் பயிற்றுவித்தல் ஒரு புறமும் பொறுத்தப்பாடு மறுபுறமும் இருப்பதே இதற்குக் காரணமாகும். இதனுல். நடத்தையின் எந்தச் செயலும் ஒரு குறிப்பிட்ட தூண்டல் நிலைமைக்கு ஒரு சிக்கலுடைய உடலியல் துலங்கல் வகையில் இயல்பூக்கத்தன்மை உடையதாகக் கருதப்படவில்லை. எதிர்வினையின் தன்மை தூண்டுதல் குணங்களைச் சார்ந்ததா என்ற மாறுபட்ட நோக்கமும் சமூக நிகழ்ச்சிகளைப் புரிந்துகொள்ள உதவுவதில்லை. ஆதலால், இதுவும் மறுக்கப்படுகின்றது. நடத்தை அகவய, புறவயக் காரணிகளின் அடிப்படையில் அமைந்தது என்பது இப்போது அறியப்பட்டது. இந் நடத்தையானது உயிரியற் காரணிகளையும் சமூகச் செல்வாக்குகளையும் உள்ளடக்கியதாகும். உயிரிகளின் நடத்தையில் அடிப்படை, திசுவின் தேவைகள் முக்கியமான பங்கு வகிக்கின்றதென்பது இப்போது அறியப்பட்டது. நடத்தையின் அடிப்படையான இத்தகைய அகவய உடலியற் காரணிகளை விவரிப்பதற்காகத் தேவைகள், ஆர்வங்கள், ஊக்கிகள் ஆகிய கலைச் சொற்கள் இப்பொழுது பயன்படுத்தப்பட்டு வருகின்றன. உயிரித் தோற்றத்துடன் (biogenic) தொடங்கும் இந்த ஊக்கிகள் சமூகப் பிரச்சினைகளால் பாதிக்கப்படுகின்றன என்பது மேலும் அறியப்பட்டது. இதை விளக்க, உண்ணுதல் என்பது உயிரித் தோற்றமாகிறது. ஆனுல், எவ்வாறு நாம் உண்கின்ருேம்? என்பது சமூக வழித் தோற்றமாகின்றது. இதே போன்றுதான் நாம் என்ன உண்கின்ருேம்? எங்கு உண்கின்ருேம்? ஆகியன யாவும் நாம் வளர்க்கப்பட்ட குழுவினுல் ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்டது. இந்தியர்களாகிய நமக்கு தரையில் அமர்ந்து ஒரு இலையை விரித்துச் சோற்றினையோ சாப்பாத்தியையோ, கறி அல்லது ஊறுகாய்களுடன் சேர்த்துக் கையால் எடுத்து உண்பது இயற்கையானதொரு செயல். ஆனுல், ஜப்பானியர்களும் மேற்கத்தியர்களும் இவ்வகையாக உண்ணுதலை மிகவும் இயற்கைக்கு மாருனதாகக் கருதுகின்ருர்கள். அவர்களுக்குச் சில கருவிகளாகிய இறைச்சித் துண்டினைக் குத்த உதவும் குச்சிகள் (chopsticks) அல்லது சிறு கரண்டி, கிளைக் கரண்டி (fork), கத்தி ஆகியவற்றைப் பயன்படுத்தி உண்ணுதல் இயற்கையாகும். மேற்கத்தியர் ஒரு ரொட்டித் துண்டைக் கறி அல்லது ஊறுகாயின்றி உண்ணுதல் முடியும். இது போன்றே ஜப்பானியர் சோற்றினைக் கறி அல்லது ஊறுகாயின்றி உண்ணுவர். இஃது இந்தியர்களாகிய நமக்கு மிகவும் புதுமையாகத் தோன்றுகின்றது. நாம் எவ்வழியில் உண்கின்ருேம், உடையணிகின்ருேம் என்பதுபற்றிய நமது மனப்பான்மை

களும், பிறர் எவ்வழியில் உணவு உண்கின்ருர்கள் என்பதைப் பற்றிய நமது மனப்பான்மைகளும் சமூகவயநிலேயின் மாற்ற விளேவுகளாக இருக்கின்றன. ஒருவகையாக உண்ணுதல் அல்லது வேறு வகையாக உண்ணுதல் என்பது எதுவும் இயற்கைத் தன்மையன்று. இது முழுதும் நாம் வளர்ந்த குழுவைச்சார்ந்து அமைவதாகும். இதே போன்று ஒவ்வொரு மற்ற ஊக்கியுடைய செயல்புரிவுகளான பால் அல்லது உடை, உறையுள், சமூகத் தனிச் சிறப்பு, புரிந்துகொள்ளுதல் ஆகியவற்றிற்கும் விளக்கங்கள் கூறலாம். இதனுல் மனிதனின் பல ஊக்கிகள் சமூக இடைவினேயின் விளேவுகளாகும். எனவே, நம்மைச் சுற்றி மனிதர்களிடையே இயங்குகின்ற நாம் காணும் ஊக்கிகள் உயிர்வழித் தோற்றம், சமூகவழித் தோற்றம் ஆகிய இரண்டையும் உடையதாகும். நமது ஊக்கி பெற்ற செயற்பிரிவுகளின் அடிப்படையில்தான் பெருமளவு கற்றல் இருக்கின்றது என்பது நாம் காண்கின்ருேம். உற்றுநோக்கக் கூடிய, விவரிக்கக் கூடிய நடத்தையை விளக்க அமைந்த பொதுமைக் கருத்து ஊக்கியாகும் என்பது நன்கு அறியப்பெற்றது. இஃது அன்ருட வாழ்க்கையில் அல்லது பரிசோதனே நிலேயில் ஒரு விலங்கு அல்லது மனிதனின் நடத்தையை உற்று நோக்கலின் அடிப்படையில் அமைந்த ஓர் உய்த்துணர்ந்த முடிவாகும். பசியுள்ள எலி சிக்கலறையின் (maze) வழியாகச் செல்லக் கற்று அதன் உணவைப் பெறுகின்றது. உணவுண்ட எலி சிக்கலறையினேக் கடந்து செல்லலாம். ஆனுல், அதன் கற்றல் மிகவும் மெதுவாக ஏற்படுகின்றது. இதன் விளேவாக உணவின் போக்கினுல் உயிரியினிடத்து ஒருவித விறைப்பு எழுவதை நாம் அறிகின்ருேம். உயிரியின் வலுவான செயல் (energetic action), அதன் குறிக்கோள் நோக்குடைய செயல்புரிவு அதன் மாறுந்தன்மையும் அதன் நிலேயான தன்மையும் அஃது உணவைப் பெற்றபின் அதன் செயல்பிரிவுகள் எவ்வாறு முடிகின்றன என்பதும் ஆகிய அனேத்தும் எலியின் பசியினுல் ஊக்குவிக்கப்பட்டது என்பதை உய்த்துணர நமக்கு வழி அமைகின்றது. உயிரியில் விறைப்புநிலே ஏற்படும் பொழுது எழுகின்ற ஒரு செயல்புரிவே நடத்தையாகும். அந்தச் செயல்புரிவே (activity) விறைப்புக் குறைவுக்கும் (tension reducing) காரணமாகின்றது. உயிரி செல்லுதற்கு அனுமதிக்கப்படவில்லேயெனில் அதிக அமைதியின்மையாகக் காணப்படுவதுடன் எங்கிருப்பினும் மிகுதியான சுறுசுறுப்புடையதாகக் காணப்படுகின்றது. இச் செயல்கள் ஒரு குறிப்பிட்ட குறிக்கோளே அடைய வழிகாட்டினுல் உயிரி அமைதியாகி விடுகின்றது. நாம் முன்னர் கண்டதுபோல் இவ்விதமான ஊக்கிசார்ந்த நடத்தை உடலியல் அடிப்படையில் அமைந்தது மட்டுமன்று,

ஆனுல் இது சமூகத் தோற்றத்தால் உந்துக்களின் அடிப்படையில் அமைந்ததுமாகும். ஒரு மனிதன் தனக்குமட்டுமன்றித் தன் குடும்பத்திற்கும் தேவையான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றிற்காகப் போராடுகிருன். இந்தப் போதுமான தேவைகள் கிடைக்கப்பெற்றவுடன் அவனது பணியை நிறுத்திக் கொள்வதில்லை. அவனது அமைதியின்மை போதுமான தேவைகளைப் பெறுவதோடு முடிவடைவதில்லை. அவன், அவனது அண்டையரைப் போன்று நல்ல உணவு உண்ணவும், நல்ல உடைகள் அணியவும், நல்ல வீட்டில் வசிக்கவும் விரும்புகின்ருன். இதனுல் அவன் வருந்தி உழைத்து மிகுதியான ஈட்டுதலையும், மிகுதியான பலனையும் பெறுகின்ருன். இதற்கு எல்லை ஏது? இஃது அவன் எந்தக் குழுவில் வாழ்கின்ருனே அதைச் சார்ந்ததாகும். அவன் கிராமத்தில் வாழ்பவனுக இருந்தால், அவனுடைய அண்டையரைவிடச் சிறிது அதிகமாகப் பெறின் மனநிறைவு பெறுகின்ருன். மறுபுறம் நகரத்தில் அவனுடைய அண்டையர் பெறுமளவு இன்ப வாழ்வுச் சாதனங்களைக் கொண்டவராக இருப்பதால் அதைவிட மிகுதியாகப் பெறுதற்கு அவன் போராட வேண்டியிருக்கின்றது. கிராமத்திலிருப்பினும் அல்லது நகரத்திருப்பினும் இதைப்பற்றிய அடிப்படை ஆராய்வு எத்துணை அளவு உணவு அல்லது உடை அல்லது உறையுள் ஒரு மனிதன் பெறுகின்ருன் என்பதல்லாமல் அவனது அண்டையரின் ஒரே தரங்களை அல்லது அண்டையரைவிட நல்ல தரங்களை எவ்வாறு பெறுகிருன் என்பதைப்பற்றியதாகும். இருப்பினும் உடலியல் ஊக்கிகள் முழுதும் உடல் மட்டத்தில் இயங்குவதில்லை. அவை கொடுக்கப்பட்ட பண்பாட்டு அமைப்புக்குள் அமைகின்றன.

## ஊக்கிகளின் அடிப்படையில் அமைந்த ஆளிடைத் தொடர்புகள்
## (Interpersonal relationships based on motives)

இதனை முன் தொடர்ந்து செல்லுதற்கு முன்னர் சமூக உறவுத் தொடர்புகளில் ஊக்கிகளின் பங்கினை அறிந்துகொள்ள நாம் ஒரு சிறிது இடம் கொடுப்போம். நாம், நல்வாழ்வைப் பெறுதற்கு அல்லது ஒரு துணைவியைப் பெறுதற்கு அல்லது ஏற்றம் அல்லது பிறரிடம் ஏற்புப் பெற ஆகிய சில குறிப்பிட்ட முடிவுகளை அடைதற்காக ஆளிடைத் தொடர்புகளில் புகுகின்ருேம். எனவே, சமூக உறவுத் தொடர்புகளில் புக அடிப்படையாக ஊக்கிகள் அமைகின்றன. வேறு வகையாகக் கூறினுல் ஆளிடைத் தொடர்புகளுக்கு அல்லது குழு இடைவினைகளுக்குக் கீழ் அமைந்த ஊக்கி

களைக் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லையெனில் நாம் சமூக இடைவினையைப் புரிந்துகொள்ள முடியாது.

## உடலியல் உந்துக்கள் (Physiological drives)

மேற்றிசைக்குரிய அல்லது கீழ்த் திசைக்குரிய மிகுதியான தொழில்வயமானதும், தொழில் நுணுக்கத் துறை அமைப்பினைக் கொண்டதுமான அல்லது மிகப் பழமையான செல்வாக்கு உடையோரிடையேயும், ஏழ்மையானவரிடையேயும் ஆகிய எத்தகைய பண்பாட்டு அமைப்பாயிருப்பினும் இவ்வனைத்திலும் உயிர் வழித் தோற்றமுடைய சில குறிப்பிட்ட பொதுவான செயல்கள் காணப்படுகின்றன. மனிதன் உண்கின்றான், குடிக்கின்றான், உறங்குகின்றான், மென்மையாக வைத்துக்கொள்ளவும் முயற்சிக்கின்றான். வேறு விதமாகக் கூறினால், அவன் ஓர் உயிரியல் உயிரியாக வாழ்க்கையைப் பெற முயற்சிக்கின்றான். அவ்வாறு அவன் இந்த அடிப்படை உயிரியற் தேவைகளை மன நிறைவளிக்கின்றான் என்பது அவன் வளர்க்கப்பட்ட பண்பாட்டுக் குழுவினைச் சார்ந்ததாகும். இத்தகைய நடத்தை ஓர் உடலியற் கோரிக்கையின் எதிர்வினையாக இருப்பதை நாம் காணலாம். இஃது ஓர் இரசாயனக் குறைவுக்கும் அல்லது சில உடலியல் சார்ந்த நிலைகளுக்கும் எதிர்வினையாகும். உயிரி இத்தகைய நிலைகளில் செயல்படுவதற்குத் தூண்டப்படுகிறது. உயிர்வாயு அல்லது உணவு அல்லது நீர் அல்லது மற்றப் பிறவற்றை உட்கொள்வதின் மூலம் சமநிலை பாதுகாக்கப்படும்வரை தூண்டப்பட்ட இச் செயலானது தொடர்கின்றது. இனத்திற்கே பொதுவான இத்தகைய எதிர்வினைகளைத் தவிர உயிரித் தோற்ற உந்துக்களின் (biogenic motives) இரண்டாவது சிறப்பியல்பு. அவை கற்றுக்கொள்ளப்படாததும் அல்லது உடன் பிறந்தவையுமாகும். எந்த உந்துக்களின் மூலமும் தூண்டப்படும் மனித நடத்தைக் கற்றலால் மாறுதல் அடைகின்றது என்பது உண்மை. சுவாசித்தல் போன்ற எளிய செயல்கூட கற்றலால் ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, பாடகர்கள், விளையாட்டு வீரர்கள் இவரிடை இதனைக் காணலாம். யோகப் பயிற்சிகள், எவ்வாறு சுவாசிப்பது? எவ்வாறு சுவாசிப்பதைக் கட்டுப்படுத்துவது? என்பதற்கான பயிற்சி ஒருங்கமைப்பு வழிகளை வளர்த்துள்ளன என்பதை நாம் அறிவோம். இதன் காரணமாக இச் செயல்கள், கற்றலால் பாதிக்கப்பட்டவை என்றல்லாமல் அவை முதலில் உயிரில் தோன்றிய நிலைகளைப்பற்றி நாம் சிந்திப்பதால் 'கற்கப்படாதவை' என்று நோக்கப்படுகின்றன. பிறப்பிலோ முதிர்ச்சி நிலையிலோ உயிரித்

தோற்ற உந்துக்கள் இடம் பெற்றுள்ளன. கற்றலால் பெரு மளவு பாதிக்கப்படினும் அவை கற்றலின் விளைவுகளல்ல. அவற்றின் தொடக்க நிகழ்வுக்குக் கற்றல் முன்வேண்டப்படுவ தன்று.

உயிரித்தோற்ற உந்துக்களில் நாம் தாகம், பசி, செயல்-உறக்க வளைவு, வெப்பக் கட்டுப்பாடு, பால் (sex), கழிவு நீக்கம் (evacuation), சிறுநீர் நீக்கம் (urination), மல நீக்கம் (defecation), உடற் காயங்களினின்றும் விலக்குதல் ஆகிய வற்றைச் சேர்க்கலாம். இச் செயல்களை மானிடர்களிடத்து மன்றி விலங்குகளிடத்தும் காணப்படுகின்றன. இந்த உடல் சார்ந்த உந்துக்களில் பெரும்பான்மையானவை காலாகாலத் தில் நிகழ்கின்றன. இவை சுழற்சியானவை. ஒரு குறிப்பிட்ட இடைவெளிகளில் நாம் உண்பதற்கும் உறங்குவதற்கும் செல் கின்றோம். இவ்விடைவெளிகள்கூட சமூகப் பாதிப்புகளால் (social influences) பாதிக்கப்படலாம். சான்றாக, நகரங்களி லுள்ள மக்கள் ஒரு நாளைக்கு நான்கு முறை உணவு உட் கொள்ளும்போது கிராமவாசிகள் இரண்டு முறையே உணவு உட்கொள்கின்றனர்.

## சமூக உந்துக்கள் (The social drives)

உடலியல் சார்ந்த உந்துக்கள் பொதுவானவை என்று நாம் கண்டது போன்றே ஒவ்வொரு சமூகத்திலும் மானிடர் ஒரு குழுவைச் சார்ந்திருத்தற்கும், ஒரு நல்ல நிலை அல்லது ஏற்றத் தினைப் பெறுவதற்கும் உழைக்கின்றனர் என்பதனையும் காண் கின்றோம். இவை போன்றே உந்துக்கள் எல்லா மானிடக் குழுவிலும் பொதுவாகக் காணப்படுகின்றன. ஐயத்திற்கிட மின்றி இத்தகைய செயல்கள் உடலியல் சார்ந்த உந்துக்களை விடப் பெருமளவில் சமூக அமைப்பினால் பாதிக்கப்படுகின்றன.

### (a) பிரியத்திற்கான தேவை (The need for affection)

பிரியத்திற்கான தேவையினின்றே அடிப்படையான சமூக உந்து தோன்றுகின்றது. இந்தத் தேவை இரண்டு தெரிவிப்பு களைக் கொண்டுள்ளது. மற்றவரிடமிருந்து பிரியத்தினைப் பெறுகின்ற தேவையையும் மற்றவர்க்குப் பிரியத்தினைத் தரு கின்ற தேவையையும் நாம் பெற்றுள்ளோம். இத் தேவையானது மானிடர்க்குமட்டும் தனித்த ஒன்றன்று. பறவைகளிடத்தும் விலங்குகளிடத்தும் இவற்றை நாம் காண்கின்றோம். வீட்டிற்

குரிய விலங்குகள் பிரியத்தைத் தருவதுமட்டுமன்றிப் பிரியத்திற்காக ஏங்கவும் செய்கின்றன. பெரும் பான்மையான நேரங்களில் மனிதனைவிட நாய் பெரிதும் நம்பகமானது என்று மக்கள் சொல்வதனை நாம் காண்கின்றோம். எஜமானர் வீட்டுக்குச் சென்றவுடனே நாய் அவரிடம் ஓடுகின்றது. இங்காவது தன் தேவையை விரும்பும் ஓர் உயிர் இருக்கின்றது என்று எஜமானர் நினைக்கின்றார். தான் தேவைப்படுதலை பெற்றிருப்பது அடிப்படையான ஒன்று. ஒரு மனிதன் தான் யாருக்கும் தேவையில்லை என்று எண்ணும் போதும் தன்னை யாரும் நேசிக்கவில்லை என்றெண்ணும் போதும் தனது வாழ்க்கை பயனற்றது என்று நினைக்கின்றான். இங்குதான் சமூக வாழ்க்கையில் குடும்பம் ஒரு முக்கியமான பகுதி என்று நாம் காண்கின்றோம். குடும்பச் சூழ்நிலையில் பெற்றோர்-குழந்தை உறவு, கணவன்-மனைவி உறவு, உடன் பிறந்தோர் அன்பு ஆகியன முக்கிய இடம் பெற்றுள்ளன. டி. ஏ. டி. (T. A. T.) போன்ற புறத் தோற்றச் சோதனைகள் (projective tests) பிரியத்திற்கான இந்த அடிப்படைத் தேவை மனிதனின் ஆளுமைக்கு எவ்வளவு முக்கியமானவை என்பதைக் காட்டுகின்றன. தவறான வழியில் வளர்க்கப்பட்டால் மனிதன் தன்னலம் பேணுபவனாக மாறித் தன்னை யாரும் நேசிக்காமலும், தேவைப்படாமலும் இருத்தலைக் காண்கின்றான். மற்றவர்களிடத்துப் பிரியம் செலுத்துதல் என்ற கலையினைத் தான் வளர்த்துக்கொள்ளவில்லை என்பதனையும் மறந்துவிடுகின்றான். நாம் எவ்வளவு தூரம் பிரியத்தினைச் செலுத்த முடியுமோ அவ்வளவு தூரம் பியத்தைத் திரும்பிப் பெறவும் செய்கின்றோம். வீட்டிற்குரிய விலங்குகளோடு குழந்தைகளும் பிரியத்தினைப் பெறாதபோது பண்பாடற்றவையாகின்றன. குடும்பத்தில் பிரியம் கிட்டாத தனியன் 'பிரச்சினைக் குழந்தை'யாக வளர்கின்றான். அவன் ஓர் இளங் குற்றவாளியாகவோ (juvenile delinquent) உளவழி நரம்பு நோயாளியாகவோ மாறலாம்.

### (b) தற்சாதிப்பு (Self-assertion)

தற்சாதிப்பு மற்றுமொரு மிக முக்கியச் சமூக உந்து ஆகும். தன்னை வெளிக்காட்டும் வகையில் இந்த உந்து வெளிப்படுத்தலாம். தன்னுடைய திறமையினை நிரூபிக்கவும் சக்திகளை விளக்கிக் காட்டவும் ஒரு தனியன் கடினமான செயல்களை மேற்கொள்ளலாம். அவன் மற்ற மக்களிடமிருந்து உடை, தொழில், ஏற்றம், களிக் குழு (club) உறுப்பினனாதல் இன்ன பிற செயல்களில் தன்னை வேறுபடுத்திக் காட்ட முனையலாம். அல்லது பொருளாதாரம் அல்லது அரசியல் அல்லது அறிவுச்

சுதந்திரங்களுக்காகப் போராடலாம். இப் போராட்டங்கள் உடற்சண்டை அல்லது சொற்போர் என்ற உருவத்தினைப் பெறலாம். இவை அனைத்தும் சற்சாதிப்பின் திருப்திக்காகத் தன்னைத் தானே வெளிப்படுத்திக் கொள்ளும் முறைகளாகும்.

தற்சாதிப்பு ஆதிக்கமாகக்கூட உருவெடுக்கலாம். ஒவ்வொன்றும் சிறிய முதநிலைக் குழு அல்லது வழிநிலைக் குழு முழுதினையும் ஆதிக்கம் செலுத்த முனைகின்றது. நாம் முன்பு பார்த்தது போன்று [அத்தியாயம் 4] பல்லிகள்கூட ஆதிக்கம், பணிவு வகைகளைக் காட்டுகின்றன. பருத்த ஆண் பல்லிகள் ஆதிக்கத்தின் தலைமைப் பீடத்தில் இருக்கின்றன. மேலும், அவற்றினது எல்லையைப் பாதுக்காகவும், சஞ்சரிக்கும் இடத்தினைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கவும் அவை கடுமையாகப் போரிடுகின்றன. இது போன்றே பறவைகள் தங்களுக்கென ஓர் எல்லைப் பகுதியினை அமைக்க முனைகின்றன. ஆண் பறவைகள் மற்ற ஆண் பறவைகளைத் தங்கள் எல்லைக்குள்ளிருந்து விரட்டுகின்றன. இங்கும் பறைவகளிடம் ஆதிக்க பணிவு வகைகள் இடம் பெற்றுள்ளன. ஒரு பறவை மற்றப் பறவைகளிடத்தே சர்வாதிகாரப் போக்குச் செலுத்துவதைக் கவனிக்கப்பட்டு அறிவிக்கப்பட்டுள்ளது. மிக்க ஆக்கிரமிப்புள்ள பறவை தலைவனுகின்றது. சுக்கர்மேன் (Zukerman), மாஸ்லோ (Maslow) ஆகியோரின் ஆய்வுகளில் குரங்குகளிடையேயும், மனிதக்குரங்குகளிடையேயும் ஆதிக்கத்துக்கான போராட்டம் இருக்கின்றது என்று வெளிப்படுகின்றன. ஆதிக்கமுடைய குரங்குகள் கிடைத்த அனைத்து உணவையும் தனக்காக வைத்துக்கொள்வதோடு, அமைதி அல்லது ஓட்டத்தால் தனது கீழ்ப்படிதலையும் காட்டும். மற்றக் குழு உறுப்பினர்கள் மீது ஆக்கிரமிப்பைக் காட்டவும் செய்கின்றது. மேலும், குரங்குகளிடத்தும் மனிதக்குரங்குகளிடத்தும் ஆட்சியில் சமூகத் தலைமை (hierarchy) காணப்படுகின்றது. இவ்வாருக, ஆதிக்க-பணிவு நடத்தை மானிடர்க்கு மட்டும் தனிப்பட்டதன்று என்பதைக் காண்கின்ருேம். வேறு வகையாகக் கூறுமிடத்துத் தனியன் அல்லது குழு பண்பாட்டு விளைவுகளால் ஆதிக்கத்தைக் கைவிடுகின்றது. இத்தகைய சமூக நடத்தையின் இவ்விரு போக்குகள் ஒரு தனியன் உரக்கச் சத்தமிடும்போது நெருக்கமாக உடன் தொடர்பு கொண்டுள்ளன. அவன் ஆதிக்கம் உடையவனுகவும், முதனிலைக் குழுவிலுள்ள மற்றவர் பணிவுள்ளவர்களாகவும் மாறுகின்றனர். ஒரு சந்தர்ப்பத்தில் ஆதிக்கம் செலுத்தும் ஒரு தனியன் மற்ருெரு சந்தர்ப்பத்தில் பணிவு காட்டுபவனுக நடப்பது இயன்றதொன்று. எடுத்துக்காட்டாக, வீட்டில் பணிவான கணவனுக இருக்கும்

ஒரு தனியன் தொழிற்சாலையில் ஆக்கிரமிப்புச் செலுத்தும் மேற்பார்வையாளனாக [foreman] இருக்கலாம். அல்லது வீட்டில் ஆதிக்கம் செலுத்தும் ஒரு மனிதன் வேலை நிலைமைகளில் பணிவுள்ளவனாக இருக்கலாம்.

குழுவின் மற்றத் தனியன்கள் தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற விருப்பமும், தன்னைச் சமமாக ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற விருப்பமும், தன்னை மேலோனாகக் கருதவேண்டும் என்ற விருப்பமும் ஆகியன தற்சாதிப்பின் மற்றுமொரு வெளிப்பாடாகும். தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற இந்தத் தேவையின் முன்மாதிரி (prototype) விலங்குகளிடத்தேயும் குழந்தைகளிடத்தேயும்கூட நாம் காண்கின்றோம். வீட்டில் வளர்க்கப்படும் சிறு நாய்களிடையே பொறாமை உண்டு. அவற்றில் ஒன்றுக்குச் செல்லம் கொடுக்கபட்டால் அடுத்தது அமைதியின்றிக் குரைக்கவும், செல்லம் கொடுக்கப்பட்ட நாயைத் தாக்கவும் செல்கின்றது என்பதும் தெளிவான உண்மையாகும். நான்கு அல்லது ஐந்து வயதுக்குட்பட்ட சிறு குழந்தைகளிடையே பொறாமை உண்டு. இளையது போற்றப்பெறின் மூத்தது பொறாமை கொள்கின்றது. அவன் ஆக்கிரமிப்புள்ளவனாகவோ சிடுசிடுப்புள்ளவனாகவோ ஆகலாம். முன்னுரிமை அளிக்கும் விருப்பமும் எதிரிகளிடத்து முன்னுரிமை அளிக்காத தன்மையும் குழந்தைகளிடையே காணப்படும் ஒரு சிறப்பியல்புக் கூறாகும். பெரும்பான்மையான வளர்ந்தவர்கள் இத்தகைய குழந்தைத்தனமான வழியில் செயல்படுவதைத் தவிர்க்க முடியாமல் உள்ளனர். ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற தேவையின் (need for recognition) அடிப்படையில் தனியன்களிடையே மட்டுமன்றிக் குழுக்களிடையிலும் விரோதங்கள் உள்ளன என்பது நன்கறிந்த ஒன்று, பொருளாதார உதவி செய்வதில் ஒரு பெரிய நாடானது தன் அண்டை நாட்டுக்கு முன்னுரிமை அளித்தால் ஒரு சிறிய நாடு புண்படலாம். இராணுவ அதிகாரிகள், சிவில் அதிகாரிகள் (civil officers), கலைவல்லோர் ஆகியோர், நில மானிய இராஜா அல்லது மகாராஜா ஆகியோரின் ஏற்பினைப் பெற ஒருவர்க்கொருவர் போராடுகின்றனர். இதன் காரணமாகத்தான் அரசரிடத்தில் முன்னுரிமையையும், ஏற்றுக்கொள்ளுதலையும் பெறுதற்காக மேற்கத்திய, கிழக்கத்திய, சிறிய, பெரிய நாட்டு அரண்மனைகளில் எப்பொழுதும் சூழ்ச்சிகளும், எதிர் சூழ்ச்சிகளும் இடம் பெற்றுள்ளன. நமது பணி ஒப்புக்கொள்ளப்பட்டும், ஏற்றுக்கொள்ளப்பட்டும் பரிசளிக்கவும் பட்டால் அவ் வேலைகளில் நாம் மிகப் பெரும் இன்பத்தினை அனுபவிக்கின்றோம். வேறுவகையாகக் கூறினால், நமது வேலை

புறக்கணிக்கப்பட்டால் அது கடுமையான தண்டனையாக அமைகின்றது. நமது மதிப்புகளையும் திறமைகளையும் தேர்ச்சிகளையும் ஒருவரும் ஏற்றுக்கொள்ளவில்லையென்று நாம் தவறாக நினைக்கின்றோம். தனியன்களையும், குழுக்களையும் சமூகம் தான் ஒப்புக்கொண்டதையும் ஏற்றுக்கொண்டதையும் காட்டப் பல வகைகளை வளர்த்துள்ளது. நிலமான்ய, முதலாளித்துவ அமைப்புகளில் மட்டுமன்றிச் சோஷலிச கம்யூனிச அமைப்புகளிலும் இதனை நாம் காண்கின்றோம். பற்றுறுதியை (loyalty) ஏற்றுக்கொண்டதற்கு அறிகுறியாக ஆங்கில அரசு அநேக பட்டங்களையும், வெகுமானங்களையும் இந்தியக் குடிமக்களிடையே அமைத்தது. வெளிநாட்டாரால் குடிமக்களின் (colonial) பற்றுறுதியைப் பெற மேற்கொள்ளப்பட்ட ஒரு நுண்முறையாகக் கருதி இதற்குப் பெருமளவில் எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டது. ஆனால், கம்யூனிச நாடாகிய ரஷியாவில்கூட (Russia) ஸ்டாலின் பரிசுகளும், ஸ்டாலின் பதக்கங்களும் (Stalin prizes and Stalin medals) பெருமளவு விழையப்பட்டிருந்தன. இந்தியாவில்கூட தனிச் சிறப்பிற்கான வெகுமானங்களின் ஒரு புதிய ஒழுங்கமைப்பு அமைக்கப்பட்டுள்ளது. ஏற்றுக்கொள்ளலின் மீது கொள்ளும் இரு மனப்பான்மையை (double attitude) இது குறிக்கின்றது. ஒவ்வொரு தனியனும் ஏற்றுக்கொள்ளலை வேண்டுகின்றான். ஆனால், அவ் வேண்டுதலைத் தான் பெற்றிருப்பதற்காகக் கூச்சப்படவும் செய்கின்றான். அடுத்தவர் ஏற்றுக்கொள்ளப்பட்டபோது அதே தனியன் சினம் கொள்ளவும் செய்கின்றான். ஏற்றுக்கொள்ளுதலான இத் தேவையானது ஒரு சக்திவாய்ந்த உந்தாகும். இஃது ஒரு தனியனை மட்டுமன்றி ஒரு குழுவையும் வீட்டிலோ வகுப்பறையிலோ பரந்த சமூகத்திலோ எதிலாயினும் மிகுந்த முயற்சியினை மேற்கொள்ளச் செய்கின்றது. குழந்தைகளாகவோ, இளையோராகவோ, வளர்ந்தோராகவோ யாராக நாம் இருப்பினும் நாம் ஏற்றுக்கொள்ளுதலை அடைய ஆர்வத்தோடு இருக்கின்றோம். மேலும், இதனை அடைய நாம் இடைவிடாது உழைக்கவும் நம் சிறந்த முயற்சியினை ஈடுபடுத்தவும் செய்கின்றோம். புகழ் மட்டுமன்றிக் கெட்ட பெயருங்கூட ஏற்றுக்கொள்ளப்படுதல் என்ற இந்தத் தேவையின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. சமூகத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட அல்லது ஒப்புக்கொள்ளப்படாத தனியன்கள் மேற்கொள்ளும் எந்தச் செயல்களிலும் அவர்கள் தங்கள் சிறந்த முயற்சியினைப் பயன்படுத்த முனைகின்றனர்.

சுருக்கமாகக் கூறின், சார்ந்திருக்க வேண்டுமென்ற தேவை, ஏற்றம், ஆதிக்கம் இவற்றிற்கான தேவை என்பவை

இரு அடிப்படை உந்துக்களாகும் என்று நாம் கூறலாம். இவ்விரு தேவைகளும் வேறுபட்ட உருவங்களில் வெளிப்படுகின்றன. இவையிரண்டும் விலங்குகள், குழந்தைகள் ஆகியவர்களின் நடத்தையில் தங்கள் அடிப்படையைப் பெற்றுள்ளன. ஒரு தனியன் தன் சொத்து முழுமையும் அழித்தலின் மூலமோ கணக்கிட முடியாத செல்வம் அல்லது கற்றலைப் பெறு தலின் மூலமோ ஏற்றம் பெறுதற்காக உழைக்கலாம். இது போன்றே சார்ந்திருக்கும் தேவையானது இளங்குற்றவாளியிடத் தேயும் வெளிப்படலாம். ஆனால், இஃது அவன் வளரும் சந்தர்ப்பச் சூழ்நிலையைப் பொறுத்தது.

## உடல்சாரந்த சமூக உந்துக்களின் ஒப்புமை உள்ளாற்றல்
## (The relative potency of the physiological and social drives)

சமூக உந்துக்கள் அதிக சக்தி வாய்ந்தனவா உடல் சார்ந்த உந்துக்கள் அதிக சக்தி வாய்ந்தனவா என்று கூறுவது மிகக் கடினமான ஒன்று. உடல்சார்ந்த போக்கு (physiological deprivation) மிக அதிக அளவில் இருக்கும்போது சமூகத் தேவைகள் காற்றில் விடப்படுகின்றன. வெள்ளப் பாதிப்பால் பரிதவித்தல் போன்ற இயற்கைக் காரணங்களாலும் அல்லது கவனிப்பு முகாம் (concentration camp) போன்ற சமூகக் காரணங்களாலும் தனியன் அவதியுறும் கட்டாயத்தினின்று சார்ந்திருத்தலின் ஆராய்வு அல்லது ஏற்றத்துக்கான ஆராய்வு அவனை நிச்சயமாகத் தடுக்க முடியாது. இக் காரணங்களால் மனிதன் உணவுக்காகவும், உயிருக்காகவும் மற்றவர்களிடமிருந்து இரத்தலைத் தடுக்க முடியாது. இது போன்றே செல்வம் அல்லது புகழ் இவற்றின் ஓட்டம் ஒரு தனியனைத் தன் உடற்தேவை களை மறுக்கவும் தூண்டலாம். ஏற்றம் காண அவன் உணவு, ஓய்வு இன்றி உழைக்கலாம். ஒரு பெண் தன் மெலிந்த உருவத்தை நிலைநிறுத்த தன் உடலைக்கூடத் துன்புறுத்தலாம். இதுபோன்றே ஒரு சந்நியாசி பேரின்பத்தினை அடைவதற்காகத் தன் உடலை வருத்தலாம். எனவே, சமூக உந்துக்கள் அல்லது உடல் சார்ந்த உந்துக்கள் ஆகிய இவற்றில் எவை வலிமை யானவை என்று உறுதிப்படுத்துவது சிரமமாகும். அது தனியனை மட்டுமன்றிச் சந்தர்ப்பங்களையும் பொறுத்து அமைகின்றது.

## உடல்சார்ந்த உந்துக்களும் சமூக உந்துக்களும் சமூகத் தரங்களால் பாதிக்கப்படுகின்றன

(The physiological as well as social drives are affected by social norms)

தனியன் வளர்க்கப்பட்ட குழுவால், உடல்சார்ந்த உந்துக்களும் சமூக உந்துக்களும் பெரிதும் மாற்றியமைக்கப்படுகின்றன. நாம் மேலே கண்டது போல உண்ணுதல், பசியினைத் திருப்தி செய்தல் எல்லா மனிதக் குழுக்களுக்கு மட்டுமன்றி விலங்குகளுக்கும், மானிடர்களுக்கும் பொதுவான ஓர் உடல்சார் உந்து ஆகும். நாம் எவ்வாறு உண்கின்றோம்? எப்போது உண்கின்றோம்? என்ன உண்கின்றோம்? என்பது நாம் வளர்ந்த குழுவால் நிருணயிக்கப்பட்டது. இங்குதான் நாம் ஊக்கிகளின் உயிர் வழித் தோற்ற அம்சங்களையும் சமூக வழித் தோற்ற அம்சங்களையும் வேறுபடுத்த முடிகின்றது. மானிடரிடையே அரிசிச் சோறு உண்ணுதல் அல்லது சப்பாத்தி உண்ணல் சமூக வழித் தோற்ற அம்சமாகும். ஆனால், உண்ணுதல் என்பது உயிர் வழித் தோற்ற அம்சமாகும். இது போன்றே உடைகளை அணிவதில் ஏற்றம், ஏற்றுக்கொள்ளல் இவற்றைப்பற்றிய சமூக உந்தைப் பொறுத்து அமைகிறது. மேலும், நாம் வளர்ந்த குழுவின் தரங்களில் இது பாதிக்கப்பட்டுள்ளது. மலிவான பருத்தி ஆடைகளை அல்லது விலையுயர்ந்த பருத்தி ஆடைகளை நாம் அணிகின்றோமா என்பது நாம் வளர்ந்த பல நிலைகளைப் பொறுத்தும், வாழும் பல நிலைகளைப் பொறுத்தும் அமைந்துள்ளது. மற்றோர் எடுத்துக்காட்டினைக் கூறுவோமானால் செல்வத்தினைப் பெற வேண்டும் என்பது இன்று உலகில் நாகரிகமடைந்த குழுக்களிடையே உள்ள முக்கிய ஊக்கிகளில் ஒன்றாகும். இஃது ஒரு முதநிலை உந்து அன்று; வழிநிலை உந்தேயாகும் (secondary drive). சில உடல்சார் தேவைகளையும் சில சமூகத் தேவைகளையும் திருப்தி செய்ய உதவுவதால் செல்வம் தேடப்படுகின்றது. உடல்சார் தேவைகளுக்கோ சமூகத் தேவைகளுக்கோ பொருத்தமற்ற வகையில் செல்வத்தைத் தேடுதல் என்பதே வலிமைமிக்க ஊக்கியாக மாறலாம். இந்த வகையில் இந்தியனுடைய வாழ்க்கை முறை தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கின்றது. செல்வத்தைத் தேடுதல் என்பது முழுமையாகக் கிருகஸ்த (grahastha) நிலையிலேயே முறையாக உள்ளது. ஆனால், தன்னுடைய குழந்தைகள் மூலம் தனது சமூகக் கடமையை ஒரு மனிதன் செய்து முடித்த பிறகு இந்திய வாழ்க்கை முறை செல்வத்தின் துறத்தலைக் கட்டாயப்படுத்துகின்றது.

இந்திய மரபு வழக்கங்களின்படி செல்வத்தைச் சேர்த்தலானது தனியனுக்கு மட்டுமன்றிச் சமூகத்துக்கும் நல்லதன்று. இன்றைச் சமூகங்கள் அனைத்தும் இந் நோக்கத்தினையே அணுகுகின்றன. இன்று முதலாளித்துவ நாடுகளில் மட்டுமன்றிக் கம்யூனிச நாடுகளிலும் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் தனியனால் செல்வம் சேர்க்கப்படுவது தடை செய்யப்படல் வேண்டும் என்று உணரப்பட்டுள்ளது. வருவாய்களுக்கு வரி விதிக்கப்பட்டிருப்ப தோடு பரம்பரைச் செல்வத்துக்கும் வரி விதிக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் இன்று நாம் இத்தகைய வரிகளைப் பெற்றிருப்ப தல்லாமல் செல்வ வரி, செலவு வரி (expenditure tax) ஆகிய வற்றையும் பெற்றிருக்கின்றோம். இக் காலச் சமூகத்தில் வரி விதித்தல், செல்வம் சேர்த்தலைப்பற்றிய தனியனின் மனப் பான்மையை மாற்றுவதற்காகப் பயன்படுத்தப்படும் ஒரு வழி முறையாக உள்ளது.

## சமூகத் தூண்டுகைகள் (Social incentives)

### ஊக்கிகளும் தூண்டுகைகளும் (Motives and incentives)

ஊக்கிகள் அனைத்தும் உயிரியின் உயிரியல் தேவைகளையும், சமூகத் தேவைகளையும் அடிப்படையாகக் கொண்டவை. மனிதர் களிடையே உடலியல் உந்துக்களும் சமூக உந்துக்களும் பண் பாட்டுக் கோலங்களால் (cultural patterns) பாதிக்கப்படு கின்றன என்பதை நாம் அறிகின்றோம். ஓர் உயிரியின் உள்வய நிலைகளின் அமைப்பு ஊக்கிகளாகும். இவை உயிரியைச் செயல் புரியச் செய்கின்றன. இவற்றை ஆதரிக்க அல்லது தூண்ட, குறைக்க அல்லது தடை செய்ய அல்லது சொற்புரிவுகளுக்கு வழிகாட்ட சமூகம் சில நிலைகளை அமைத்திருக்கின்றது. இவை தூண்டுகைகள் (incentives) எனப்படும். மற்றத் தனியன் களின் நடத்தையை மாற்றுவதற்கென அமைக்கப்பட்ட நிலைகளே தூண்டுகைகள் என நாம் காணலாம். எனவே, தூண்டு கைகள் நேரிடையானவையாக அல்லது எதிர்மறையானவையாக இருக்கலாம். ஒரு நேரிடைத் தூண்டுகை செயலை வலுப்படுத்தும் போது எதிர்மறைத் தூண்டுகை செயலைத் தடை செய்கின்றது. இந்தத் தூண்டுகைகளின் இயக்கத்தின் அடிப்படையில்தான் சமூகத்தில் தனியனின் மாற்றம் அமைந்திருக்கின்றது. இவ்வா றாகத்தான் சமூகக் கற்றல் நடைபெறுகின்றது. கடந்த 75 ஆண்டுகளாக விலங்குகளிடையேயும், மனிதர்களிடையேயும் கற்றல் துறையில் மிகுதியான அளவு ஆய்வுப் பணிகள் மேற் கொள்ளப்பட்டுள்ளன.

**தூண்டுகைகள் நடத்தையை மாற்றுகின்றன** (Incentives modify behaviour)

பருப்பொருள் சார்ந்த பரிசுகள் நேரிடைத் தூண்டுதல்களாகும். இவை உந்துக்களை வெளியிடுவதுடன் செயல் நிறைவேற்றத்தின் (performance) விரைவினையும் சரி நுட்பத்தினையும் ஆட்கொள்கின்றன. இது போன்றே தண்டனை அல்லது ஒரு பரிசினை நீக்குதல் ஓர் எதிரிடைத் தூண்டுகையாகும். இது குறிப்பிட்ட உந்துக்களைத் தடை செய்கின்றது. பரிசுகளுக்கும் தண்டனைக்கும் அப்பாற்பட்டுப் புகழ்ச்சியும், இகழ்ச்சியும் (reproof) அல்லது திட்டுதல் ஆகியவையும் நடத்தையைப் பாதிக்கின்ற தூண்டுகைகளாக மிகவும் சக்தி வாய்ந்தவையாக இருக்கின்றன. இவ்வாறுதான் நாய்க்குட்டி அதன் பெயருக்குச் செவி சாய்க்கவும், வீட்டினுள் சிறுநீர் கழிதலையும் அசுத்தங்களைச் செய்தலையும் கைவிடுவதற்குக் கற்றுக் கொள்கின்றது. எஜமானர் என்ன சொல்கின்றாரோ அதன்படி நடந்தால் அதற்கு ஒரு பிஸ்கட் பரிசளிக்கப்படுகின்றது. நாய்க் குட்டிகளைச் சமூகவயப் படுத்த பரிசுகளையும் தண்டனைகளையும் பயன்படுத்துவது மட்டுமன்றி அன்பையும்கூட ஒரு தூண்டுகையாகப் பயன்படுத்துகின்றோம். நாய்க் குட்டி சரியாகத் துலங்கல் செய்தால் நாம் தட்டிக் கொடுத்தல் வாயிலாகவும், அணைத்தல் வாயிலாகவும் அன்பினை அளிக்கின்றோம். அது தவறுகளைப் புரிந்தால் நம் மன நிறைவின்மையை நமது முகத் தோற்றத்தின் வாயிலாகவும், மொழியின் வாயிலாகவும் குறிப்பாகக் குரலை மாற்றியமைக்கும் அம்சத்தின் வாயிலாகவும் காட்டுகின்றோம். குழந்தையைச் சமூகவயமாக்குதலில் பெற்றோர் பல தூண்டுகைகளைக் கையாளுகிறார்கள். பின்னர் பள்ளியில் ஆசிரியர்களாலும் இவை பயன்படுத்தப்படுகின்றன. தன் பின்பற்றுவோரின் ஆளுமைக்குத் தூண்டுகைகளை அமைக்கும் கைதேர்ந்த ஒருவனே குழுவின் தலைவன் ஆகிறான். பொருத்தமான தூண்டுகைகளைப் பயன்படுத்தும் திறமையினால் மனிதன் ஒரு குழுவின் தலைவனாக ஆகின்றான். இத் தூண்டுகைகள் கற்றல் செயல் முறைக்கு உதவியாக இருக்கின்றது. ஆனால், அவை நடத்தையைப் பிறப்பிக்கச் செய்வதில்லை. அவை நடத்தையை மாற்றியமைக்கத்தான் முடியும். தூண்டுகைகள் ஊக்கிகளைத் தட்டியெழுப்பிக் குழுவிலுள்ள தனியன்களின் மனப்பான்மைகளை மாற்றுகின்றது. பொருத்தமான தூண்டுகைகள் அளிக்கப்படும் பொழுது செயல் நிறைவேற்றத்தின் திறமை மிகுதியாக மேம்பாடு அடைகின்றது. மறுபக்கம் பொருத்தமற்ற தூண்டுகைகள் திறமையின் குறைபாட்டுக்கு வழி வகுக்கின்றது.

## பரிசுகளும் தண்டனைகளும் (Rewards and punishments)

நடத்தையில் பரிசுகள், தண்டனைகள் ஆகியவற்றின் ஆதிக்கம்பற்றிய பெருமளவு ஆய்வுப் பணிகள் கடந்த அரை நூற்றாண்டில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வாய்வுகளில் சில வற்றைப்பற்றி இங்குக் காண்போம். கண்ணாடியில் படத்தைப் பார்த்து வரைதல் (mirror-drawing) சோதனையில் பரிசுகளும் தண்டனைகளும் தூண்டுகைகளாகப் பயன்படுத்தி அது கற்றலை எவ்வாறு பாதிக்கின்றன என ஆராயப்படுகின்றது. இதில் தண்டனையானது ஒரு தனியனது துலங்கல் சரியற்றது என அறிவிக்கின்றது. சரியான துலங்கல் எதுவென்று அது காட்டுவதில்லை. மறுபுறம், சரியான துலங்கலுடன் இயைபுடைய பரிசு, சரியான துலங்கலை அமைப்பதில் பெரு மதிப்புடையதாக இருக்கின்றது. சரியான துலங்கல்களுக்குப் பரிசுகளும், தவறான துலங்கல்களுக்குத் தண்டனைகளும் திறமையான கற்றலுக்கு வழி வகுக்கின்றது. நீண்ட நாள்களுக்கு முன்னர் ஹாமில்டன் (Hamilton) என்பார் நிலைமைக்குத் தக்கவாறு ஒரே பருப்பொருள் சார்ந்த தூண்டல் ஒரு பரிசாக அல்லது தண்டனையாகப் பயன்படுத்தப்படலாம் என்று காட்டினார். எடுத்துக்காட்டாக, ஒரு தவறிழைக்கும்போது ஒலிக்கும் மணியோசை ஒரு தண்டனையாகப் பயன்படுத்தப்படுகின்றது. இவ்வாறு ஏற்படும்பொழுது தனியன் மணியின்மேல் ஒரு எதிர்மறையான மனப்பான்மையை வளர்த்துக் கொள்கின்றான். அவன் மணியோசை எழுவதை விரும்புவதில்லை. மேலும், அவனுடைய குறிக்கோள் மணியோசை எழாமல் பார்க்க முயற்சி செய்வதாகும். மறுபுறம், மணியோசை ஒரு பரிசாகப் பயன்படுத்தப்படும்போது மணியைப் பற்றிய மனப்பான்மை முன்னையதிலிருந்து மாறுபடுகின்றது. அவன் மணி ஒலிப்பதை விரும்புகின்றான். மேலும், அதை ஒலிக்கச் செய்ய மிகுதியான முயற்சி எடுத்துக்கொள்கின்றான். எனவே, ஒரே பருப்பொருள் சார்ந்த தூண்டல் நிலைகளுக்குத் தக்கவாறு தவிர்க்கப்படும் ஒன்றாகவும் அல்லது அடைய முயற்சி செய்யும் ஒன்றாகவும் கருதப்படுகின்றது.

பணம் சார்ந்த (monetary) பரிசின் விளைவுகளைப்பற்றி அறிய ஆய்வுப் பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. மேயர் (Meier) என்பார் பணம் அல்லது கற்கண்டு வழங்கியபொழுது உளத்திறம்பற்றார் குறைவுடைய (mentally retarded) குழந்தைகள் படிக்கும் திறனில் மேம்பட்டுள்ளனர் என்று குறிப்பிட்டுள்ளார். இந்தக் குழந்தைகள் பணத்தைக் கொடுத்து அதற்குப் பதிலாகக் கற்கண்டைப் பெறுகிறார்கள். மாறாக, தொழில்

துறைக் குழுக்களில் உற்பத்தியின்மேல் பணம் சார்ந்த பரிசின் விளைவு வேறு வகையாக இருக்கின்றது. பல காரணங்களான, தவிர்க்க முடியாத உற்பத்தித் தரத்தின் அதிகரிப்பு, ஒருவேளை நேரக்கூடிய வேலையாட்களின் ஆட்குறைப்பு, பொருளாதார அழுத்தத்தினால் (depression) ஏற்படக்கூடிய ஊதிய துண்டிப்பு மேலும் மிக முக்கியம் வாய்ந்ததான தொழிற்சாலையின் முதனிலைக் குழுக்களின் சமூகத் தரங்கள் போன்ற பல்வேறு காரணங்கள் அனைத்தும் தொழிற்சாலையில் பணத் தூண்டுகைகளைப் (money incentives) பயனற்றதாக்குகின்றன.

## புகழ்ச்சியும் இகழ்ச்சியும் (Praise and reproof)

புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகியவற்றின் ஆதிக்கத்தை ஆய, ஆராய்வுப் பணிகள் பல மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஹர்லாக் (Hurlock) (5) என்பார் ஒரு கணக்குச் சோதனையில் இகழ்ச்சியைவிட புகழ்ச்சி ஒரு மிகுதியான வலுப்படுத்தும் தன்மையான மதிப்பினைக் கொண்டிருப்பதைக் கண்டார். நான்கு குழுக்கள் பயன்படுத்தப்பட்டன. ஒவ்வொன்றும் சோதனையில் ஒரே தொடக்கச் சராசரி எண்ணிக்கையளவைக் (score) கொண்டதாக இருந்தது. ஒரு குழு அதன் நல்ல பணிக்காகப் புகழப்பட்டது. இரண்டாம் குழு அதன் குறைந்த பணிக்காக இகழப்பட்டது. மூன்றும் குழு ஒரு கட்டுப்பட்ட குழுவாகப் பயன்படுத்தப்பட்டது. கட்டுப்பட்ட குழுவுக்குத் தூண்டுகைகள் கிடையாது. மேலும், மற்றக் குழுக்களுக்குத் தூண்டுகைகள் அளிக்கப்பட்டதை இக் குழு அறியாது. நான்காம் குழு புறக்கணிக்கப்பட்ட குழுவாகக் குறிக்கப்பட்டது. இந்தக் குழு சோதனைக் குழுக்களுக்குத் தரப்பட்ட புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும் கேட்டது. ஆனால், இந்தக் குழுவிற்கு எவ்விதத் தூண்டுகையும் கொடுக்கப்படவில்லை. கட்டுப்படுத்தப்பட்ட குழுவிலும் புறக்கணிக்கப்பட்ட குழுவிலும் எல்லாவிதமான வேறுபாடும் காட்டவில்லை என்பது காணப்பட்டது. புகழ்பெற்ற குழு வியக்கத்தக்க வகையில் நன்றாகச் செய்திருந்தது. இக் குழு 75 சதவீதம் முன்னேற்றமடைந்தது. இதற்கு மாறாக இகழ்ச்சிக்குட்பட்ட குழு 16 சதவீத முன்னேற்றத்தை மட்டுமே காட்டியது. புகழ்ச்சிக்குட்பட்ட குழுவின் மீச்சிறு விகிதமும் (critical ratio) இகழ்ச்சிக்குட்பட்ட மீச்சிறு விகிதமும் மிகக் குறிப்பிடும்படியாக அமைந்திருந்தது. எனவே புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய தூண்டுகைகள் சோதனைச் செயல் நிறைவேற்றத்தினை அதிகரிக்கச் செய்தது. ஆனால், இகழ்ச்சியுடன் ஒப்பிடும்போது புகழ்ச்சி எனும் தூண்டுகை மிக மேலானதாக அமைகின்றது.

இதுபோன்றே செயல் நிறைவேற்றத்தில் சோதனையின் முடிவுகளை அறிந்துகொண்டு செயல் புரிதலின் பயன்பற்றிய சோதனை ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. முடிவுகளைப் பற்றிய அறிவினைப் பெற்ற குழு முயற்சிக்கு முயற்சி செயல் நிறைவேற்றத்தில் முன்னேற்றமடைந்ததை ஆராய்வுகள் காட்டின.

எனவே, பரிசுகளும், தண்டனைகளும் ஏற்பின்மையையும் அல்லது புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் மிகப் பெரும் வலுப் படுத்தும் தன்மை மதிப்பினைக் கொண்டு இருக்கின்றது. இத் தூண்டுகைகள் குழந்தைகளையும், வயது வந்தவர்களையும் சமூகத் தரங்களுடன் ஒத்தியல உதவி செய்கின்றது. இதனால் உடன்பாடு, பரிசுகளுக்கு அல்லது ஏற்புக்கும், மன நிறைவுக்கும் வழிவகுக்கின்றது. இதற்கு மாறாக, உடன்பாடின்மை தண்டனை அல்லது ஏற்பின்மைக்கும் தன்மனக் குறைபாட்டுக்கும் (self-dissatisfaction) வழி வகுக்குகின்றது. பண்படாக் குழுக் களிலும், மிக உயர்வான பண்பாடமைந்த குழுக்களிலும் உள்ள மனித சமூகத்தின் அனைத்துப் படிகளிலும் இம் முறைகளால் சமூகவயநிலை அடையப் பெறுகின்றது.

## போட்டியும் ஒத்துழைப்பும் (Competition and co-operation)

ஒரு சிக்கல் நிறைந்த சமூகத்தில் அவற்றின் புலனீடான இயக்கத்தில் உந்துக்களையும் தூண்டுகைகளையும் வேறுபடுத்துதல் எளிதான ஒன்றல்ல. கல்லூரியில் நுழையும் ஒரு மாணவன் பல்வகையான உந்துக்களினாலும் தூண்டுகைகளினாலும் கடின மாக உழைக்கலாம் அல்லது உழைக்காமலிருக்கலாம். ஒரு தொழிலுக்குத் தன்னைப் பயிற்சி செய்து கொள்வதற்காக அல்லது மிகையாகக் கல்வியறிவு பெறுதலின் மூலம் அதிகப் பணம் திரட்டு தவதற்காக ஒரு மாணவன் கல்லூரில் சேரலாம். ஒரு மிகை யாகக் கல்வியறிவு பெற்ற மனிதனாக ஆவதன்மூலம் சமூகத்தின் ஏற்பினையும், சமூக மதிப்பையும் திரட்ட நினைக்கின்றான். ஒத்த வயதுடைய இளைஞர்களைச் சந்திக்க அல்லது ஏற்றத்தில் உயர் வானவரும் மிகப் பண்பாடுடையவருமான மக்களைச் சந்திப்பதாக அவனுடைய ஊக்கி அமைகின்றது. இதன் விளைவாக ஒரு சமூகச் செயற்புரிவில் ஊக்கிகளின் தனிச் சிறப்பினையும், தூண்டுகை களின் தனிச் சிறப்பையும் கூறுவது இயலாத ஒன்று அல்லது அவசியமற்ற ஒன்றாகும். ஒரு தனியன் தோட்ட வேலையில் ஈடுபடுவது அண்டையர் வீட்டுத் தோட்டத்தைவிட அவனுடைய தோட்டம் அதிகமான மக்களைக் கவர்தற்காக அல்லது தோட்

டப் போட்டியில் முதல் பரிசினைப் பெற விரும்பும் தூண்டுகையின் காரணத்தினலாகும். எனவே, தன்னைப் பிறர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற விருப்பம் ஏற்படும்பொழுதும், ஏற்றத்தில் முன்னேறும்பொழுதும் போட்டி, ஓர் ஊக்கியின் (motive) அடிப்படையில் அமைந்திருக்கின்றது. அல்லது, போட்டியில் வெற்றி பெற விரும்பும்பொழுது அல்லது அதிகப் பணம் ஈட்டும் பொழுது அது ஒரு தூண்டுகையின் காரணமாக இருக்கலாம்.

போட்டி என்பதன் பொருள் மற்ற மனிதனின் செயல் நிறைவேற்றத்தின் விரைவுக்கும் தன்மைக்கும் ஏற்ப, சமநிலை அடைய அல்லது அதனை மீறிச் செல்லப் போராடுதல் ஆகும். அல்லது ஒருவருடைய முன்னைய சொந்தச் செயல் நிறைவேற்றத்தை மேம்பாடடையச் செய்து கொள்ளுதலாகும். அடிப்படைச் சிறப்பியல்பு இங்கு என்னவெனில் ஒருவன் என்ன செய்தானே அல்லது மற்றவன் என்ன செய்தானே அதைவிடச் சிறப்பாகச் செய்தல் ஆகும். சமூக வாழ்க்கையில் இஃது ஒரு மிகவும் சக்தி வாய்ந்த தூண்டுகையாகும். குறிப்பாக, இக் கால மேற்கத்திய சமூகத்தில் போட்டி ஒரு மிக முக்கியமான பங்கினைப் பெறுகின்றது. மேற்கு ஐரோப்பா, அமெரிக்க நாடுகளிடையேயுள்ள மிகுதியான அளவு செழிப்பாக இருப்பது மற்ற மக்களுடன் போட்டியிடுவதும் அவர்களைவிட நன்ருகச் செய்தலுமான மிக வலிமை வாய்ந்த ஊக்கியின் காரணத்தினலாகும்.

## போட்டியும் எதிர்ப்பும் (Competition and rivalry)

நாம் போட்டிக்கும், எதிர்ப்புக்குமுள்ள வேறுபாட்டினைக் கண்டறிய வேண்டும். எதிர்ப்பு, மற்றொரு மனிதனுடைய ஆற்றலுக்குச் சரிசமமாக அல்லது மீறுவதாக உள்ள ஓர் உந்தாக இருக்கின்றது. உடன் பிறப்பு எதிர்ப்பு (sibling rivalry) வீட்டினுள் மிகவும் முக்கியமானதும், தலைசிறந்த குறிப்பிடும்படியான நிகழ்வாக இருக்கின்றது. இடைவிடாமல் சகோதரர்களும் சகோதிரிகளும் எதிராளிகளாவதோடு ஒருவர்க்கொருவர் மேம்பாடடைய முயற்சிக்கின்றனர். இவ்வாருகவே பழம் இந்தியச் சமூகத்தில் ஒரு தனி மனிதனின் பல மனைவிகளிடையே ஒரு பெருமளவு எதிர்ப்புக் காணப்பட்டது. போட்டிக்கும் எதிர்ப்புக்கும் உள்ள வேறுபாடு யாது?

சாதாரண மொழியிலும் சமூக உளவியலிலும் நாம் இவ்விரு கலைச் சொற்களுக்குமிடையே எவ்விதத் தனிச் சிறப்பினையும் கூறுவதில்லை. இருப்பினும், இவ்விரு கலைச் சொற்களுக்குமிடையே

ஒரு தெளிவான தனிச் சிறப்பினை வெளியிடுதல் மிக நலமாக இருக்கும். இங்கு, எதிர்ப்பு என்ற கலைச் சொல் ஒரு மனிதன் அல்லது குழு எதிராளியை நசுக்க முயற்சிக்கின்ற நிலைமைகளுக்கு உட்பட்டதாகக் கருதப்படுகின்றது. வேறு வகையாகக் கூறினால், அவர்கள் மேம்படச் செய்வதன்மூலம் எதிராளியை மிஞ்ச முயற்சிக்காமல், எதிராளியைக் கவிழ்ப்பதன் மூலம் மீறிச் செல்ல முயற்சிக்கின்றனர். எனவே, எதிர்ப்பில், ஒருவனுடைய செயல் நிறைவேற்றத்தினை மேம்பாடடையச் செய்வதன் மூலம் மற்றவனைவிட மேலானவனாக ஆக முயற்சி மேற்கொள்ளப்படுவதில்லை. ஆனால், மற்றத் தனியனை அல்லது குழுவை ஆட்கொண்ட நிலையிலிருந்து இடம்பெயரச் செய்வதன் மூலம் ஒருவன் மற்றவனைவிட உயர்ந்தவனாக ஆக முயற்சி செய்கின்றான். ஒருவனைவிட மற்றவன் உயர்ந்தவனாக ஆக ஒரு தனியன் அல்லது குழுவின் செயல் நிறைவேற்றத்தை மேம்பாடடையச் செய்யும் முயற்சிக்குப் போட்டி என்ற கலைச் சொல் உட்படுத்தப்படுகின்றது. அநேகமாக இந்த இரண்டுக்குமுள்ள ஓர் இரண்டாவது தனிச் சிறப்பு இரு தனியன்கள் அல்லது குழுக்கள் இயங்குகின்ற சமூகத்தொடர்பு எல்லையின் அடிப்படையில் கூறப்படலாம். எதிர்ப்பு என்பது நேருக்கு நேர் உறவுத் தொடர்புக்கு உட்பட்டிருக்கின்றது. ஆனால், போட்டி என்பது தனிமுறைச் சார்பற்றதாக இருக்கின்றது. போட்டி, பொறாமைக்கும் பகைமைக்கும் வழியமைப்பதில்லை. ஆனால் எதிர்ப்பு, தவிர்க்க முடியாதவாறு இவ்விரண்டுக்கும் வழிவகுக்கின்றது. இதன் எதிர்ப்பு ஒருவனை முடிவாக வல்லந்தத்துக்கு (violence) வழியமைக்கின்றது. முதல் குறிக்கோள் மற்றவரது அல்லது மற்றக் குழுவின் தன்மதிப்பினை மற்றவர்க்கு முன்னால் தாழ்த்துவதும் மேலும், முடிவான குறிக்கோள் எதிராளியை ஒழித்தலாகும். எனவே, மனித உறவுத் தொடர்புகளின் வல்லந்தமற்ற தன்மையை (non-violence) இலட்சியமாகக் கொண்ட ஒரு சமூகத்தில் எதிர்ப்புக்கே இடமில்லை. ஆனால், இங்குப் போட்டிக்கு மிகுதியான அளவு இடமுள்ளது.

## போட்டியின் இரு வகைகள் (Two types of competition)

போட்டியைப் பொறுத்த அளவிலும்கூட நாம் இரு வகைகளாக வேறுபடுத்தலாம். இது மற்றவருடன் போட்டியிடுவதும் தன்னிடத்துள்ள போட்டியிடலும் ஆகும். தன்னிடத்துள்ள போட்டியில், குறிக்கோள் என்னவெனில் நேற்று எவ்வாறு ஒருவன் இருந்தானோ செய்தானோ அதைவிட இன்று நன்றாக இருத்தலும் நன்றாகச் செய்தலும் ஆகும். மற்றத் தனியன் அல்லது குழுவுடன் போட்டியிடுதலைவிட இது மிகவும்

உயர்ந்ததாக இருக்கின்றது. இஃது இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டத்தின் சத்தாகும். இங்குக் குழு இலக்குகளை அமைக்கின்றது. இதனால் இஃது ஐந்தாண்டுகளின் தொடக்கத்தில் இருந்ததைவிட ஐந்தாண்டுகளின் இறுதியில் நன்றாக இருக்கின்றது. எனவே, ஐந்தாண்டுத் திட்டம் தன்னிடத்துள்ள போட்டியின் அடிப் படையில் அமைந்த சமூகத் தூண்டுகையின் இயக்கத்தின் ஒரு சிறப்பான விளக்கமாக இருக்கின்றது.

பிறப்புடனும், சாதியுடனும் தன் மதிப்பு, ஆதிக்கம், செல் வம் ஆகியவற்றின் தொடர்புடைய சமூகங்களில் எவ்விதப் போட்டியும் பெரும்பாலும் இல்லாமலிருக்கின்றது. எவ்வளவு திறமையுடையவனாக ஒருவன் இருப்பினும் ஒருவனுடைய இடம் ஒருவனது பிறப்பால் முன்னரே எல்லைக்குட்படுத்தப்பட்டிருப்ப தால் இத் தூண்டுகை இயங்குவதில்லை. பிறப்பு ஒருவனது வாய்ப்புகளை எல்லைக்குட்படுத்துகின்றது. மேலும், இதனுடன் ஒருவனது முயற்சியையும் செயல் நிறைவேற்றத்தையும் எல்லைக்கு உட்படுத்துகின்றது. மேற்கத்திய ஐரோப்பிய நாடு களும் அமெரிக்காவும் புரோடஸ்டன்ட் சீர்திருத்தத்திற்குப் பின்னர் (Protestant Reformation) போட்டிக்கு ஒரு பெருமளவு பங்கினை அளித்துள்ளதை நாம் காண்கின்றோம். இங்கு ஒவ்வொரு மனிதனும் கடுமையாக உழைக்க முடிகின்றது, அதனால் தன்மதிப்பு, ஆதிக்கம், செல்வம் ஆகிய மேலான தகுதியை அடைய முடிகின்றது. சாதி, பால் (sex), சமயம் ஆகிய அனைத்து ஏலாநிலைகளையும் (disabilities) அகற்று தலின் மூலம் இந்திய அரசியலமைப்புப் போட்டிக்கு இடமளித் துள்ளது. போட்டி நாம் மேலே வரையறுத்த பொருளில் சான்றாக, மற்றவரைவிட நன்றாகச் செய்தல் அல்லது தனக்கு மேலாக நன்றாகச் செய்தல் என்பது எல்லைக்குட்பட்டது என்ப தும் எதிர்ப்பு, நாம் மேலே வரையறுக்கப்பட்ட பொருளில், ஒரு சக்திவாய்ந்த தூண்டுகையாக ஆகின்றது என்பதும் அறுதி யிட்டுக் கூறப்படுகின்றது. நிலமானிய முறைச் (feudal) சமூகத் தில், சாதிப் பற்றுள்ள சமூகத்தில் எதிர்ப்புக் காணப்படுகின்றது. தனியன்களது கொள்கையும், குழுக்களின் கொள்கையும், மற்ற வர்களைக் கீழ்த்தள்ளுதலும், மற்றவர்களை நசுக்குதலும் ஆகும். மறுபுறம் முயற்சியின் மூலமும், கடினமாக உழைத்தலின் மூலமும் மற்றவர்களுக்கு மேலாக மேன்மையடைதல் ஒரு பொறிநுட்பத் துறைச் சமூகத்தின் கொள்கையாகும். எனவே எதிர்ப்பு, சமூக நிலைகளின் ஒரு குறிப்பிட்ட அமைப்பினால் சரியமைக்கப்படுவ தாகும். மறுபுறம் போட்டி குறிப்பாக ஒருவனது முந்தைய செயல் நிறைவேற்றத்துடன் போட்டியிடும் வகையில் ஒரு

சமூகத்தரமாக ஆகின்றது. பெற்றோர்களும், ஆசிரியர்களும் அவனுடைய சொந்த முன்னைய செயல் நிறைவேற்றத்துடன் போட்டியிட ஒவ்வொரு குழந்தையையும் ஊக்குவிக்க வேண்டும்.

## போட்டியின் வளர்ச்சி (Development of competition)

சிறு குழந்தைகளிடத்துங்கூட நாம் போட்டியிடும் நடத்தையின் சான்றினைக் காணலாம். மற்றொரு குழந்தை அவனுடைய உடைமைகளை எடுத்துச் செல்லும் பொழுது வலுத்தாக்கற் செயல்கள் காணப்படுகின்றன. குழந்தையின் தன்வயத்தில் (self) பொம்மை (toy) ஒரு பங்காக அமைகின்றது. அதன் உடைமை மிகுதியான மன நிறைவினை அளிக்கின்றது. மேலும், ஒரு தோழன் பொம்மையை எடுத்துச் செல்ல முயற்சிக்கும் பொழுது குழந்தை வன்செயலுடையதாக ஆகின்றது. இரு குழந்தைகளுக்குமிடையே போராட்டமும் சண்டையும் ஏற்படலாம். இந்த நிலைமையில் போட்டியிடுபவனைவிட மேம்பாடு அடைதலுக்கு மேலாக ஒரு பொருளின் உடைமையை முயற்சி செய்து பெறுதல் அல்லது திரும்பப் பெறுதல் போட்டியின் சத்தாகும். இங்குக் கொள்கை என்னவெனில் பொருளை மற்றவர்களிடமிருந்து கவர்ந்து தனக்கு உடைமையாக்கிக்கொள்ளுதலாகும். தன் அண்ணனிடம் அல்லது சகோதரியிடம் ஒரு கவர்ச்சியான பொருளை அல்லது பொம்மையைக் குழந்தை பார்க்கும்பொழுது ஒரு சமநிலையற்ற ஒரு நிலை அமைக்கப் பெறுகின்றது. மேலும், பொருளைப் பறித்துச் செல்லுதலாகிய செயல் விறைப்புக் குறைப்பதாக இருக்கின்றது. மறுபுறம் பொருளைச் பறித்துச் செல்லும் செயல் மற்றத் தனியனிடத்துச் சமநிலையற்ற ஒரு புதிய நிலைக்கும், மனமுறிவுக்கும் (frustration) வழியமைக்கின்றது. மேலும், இதன் விளைவாகப் பொம்மையின் உடைமையைப்பற்றிய போராட்டம் எழுகின்றது. எனவே, இந்த முதல் ஆண்டிலுங்கூட குழந்தை இவ்வெளிய வலுத்தாக்குதல் பழக்கங்களைக் கற்கின்றது. போட்டி வீட்டில் உள்ள பெரியவர்களின் நடத்தையைச் சார்ந்தும்கூட இருக்கின்றது. பெற்றோர் மற்றக் குழந்தைகளைவிட நன்றாகச் செய்ய அவர்களது குழந்தைகளைத் தூண்டுகின்றனர். அவனுடைய விளையாட்டுப் பொருளை விட்டுக் கொடுத்த குழந்தை வலுத்தாக்குதலுக்கு ஊக்குவிக்கப்படுகின்றான். எனவே, குழந்தை மற்றக் குழந்தையினால் எடுத்துச் செல்லப்பட்ட பொருளைத் திரும்பப் பெறுதலுக்கு மட்டுமன்றிப் பெரியவர்களது ஒப்புதலை ஈட்டுவதற்காகவும்கூட வலுத்தாக்குதல் உடையவர்களாக இருக்கலாம். இவ் வழியில்தான் குழந்தை ஆதிக்கத்தின் (domi-

nation) நுண்முறையைக் கற்கின்றது. பிறரைக் கட்டுப்படுத்துவதில் மனநிறைவு அடைவதையும் அறிகின்றது. எதிர்ப்பு மனப்பான்மைகளும் அமைக்கப்படுகின்றன. போட்டி உயிரியல் அடிப்படைகளையும் பண்பாட்டு அடிப்படைகளையும் கொண்டது. உருவமைப்பிலும், வலிமையிலுமுள்ள வேறுபாடுகள் மேலும் மனப்பாங்கு, நுண்ணறிவு வேறுபாடுகள் ஆகிய அனைத்தும் போட்டியை வளர்க்கலாம். இக் காலச் சமூகத்தில் வலுத்தாக்கலும் வல்லந்தமும் மிகவும் பழமையான சமூகங்களில் பயன்படுத்தப்பட்டது போன்று ஒரே நோக்கத்துடன் பயன்படுவதில்லை. இங்கு மற்ற உயிரியல் உந்துக்களான பசி, தாகம், பால் ஆகியவற்றுக்கும் தலைமைக்கான உந்துக்கும் (drive for mastery) உள்ள ஒரு பெரும் வேறுபாட்டினைக் காணலாம். இக் காலச் சமூகத்தில் வலுத்தாக்குதலும் வல்லந்தமுமின்றித் தலைமைக்குப் பெருமளவு இடமுள்ளது.

வயதுடன் போட்டி வளர்ச்சியடைகின்றது என ஆய்வுப் பணிகள் காட்டியுள்ளன. கிரீன்பெர்க் (Greenberg) (6) என்பார் குழந்தைப் பள்ளியில் குழந்தைகள் கட்டை அமைக்கும் (block-building) விளையாட்டினை உற்று நோக்கியுள்ளார்.

## போட்டி

| வயது | இருப்பது% (present) | இல்லாமலிருப்பது% (absent) | வளர்ச்சி% |
|---|---|---|---|
| 2-3 | 0.0 | 89.5 | 10.5 |
| 3-4 | 42.6 | 55.6 | 1.8 |
| 4-5 | 69.2 | 23.1 | 7.7 |
| 5-6 | 75.4 | 15.8 | 8.8 |
| 6-7 | 86.5 | 5.4 | 8.1 |

மேலேயுள்ள அட்டவணையில் 3-4 ஆண்டுகள் வயதில் குழந்தைகள் விளையாட்டின் போட்டியில் வேறுபாடுகள் காட்டுவதை நாம் காணலாம். வயது அதிகரிப்புடன் வயதான குழந்தைகள் போட்டியிடும் நடத்தைக்குச் சான்றுகள் தருகின்றனர். போட்டி, இயக்கப் புலன்காட்சி நுண்ணறிவுத் துறைகளின் வளர்ச்சியைச்

சார்ந்து இருக்கின்றது. சமூகப் புலன் காட்சியினுல் மட்டுமே போட்டி எழலாம். எனவே, குழந்தை பள்ளிக்குப் புகும்பொழுது பெரும்பாலான குழந்தைகள் மற்றவர்களுடன் எவ்வாறு போட்டியிடுவது என்பதைக் கற்றுள்ளனர். சிறிது காலத்திற்கு முன் ஆல்போர்ட் (Allport) (7) என்பார் ஒரு தனியன் ஒரு குழுவில் பணிபுரியும் பொழுது சமூக எளிதாக்கம் (social facilitation) இருப்பதைக் காட்டினுர். டேஷில் (Dashiell) (8) என்பார் தனியன், தனியாக இருக்கும்போதுங் கூட சமூக எளிதாக்கம் இருக்கின்றது. ஆனுல், மற்ற அறைகளி லுள்ள மற்ற மனிதர்கள் ஒரே பணியைச் செய்கின்ருர்கள் என்று அறிந்திருக்கும்போது இஃது ஏற்படுகின்றது என்று காட்டியுள்ளார். இத்தகைய நிலைகளில் ஒரே பணியை ஒருவரும் செய்யாதிருக்கும் போதுகூட தனியன், தனிமையில் இருக்கும்போது நன்ருகப் பணி புரிகின்ருன். எனவே, மற்றவர்கள் பணிபுரிகின்ற காட்சி களும் ஒலிகளும் நமது பணியை வலியுறுத்துகின்றன. காட்சி களும் ஒலிகளும் இல்லாதிருக்கும் போதுங்கூட, ஆனுல் மற்றத் தனியன்கள் ஒரே பணிகளைச் செய்கின்ருர்கள் என்று அறியும் போது, இந்த வலியுறுத்தல் தன்மை (reinforcement) காணப் படுகின்றது. ஓர் எளிய விளக்கம் கொடுப்போமெனில், ஒரு தனியன் சைக்கிள் ஓட்டிச் செல்லும் பொழுது மற்ருெரு சைக்கி ளோட்டியைக் காண்கின்ருன். அவன் இவனுடன் போட்டியிட்டு அவனை மீறிச் செல்கின்ருன். இது மற்றத் தனியனைப் போட்டி யிடத் தூண்டுகின்றது. சைக்கிள் ஓட்டிகள் (cyclist) மோட்டாரோட்டிகளுடன்கூடப் (motorists) போட்டி யிடுவதையும், அவற்றை மீறிச் செல்லும்போது மிகவும் மகிழ்ச்சி யடைவதையும் நாம் காணலாம். வண்டியில் அமர்ந்திருக்கும் மக்கள் கிலியூட்டும் வகையில் வண்டியோட்டுவோர்(tonga drivers) ஒருவர்க்கொருவர் போட்டியிடுதல் ஒரு பழக்கப் பட்ட காட்சியாகும். ஆனுல், பெரும்பாலான வேளைகளில் ஒரு வண்டியை வாடகைக்கெடுத்த மக்கள், இவ் விளையாட்டினைத் துய்த்து மகிழ்கின்றனர். எனவே, பணிபுரிகின்ற மற்ற மக்களது காட்சிகளும், ஒலிகளும் தன்னுயர்வுக்கு (self-enhancement) நன்கு பணிபுரியுமாறு தனியன்களை எழுவிக் கின்றது. பார்வையாளர்களின் வருகை, விளையாட்டுகளிலும் விளையாட்டுப் பந்தயங்களிலும் (games and sports) போட்டியை உயர்த்துகின்றது. சில தருணங்களில் அவையோர் (audience) எதிராகப் பாதிப்பதோடு ஒரு தடையின் (inhibition) தோற்ற மாகவும் ஆகலாம்.

பள்ளிச் சிறுவர்களிடையே ஆய்வுப் பணிகளுங்கூட மேற்கொள்ளப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, ஹர்லாக் (Hurlock) (9) எனும் அம்மையார் கணக்குச் சோதனைகளைப் பயன்படுத்தி வயதிலும், தொடக்கத் திறனிலும் சமமாக உள்ள சோதனைக் குழுக்கள், கட்டுப்படுத்தப்பட்ட குழுக்களை மீறிச் சென்றதைக் கண்டார். போட்டியின் பிணைப்பினால் சிறுமியர், சிறுவர்களைவிடச் சிறிது பெருமளவு வெற்றிகளைப் பெற்றனரென்பது காணப்பட்டது. இதுபோன்றே இளைய சிறுவர்கள் பெரிய சிறுவர்களை விட வெற்றி பெற்றவராகக் காணப்பட்டனர். இறுதியாக, தொடக்கத்தில் தாழ்வான [inferior] சிறுவர்கள் போட்டியினால் பெரிதும் வெற்றியடைந்தனர் என்பது காணப்பட்டது. பெரும்பாலான வயதுவந்தவர்கள் அதிக அளவு வேலையில் எந்தத் தகுதியினைக் கொண்டுள்ளனரோ அந்த அளவுக்குப் பணிபுரிவதில்லை என்பது நன்கு அறிந்த உண்மையாகும். கிரீன் (Green) (10) என்பார் கெண்டை அடுக்குதலிலும் (spool packing) சீட்டு வகைப்படுத்துதலிலும் (card sorting) 80 ஆண்களையும், 80 பெண்களையும் ஆய்வு நடத்தினார். எண்மர் கொண்ட குழுக்களில் முன் அமர்ந்து அனைவரும் பணி புரிந்தனர். சிலர் எதிராக உள்ள குழுவுடன் போட்டியிடுமாறு அறிவுறுத்தப்பட்டனர். செயற்பழக்கத்தின் (practice) ஒரு விளைவாக அனைத்துக் குழுக்களும் முன்னேற்றமடைந்து காணப்பட்டன. அவர்கள் 196 கெண்டைகளுடன் (spool) தொடங்கினர். சோதனையின் முடிவில் கட்டுப்படுத்தப்பட்ட குழு 210 கெண்டைகளைச் செய்திருந்தது. போட்டியிடாத குழுக்கள் 219 கெண்டைகளையும் போட்டியிட்ட குழு 228 கெண்டைகளையும் செய்திருந்தது. கட்டுப்பட்ட குழுவுக்கும் போட்டியிட்ட குழுவுக்கும் இடையே குறிப்பிட்ட வேறுபாடு காணப்பட்டது. மற்றக் குழுக்களிடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் காணப்படவில்லை. இச் சோதனை கீழ்க்காண்பவற்றைக் காட்டியது. (1) செயற்பழக்கம் செயல் நிறைவேற்றத்தை முன்னேறச் செய்கின்றது. (2) மற்றவர்கள் பணி புரியும் காட்சிகளும் ஒலிகளும் சமூக எளிதாக்கல் (social facilitation) செயல் நிறைவேற்றத்தை முன்னேறச் செய்கின்றது. மூன்றாவதாகப் போட்டி, சமூக எளிதாக்குதலுக்கும் மேலாகச் செயல் நிறைவேற்றத்தின் முன்னேற்றத்துக்கு வழியமைக்கின்றது.

## ஒத்துழைப்பு (Co-operation)

போட்டிபற்றி நாம் கொண்டுள்ள அறிவினைப் போன்று ஒத்துழைப்பில் உள்ளடங்கிய உளவியல் செயன்முறையினைப்

பற்றிய நமது அறிவினைக் கொண்டிருக்கவில்லை. போட்டியையும் ஒத்துழைப்பையும்பற்றி மனிதவியலாரின் கள ஆய்வுகள் நமக்கு மிகுதியான அறிவை அளித்துள்ளன. பொதுவாக ஒத் துழைப்பு அடைய முயற்சித்த முடிவுகள் எல்லைக்குட்படாது இருக்கும்பொழுது எழுகிறது. ஆனால், போட்டி அடைய முயற்சித்த முடிவுகள் எல்லைக்கு உட்பட்டு இருக்கும்பொழுது எழுகின்றது. குழந்தைகள் விளையாட்டின் சோதனை ஆய்வுகள், எடுத்துக்காட்டாக, கிடைக்கக்கூடிய பொருள்களின் வகைகளும், குழந்தையின் வளர்ச்சியின் வயதும் ஒத்துழைப்பை நிருணயிப்ப தில் இரு காரணிகள் என்பதைத் தெரிவிக்கின்றன. ராஸ் (Ross) (11) என்பார் 2-3 ஆண்டுக் குழந்தைகள் கட்டைகளுடன் விளையாடும் பொழுதினைவிடக் களிமண்ணில் விளையாடும்போது மிக அடிக்கடி ஒத்துழைப்பு நடத்தையை வெளிக்காட்டினர் என்று அறிக்கையிட்டுள்ளார். மூன்று ஆண்டு வயதும் அதற்கு மேலும் உள்ள குழந்தைகளிடையே ஒத்துழைப்பு விளையாட்டுத் தெளி வானது என்பது காணப்பட்டது. எனவே, போட்டி ஒத்துழைப்பு ஆகிய இரண்டும் சரியாக ஒரே வயதில் அதாவது 3 ஆண்டு வயதிற்குப் பின்னர்க் காட்டப்படுவதை நாம் காணலாம்.

கிராஃபோர்டு (Crawford) (12) மனிதக் குரங்கு களிடையே ஒத்துழைப்பு நடத்தையின் ஒரு மிகவும் சுவையான ஆய்வினை நடத்தியுள்ளார். அவர் மூன்று பிரச்சினைகளை அம் மனிதக் குரங்குகளுக்குக் கொடுத்தார். முதல் பிரச்சினையில் இரு கயிறுகளுடன் ஒரு கனமான பெட்டி அளிக்கப்பட்டது. இந்தக் கனமான பெட்டியை அசைக்க இரு மனிதக் குரங்கு களின் கூட்டுறவு முயற்சி தேவைப்பட்டது. இரண்டாவது பிரச் சினையில், இரு செங்குத்தாக ஊசலாடும் கயிறுகள் ஒரே சமயத் தில் இழுக்கப்பட்டால் மட்டுமே உணவுப் பெட்டியின் கதவு திறக்கப்படும். மூன்றாவது பிரச்சினையில் பெட்டி இரண்டு கைப்பிடியினைக் கொண்டதாக உள்ளது. இரு வேறுபட்ட மனிதக் குரங்குகளால் கூட்டிணைப்பு வகையில் இவையிரண்டும் கையாளப்பட்டால் கதவு திறக்கப்பட்டு உணவுத் தட்டுப் பெறப்படும். தொடக்க நிலைகளில் ஒவ்வொரு மனிதக் குரங்கும் பெட்டிகளை இழுக்கப் பயிற்சி பெறுகின்றன. அடுத்தப்படியாக விலங்குகள் இணைகளாக வைக்கப்பட்டன. இதில் சமூக எளிதாக்கத்திற்கான சான்றுகள் காணப்பட்டன என்று கண்டு பிடிக்கப்பட்டது. விலங்குகள் இணைகளாக இருக்கும் போது ஒவ்வொரு விலங்கும் தனிமை நிலையில் இருக்கும் போது என்ன செய்திருக்குமோ அதற்கு மேலாக ஒரு கனமான பெட்டியை இழுக்க முடியும். ஆனால், மனிதக் குரங்குகள் ஒத்துழைக்கக் கற்ப

தில்லை என்பது கண்டுபிடிக்கப்பட்டது. கிராஃபோர்டு (Crawford) என்பார் விலங்குகள் ஒத்துழைப்புடன் பணிபுரிய எப்பொழுதும் கற்றிருக்கவில்லை என்று அறுதியிட்டுக் கூறுகின்றார். 12 அமர்வுகளுக்குப் (sessions) பின்னர் விலங்குகள் ஒரே காலத்தில் இரு பெட்டிகளை இழுக்கக் கற்றுக் கொண்டன. இது மூன்று வயதுக்குட்பட்ட குழந்தைகளின் இணைவிளையாட்டுச் செயல்புரிவைப் போன்றது. 35ஆவது அமர்வில் கிராஃபோர்டு (Crawford) கூட்டாளிகளுள் ஒருவர் இழுக்கத் தொடங்கும் போது இழு (pull) என்ற காதுக்குக் கேட்கக்கூடிய தூண்டலைக் (auditory stimulus) கொடுத்தார். 40ஆவது அமர்வில் விலங்குகளில் ஒன்று தன் கூட்டாளியிடமிருந்து பார்வைக் குறிப்புகளுக்குத் துலங்கக் கற்றுக் கொண்டது காணப்பட்டது. ஒரு கனமான பெட்டியை அசைப்பதற்கு இரு கயிறுகளையும் இழுக்க இரு மனிதக் குரங்குகளும் ஒத்துழைக்கக் கற்றுக் கொண்ட பின்னர் ஒரு கயிற்றைக் கொடுப்பதன் மூலம் இந்த நிலைமை மாற்றப்பட்டது. இங்கு மாற்ற விளைவு இல்லை என்று காணப்பட்டது. எனவே, இந்த ஆய்வின்படி ஒத்துழைப்பிற்குப் பார்வைக் குறிப்புகளுக்கும் செவிப்புலனுக்கும் குறிப்புகளுக்கும் கவனம் செலுத்துவது தேவைப்படுகின்றது. ஒரு பெருமளவு பயிற்சிக்குப் பின்னருங்கூட மனிதக் குரங்குகள் ஒரு கயிற்றினால் அவற்றினது செயல்களைக் கூட்டிணைப்புச் செய்ய முடியவில்லை. இதிலிருந்து ஒத்துழைப்பு ஒரு நீண்ட பிறப்பு மரபு வரலாற்றினை உடையதெனக் காட்டிடுகின்றது. நாம் ஒத்துழைக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தனியன்களைவிடக் குழுக்கள் அதிகமான சொற்களை அமைக்க இயலுகின்றது என்பதைச் சோதனை ஆய்வுகள் காட்டின (13).

அமைவு பெற்ற விளையாட்டுகளில் நாம் போட்டி, ஒத்துழைப்பு ஆகிய இரண்டும் இயங்குவதைக் காணலாம். குழுவினுள் ஒன்றுபட்ட முயற்சியும், ஒன்றுபட்ட குழுக்களிடையே போட்டியும் காணப்படுகின்றது.

எனவே, போட்டியும் ஒத்துழைப்பும் வயது, செயலறிவு, சமூகப் பயிற்சி, மனப்பான்மை ஆகியவற்றைச் சார்ந்திருக்கின்றது. மனிதவியலார்கள் வேறுபட்ட பண்பாடுகள் போட்டியும் ஒத்துழைப்புமாகிய செயல் புரிவுகளை வற்புறுத்துவதைக் காட்டியுள்ளனர். ஆதிக்கம் அல்லது தன்மதிப்புப் போட்டியிடும் தன்மையால் அடையப் பெற்ற இத்தகைய சமூகங்களில் போட்டி வற்புறுத்தப்படுகின்றது. க்வாக்கூடல் (Kwakiutl) பண்

படாக் குழுவினரிடத்தே மிகையான போட்டி காணப்படுகின்றது. நியூ மெக்சிகோவிலுள்ள ஸுனி இந்தியரிடையே (Zuni Indians of New Mexico) மிகச் சிறிது போட்டியே காணப்படு கின்றது. விருப்பப்பட்ட பொருள்கள் மிகவும் சிலவாக இருக்கும்போது குழந்தைகளிடையே போட்டியும் வலுத்தாக்கு தல் நடத்தையும் காணப்படுகின்றது. இக் கொள்கையை விரிவுபடுத்தினல் பல தனியன்கள் ஓர் எல்லைக்குட்பட்ட இலக் கினை அடைய விரும்பும்பொழுது போட்டி எழுகின்றது என்பது பொதுவாக வலியுறுத்தப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, குறைபாடுடைய மண்ணின் காரணத்தால் குறைந்த அளவு உணவுப் பொருள் பயிராகுதல் அல்லது நீர்ப்பாசன வாய்ப்புகள் இன்மை போன்ற இயற்கைக் குறைபாடுகளின் காரணத்தி னுலும் பொருள்கள் பற்ருக்குறைவு ஏற்படுகின்றது. பற்ருக் குறை பண்பாட்டினுல் எழுவது போன்றதாகவும்கூட இருக்க லாம். எடுத்துக்காட்டாக, தாள் செலவாணி (paper currency) அல்லது விருதுகளையும் (honours), பட்டங்களையும் (titles) கூறலாம். கல்விக்கான பரிசுகளும் ஒரு மனிதன் ஒரு கூட்டணி மட்டுமே வெற்றி பெற முடியும் அளவிற்கு அமைக்கப்பட்டு இருக்கின்றது. இருப்பினும், எந்த அளவுக்கு ஒரு சமூகம் போட்டியிடும் தன்மையுடையதாக இருக்கின்றது என்பது பொருள்களின் மிகையான அளவுடன் அல்லது பற்ருக் குறையுடன் தொடர்பு கொண்டதன்று என்று ஆய்வுகள் காட்டி யுள்ளன. எடுத்துக்காட்டாகக் கிழக்கத்திய கிரீன்லாந்தின் எஸ்கிமோக்கள் (Eskimo of Eastern Greenland) அரிதாக நன்கு உண்பதோடு பெரும்பாலும் பட்டினியின் (starvation) எல்லைக் கோட்டில் இருக்கின்றனர். இன்றும் அவர்களது சமூகம் மிகக் குறைந்த போட்டியிடும் தன்மையுடைய ஒன்ருக இருக்கின்றது. மறுபுறம், நியூ மெக்ஸிகோவின் ஸுனி இனத் தினர் (Zuni of New Mexico) ஏராளமான வசதியுடன் வாழினும் போட்டியிடும் தன்மையற்றவர்களாக இருக்கின் றனர். ஸுனிகளிடையே ஒரு தனியன் ஒரு பெருமளவு சொத் தினைச் சேகரித்தால் அவன் அவனுடைய செல்வத்தை ஒரு குளிர் கால விழாவில் அதனைப் பகிர்ந்தளிக்கின்ருன். எனவே, ஒரு குழு போட்டியிடுந்தன்மை உடையதா அல்லது போட்டியிடும் தன்மையற்றதா என்பதை நிருணயிப்பதில் குழுக்களிலுள்ள பண்பாட்டு வளர்ப்பும், சமூகத் தரங்களும் ஒரு மிகவும் முக்கிய மான காரணியாக இருக்கின்றது என்பது இயலுகின்றது.

போட்டியிடுந்தன்மையுடைய சமூகங்களில் தனியன்கள் அவர்களுடைய தகுதியை (position) அவர்களது சொந்த

முயற்சிகளால் நிலைநிறுத்த அல்லது முன்னேற்றப் போராடுகின்றார்கள். ஆனால், மிகையாகப் போட்டியிடுந்தன்மை உடைய சமூகங்களில் ஒரு பெருமளவு தனிமுறைக் காப்பின்மை (personal insecurity) காணப்படுகின்றது. க்வாக்கூடல் (Kwakiutl) இனத்தினரிடையே துணிவுள்ள மனிதன் தகுதி இழப்பினால், அவன் பெற்றதைவிட அதிகமான நன்கொடைகளைத் திரும்பக் கொடுக்கும் வரையிலோ அவனது எதிராளியைவிட தனி முறைத் துணிவில் பெருமளவு வீரச் செயல்களைக் காட்டும் வரையிலோ நிலையாக வெருட்டப்படுகின்றான். எனவே, க்வாக்கூடல் (Kwakiutl) மனிதர்கள் மிகவும் தன்முனைப்பு உடையவர்களாகவும் தாக்குதல் ஏற்பதில் விரைவுள்ளவர்களாகவும் மிகவும் வல்லந்தமுடையவர்களாகவும் இருக்கின்றனர். மேற்கு ஐரோப்பியச் சமூகத்திலும், அமெரிக்கச் சமூகத்திலும்கூடப் பெருமளவு போட்டியிடுந்தன்மைக் காணப்படுகின்றது. ஒவ்வொரு தனியனும் அண்டையர்களைவிட மேன்மை அடைய இடைவிடாது முயற்சி செய்கின்றனர். நியூகோம்பு (Newcomb) என்பார் எழுதுவது போன்று, 'நம்முள் பெரும்பான்மையோர் நமது சமூகங்களில் வெற்றிகளில், தனிமுறைச் செல்வாக்கில், திருமணத்தில், தொழிலில் அல்லது செல்வத்தில் நமது தகுதிகளைப்பற்றித் தாமாகவே நினைக்கின்றனர். மேலும், இத்தகைய சுய தீர்ப்புகள் போட்டியிடுந்தன்மையால் ஏற்படுத்தப்படுகின்றன. இந்தப் பிரிவுகளில் ஏதேனுமொன்றில் வெற்றி என்பது எல்லோராலும் அடையக் கூடிய ஒரு தகுதியை அடைதல் என்ற பொருளிலாகும். ஆல்ஃபிரெட் ஆட்லர் (Alfred Adler) போன்ற உள மருத்துவர்கள் மேற்கத்திய சமூகத்தின் உளவழி நரம்பு நோயினரிடத்தில் (neurosis) ஊக்கமின்மை உணர்ச்சிகளும், தாழ்வு உணர்ச்சிகளும் தலைசிறந்து விளங்குவதைக் கண்டாரென்பதில் வியப்பில்லை. போட்டி ஒரு சக்தி வாய்ந்த ஊக்குவியின் காரணமாக அமைகின்றது. ஆனால் போட்டியிடுந்தன்மையின் அடைவினைச் சார்ந்த வெற்றியின் அங்கங்களின் பெருமளவு எண்ணிக்கையில் எந்த அளவுக்குப் போட்டியிடுந்தன்மையுள்ள வெற்றிக்குப் பெருமளவு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளதோ அந்த அளவுக்குத் தோல்விக்கான வாய்ப்புகளும், வெருட்சிக் காப்பின்மைக்கான வாய்ப்புகளும் மிக அடிக்கடி நிகழ்வதாக அமைகின்றது (14).

க்வாக்கூடல் (Kwakiutl) சமூகத்தின் மற்றொரு சிறப்புக்கூறு பெருமளவு எதிர்ப்பு நிலவுதலாகும். ஒவ்வொரு தனியனும் அவனுடைய வாய்ப்புக் கேட்டினை ஒரு தாழ்வாகக் கருதுகின்றான். இஃது, இது போன்ற தாழ்வினை மற்றவர்

களுக்குக் கொடுப்பதன் மூலம் விடுவிக்கப்படுகின்றது. மேலும், மற்ற மனிதனின் வெற்றி அவனுடைய சொந்தக் காப்புக்கு ஒரு வெருட்சியாகக் கருதப்படுகின்றது. அதனுல் அவன் மற்ற மனிதனின் வெற்றியைக் குறைவாக எண்ண அல்லது மற்ற வன்மேல் பழி சுமத்த அல்லது மற்றவனது வெற்றியைத் தீங்கிழைத்து வீழ்த்த முயற்சி செய்கின்ருன். இத்தகைய மனப் பான்மைகள் போட்டிக்கும் எதிர்ப்புக்குமிடையே வேறுபடுத்த நமக்கு உதவிபுரிகின்றன. எதிர்ப்பு மேலே குறிப்பிடுவது போன்று மற்ற மனிதனைத் தாழ்த்துவதற்கு வழி அமைக்கின்றது. போட்டி எனும் கலைச் சொல் மற்றவர்களுடன் அல்லது தன் னுடன் ஒப்பிட்ட ஒருவனுடைய அடைவின் முன்னேற்றத்துக்கு வழியமைக்கும் செயல்களைக் குறிப்பிடுவதாக அமைக்கப்பட்டு உள்ளது. பின்னையது முன்னையதைவிட மிகவும் விரும்பத் தக்கதாக இருக்கின்றது. சமூக இசைவு, சமூக முன்னேற்றம் ஆகிய இரண்டு அக்கறைகளிலும் போட்டி வளர்க்கப்பட வேண் டும்; எதிர்ப்புத் தடை செய்யப்பட வேண்டும்.

தனியன்களது உரிமைகளும், பொறுப்புகளும் 'ஊழினுல்' (fate) நிருணயிக்கப் பெறுகின்றது என்று கருதும் ஒரு மனப் போக்குக் காணப்படுகின்றது. மிகவும் போட்டியற்ற தன்மை யுடைய 'படங்கா' பண்படாக் குழுவினுள் (Batonga tribe) சிறிதும் ஐயத்திற்கிடமின்றி மனிதன் அவனுடைய தகுதியை முன்னேறச் செய்ய பணி புரிகின்ருன். ஆனுல், மற்றத் தனியன் களுடன் அவன் போட்டியிடுவதில்லை. இம் மக்களிடையே ஒரு தனியனுக்கு எது நல்லதோ அது முழுக் கிராமத்துக்கும் நல்ல தாக இருக்கின்றது. அதனுல், எந்த அடைவும் குழு முழுமை யினுலும் பகிர்ந்து கொள்ளப்படுகின்றது. இதுபோன்று ஸுனிக் களிடையே (zuni] தனியனின் முயற்சியில் சிறிதளவு வேறு பாடே பெறப்படுகின்றது. உண்மையில் தனியன் அவனுடைய வெற்றிக்கு உறுதிப்படுத்தப்படுகின்ருன். ஒரு தனியன் ஒரு பெரும் சொத்தினை ஈட்டினுல் அவன் உடனடியாக அதனை நண் பர்களுக்கும் உறவினர்களுக்கும் பகிர்ந்தளிக்கின்ருன். இக் குழு வில் மிகுதியான தனித்த முயற்சியினைக் காட்டும் தனியன் ஒரு பிறழ்வான மனிதனுகக் கருதப்படுவதுடன் சூனியத்தை உடைய வனுகக் சந்தேகிக்கப்படுகின்ருன்.

இந்தியச் சமூகத்தில் சாதி ஒருங்கமைப்பின் உளதாம் தன்மை, சமூகத்தின் பிறப்பினுல் பெறுகின்ற ஒருவனுடைய தகுதியின் ஓர் ஏற்புக்கு வழியமைக்கின்றது. சாதி படி மரபினைக் பொறுத்தவரையில் ஒருவன் அவன் பிறந்த சாதிக்கு மேலா

கவோ அதற்குத் தாழ்வாகவோ சொல்ல முடியாது. ஆனால், போட்டிக்கு வாய்ப்பில்லை என்று பொருள் கொள்ள முடியாது. இருந்தபோதிலும், இந்தியச் சமூகத்தில் போட்டியை விட எதிர்ப்பு மிகவும் முக்கியப் பங்கினை வகிப்பது இயலுகின்றது. சாதியினால்மட்டுங்கூட சாதிக் குழுவிலுள்ள பல்வேறு தனியன்கள் தனித்த முயற்சியினால் உயர்ந்த ஏற்றத்தினை அடைகின்றனர். ஒருவனது சாதிப் பெயருக்குச் சில முன்னிணைப்பு அல்லது பின்னிணைப்பினைச் சேர்த்தலின் மூலம் முழுச் சாதிக் குழுவும் சமூகத் தகுதியில் முன்னேற்றமடைய இயலுகின்றது. குழு படிமரபில் முழு உறுதித்தன்மைக் காணப்படுகின்றது என்று உறுதியாகக் கூற இயலாது. விடுதலைப் போராட்டத்திலும், சுதந்திரம் அடைந்ததற்குப் பின்னரும் தனித்த முயற்சிக்கான வாய்ப்புத் திட்டமாக, மிகுதியாக இருக்கின்றது. ஆனால், நிலமான்யச் சமூகத்தினால் ஏற்படுத்தப்பட்ட எதிர்ப்பின் பழமைக் கோலம் இன்னும் நிலவுகின்றது. தொழிலுக்கான பெருமளவு வாய்ப்புகளுடனும் கல்விக்கான பெருமளவு வாய்ப்புகளுடனும் இந்தியச் சமூகம் எதிர்ப்புக்கான அதன் வலிமையான முன் முடிவினை முறியடிக்க முடியும் என்பது இயலுகின்றது. குறிப்பாக, வயது வந்தோர் தேர்ந்தெடுக்கும் உரிமையில் 'தாழ்ந்த' (lower) சாதியின் உறுப்பினர்கள் தற்போது தங்களது உறுப்பினர்களைச் சட்டமன்றங்களுக்கு அனுப்ப முடிவதோடு அவர்கள் அமைச்சர் குழு உறுப்பினர்களாக ஆகலாம் என்பதையும் நாம் காண்கின்றோம். ஆந்திர மாநிலத்தில் முதலமைச்சர், சாதியில் ஓர் ஹரிஜன் (harijan) ஆவார். இதன் காரணமாகத்தான் இன்று சாதிபற்றி இரு முரணான போக்குகள் இயங்கப்பெறுகின்றன. அரசியலமைப்பின் மூலம் சாதியுடன் தொடர்புகொண்ட அனைத்துத் தடங்கல்களும் இப்போது சட்டத்தினால் நீக்கப்படுவதால் முழுமையான சமநிலைபற்றிய போக்குக் காணப்படுகின்றது. மறுபுறம் தாழ்வுச் சாதியினர் சமநிலையை அடைவதற்கு இப்போது அரசியல் உரிமைகளைப் பயன்படுத்துதலின் காரணத்தினாலும், உண்மையில் மேலாண்மையைப் (supremacy) பயன்படுத்தலின் காரணத்தினாலும் சாதி, சில சமயங்களில் முன்பு இருந்ததைவிட இப்போது ஒரு வலிமை மிக்க ஆற்றலுடையதாக ஆகின்றது. அனைத்துச் சாதிக் குழுக்களும் சமமாக வலிமையுடையது என்று உணரும் போது தனித்த அடைவினைத் தொடர்வதில் சாதியிலுள்ள வேறுபாடுகள் ஓர் ஆற்றலாக இயங்குவதில்லை. நீண்ட காலத்துக்குப் பின்னர் தனியன் அவன் சேர்ந்த சாதியினால் மதிப்பிடப்படாமல் அவனுடைய திறமையினாலும் சிறப்பு இயல்புகளினாலும் மதிப்பிட இயலும். விரிவாகக் கூறப் போனால், இந்தியச் சமூகம் ஒருவனுடைய அடைவில் நம்பிக்கையற்ற

தன்மைக்கு வழியமைக்கும் ஏற்பின் மனப்பான்மையினைக் கைவிட வேண்டும். மேலும், மற்றத் தனியன்களின் அடைவுபற்றிய எதிர்ப்பு மனப்பான்மையுங்கூட நீக்கப் பெறுதல் வேண்டும். அப்பொழுது தனியனின் அடைவினுல் சமூகம் முழுவதும் பயன் அடைய இயலுகின்றது. போட்டியின் சிறப்பான அம்சங்களும், ஒத்துழைப்பின் சிறப்பான அம்சங்களும் தனியனின் முன்னேற்றத் திற்கும் சமூகத்தின் முழுமைக்கான முன்னேற்றத்திற்கும் அப் பொழுது பயன்படுத்தப்படுகின்றது.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. TROTTER, Fisher Unwin, 1916. — *Instincts of the Herd in Peace and War.*

2. MCDOUGALL, Methuen, 1908. — *Social Psychology.*

3. HAMILTON, 'The Effect of Incentives on Accuracy of Discrimination'. 1929, No. 103. — *Archives of Psychology.*

4. MEIER, 'Effect of Prizes in Increasing the World-Learning of Subnormal Children', 1935, 32. — *Training School Bulletin.*

5. HURLOCK,' 'Effect of Incentives upon the Constancy of the I.Q.', 1925, 32. — *Pedagogical Seminary.*

6. GREENBERG, 'Competition in Children', 1932, 44. — *American Journal of Psychology.*

7. ALLPORT F.H., Houghton Mifflin, 1924. — *Social Psychology.*

8. **Dashiell**, 'An Experimental Analysis of Some Group Effects', 1930, 25. — *Journal of Abnormal and Social Psychology.*

9. **Hurlock**, 'The Use of Rivalry as an Incentive', 1927, 22. — *Journal of Abnormal and Social Psychology.*

10. **Green**, 'An Experimental Study of the Effect of Team Work and non-Competition upon Motor Performance', Cited by Bird. — *Social Psychology.*

11. **Ross**, 'Some Traits Associated with Sibling Jealousy in Problem Children'. Cited by Bird. — *Social Psychology.*

12. **Crawford**, 'The Cooperative Solving of Problems by Young Chimpanzees', 1937, 14. No. 68. — *Comparative Psychology Monograph.*

13. **Watson**, 'Do Groups Think more Efficiently than Individuals?'. — *Journal of Abnormal and Social Psychology.*

14. **Newcomb**, Dryden, 1950. — *Social Psychology.*

# 11. சமூக மனப்பான்மைகள்: அவற்றின் வளர்ச்சியும் அளவிடலும்

## (SOCIAL ATTITUDES: THEIR DEVELOPMENT AND MEASUREMENT)

### சமூக மனப்பான்மைகளின் முக்கியத்துவம் (Importance of social attitudes)

சமூக மனப்பான்மைகள்பற்றிய பிரச்சினை தவிர, வேறு எந்தச் சமூக உளவியல் பிரிவும், 1920ஆம் ஆண்டுதொட்டு நம் கவனத்தை அதிகமாகப் பெறவில்லை எனக் கூறலாம். சமூக உளவியலில் ஒரு முக்கியமான பிரச்சினையாக இச் சமூக மனப் பான்மைகள் கருதப்படுகின்றன. தனியன்களிடையே சமூக மனப்பான்மைகளை உருவாக்குதல் சமூகவயநிலைச் செயன்முறை யின் விளைவாகும். இந்த மனப்பான்மைகள் தனியனின் சொல் லிலும், செயலிலும் வெளிப்படுகின்றன. ஒருவன் பிறருடனும் குழுக்களுடனும் இடைவினை புரிவது, பண்பாட்டு விளைவுகளுடன் தொடர்புகொள்ளுவது ஆகிய அனைத்திலும் நாம் சமூக மனப் பான்மைகளின் செல்வாக்கைக் காண்கின்றோம். பொருத்தமான சமூக மனப்பான்மைகளை அமைத்துக்கொள்வதிலிருந்து ஒருவன் ஹிந்துவாகவோ முகமதியனாகவோ கிருத்துவனாகவோ மாறு கின்றான். ஒரு காங்கிரஸ்காரராகவோ, ஒரு சமூக உடைமை அல்லது பொது உடைமையாளராகவோ திகழ்கிறான். மேலும், இவ்வாறு அமைத்துக்கொள்வதிலிருந்து ஒரு முதலாளியாகவோ அல்லது தொழிலாளர் தலைவனாகவோ ஆகின்றான். பிறவியி லேயே எவரும் மேற்கண்டவாறு பிறக்கவில்லை. பொருத்தமான சமூக மனப்பான்மைகளை உருவாக்கிக் கொள்ளுதல் மூலம் மேற்கூறிய பிரிவில் ஒருவனாக மாறுகின்றான். கடந்த 40 ஆண்டு களில் சமூக மனப்பான்மைகளின் உருவாக்கம், மாறுதல்கள், அளவீடு ஆகியவைபற்றி மிகுதியான ஆய்வுகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. மாதா கோயில், பள்ளி, அரசியல் கட்சி, பொரு ளாதாரத் திட்டங்கள், போர் இது போன்ற பிற நிறுவனங்களின் பால் மக்கட்குழு கொண்டுள்ள கருத்துகளைப்பற்றிய ஆய்வுகள் நடந்துள்ளன.

## வரையறை (Definition)

சில குறிப்பிட்ட மனிதர், குழு அல்லது நிறுவனம் ஆகிய வற்றின்பால் தனியன் கொண்டுள்ள பொருத்தப்பாட்டினை மனப் பான்மை என்று குறிப்பிடலாம். சூழ்நிலையின் சில அம்சங் களிடத்து மனப்பான்மையை உருவாக்கும்போது தனியன் செயல்படும் ஆயத்தத்தைக் காட்டுகின்றான். எதிர்வினைக்காலச் (reaction-time) சோதனைகளில், எதிர்வினைக் கால வேறுபாடுகள் தனியனின் மனப்பான்மையைச் சார்ந்துள்ளதாகக் கண்டுள்ளார் கள். இது தூண்டல்களை வேறுபடுத்தும் ஆயத்த நிலையாகவோ (புலன்சார்போக்கு-sensorial attitude) அல்லது ஒரு குறிப்பிட்ட தூண்டுதல் (இயக்கப்போக்கு-motor attitude) நிகழும்போது எவ் வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக நிகழும் எதிர் வினைஆயத்த நிலையாகவோ கருதப்படுகின்றது. இவ்வாறு ஒரு மனப் பான்மையானது குறிப்பிட்ட வழியில், குறிப்பிட்ட சூழ்நிலைகளில் செயல்படும் ஆயத்த நிலையில் அல்லது செயல்படும் நிலையில் உண்டாகின்றது. ஒரு மனப்பான்மை குறிப்பிட்ட எதிர்பார்த் தலை நிருணயிக்கின்றது. இந்த எதிர்பார்ப்புகளுடன் நிகழ்ச் சிகள் ஒன்றியிருக்குமாயின் அங்கு மன நிறைவு காணப்படுகின்றது. ஆனால், நிகழ்ச்சிகள் மனப்பான்மையினின்று முரண்பட்டு இருக்கு மாயின் அங்கு நிறைவின்மைக் காணப்படுகின்றது. இந்த அத்தி யாயத்தில், நாம் மனப்பான்மைகளைப்பற்றிப் பொதுவாக ஆரா யப் போவதில்லை. மனப்பான்மைகள் சூழ்நிலையின் சமூக அல் லது சமூகமற்ற அம்சங்களிடத்திலும் உருவாக்கப்பட முடியும். நாம் இப்போது சமூக மனப்பான்மைகளைப்பற்றியே, அதாவது சமூகத் தூண்டல் சூழ்நிலைகளில் உருவாக்கப்பட்ட மனப்பான் மைகளுடன் தொடர்பு கொள்வோம். எனவே, சமூக மனப் பான்மைகள் மக்களிடத்தோ மக்கட் குழுக்களிடத்தோ உருவக்கப்படலாம். மேலும், இது மக்களின் இடைவினையால் ஏற்பட்டவையிடத்திலும் உருவாக்கப்படுகின்றது. மக்களின் இடைவினையால் ஏற்பட்ட இந்த உருவாக்கமானது, பொறித் துறைச் சாதனங்களைப் போன்ற பருப்பொருளாகவோ ஒரு குழுவின் மதிப்புகள் அல்லது தரங்கள் போன்ற பருப் பொருளற்றவையாகவோ இருக்கலாம்.

## உடன்பாட்டு நடத்தைக்கு வழிவகுக்கும் மனப் பான்மைகள்

## (Attitudes leading to conforming behaviour)

வெவ்வேறு பண்பாட்டிலுள்ள மக்கள் விரும்பத்தகுந்த அல்லது விரும்பத்தகாதனவற்றில் உறுதியான மனப்பான்மை

களைக் கொண்டுள்ளதை நாம் காண்கிறோம். வேறு விதமாகக் கூறின், சமூக மனப்பான்மைகள் பயன் மதிப்புகளைக் (values) கொண்டிருக்கின்றன. இங்குக் குறிப்பிட்ட செயலைச் செய்தல் அல்லது செய்யாதிருத்தல் போன்ற ஆயத்தநிலை காணப்படுகின்றது. சான்றாக, வெவ்வேறு பண்பாட்டு மக்கள், எஃது உண்ணத் தகுந்தது? எந்த நேரத்தில் உணவு உண்ண வேண்டும்? என்பனவற்றைப்பற்றித் திட்டவட்டமான மனப்பான்மைகளைக் கொண்டுள்ளனர். ஆகவே, மனப்பான்மையானது மக்கள், குழுக்கள், பொருட்கள், நிறுவனங்கள் ஆகியவற்றிற்கு ஒத்தோ, எதிராகவோ ஒருவனை அமைக்கின்றது. எதனை விரும்பித் தேர்ந்தெடுக்க வேண்டும்; எதிர்பார்க்க வேண்டும்; விரும்பப்பட வேண்டும்? எவை தவிர்க்கபடல் வேண்டும்? என்பனவற்றைப்பற்றி மனப்பான்மைகள் வரையறுக்கின்றன. எனவே, விளைவின் அடிப்படையில் கருதுவோமாயின் ஒரு மனப்பான்மையானது குறிக்கோள் நோக்கினையுடையதாகும். மனப்பான்மைகளைக் சமூகத்தில் தோன்றும் ஊக்கிகளெனக் (sociogenic motives) கூறலாம். தனியன் ஒரு குழுவில் சமூகவயமாக்கப்படுவதிலிருந்து மனப்பான்மைகள் எழுகின்றன. நாம் மனப்பான்மைகளை மேற்போக்காகக் காணமுடியாதென்பது வலியுறுத்தப்பட வேண்டும். சமூக மனப்பான்மைகளைத் தனியனின் பேச்சு, நடத்தை இவற்றிலிருந்து மட்டுமே ஊகிக்க முடியும். சில சமூக உளவியலார்கள் மனப்பான்மைகளை 'உடன்பாட்டு நடத்தை' என்று குறிப்பிடுகின்றனர். எடுத்துக்காட்டாக, எப்.எச். ஆல்போர்ட் (F. H. Allport) (1) என்பார் சில எடுத்துக்காட்டாகக் கொள்ளக்கூடிய (typical) நிகழ்ச்சிகளில் தனியன்களின் பரவல் (distribution) 'ஜெ' ('J') என்ற வளைவைக் கொடுக்கின்றது என்று காட்டியுள்ளார். ஒரு குழுவின் பெரும்பான்மையான உறுப்பினர்கள் ஒரு குறிப்பிட்ட மனப்பான்மையை வெளிப்படுத்துவதனுல் வளைவானது ஒரு முனையில் குவிந்து காணப்படுகின்றது. குழுவின் எஞ்சியோரின் வளைவு மறுமுனை நோக்கி மிக ஒடுங்கிக் காணப்படுகின்றது. பிரிவின் அளவு அதிகமாயின் அங்குத் தனியன்களின் எண்ணிக்கைக் குறைவுபட்டு 'ஜெ' ('J') வளைவு காணப்படுகின்றது. கல்லூரி மாணவர்களின் உடுப்பு வகைகளை இதற்கு ஒரு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இன்று பெரும்பாலான மாணவர்கள் சட்டை அல்லது குர்தாவையும் (kurta) பைஜாமாவையும் (pyjama) அணிகின்றனர். காற்சட்டை (pants), வேட்டி அணியும் மற்ற வகையினரின் எண்ணிக்கை மிகக் குறைவேயாகும். ஆகவே, உடை வகைகளை 'x' அச்சிலும் உடை அணிவோரின் எண்ணிக்கையை 'y' அச்சிலும் அமைத்து, எக் குழு அதிகமான

எண்ணிக்கை கொண்டுள்ளதோ அதிலிருந்து வளைவைத்தொடங்கி வரைந்தால் 'ஜே' ('J') வளைவு கிட்டும். இது போன்றே நாம் ஒரு கோயிலின் அருகே நின்று கோயில் சாலை வழியே நடப்பவர்களின் எதிர்வினைகளைக் கவனிப்பின் இந்து மதத்தினரில் மிகப் பெரிய எண்ணிக்கையினர் அக் கோவில்முன் ஒரு விநாடி நின்று வழிபாடு செய்வதனையும் மேலும் மிகச் சிறிய எண்ணிக்கை யினர் இயல்பாகக் கடந்து செல்வதனையும் காணலாம். இது போன்றே சமூகத் தரநிலைகளின் உடன்பாடானது சமூக மனப்பான்மைகளின் வளர்ச்சியின் அடிப்படையில் அமைந்துள் ளது.

## சமூக மனப்பான்மைகளின் சிறப்புக் கூறுகள் (Distinguishing features of social attitudes)

சூழ்நிலையின் ஒரு குறிப்பிட்ட அம்சத்துடன் தொடர்பு கொண்ட சிறப்பான அல்லது நிலையான நடத்தை வகையினை நிருணயிக்கின்ற ஒரு மனப்பான்மை ஓர் உள்ளார்ந்த காரணி யாகும். எந்தெந்த ஒப்பளவைகள் மனப்பான்மையை உள் ளார்ந்த காரணிகளிலிருந்து பிற உள்ளார்ந்த காரணிகளை வேறுபடுத்துகின்றன? ஷெரீஃப் (Sherif) அளித்துள்ள சில ஒப்பளவைகள் மனப்பான்மைகளின் உள்ளார்ந்த காரணிகளைப் பிற உள்ளார்ந்த காரணிகளிலிருந்து பிரித்தறிய உதவுவதுடன் மனப்பான்மைகளின் சிறப்பியல்புகளை அறியவும் உதவுகின்றன. ஷெரீஃப் (Sherif) என்பாரின் கருத்துப்படி கீழ்க்காண்பவையே மனப்பான்மைகளின் சிறப்புக் கூறுகளாகும் (2.494):

1. மனப்பான்மைகள் உடன் பிறந்தவையன்று. தனியன் குழுவில் வளரும் போது அவை உருவாக்கவோ கற்கவோ பெறு கின்றன. இதன் விளைவாக மனப்பான்மைகள் உயிரியற் சார்ந்த ஊக்கிகளை அடிப்படையாகக் கொண்டிருப்பினும் அவை உயிரியல் சார்புடையன அல்ல. எடுத்துக்காட்டாக, உணவு வேட்கை உயிர்சார்ந்திருப்பினும் அரிசி உணவு அல்லது கோதுமை உணவின்பால் கொண்டுள்ள மிகை விருப்பம் குடும்பத்தில் எவ் வாறு ஒருவன் வளர்க்கப்படுகின்றானோ அக் காரணத்தால் உருவாகும் ஒரு மனப்பான்மையாகும். இந்தியாவின் தென் பகுதியில் உள்ள குழந்தைகளும், வெகுவாக அரிசி உணவை உட்கொள்ளும் மற்ற இந்தியப் பகுதியிலுள்ள குழந்தைகளும் கோதுமைபற்றிய மனப்பான்மையின்மீது மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டுமாயின், அக் குழந்தைகளுக்குக் கோதுமை உணவைக் குழந்தைப் பருவந்தொட்டே அளித்துப் பழக்கப்

படுத்த வேண்டும். ஆனால், தாயும் தந்தையும் இதனை உணவின் ஒரு பகுதியாக ஏற்ற பின்னரே குழந்தைகளும் அதனை ஏற்பர். ஆகவே, பெற்றோர்கள் உணவு குறித்துத் தம் மனப்பான்மைகளை மாற்றினாலொழிய குழந்தைகள் தங்கள் மனப்பான்மைகளை மாற்றிக்கொள்ள இயலாது.

2. மனப்பான்மைகள் ஏறத்தாழ நிலையானவை. மேலும், அவை நீடித்திருப்பவையாகும். இந்த மனப்பான்மைகள் உருவாக்கப்பட்டவையாதலால் அவை மாறுந்தன்மையினையும் பெற்றுள்ளன. இவை மாற்ற முடியாதனவல்ல. நாம் மனப்பான்மைகளுக்கு உடன்பட்டு நடப்பதால், சூழ்நிலைக்கேற்ப அவற்றை மாற்றியும் அமைத்துக்கொள்ளலாம். இதற்குமுன் அளித்த எடுத்துக்காட்டு மனப்பான்மைகள் மாறுவதுபற்றிய ஓர் உட்காட்சியினை நமக்குத் தருகின்றன.

3. மனப்பான்மைகள் அக-புறத் தொடர்பினை உள்ளடக்கியிருக்கின்றன. மனப்பான்மைகள் எப்பொழுதும் குறிப்பான சில மக்கள், குழுக்கள், பொருட்கள் அல்லது நிறுவனங்களின் தொடர்பிலேயே உருவாக்கப்படுகின்றன. ஆகவே, மனப்பான்மைகள் புறவயக் காரணிகளுடன் எவ்விதத் தொடர்புமற்ற அகக் காரணிகளல்ல. இதற்கு மாறாக அவை சூழ்நிலையின் சில அம்சங்களின் தொடர்பின் மூலமே எழுகின்றன.

4. மனப்பான்மைகள் தனியன்களையும் குழுக்களையும்பற்றி உள்ளடக்கியுள்ளன. ஒரு தனியன் வேறொரு தனியனிடத்துப் பகைமை மனப்பான்மையை வளர்க்கலாம். அல்லது அத் தனியன் உறுப்பினனாக உள்ள குழு முழுதையுமே வெறுக்கலாம். ஒரு குழுவிலுள்ள சிறுவர்கள் எதிர்க் குழுவிடம் (rival gang) வெறுப்பை வளர்க்கலாம். அவர்கள் எதிர்க் குழுவிலுள்ள ஒரு குறிப்பிட்ட தனியனை மட்டும் கொடியவனாகக் கருதாது அக் குழுவின் எல்லாத் தனியர்களையும் கொடியவர்களாகக் கருதலாம். இந்து மகா சபைக் கட்சியினனுக்கு இந்தியா, பாகிஸ்தான் அல்லது வேறு எங்கு இருக்கும் முகமதியனும் வெறுக்கப்படுபவனாகின்றான். இதுபோன்றே முஸ்லிம் லீக் கட்சியைச் சார்ந்தவனுக்கு ஒவ்வோர் இந்துவும் வெறுக்கப்படுபவனாகின்றான். ஓர் அமெரிக்கன் பொதுவுடைமை நாடுகளாகிய ரஷ்யா, சீனா ஆகிய நாடுகளை வெறுப்பதுடன், மேலும் கூட்டுச் சேராத நாடுகளும்கூட விரும்பத்தகாதவையாகின்றன. இவ்வாறு நம் சமூக மனப்பான்மைகள் தனியன்களை மட்டும் கொண்டமையாது பெரிய அல்லது சிறிய குழுக்களையும் கொண்டு அமைய

லாம். பொதுமையாக்கல் (generalisation) செயன்முறையின் விளைவால் எல்லா வெளிக் குழுக்களும் (out-groups) வலுத்தாக்குதல் செய்பவையாகவும், நேர்மையற்றவையாகவும், பிறவாகவும் கருதப்படுகின்றன. நாம் பின் பார்க்க இருப்பது போன்று, சமூக நடத்தையில் இஃது ஒரு முக்கியமான காரணியாகும்.

5. மனப்பான்மைகள் ஊக்குவித்தல்சார்-உணர்ச்சி இயல்புகளைக் கொண்டுள்ளன. நாம் முன்னர் கண்டது போல மனப்பான்மைகள் கற்கப்படுகின்றன. பின் எவ்வாறு மனப்பான்மைகளைப் பிற கற்றவற்றிலிருந்து வேறுபடுத்தி அறிய முடியும்? ஷெரீஃப் (Sherif) ஊக்குவித்தல்சார் உணர்ச்சி இயல்புகளைக் கொண்டுள்ளது என்று கருதுகின்றார். பிற கற்றவற்றைப் போலன்றி மனப்பான்மையானது நேர்நிலையான அல்லது எதிர் நிலையான குறிக்கோளை உடையது.

6. மனப்பான்மைகள் குழு உறுப்பினர்களால் பகிர்ந்து கொள்ளப்படுகின்றன. மேற்கண்ட எல்லா ஒப்பளவுகளும் (criteria) சமூக அல்லது சமூகமற்ற மனப்பான்மைகளுக்குப் பொருந்துகின்றன. சமூக மனப்பான்மைகளின் குறிப்பிடத்தக்க சிறப்புக் கூறுகள் (அ) அவை சமூக நிலைமைகளின் தொடர்பாக உருவாக்கப்படுகின்றன. (ஆ) அவை குழு உறுப்பினர்களால் பகிர்ந்துகொள்ளப்படுகின்றன. சில விதிவிலக்குக்குட்பட்ட வேறுபாடு கொண்ட உறுப்பினர்களைத் தவிர சமூக மனப்பான்மைகள் சமூக உறுப்பினர்களுக்கெல்லாம் ஏறத்தாழ, பொதுவாக இருப்பது ஓர் இன்றியமையாத அம்சமாகும். இதுவே குழுவின் பெரும்பான்மையோரின் உடன்பாட்டு நடத்தைக்கு வழிவகிக்கின்றது. இதனின்று வேறுபடுபவர் சிறுபான்மையினரே. குழுவின் தரங்களும் பயன்மதிப்புகளும் மனப்பான்மை உருவாக்கலின் வாயிலாக உள்வயமாக்கப்படுகின்றன.

மனப்பான்மைகளைக் கற்பதில் தனியனின் நடத்தையில் ஒரு தனிப்பட்ட தன்மை காணப்படுகின்றது. இது பிறவற்றைக் கற்கும் போது காணப்படுவதில்லை. குழுவின் புதிய உறுப்பினர்கள் பழமொழிகள், வரையறைகள் போன்ற குறுக்குவழிச் சொற்கள் மூலமாக மனப்பான்மையை உருவாக்குவதை நாம் காண்கிறோம். பழமொழிகள் சில மனப்பான்மைகளை ஏற்றுக்கொள்ளும்படி தூண்டுகின்றன. குடும்பத்திலுள்ள முதியவர் அல்லது முதிய உறுப்பினர்கள், மதிக்கத்தகும் நியதிகளை அழுத்தமாக எடுத்துரைப்பதனால் அக் குடும்பத்திலிருக்கும் வளர்ச்சி பெறும் இளைய உறுப்பினர்கள் அதனை ஏற்றுக்கொள்கின்றனர். இவ்வாறு

தனியனின் சொந்த அனுபவத்தால் மட்டுமேயல்லாமல் பழமொழிகளை ஏற்றுக்கொள்ளப்படுவதினாலும் சமூக மனப்பான்மைகள் உருவாகின்றன. ஒருவனது சொந்த அனுபவம் நடைமுறையிலுள்ள மனப்பான்மைக்கு எதிராக இருப்பினும், அவன் தனது அனுபவம் ஒரு விதிவிலக்காகக் கருதுவதோடன்றி உண்மையெனக் கருதமாட்டான். இதனைப்பற்றி இனி வரவிருக்கும் அத்தியாயத்தில் (14) ஒருபடிவார்ப்புப் பிரச்சினைகளைப்பற்றிப் (stereotypes of problems) பார்க்கும்போது இன்னும் மிகுதியாகக் கற்போம்.

பொதுவாக மனப்பான்மை என்பது ஒரு குறிப்பிட்ட நிலைமைகள், மக்கள், பொருட்கள் அல்லது நிலையான முறையிலுள்ள கருத்துகள் ஆகியவற்றிற்குத் தகுந்த முறையில் எதிர்வினையளிப்பதற்கான ஆயத்த நிலை என்று கூறலாம். இது போன்றே ஆயத்த நிலை கற்கப்பட்டதன் விளைவாகவும் பின்னர் இது வழக்கமான துலங்கல் முறையாகவும் ஆகின்றது. ஆகவே, மனப்பான்மையானது நன்கு வரையறுக்கப்பட்ட எடுத்துக்காட்டாகக் கொள்ளக்கூடிய பொருளாகவும் மேலும், மனிதனின் மனப்பான்மையில் நேர்நிலையிலிருந்து முழுதும் எதிர்நிலை ஆவதிலுள்ள வேறுபாட்டின் தன்மை அல்லது வலிமையைக் குறிக்கும். ஒருவனது மனப்பான்மையின் உறுதித் தன்மை ஒரு பிரச்சினை பற்றி அனுகூலமான தன்மையிலிருந்து அனுகூலமற்ற தன்மை வரையும் மாறலாம்.

## மனப்பான்மைகளின் செல்வாக்கைச் சார்ந்த சில பரிசோதனை ஆய்வுகள்

## (Some experimental studies regarding influence of attitudes)

சமூக மனப்பான்மை ஒருவனது நடத்தையின் சிறப்பியல்பையும் நிலையான தன்மையையும் நிருணயிக்கின்றது என்று பொதுவாகக் கருதலாம். மேலும், மனப்பான்மையின் அடிப்படையில் சூழ்நிலையின் தூண்டுதலுக்குச் சில தேர்ந்தெடுக்கப்பட்ட துலங்கல் முறை அமைகின்றது. இப் பிரச்சினைகளை ஆய்வதற்காக நடத்தப்பட்ட சோதனைகள் சிலவற்றை நாம் இங்குக் குறிப்பிடலாம். மார்க்ஸ் (Marks) (3) என்பார் நிற அடிப்படையில் எவ்வாறு மனப்பான்மைகள் பாதிக்கின்றன என்பது குறித்து ஆராய்ச்சி நடத்தியுள்ளார். அவர் நான்கு குழு நீக்ரோ மாணவர்களிடமிருந்து சரும நிறத்தைப்பற்றிய தர நிலையையும், கவர்ச்சித் தன்மையின் தர நிலையையும் பெற்றார். சமூகவியலாரான ஜான்சன் (Johnson) (4) நீக்ரோ இளை

யோர்கள் மாநிறமான சருமமுடையவர்பால் மிகையான விருப்பம் தெரிவிப்பதைக் கண்டார். மார்க்ஸ் (Marks) என்பார் தனியன்கள் அவர்கள் விரும்பும் சரும நிறத்தை ஒருவன் பெற்றிருந்தால் அவனது கவர்ச்சித் தரத்தைத் தனியன்கள் மிகைப்படுத்திக் கூறும் போக்கினைக் கண்டார். மேலும், ஒருவனது சரும நிறத்தைத் தரமிடுவதில் தனது நிறம் ஆதாரமாக அமைகின்றது. தரப்படுத்துபவரைவிட தரப்படுத்தப்படுபவர் வெளிறிய (light) சரும நிறத்தையுடையவராக இருப்பின் 'வெளிறியவன்' என்றும் தரமிடுபவரைவிட தரப்படுத்தப்படுபவர் கருமையாக இருப்பின் 'கருமையானவன்' என்றும் தீர்ப்பளிக்கப்படுகின்றது. இவ்வாறு ஒருவன் தன் சரும நிறத்தைத் தரமிடுவது அவன் எவ்வாறு பிறருடைய சரும நிறத்தைத் தரப்படுத்துகிறுன் என்பதைப் பொறுத்து அமைகின்றது. மேலும், கவர்ச்சித் தன்மையுடையவர் அனைவரும் வெளிறிய நிறமுடையவர் என்றும் கவர்ச்சித் தன்மையற்றவர் எனக் கருதப்படுபவர் கருப்பர் என்றும் தரமிடப்படுகின்றனர். மற்றோர் ஆய்வில் ஆஷ் (Asch) (5) என்பார் ரூஸ்வெல்ட் (Roosevelt), ஹிட்லர் (Hitler) ஆகிய இரண்டு அரசியல் தலைவர்களின் 'நுண்ணறிவுத் திறன்', உடற்கவர்ச்சி ஆகியவற்றைப்பற்றித் தரமீடுகளைப் பெற்றார். அமெரிக்க மாணவர்களில் பெரும்பான்மையோர் ரூஸ்வெல்ட் நுண்ணறிவுத் திறன், உடற்கவர்ச்சி ஆகியவற்றில் உயர்ந்த தரத்தினைப் பெற்றிருப்பதாகவும், ஹிட்லர் இவற்றில் கீழான தரத்தினைப் பெற்றிருப்பதாகவும் கருதினர். பெற்றோர், ஆசிரியர், மேலும் நாம் விரும்பும் தலைவர்கள் பால் அன்பும் விருப்பமும் வெளிப்படுத்துவதும், நாம் பகைக்கும் அல்லது வெறுக்கும் ஒருவர் பால் பகையை வெளிப்படுத்துவதும் நம் சாதாரண அனுபவமாகும். இதனை மேற்கூறிய ஆய்வு உறுதிப்படுத்துகின்றது. நம்மைச் சூழ்ந்துள்ள தனியன்களின் நடத்தை, விரும்பத்தகும் தன்மை ஆகியவைபற்றி மதிப்பீடு செய்வது நமது மனப்பான்மையால் பாதிக்கப்படுகின்றது. நாம் ஒருவனை விரும்பினால் அவனுடைய குற்றங்குறைபாடுகளைப் புறக்கணிக்கவும், அவனை வெறுத்தால் அவன் குறைகளை மிகைப்படுத்தவும் செய்கின்றோம். இதனால் தான் கீதையானது (Gita) நாம் பிறருடன் தொடர்பு கொள்ளும்போது அவர்களைப் போற்றுதலும் தூற்றுதலும் கைவிடப்படவேண்டும் என்று எடுத்துரைக்கின்றது. நம்முடைய விருப்பு வெறுப்புகளே நம் சார்பெண்ணத்துக்கு வழிவகுக்கின்றன. மேலே குறிப்பிட்ட ஆஷின் (Asch) அதே ஆய்வு ஜெர்மானிய மாணவர்களிடத்தே அதே நேரத்தில் நடத்தப் பெற்றிருந்தால் இதன் முடிவுகள் அவர் பெற்ற முடிவுகளுக்கு நேர் மாறுபட்டதாகவும் இருக்கலாம். போஸ்ட்மெனும் (Post-

man) அவருடைய சகாக்களும் (6) ஆல்போர்ட்-வெர்னன் (Allport-Vernon) மதிப்புகள்பற்றிய சோதனையைக் (test of values) கொடுத்துப் பின் இச் சோதனை வெளிப்படுத்தும் ஆறு மதிப்புகளைத் தழுவிய 36 சொற்களைக் கவனவீச்சறி கருவி (tachistoscope) மூலம் வழங்கினர். இச் சொற்கள் ஒவ்வொன்றும் மிகவும் குறுகிய காலத்துக்குக் காட்டப்பட்டன. இக் குறுகிய காலத்தில் இச் சொற்கள் அறிந்துகொள்ள முடியாவிட்டால், அறியும்வரை சிறிது சிறிதாகச் சொற்களின் தோற்றக் காலம் அதிகமாக்கப்பட்டது. சொல்லின் மதிப்பு ஆட்படுநர்க்கு அதிகமாக இருக்குமாயின் அச் சொல்லை அறிந்துகொள்ள குறுகிய காலமே தேவைப்படுகின்றது. மர்பி (Murphy) (7) என்பார் ஓர் அரசியல் பிரச்சினைபற்றி வன்மையானதும் மாறுபட்டதுமான நோக்குடைய மாணவர்க் குழு இரண்டைத் தேர்ந்தெடுத்தார். ஒவ்வொரு குழுவின் உறுப்பினர்க்கும், ஒரே நேரத்தில் ஒலிபெருக்கிகள் மூலம் இரு மாறுபட்ட கருத்துகளைக் கொண்ட செய்திகள் அறிவிக்கப்பட்டன. ஒரு நோக்குக்கு ஆதரவளிக்கும் தனியன்கள் ஏற்கத் தகுந்த அச் செய்தியை முக்கியமானதாகவும் மற்றதைப் பின்னணியாகக் கேட்கவும், கட்டுப்படுத்தப்பட்ட ஆட்படுநர்கள் இவற்றில் ஏதேனுமொன்றை முக்கியமானதாகவும் மற்றதைப் பின்னணியாகவும் சமமாகப் பிரித்து அச் செய்தியைக் கேட்கவும் செய்தனர். மனப்பான்மைகளை ஆராய ஒரு புறத்தேற்று முறையை உருவாக்கிய புரோஷன்ஸ்கியின் (Proshansky) (8) ஆய்வை இங்குக் குறிப்பிடலாம். அவர், தொழிலாளர்பால் பற்றுமிக்க மனப்பான்மைகளையுடையதும், தொழிலாளர்பால் பற்றற்ற மனப்பான்மைகளையுடையதுமான இவ்விரு தீவிரக்கொள்கையுடைய குழுக்களுக்குச் சமூகப் போராட்டங்களைச் சித்தரிக்கும் படங்களைக் கொடுத்தார். அவர்களை இப் படங்களை விவரிக்குமாறு கேட்டுக் கொண்டார். தொழிலாளர்பால் பற்றுமிக்க மனப்பான்மைகளையுடைய தனியன்கள், அரசாங்கம் இரக்கமற்றதென்றும், ஏழை மக்களுக்குச் சரியான வீட்டு வசதிகளை அளிக்கவில்லை என்றும் அழுத்தமாகக் கூறியதைக் கண்டார். மாறாக, தொழிலாளர்பால் பற்றற்ற மனப்பான்மைகளையுடைய தனியன்கள் இப் படங்களை அழுக்கு நிறைந்த மக்கள் மகிழ்ச்சியுடன் சேரிகளில் வாழ்வதைச் சித்தரிப்பதாக விளக்கினர். இறுதியாகக் குபானி (Kubany) (9) என்பாரின் சுவைமிக்க ஆய்வினைக் குறிப்பிடுவோம். அவர் தேசிய நல பாதுகாப்புத் திட்டத்துக்குச் (national health insurance scheme), சாதகமான நோக்குடையதாகக் கருதப்படும் முதுகலை சமூகப் பணி மாணவர்க்கும் இத் திட்டத்துக்கு மாறுபட்ட கருத்துக்கொண்டுள்ளதாகக் கருதப்படும் மருத்துவ மாண

வர்க்கும் இடையேயுள்ள வேறுபாடுகளைக் கண்டறிய விழைந்தார். அவர், தேசிய நலத் திட்டத்தைப்பற்றிய 50 வகைச் செய்தி உருப்படிகளைக் குறித்து அம் மாணவர்களின் கருத்துகளைப் பெற்ருர். அவர், ஆட்படுநர்களின் கருத்துகளின் இரு வளைவுகள் ஒரு சிறிதளவே ஒன்றின்மீதொன்று படிவதைக் கண்டார். குழு முழுதுக்குமான சராசரி 9.55ஆகவும் சமூகப் பணி மாணவர் குழுவின் சராசரி 14.64ஆகவும் இருக்கையில் மருத்துவ மாணவர் குழுவின் சராசரி 5.93ஆக மட்டுமே இருந்தது. இவ்வாறு நிகழ்ச்சி அனுபவங்களைத் தீர்மானிக்கும்போது மனப்பான்மையினுல் எவ்வாறு அவை பாதிக்கப்படுகின்றன என்பதை அறிய பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

## சமூக மனப்பான்மைகளை அளவிடல்
## (Measurement of social attitudes)

**சோதனை உருப்படிகளை** (items) **அளவிடல்**: ஒரு மனப்பான்மை என்பது ஒரு சூழ்நிலைப் போக்கில் நம்பிக்கை அல்லது நம்பிக்கையின்மை, ஏற்பு அல்லது ஏலாமை, ஆதரித்தல் அல்லது ஆதரியாமை ஆகியவற்றை உள்ளடக்கியதாகும். ஆராய வேண்டிய விவாதக் கருத்து (issue) அல்லது நிருவனம்பற்றிய பல தன்மைகளைக் குறிக்கும் குறுகிய கூற்றுகள் கொண்ட அளவுகோல்கள் அமைக்கப்பட்டு அவற்றின் மூலம் மனப்பான்மைகள் அளவிடப்படுகின்றன. கூற்றுகள் (statements) அனுகூலமான அல்லது அனுகூலமற்ற மதிப்பீடுகள் (estimates) ஏற்பு அல்லது தள்ளுதல் முதலியவற்றை உள்ளடக்கியுள்ளன. இதன் விளைவாக மனப்பான்மையை அளவிடலின் மையப் பிரச்சினையானது சோதனை உருப்படிகளைப் படியமைத்தலாகும் (scaling). வரிசையான கூற்றுகளை அமைத்து அவை அளவுகோலில் மனப்பான்மை அளவுகளாகக் கொள்ளப்படுகின்றது. ஒவ்வொரு கூற்றும் ஒரு நம்பிக்கையைக் குறிப்பிட்ட அளவிற்கு ஏற்பதை அல்லது தள்ளுவதைக் காட்டுவதாக அமையும். மேலும், ஒரு நம்பிக்கையை முழுமையாக ஏற்பதிலிருந்து முழுமையாக ஏற்காமை வரையுள்ள கூற்றுகள் ஒரு மனப்பான்மைத் தொடரில் (continuum) சம இடைவெளி உடையதாக இருக்குமாறு அமைத்தல் வேண்டும். இப் பகுதியில் இரண்டு வழிகளில் மனப்பான்மையை அளவிடும் முறைகள் சுருக்கமாகக் கூறப்படுகின்றன. அவை தர்ஸ்ட்டனின்(Thurstone) (10) சம இடைவெளி முறை (method of equal appearing intervals), லிக்கர்டின் (Likert) (11) கூட்டுத் தர அளவீட்டு முறை (method of summated ratings) என்பனவாகும்.

## தர்ஸ்ட்டனின் சம இடைவெளி முறை

(Thurstone's method of equal appearing intervals)

தர்ஸ்ட்டனின் முறையில் உள்ள கோட்பாடு என்னவெனில் ஒருவர் விரும்பும் அல்லது வெறுக்கும் ஒரு கூற்றைச் சுற்றிக் காட்டினால் அதனைக் கொண்டு அவரை அம் மனப்பான்மைத் தொடரில் குறிப்பிட்ட இடத்தில் காட்டுவதாகும். எனவே, மேற்கொள்ள வேண்டிய செயல் என்னவெனில் பொருத்தமான, வரிசையான கூற்றுகளைத் தேர்ந்தெடுத்து எந்த இடத்தில் ஒவ்வொரு கருத்தும் மனப்பான்மைத் தொடரில் அமைகின்றது எனக் காணுதலாகும். இப் பிரச்சினைபற்றிய அளவுகோல் அமைப்பதற்குத் தர்ஸ்ட்டன் செய்தித்தாள் கட்டுரை, சட்ட மன்ற நடவடிக்கைகள், சிறு வெளியீடுகள், உடன் பணிபுரிவோரின் கருத்துகள் ஆகிய பல வழிகளிலிருந்து கூற்றுகளைத் திரட்டினார். இதில் இன்றியமையாததாக இருக்க வேண்டியது என்னவென்றால், கூற்றுகள் யாவும் பல்வேறுபட்ட நோக்குகளும் அதாவது, முழுமையாக ஏற்றுக்கொள்வதிலிருந்து முழுமையாகத் தள்ளுவது வரையிலும் இருக்க வேண்டும். பொதுவாக இம் முறையில் மனப்பான்மை அளவுகோல் தயாரிக்க சுமார் 200-300 கூற்றுகள் சேகரிக்கப்பட வேண்டும். அடுத்தபடி இக் கூற்றுகள் பதிப்பிக்கப்பட வேண்டும். பின்னர் ஆராயவிருக்கும் பிரச்சினை குறித்துச் சேகரித்த கூற்றுகளில் பொருந்தாதவற்றையும் தெளிவற்ற கூற்றுகளையும் நீக்க வேண்டும். இவ்வாறே, ஒரே பொருள் கொண்ட கூற்றுகளில் ஒன்றைவிட்டு மற்றவற்றை நீக்கியும், ஆற்றல் இல்லாது காணும் கூற்றுகளை மாற்றியமைத்து அவற்றை மேலும் ஆற்றல் வாய்ந்தவையாக ஆக்க வேண்டும். ஒவ்வொரு கூற்றும் ஒரு கருத்தைப் பிரதிபலிப்பதாக இருக்க வேண்டுமேயன்றி உண்மை என்று கொள்ளப்பட்டதாக இருக்கக் கூடாது என்பது இன்றியமையாததாகும். ஒவ்வொரு கூற்றும் எளிமையானதாகவும், சுருக்கமானதாகவும், முழுமையானதாகவும், திட்டமானதும் நேர்முகமானதாகவும் அமைந்து, அவை ஏற்கப்படக்கூடியதாகவோ விலக்குவதாகவோ இருத்தல் வேண்டும். ஆய்வாளர் கூற்றுகளைச் சேகரிக்கும் பொழுதும் பதிப்பிக்கும் பொழுதும் அவர்தம் முற்சார்புகளைத் (prejudices) தவிர்க்க வேண்டும். அடுத்தபடியாகக் கூற்றுகளை மிகவும் அனுகூலமானதிலிருந்து மிகவும் அனுகூலமல்லாததுவரை தொடர்ச்சியாக வரிசைப்படுத்த வேண்டும். அவை சம இடைவெளியுடன் அமைக்கப்படுவதன் மூலம் அடிக்கோலைப் போன்ற அமைப்புடைய அளவு கோலானது அமைக்கப்பட முடியும்.

இவ்வாறு செய்வதற்காகத் தர்ஸ்ட்டன் ஒவ்வொரு கூற்றையும் ஒவ்வொரு துண்டுத் தாளில் தட்டச்சில் அச்சடித்துக்கொண்டார். அவர் பலரை நடுவர்களாக எடுத்துக்கொண்டு ஒவ்வொருவரும் இத் துண்டுத் தாள்களை 9 முதல் 11 பிரிவுகளாகப் பிரிக்கும்படி கேட்டுக்கொண்டார். உதாரணமாக, மதுவிலக்குப்பற்றியோ மொழிப் பிரச்சினையைப்பற்றியோ எடுத்துக் கொண்டால் அவற்றைப்பற்றிய கருத்துகளை (opinions) முழுமையாக ஏற்பதிலிருந்து முழுமையாக விலக்குவதுவரை பல நூற்றுக்கணக்கான கூற்றுகளைச் சேகரிக்கலாம். நடுவரை, மிகவும் அதிகமாக மதுவிலக்கை ஆதரிக்கும் கூற்றுகளை ஓர் அடுக்காகவும் (pile), அடுத்த முனையில் மதுவிலக்கைத் திடமாக வெறுக்கும் கூற்றுகளை 9ஆவது அல்லது 11ஆவது அடுக்கில் தகுந்தவாறு அமைக்கும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். பின் மற்றக் கூற்றுகளை இந்த இரண்டிற்குமிடையே அவற்றின் மதுவிலக்கை ஆதரித்தல் அல்லது வெறுக்கும் தன்மையின் அடிப்படையில் பாகுபடுத்தலாம். ஒவ்வொரு நடுவரும் இக் கட்டத்தில் கூற்றுகளை முழுவதும் மதுவிலக்கை ஆதரித்தல் அல்லது வெறுத்தல் என்ற அடிப்படையில் பிரிக்க முயல்கின்றனர்கள். நடுவர் தமது சொந்த விருப்பைக் காட்டுவதில்லை. மேலும், இக் கூற்றுகளை மனப்பான்மைத் தொடரில் சம இடைவெளியுடையனவாகவும் சமமாகத் தோன்றுவனவாகவும் 9 அல்லது 11 அடுக்குகளாகப் பிரித்தளிக்குமாறு கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்கள். தர்ஸ்ட்டன் சுமாராக 300 நடுவர்களைப் பயன் படுத்தினர். ஆனல், 20 அல்லது 30 நடுவர்களைக் கொண்டே நம்பத் தகுந்த மதிப்பீட்டை (evaluation) அடையலாம் என ஆய்வுகள் கூறுகின்றன. பெர்கூசன் 25-50-75-100-125-150-200 நடுவர்களைக் கொண்ட குழுவினைப் பயன்படுத்தினர். அவர் எண்ணிக்கை அதிகப்படுத்துவதனல் எப் பயனும் இல்லை எனக் கண்டுள்ளார் (12).

நடுவர்கள் கூற்றுகளைப் பல அடுக்குகளாகப் பகுத்தபின், கூற்றுகளின் மையப் (median) பயன் மதிப்பைக் (value) கண்டுபிடிக்க வேண்டும். இங்கு வேறொரு சிக்கல் என்னவென்றால், நடுவர்களின் சொந்த மனப்பான்மை மதிப்பீட்டைப் (evaluation) பாதிக்காவண்ணம் பார்த்துக்கொள்ளுதலாகும். ஒருவரை, கூற்றுகளை மதிப்பிடுமாறு கேட்டுக் கொண்டால் அவருடைய சொந்த மனப்பான்மை இங்குச் செல்வாக்குப் பெறுவதில்லை என்று தர்ஸ்ட்டன் கருதினர். தர்ஸ்ட்டன் இவ்வாறு கருதியது சரியாவென அறியப் பல ஆய்வுகள் மேற்கொள்ளப் பட்டன. இன்க்கிலி (Hinckley) (13) நீக்ரோ மாணவர்களைப்

பற்றி மனப்பான்மை அளவுகோலை அமைக்க, வடக்கிலுள்ள நீக்ரோ மாணவர்களுக்கும், வெள்ளை மாணவர்களுக்கும், தெற்கிலுள்ள சில வெள்ளை இன மாணவர்களுக்கும் 114 கூற்றுகளைக் கொடுத்து அவற்றை மதிப்பீடு செய்யுமாறு கேட்டுக்கொண்டார். மூன்று குழுக்களின் மதிப்பீட்டின் அடிப்படையில் மூன்று அளவுகோல்களை உண்டாக்கினர். அவர், இந்த மூன்று அளவுகோல்களும் அதன் பொருளடக்கத்தில் (content) ஒரே மாதிரி இருக்கக் கண்டார். ஒரே ஒரு கூற்றுமட்டும் இந்த மூன்று அளவு கோல்களிலும் அதே ஒத்த (same relative) இடத்தைப் பெறவில்லை என்று கண்டார். இவ்வாறு இப் பிரச்சினையில் உட்பட்ட நீக்ரோக்களும், நீக்ரோ மக்களுக்கு அனுகூலமில்லாத (unfavourable) வெள்ளையரும், நீக்ரோக்களுக்கு அனுகூலமான வெள்ளையரும் ஆகிய இம் மூன்று வேறுபட்ட குழுவினரும் ஒவ்வொரு கூற்றையும் (statement) மதிப்பீடு செய்யும்படி கேட்டுக் கொண்டபோது அவற்றை, ஒன்றைப்போலவே மதிப்பிட்டார். வேறு ஆய்வுகளும் இதுபோன்ற முடிவுகளையே கொடுத்துள்ளன. எனவே, தரமிடுபவரின் சம இடைவெளிகள் கொண்ட அளவுகோலை அமைக்கக் கூற்றுகளை மதிப்பிடும் பொழுது அவருடைய மனப்பான்மை பங்கு பெறுவதில்லை என்று முடிவுகட்டலாம்.

பர்கூசன் [12] சமூகத் தரங்களில் வேற்றுமையுள்ள வெவ்வேறு குழுக்கள் இக் கூற்றுகளை மதிப்பிடுவதனல் (evaluation) இம் மதிப்பீடுகள் பாதிக்கப்படுகின்றனவாவெனக் கண்டுபிடிக்க முயற்சித்தார். அவர் உதவி நிருவாகியின் மதிப்பீடு நமூனவை அமைக்க நிருவாகிகள், உதவி நிருவாகிகள், முகவர் (agents) ஆகியவர்களிடமிருந்து தீர்வுகளைப் பெற்றார். இக் குழுக்களில் உதவி நிருவாகிகள் அக் கூற்றுகள் தம்மைச் சார்ந்தமையால் தன்மையமானவர்கள், நிருவாகிகள் உயர் சமூக நிலையை உடைய குழுவினர், முகவர்கள் (agents) குறைந்த சமூக நிலைக் குழுவினர் என்பது தெளிவு. இருப்பினும் பர்கூசன் மூன்று குழுக்களும் ஒன்றுபோலவே தரப்படுத்தியமைக்கக் கண்டார். ஆகவே, நடுவர்களைக் கொண்டு சம இடைவெளி கொண்ட அளவுகோலை அமைக்கும் முறை திருப்திகரமானது.

இம் முறையில் அளவுகோல் மதிப்புகளை அமைப்பதில் உள்ள சிக்கலானது கால மாறுபாட்டாலும் பண்பாட்டுப் போக்கிலுள்ள மாறுபாடுகளாலும் பாதிக்கப்படுவதாகும். பார்ன்ஸ்வொர்த் (Farnsworth) (14) 1930-ல் போரைப்பற்றித் தயாரித்த பீட்டர்சனின் மனப்பான்மை அளவுகோல் உறுப்பு

களின் மதிப்பீட்டுகளுடன் (value) உறுப்புகளை மதிப்பிடுவதிலும், 1940-ல் அதே அளவுகோலுக்கு அடைந்த மதிப்புகளுக்கும் இடையேயுள்ள உடன் தொடர்பு முறை மிக உயர்ந்ததாக (.97) இருப்பதைக் கண்டார். இப் பிரச்சினை வேறுபட்ட பண்பாடுகளில் இன்னும் ஆராயவேண்டியுள்ளது.

ஒவ்வொரு கூற்றுக்கும் மையநிலை மதிப்பை நிருணயித்த பின், அடுத்துச் செய்ய வேண்டியது (problem) மனப்பான்மைத் தொடரில் உள்ள ஒவ்வொரு மதிப்பையும் எடுத்துக்காட்டும் (represent) சில கூற்றுகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். சுமாராக 20.25 உருப்படிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கும். தெளிவற்ற அல்லது பொருந்தாதவை எனத் தீர்மானிக்கப்பட்ட கூற்றுகளனைத்தும் நீக்கப்பட வேண்டும். இறுதியில், வரிசைப்படுத்தப்பட்ட மனப்பான்மைச் சோதனை பதிலளிப்போருக்குக் கொடுத்து அவர் ஏற்றுக்கொள்ளும் கூற்றுகளைக் கோடிட்டுத் தெரிவிக்குமாறு கேட்கப்படுகின்றார். இதில் அவர் அடைந்த எண்ணுனது (score), அவர் கோடிட்டுக் காட்டிய உறுப்புகளின் மதிப்பெண்களின் மைய நிலையாகும். இவ்வாறாக, ஆட்படுபவர், தமது ஏற்பு அல்லது மாறுபாடு என்னும் நிலையை ஒவ்வொரு கூற்றுக்கும் காட்ட வேண்டும். இப் பகுதியை முடிக்கு முன் கிறித்தவர் கோயிலைப்பற்றிய மனப்பான்மையைத் தர்ஸ்ட்டனின் அளவுகோல் எவ்வாறு பயன்படுகின்றது என்பதைக் காட்டச் சில எடுத்துக்காட்டுகள் கொடுத்து விளக்கலாம். இதிலிருந்து கத்தோலிக்கருக்குச் சராசரி மதிப்பு 2.90ஆகவும் புராட்டஸ்டன்டுகளுக்கு 3.97ஆகவும், யூதர்களுக்கு (Jews) 5.44ஆக இருப்பது தெரிகின்றது. இந்த அளவையில் குறைந்த மதிப்பெண், கிறித்துவர் கோயிலைப்பற்றி மிகுந்த அனுகூலமான மனப்பான்மையைக் குறிக்கின்றது. கோயிலுக்குச் செல்லும் கிறித்துவரின் சராசரி மதிப்பு 3.06ஆக இருக்க, கோயிலுக்குச் செல்லாத கிறித்துவர்களுக்கு 5.93ஆக இருந்தது. இச் சோதனையில் நம்பகக் கெழு (coefficient of reliability) ·80-க்கு அதிகமாகவும் முடிவுகளைத் தன்தரமீட்டுடன் (self-rating) தொடர்பாக்கிக் கண்ட பொழுது மதிப்பீட்டுக் கெழு ·67ஆக இருந்தது.

## லிக்கர்ட்டின் கூட்டு அளவீட்டு முறை
## (Likert's method of summated rating)

இம் முறை தர்ஸ்ட்டனின் முறையைக் காட்டிலும் மிகவும் எளிதானது. இம் முறையிலுங்கூட எடுத்துக்கொண்ட ஆயப்

படு பொருள்பற்றிய (issue) பல கூற்றுகள் சேகரித்தல் வேண்டும். ஆட்படுபவர், அவருடைய ஏற்றுக்கொள்ளும் மனப் பான்மைத் தன்மையை (degree) ஒவ்வொரு கூற்றுக்கும் 5-பிரிவு (5-point) அளவையில் காட்டுமாறு கேட்டுக்கொள்ளப் படுகின்றார். அதாவது, உறுதியான ஏற்பு, ஏற்பு, தீர்மானிக்க இயலாமை, ஏற்காமை, உறுதியாக ஏற்காமை என்பன. இவ் விடைகளுக்கு 5-ல் இருந்து 1 வரை அல்லது 1 முதல் 5 வரை அவற்றின் அனுகூலம் அல்லது அனுகூலமற்ற எதிர்வினைகளின் அடிப்படையில் எண் மதிப்புகள் கொடுக்கப்படுகின்றன. எனவே, அதிக எண் பெறுதல் அனுகூலமான மனப்பான்மையைக் காட்டு கின்றது. ஒரு குறிப்பிட்ட மனப்பான்மை அளவுகோலில் ஒரு தனியனின் மதிப்பெண்ணானது (score) அவர் ஒவ்வோர் உறுப்பிற்கும் அளித்த தர எண்ணின் மொத்தமாகும். இந்த அளவுகோலுக்குத் தர்ஸ்ட்டனின் அளவுகோலைப் போன்று ஒரு தன்னியல்பான (absolute) அலகு முறையைப் பெறவில்லை என்பது வெளிப்படை. மதிப்பெண் அதிகமானதா குறை வானதா என்பதிலிருந்து தனியனின் மனப்பான்மை மிகுந்த அனுகூலமானதா மிகுந்த அனுகூலமற்றதா என்பதன் தொடர்பு அடிப்படையிலேயே அவனுடைய மதிப்பெண்கள் (scores) விளக்கம் கூறப்படுதல் வேண்டும். இந்த முறையிலுங்கூட, முழுச் சோதனை கொண்டு பயனில்லாத உறுப்புகளை நீக்கும் விரிவான முறை கையாளப்படுகின்றது. இவ்வாறே உள்ளார்ந்த முரணில்லாத் தன்மை (internal consistency) நிலைநாட்டப் படுகின்றது.

லீக்கர்ட்டின் நுண்முறையை மேற்கொண்டு அடைந்த முடிவு களையும், அளவுகோல் அமைப்பதில் மிகவும் சிக்கலுள்ள தர்ஸ்ட் டனின் முறையை மேற்கொண்டு தயாரித்த அளவுகோலில் அடைந்த முடிவுகளையும் ஒப்பிடப் பல ஆய்வுகள் நடத்தப் பட்டன. இந்த இரு வேறுபட்ட அளவுகோல்களின் அளவை களுக்குமிடையே மிகுந்த உடன் தொடர்பு (.92) இருப்பதாகத் தெரிகின்றது. ஆனால், தர்ஸ்ட்டனின் அளவுகோல் தன்னியல் பான அலகு முறையையும், மிகுந்த நம்பகத்தையும் காட்டு கின்றது என்பதை உணருதல் வேண்டும். மேலும், லீக்கர்ட்டின் முறை நடுவர்களின் மதிப்பீட்டைப் பயன்படுத்தாவிடினும் நாம் அது மிகவும் பயனுள்ளது என்று காணுகின்றோம். லீக்கர்ட்டின் நுண் முறையில் வேறொரு பயன் என்னவென்றால் அது கருத்தின் (opinion) திட்பத்தையும் கருத்தின் போக்குத் திசையையும் காட்டுகின்றது.

## சமூகத் தொலைவு முறை
(Method of social distance)

இம் முறை போகார்டசினால் (Bogardus) (15) உருவாக்கப்பட்டது. நெருங்கிய சமூகப் பழக்கங்களில் பல்வேறு தரங்கள் இருப்பது நமக்குத் தெரிந்த உண்மையாகும். சான்றாக, அறிமுகமாகாதவர்கள் நம் இல்லத்திற்கு வருவார்களாயின் நாம் சில நிமிடங்களே அவர்களுடன் பேசுகிறோம். மேலும், நாம் அவர்களை வீட்டிற்குள் வருமாறு அழைப்பதில்லை. இதற்கு மாறாக, நெருங்கிய நண்பர்கள் நம்மைச் சந்திக்க வந்தால் அவரை அறைக்கு அழைத்துச் செல்கின்றோம். மேலும், பொதுவாக ஒரு கோப்பைக் காப்பியையும் அளிக்கின்றோம். அல்லது உணவு உண்ணவும் அழைக்கின்றோம். மேலும், பிற மதத்தவருடனும் அல்லது வேறுபட்ட வகுப்பு அல்லது பிரிவு மக்களுடன் செயல்படும்பொழுது நாம் வேறுபட்ட சமூக நெருக்க முறைகளையோ சமூகத் தொலைவையோ மேற்கொள்கின்றோம். பல வீடுகளில் உணவு சமைப்பவரைத் தவிர வேறு வேலையாட்களைச் சமயலறையில் அனுமதியாதது பழக்கமாகும். அதேபோல, வேறு வகுப்பு அல்லது குழு மக்களைச் சமயலறையில் அல்லது உணவு அருந்துமிடத்திலுங்கூட அனுமதிப்பதில்லை. உட்கார இடமளிப்பதிலும்கூட பிரிவு, வகுப்பு மற்ற வேறுபாடுகளின் அடிப்படையில் நடந்துகொள்கின்றோம். கீழான இனம் அல்லது வகுப்பாரைத் தரையில் அமருமாறும், பாய் அல்லது நாற்காலியில் மேல் வகுப்பு அல்லது பிரிவினரை அமருமாறு கேட்டுக்கொள்கின்றோம். மக்களுடன் கொள்ளும் வெவ்வேறு தொடர்பு முறையிலும், வேறு குழுவுடன் சமூக உறவு கொள்ளும் முறையிலும் ஒரு குறிப்பிட்ட சமூகத் தொலைவை மேற்கொள்கின்றோம். இதற்கு மிகவும் சிறந்த எடுத்துக்காட்டு இந்தியாவின் மிகவும் பழமையான சமூகத் தொலைவு கொள்கை நடைமுறையாகும். இப் பழக்கங்களின்படி, நகரங்களிலும் மிகவும் அதிகமாகச் சிற்றூர்களிலும் தாழ்த்தப்பட்ட குழு உறுப்பினர்கள் நகர் அல்லது சிற்றூர்களில் ஒதுக்குப் புறங்களில் வாழுமாறு செய்யப்படுகின்றார்கள். அண்மையில் தான் சமீப காலத்தில் மக்களின் மனப்பான்மை மாறுபாடு காரணமாகத் தாழ்த்தப்பட்ட குழு உறுப்பினர்கள் நகரின் எப் பகுதியிலும் வாழ அனுமதிக்கப்படுகிறார்கள். பெரும்பாலும் சிற்றூர்களில் இம் மாறுபாடு வர மிகவும் அதிகக் காலம் ஆகலாம். போகார்டஸ் சமூகத் தொலைவு அளவை முறையும் அதனால் பெற்ற முடிவுகளும் வேறு இடத்தில் விவரிக்கப்பட்டுள்ளது (அத்தியாயம் 14ஐப் பார்க்க).

## மனப்பான்மை உருவாக்கமும் மாற்றமும்
(Attitude formation and change)

### மனப்பான்மை மாறுதலை எடுத்துக்காட்டச் சில விளக்கங்கள்
(Some illustrations of attitude change)

அண்மை ஆண்டுகளில் உள்நாட்டு மக்களிடத்திலும் வேற்று நாட்டு மக்களிடத்திலும் விரைவாக மனப்பான்மைகளை மாற்றிக்கொள்வதில் விருப்பம் காணப்படுகின்றது. நாட்டிலுள்ள பல குழுக்களும், அரசும் பல்வேறு சிக்கல்களைப்பற்றிய மக்களின் மனப்பான்மைகளை மாற்றுவதில் ஈடுபட்டிருக்கின்றன. ஐக்கிய அமெரிக்காவில் 1930ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட பொருளாதார அழுத்தத்தை மாற்று விளைவிக்க உரூஸ்வெல்ட் தொழிலாளிகளைப்பற்றியும் உழவர்களைப்பற்றியும் மக்களின் மனப்பான்மையில் பெரிய மாற்றத்தைக் கொண்டு வந்தார். இதே போன்று இங்கிலாந்தின் தொழிலாளர் கட்சியும் மக்களிடையே உழைப்பாளிகளைப்பற்றிய மனப்பான்மையில் பெரும் மாற்றத்தைக் கொண்டு வந்தது. இந்தியாவில், ஆங்கில வல்லரசைப் பற்றி அசட்டுத் தன்மை அல்லது பயந்த மனப்பான்மையைப் பல்லாயிரக்கணக்கான மக்களிடமிருந்து மாற்றும் மிகப் பெரும் பணியைக் காந்தியடிகள் மேற்கொண்டார். அவர் இந்தியர்களிடம் தனியாட்சி (swaraj) மக்களாட்சிபற்றிய அனுகூலமான மனப்பான்மையையும் அயல் நாட்டு ஆட்சிபற்றிய எதிரான மனப்பான்மையையும் உண்டாக்கப் பல நுண்முறைகளையும் மேற்கொண்டார். அதே சமயத்தில் ஆங்கிலேயர்களின் மனப்பான்மையையும் மாற்ற முயன்றார். அதனால், அவர்கள் குடியேற்ற அரசுக்கு (colonialism) முடிவுகட்டவும், ஆயுதமில்லா அறப்போர் வீரர்களைக் (satyagrahis) கொடுமை செய்வதையும் மாற்றிக் கொண்டார்கள். மேலும் முகம்மதியர், தாழ்த்தப்பட்டோர் மற்றும் சிறுபான்மையினர் இடத்தில் இந்துக்கள் கொண்ட மனப்பான்மையை அனுகூலமான முறையில் மாற்ற முயற்சித்தார். இதுபோன்றே முஸ்லிம்களின் மனப்பான்மையையும் இந்துக்களுக்கு அனுகூலமான முறையில் மாற்ற முயன்றார். காந்தியடிகள் அரசியல், சமூகம், பொருளாதாரம், மதம், கல்வி இன்னும் பல்வேறுபட்ட துறைகளில் கொணர்ந்த மாற்றங்களை இங்குக் கூறுவது தேவையற்றது. நமது மனப்பான்மையை முழுவதும் விரிவாக மாற்றியதனால் நாடு விடுதலை அடைந்த ஆண்டிலிருந்து துன்பமான நிலைமைகளையெல்லாம் சமாளிக்கும் திறம் உள்ள நாடாக உருவாக்க முடிந்தது.

உலகிலுள்ள ஒவ்வொரு நாட்டு அரசும், மக்களின் மனப்பான்மையை மாற்றியமைப்பதில் சுறுசுறுப்பாக முனைந்துள்ளது.

சான்ருக, நன்கு முன்னேறிய நாடுகளான அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, ஜப்பான், உருசியா, மற்றும் வேறு நாடுகள் பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய ஆசிய நாடுகள் ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா ஆகியவற்றிற்கு உதவுவது தமது கடமை என்று எண்ணுகின்ருர்கள். இதன் மூலம் இந்த நாடுகள் பொருளாதாரத்தில் வளர்ச்சியடைய முடியும். இது மனித சரித்திரத்தில் முழுதும் புதிதான ஒன்று. கொள்ளையடித்தல், நாடு வென்று கைக்கொள்ளுதல், பிறநாட்டை ஆளுதல் மனப்பான்மையிலிருந்து மாற்றம் அடைந்து, பொருளாதாரத்தில் பின்தங்கிய ஏழ்மையுற்ற நாடுகளுக்குப் பொருளாதாரத்தில் முன்னேறவும், தன்னிறைவு பெறவும் உதவும் எண்ணம் வந்துள்ளது. எடுத்துக்காட்டாக இந்தியாவில் புதிய விவசாய முறைகளை, இரசாயன உரங்களைப் பயன்படுத்தல், கால்நடை பெருக்குதல், கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவற்றில் உழவர்கள், பாமர மக்கள் ஆகியோரின் மனப்பான்மையை மாற்றப் பல முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. இதே போன்று, முதலாளிகள் சுய நன்மைக்கு உழைக்கும் மனப்பான்மையை மாற்றி, நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்காகவும் பாடுபடும் மனப்பான்மையை வளர்க்கப் பல முயற்சிகள் கையாளப்படுகின்றன. இது போலவே பண்டம் வாங்குவோரிடமிருந்து கொள்ளை இலாபம் அடிக்காமல் இருக்கும் மனப்பான்மையை வணிகர்களிடம் வளர்க்கப் பல முறைகள் கையாளப்படுகின்றன. இவ்வாறு ஒவ்வொரு நாட்டிலும் மனப்பான்மையை மாற்ற விரைவான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இக் காலத்தில் துரிதமாக நடக்கும் சமூக மாற்றத்திற்குக் காரணம் என்னவென்ருல் அரசியல், பொருளாதாரம், பொறியியல் ஆகிய துறைகளில் நிகழ்கின்ற மாற்றமேயாகும். அரசியல் முறையில் (politically) குடியேற்ற நாட்டு ஆட்சி பழமையான முறை (out-moded) என்றும், ஒவ்வொரு நாடும் தனி அரசை அமைத்துக்கொள்ள உரிமை உள்ளது என்றும் உணரப் படுகின்றது. பொருளாதாரத் துறையில் ஏழ்மை வாய்ந்தவர்களும், குறைந்த வசதி கொண்டவர்களும் வசதியுடன் வாழ வழிவகுத்தல் வேண்டும் என்ற கொள்கையை ஒவ்வொரு நாடும் ஏற்றுக் கொண்டுள்ளது. இதன் விளைவாக, ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு குடும்பமும் மதிப்பிற்குரிய வாழ்க்கையை வாழ வழி செய்து அதன் மூலம் அவர்களின் வாழ்க்கைத் தரம் உயர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பொறித் துறையில் ஏற்பட்ட பெரும் முன்னேற்றத்தினுல் முழு உலகையும் மிக அண்மையில் கொண்டு வந்துள்ளது. உதாரணமாக, வானெ

லியின் மூலம் உலகின் ஒரு கோடியில் என்ன நடக்கின்றது என்று உலகின் மறுகோடியிலுள்ளவர் சில விஞடிகளில் அறியவும் பீரிட்டுப் பாயும் விமானங்கள் மூலம் சில மணி நேரத்திற்குள் உலகின் எந்தப் பகுதிக்கும் செல்லவும் முடியும் எண்ணத்திலும், பொறித் துறையிலும் ஏற்பட்டுள்ள இம் முன்னேற்றங்கள் உலகின் ஒவ்வொரு பகுதியிலும் மாற்றம் நிகழத் தூண்டுதல் செய்கின்றது. இதன் பலஞக, ஒவ்வொரு நாட்டிலும் மக்களின் நோக்கத்தை மாற்ற முயற்சி செய்து அதஞல் அவர்கள் தன்னம்பிக்கை வைக்கவும், அவர்களுடைய வாழ்க்கை நிலையை மாற்றி ஒரே நாட்டிலும் அல்லது நாடுகளுக்கிடையிலும் ஒரு குழுவுக்கும் இன்னொரு குழுவுக்கும் உள்ள வேறுபாடு குறைக்கப் பட்டுள்ளது.

## மனப்பான்மை மாறுவதில் உள்ள சிக்கல்கள் (The problem of attitude change)

நாம் முன்பு பார்த்தது போலவே, மனப்பான்மைகளை மக்கள் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அல்லது இடத்தில் உடன்பாடாகவோ எதிர்மறையாகவோ செய்யப்படும் ஆயத்த நிலையின் அடிப்படையிலேயே அறிய முடியும். மேலும், மனப்பான்மை உருவாக்கமானது ஒரு குறிப்பிட்ட நிலைமையில் நிலைத்த அல்லது சிறப்புக்குரிய முறையில் எதிர்வினையாற்றும் போக்கைக் கொண்டு வருகின்றது. இதஞல், மனப்பான்மை மாற்றம் என்பது தனியனின் செயல்முறையில் ஒரு பிரச்சினை அல்லது ஆயப்படு பொருளைப்பற்றி ஏற்படும் மாற்றமாகும். ஒருவரின் மனப்பான்மை ஓர் ஆயப்படு பொருளைப்பற்றிய கருத்து மாறியுள்ளதா என்று எப்படி அறிய முடியும்? என்று கேட்கலாம். மனப்பான்மை இருப்பதை அளக்கக் கையாண்ட முறைகளைப் பின்பற்றியே நாம் மனப்பான்மை மாற்றத்தையும் அளக்கலாம். மனப்பான்மை மாற்றம் என்பது ஓர் ஆயப்படு பொருளைக் குறித்து நாம் அனுகூலமில்லாமல் இருந்த மனப்பான்மை மாறி அனுகூலமாகவோ எதிர்மாருகச் செயல்படுவதையோ குறிக்கும்.

மனப்பான்மை உருவாக்கலும், மனப்பான்மை மாற்றமும் தானே பிறப்பது (self-generating) அன்று என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். மனப்பான்மை உருவாக்கமும் மாற்றமும் ஆளிடைத் தொடர்புகளை உட்கொண்டுள்ளது. அதஞல், மனப்பான்மை உருவாவதிலும் மாறுவதிலும் அகக் காரணிகளும் புறக் காரணிகளும் உள்ளடங்கியுள்ளன. அகக் காரணிகள் தனியன்களின் ஊக்கிகளையும் எண்ணங்களையும் பிற

வற்றையும் குறிக்கின்றன. புறக் காரணிகள் தனியனின் செயலறிவுக் குழுவில் பிறரிடமிருந்து பெறும் செய்தி மற்றும் பிறவற்றையும் குறிக்கும்.

**மனப்பான்மை மாறுவதற்குரிய நுண்முறைகள்** (Techniques for attitude change)

சமீபகாலத்தில் மனப்பான்மைகளை மாற்றுவதற்கான நுண் முறைகளை நிருணயிக்க பரிசோதனை முறைகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. விரிவான முறையில் கூறுவோமானால் மனப் பான்மை மாறுதலுக்குத் தூண்டச் செய்வதில் இரண்டு முறைகள் பயன்படுத்தப்படுகின்றன என்று சொல்லலாம். (அ) தனியன்களை வெளித் தூண்டுதலுக்கு உட்படுத்தி, சோதனையிடுபவர் தனியன் களிடம் ஏற்படும் மாற்றங்களை ஆராய முயன்றார். இச் சோதனை யின் அமைப்புப் பின்வருமாறு: ஒரு மனப்பான்மைச் சோதனை ஒரு குழுத் தனியன்களுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்களின் ஒரு குறிப்பிட்ட ஆயப்படு பொருள்பற்றிய மனப்பான்மை அளவைப் (measure) பெறப்பட்டது. எடுத்துக்காட்டாக, ஒரு குழுவினருக்குத் தாழ்த்தப்பட்டோரைப்பற்றிய மனப்பான் மையை அளக்க ஒரு மனப்பான்மைச் சோதனையைக் கொடுக்க லாம். அதன் பின்னர், முழுக் குழுவையும் ஒரு குறிப்பிட்ட அனுபவத்திற்கு விடப்படும். எடுத்துக்காட்டாக, ஒரு தாழ்த் தப்பட்டோர் சங்கத் தலைவரை (harijan sevak sangh) அழைத்துத் தாழ்த்தப்பட்டோரின் பிரச்சினைபற்றி ஒரு சொற்பொழிவாற்றச் செய்வது, தாழ்த்தப்பட்டோர் பணிச் சங்கம் ஹரிஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தச் செய்யும் முயற்சிகள் அல்லது அவர்களின் தாழ்ந்த சிற்றூரின் நிலை அதன் தூய்மையின்மை, அழுக்கு, கேவலமான ஏழ்மைநிலையில் அவர்கள் வாழும்நிலை, அவர்களை நல்வாழ்வுபடுத்த மேற்கொள் ளும் திட்டம், அவர்களின் கல்வி, வீடுகளில் முன்னேற்றம், வேலை செய்யும் நிலைகள், பிற குழுக்களுடன் கொள்ளும் சமூகத் தொடர்பும் பிறவும்பற்றிச் சித்தரிக்கும் படக்காட்சி ஒன்று காட்டப்படலாம். இவ்வாறு குழுவைக் குறிப்பிட்ட அனுபவத் திற்கு அல்லது தொடர்ச்சியான அனுபவங்களுக்கு உள்ளாக்கிய பின் ஒரு மனப்பான்மைச் சோதனை கொடுக்கப்படலாம். இந்த இரண்டு அளவைகளுக்குமிடையே ஏதாவது வேறுபாடுகள் இருக்கு மாயின் இந்த அனுபவத்தின் செல்வாக்கே மனப்பான்மை மாற் றத்தைக் கொண்டு வருவதைக் காட்டும். இதுபோன்ற வழியில், எடுத்துக்காட்டாக, விநோபா அவர்கள் ஒரு குறிப்பிட்ட இடத் திற்குச் செல்லத் திட்டமிடும் முன்னர், அவ்விடத்திலுள்ள

மக்களின் நிலம் வழங்கும் இயக்கத்தைப்பற்றிய மனப்பான்மையை அளக்கலாம். விநோபா அவர்கள் அவ்விடத்திற்கு வந்து சென்று ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்குப் பின் மறுபடியும் ஒரு மனப்பான்மைச் சோதனையைக் கொடுக்கலாம். இது விநோபாவின் ஆளுமைச் (personality) சொற்பொழிவு, நிலக் கொடை இயக்கத்தில் பணிபுரிவோர்களிடம் கொண்ட தொடர்பு ஆகிய இவை அவ்விடத்திலுள்ள மக்களிடையே எவ்வளவிற்கு நிலக் கொடை இயக்கத்தையும் பொறுத்த வரையில் மாற்றத்தை உண்டாக்கியுள்ளது என்று காட்டும்.

(ஆ) மனப்பான்மை மாற்றங்கள் ஏற்படுவதை ஆயும் இரண்டாவது முறை இடைவினை (interaction) நுண்முறையெனப்படும். இங்கு ஒரு சமூக அமைப்பில் தனியன் விடப்படுகின்றான். அங்கு அவனுக்கு மற்றையோரிடம் இடைவினை புரியும் வாய்ப்புக் கிடைக்கின்றது. மனப்பான்மை மாறுதல் ஆய்வுகளில் சிறந்தது நியூகோம்பின் பென்னிங்டன் (16) முறையாகும். இதில் மேற்கூறப்பட்ட முறை கையாளப்பட்டுள்ளது. பென்னிங்டன் கல்லூரி அமெரிக்காவில் சுமார் 250 மாணவியர்களைக் கொண்ட ஒரு சிறிய பெண்கள் கல்லூரி. இஃது ஒரு தனிமையான இடத்தில் அமைந்துள்ளது. இதன் பயனாக, மாணவியர்கள் வழக்கமான நகர அனுபவங்களுக்கு உட்படுவதில்லை. இப் பல்கலைக் கழகத்தின் அதிகாரிகளும் (authorities), ஆசிரியர்களும் சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளைப்பற்றி முற்போக்குக் கொள்கையுடையவர்களாகத் திகழ்கின்றனர். மாணவியர்கள் சமூகச் சிக்கல்களைப்பற்றித் தெளிவாக அறியச் செய்வது இக் கல்லூரியின் குறிக்கோள்களுள் ஒன்று. இம் மாணவியர்கள் பொருளாதார வசதியுடைய நகர்புறக் குடும்பங்களிலிருந்து வந்தவர்கள். எனவே, பல சமூக அரசியல் பிரச்சினைகளுக்கு அவர்களின் மனப்பான்மை பொதுவாகப் பழமை பேணும் கொள்கையுடையதுவாய் இருந்தது. நியூகோம்பு சமூகப் பிரச்சினைகளைப்பற்றி மாணவர்களின் மனப்பான்மையை அறிய ஒவ்வோர் ஆண்டும் சோதனைகள் கொடுத்து வந்தார். அவர் மேலும், பேட்டிகாணை (interviewing) நுண் முறைகளையும் பயன்படுத்தினார். இப் பிரச்சினைகளில் சில: வேலை கிடைக்காமை, பொது மக்களுக்கு உதவி (relief), தொழிலாளர் கழகம் இன்னும் இது போன்றவை. இவ்வாய்வுகள் தளர்ச்சியுற்றிருந்த 1930ஆம் ஆண்டுகளில் நடத்தப்பட்டவை. பெரும்பான்மையான மாணவர்கள் இப் பிரச்சினைகளுக்குப் பழமை பேணுவோர் நோக்கிலிருந்து முற்போக்கினர் நோக்கத்திற்கு மாற்றியதை நியூகோம்பு கண்டார். முற்போக்கு நோக்குடைய மாணவர்

களால் கவுரவம் தலைமைத் தாங்கும் பண்பு பெறப்பட்டுள்ளது அறியப்படுகின்றன. நிகழ்கின்ற இந்த விவாதத்திற்குரிய பிரச்சினைகளைப்பற்றிய மனப்பான்மை வேறுபாடுகள் புள்ளியியல் முறைப்படி நம்பக்கூடியவையாக இருந்தன. இருப்பினும், போற்றுமளவிற்கு மாற்றிக்கொள்ளாத மாணவியர்களும் இருந்தனர். மேலும், சிலர் இம் மாற்றத்தை எதிர்த்தினர். பெரும்பான்மையானவர்களிடம் மாற்றமும் சிறுபான்மையினரிடத்தில் இம் மாற்றத்திற்கு எதிர்ப்பும் நிலவுவதை எடுத்துக்காட்டுக் குழுக் கருத்துணர்வு (reference group concept) வாயிலாக விவரிக்கலாம் என நியூகோம்பு கூறுகிறார். முன்பு நாம் கண்டது போலவே ஒவ்வொரு குழுவும் அதனுடைய தரநிலையிலும் பங்கு அமைப்பிலும் அதற்கென்றொரு பொது மாதிரியைக் கொண்டு இருக்கும். மேலோங்கிய குழுவின் தரங்களிலிருந்து ஒரு தனியன் மனப்பான்மையை அடைகிறான். இப்பொழுது பழமை பேணுவோர் நோக்கிலிருந்து முற்போக்கினர் நோக்கிற்கு (liberal) மாறிய பொரும்பான்மையான மாணவியர்கள் எடுத்துக்காட்டுக் குழுவினராகின்றார்கள். மாறாக, மாற்றத்திற்கு எதிர்ப்புத் தெரிவிப்பவர்கள் குடும்பமாகிய எடுத்துக்காட்டுக் குழுவினால் வசப்படுகிறார்கள், வேறாகச் சொன்னால் கல்லூரிச் சமுதாயம் இவர்களுக்கு எடுத்துக்காட்டுக் குழுவாக அமைவதில்லை. இதன் விளைவாகக் கல்லூரியின் சமூகத்தரம் இவர்களின் மனப்பான்மையைப் பாதிப்பதில்லை. ஆக, நியூகோம்பின் ஆராய்ச்சி, தனியனின் மனப்பான்மையில் எவ்வாறு மாறுதல் ஏற்படுகின்றது என்பதைக் காட்டுகின்றது. கல்லூரிச் சமுதாயம் பலருக்கு எடுத்துக்காட்டுக் குழுவாக அமைகிறது. மேலும், அது சிலருக்கு அவ்வாறு அமைவதில்லை. இதன் காரணங்களைக் காண முயற்சித்தார். பெரும்பான்மையான கல்லூரி மாணவியருக்குக் கல்லூரிச் சமுதாயம் அடைக்கலத்திற்கு உரிய (belongingness) மனநிலையையும் தகுதி குறித்த உணர்வையும் அடைவையும் கொடுப்பதன் மூலம் பயன்விளையத் தக்கதாக இருப்பதைக் கண்டார். ஆகவே, அவர்கள் தாம் 'கல்லூரிக் குழுச் செயலில் கவுரவப்பட்டுவிட்டதாகவும்', அச் சமுதாய எதிர்பார்ப்புகளால் வசப்படுவதாகவும் கூறினார்கள். அதனால், கல்லூரிச் சமுதாயம் இவர்களின் வாழ்வில் மிகவும் செல்வாக்குள்ளதாக (influence) இருந்தது. மாறாக, மாறுபடாத தனியன்கள், 'மாணவர் செயல்களுக்குக் கருத்தில்லாதவர்களாக இருப்பதாகக் கூறினார்கள். மேலும், இத் தனியன்களில் சிலருக்கு வீடு, குடும்பம் ஆகியவற்றின் குறிக்கோள்களுக்கும் கல்லூரியின் குறிக்கோளுக்கும் இடையே முரண்பாடு இருப்பது காணப்பட்டது. ஒரு பெண். 'இங்கு என் துறை (faculty), குடும்

பக் குறிக்கோள் ஆகியவற்றின் முரண்பாடே எனது போராட்டமாகும்' என்று சொன்னுள். இவ்வாறு மனப்பான்மை மாறுவதில் தனியாட்களிடம் உள்ள வேறுபாடானது ஒவ்வொருவரைப் பற்றிய முழுமையான ஆய்வும் அவனுடைய சொந்த வரலாறு அமைப்பில் நெருங்கிய நண்பர்களுடன் அவனது தொடர்பு ஆகியனபற்றிய முழுமையான ஆய்வும் உள்ளடங்கியுள்ளன.

குழு இடைவினை (group interaction) நுண்முறைக்கு வேருேர் எடுத்துக்காட்டும் கொடுக்கலாம். கர்ட் லிவினும் (Kurt Lewin) அவருடைய கூட்டாளிகளும் மனப்பான்மை மாறுவதில் குழுக்கள் முடிவாக்கைப் பயன்படுத்தி மிகவும் இன்றியமையாத சோதனைகள் செய்துள்ளார்கள் (17). கார்ட்ரைட்டும் (Cartwright), ஜேண்டரும் (Zander) சொல்லுவது போல, 'இவ்வாய்ப்புகளின் தத்துவம் என்னவெனில், குழுத்தரமே குழு அனைத்திற்கும் முதன்மையானது.' ஒருவர் இக் குழுத் தரத்தை மாற்றி அதன் விளைவால் தனியன்களின் நடத்தையையும் மாற்ற நினைப்பின் அதனை அடைய குழு முழுவதும் மாற்றத்திற்கான முடிவாக்கம் எடுப்பதில் பங்குகொள்ளச் செய்வதனுலாகும் (18.149). முன்னர் நாம் பார்த்தது போலவே, தனியன் தான் சார்ந்துள்ள குழுவின் தரம் அல்லது பொது மாதிரியிலிருந்து மனப்பான்மையைப் பெறுகின்றுன். இதன் பயனுகத் தனியன் குழுவமைப்பில் மிகுந்த சுறுசுறுப்பான பங்கு பெறுவதிலிருந்து அவனுடைய மனப்பான்மையை உருவாக்குகின்றுன். முடிவாகத் தனியன் பெறும் செயலறிவானது குழுப் பொது மாதிரியிலிருந்து மாறுபாடு கொண்டு இருக்குமாயின் மேற்கூறிய செயலறிவுகள் தனியனின் மனப்பான்மையில் எவ்வித மாறுபாட்டையும் உண்டாக்காது. மாருக, குழுவே அதன் பொது மாதிரியை மாற்றிக் கொண்டால், தனியனுக்குத் தனது மனப்பான்மையை மாற்றுவது எளிதாக இருக்கும்.

## குழு விவாதமும் குழு முடிவாக்கமும் (Group discussion and Group decision)

கர்ட் லிவினின் பரிசோதனைகளின் பெரும் பயன் என்னவென்ருல், இப் பிரச்சினைபற்றி ஆராயத் திட்டமிடுவதும் அதனை அமைப்பதும் ஆகும். இரண்டாம் உலகப் போரின்போது இது மக்களின் உணவுப் பழக்கத்தில் மாற்றத்தைக் கொணரப் பயன்படுத்தப்பட்டது. உணவு வகைகளில் சில, மிகவும் சத்துள்ளதாக இருந்தும் அமெரிக்கர்கள் அதனைப் பயன்படுத்தவில்லை. லிவின் ஆறு செஞ்சிலுவைச் சங்கக் குழுத் தொண்டர்களிடம்

தம் சோதனையை நடத்தினர். ஒவ்வொரு குழுவிலும் 13 முதல் 17 தனியன்கள் இருந்தார்கள். 'விரிவுரையாற்றும் முறை' மூன்று குழுக்களிடமும், 'விவாத முறை' மற்ற மூன்று குழுக்களிடமும் பயன்படுத்தப்பட்டது. இரண்டு முறைகளிலும் கொடுக்கப்பட்ட காலம் ஒன்றாக இருந்தது. அதாவது 45 நிமிடங்கள். விரிவுரையாற்று முறையில் உபயோகிக்கப்படாத உணவின் சத்தின் மதிப்பை மிகைப்படுத்திக் கூறப்பட்டது. தொண்டர்களுக்கு இவ்வுணவு எவ்வாறு சிக்கனமானது என்றும் மேலும், இதனை உபயோகிப்பதனால் பழக்கமான இறைச்சித் துண்டங்கள் போர் முயற்சிக்குப் பயன்படும் என்றும் ஊக்குவிக்கப் பட்டனர். மேற்கூறிய பழக்கப்படாத உணவுகளைத் தயார் செய்யும் முறைகள் அச்சடிக்கப்பட்ட படிகள் அவர்களுக்கு வழங்கப்பட்டன. இரண்டாம் குழுவாகிய விவாதக் குழுவிற்கு இந்தப் பிரச்சினை அறிமுகம் செய்யப்பட்டு அதில் பங்குகொண்டோர் பெண்கள் இவ்வுணவு முறை மாற்றத்தில் பங்குகொள்ளவும் போருக்கு ஆயத்தமாவதற்கு உதவவும், பொது நலத்தை உயர்த்தவும் எவ்வாறு ஊக்குவிக்க முடியும் என்று விவாதிக்கப் பட்டது. புதிய உணவைப் பயன்படுத்தும் முறையில் உள்ள பல தடைகளும், குடும்பங்கள் அதற்குக் கொடுக்கக் கூடிய மறுப்புகள் ஆகியவையும் விவாதத்தில் இடம் பெற்றன. அதன் பின் உணவுஊட்ட வல்லுநர் புதிய உணவை வழங்கினர். இதற்குப் பின் குழுவின் முடிவாக்கத்தைக் கைகளை உயர்த்துவதன் மூலம் அறிவிக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டார்கள். சில நாள்களுக்குப் பின் ஆட்படுநர்களில் எவ்வளவு பேர் இப் புதிய உணவைத் தம் உணவில் ஒரு பகுதியாக மேற்கொண்டார்கள் எனப் பார்க்கப்பட்டது. உரையாற்றலுக்குட்பட்ட குழு மூன்று சதவிகிதம் புதுவகையையும், விவாதம் செய்த குழு 32 சதவீதம் புதுவகையையும் மேற்கொண்டனர். இவ்வாறு இச் சோதனை இரு குறிப்பிடத்தக்க உண்மைகளை வெளிப்படுத்துகிறது. ஒன்று நடத்தையிலும், மனப்பான்மையிலும் மாற்றத்தை உண்டாக்குவதில் விவாத முறையே, சொற்பொழிவு முறையைவிட உயர்ந்ததாக இருப்பது காட்டப்படுகின்றது. இரண்டாவதாக, இவ்விரண்டு முறைகளும் சில தனியன்களை மாற்ற முடியவில்லை என்று தெளிவாகக் காட்டுகின்றது.

இந்தச் சோதனை மனப்பான்மை, நடத்தை மாற்றங்கள் ஆகிய ஆராய்ச்சிகளுக்கு ஒரு மாதிரியாக அமைந்தது. முதல் பரிசோதனையிலுள்ள குறைகளுள் ஒன்று இரண்டு வேறுபட்ட குழுக்களுக்கும் இரு வேறுபட்ட தலைவர்கள் இருந்தார்கள் என்பதுமாகும். அதன் காரணமாக இரண்டாம் சோதனையில் சொற்

பொழிவுக் குழு, விவாதக் குழு ஆகிய இரண்டிற்கும் ஒரே தனியன் தலைவனாகப் பயன்படுத்தப்பட்டான். இச் சோதனையில் பெண்களே ஆட்படுநர்களாக அமைந்தனர். ஒவ்வொரு கூட்டமர்விலும் (session) 6 முதல் 9 உறுப்பினர்கள் குழுவில் இருந்தனர். இரண்டு சரிபார்த்தல்கள் (check-ups) ஒன்றிரண்டு வாரங்களுக்குப் பின்பும் மற்றது 4 வாரங்களுக்குப் பின்பும் நடைபெற்றன. மேலும், விவாதக் குழுவே பயன் தருகின்றதாகக் காணப்பட்டது. விவாதக் குழுவில் இந்த மாற்றம் நீண்டு நிலைத்து நிற்பதும் காணப்பட்டது. லிவினும் பட்லரும் (18) ஒரு பொறித் துறை நிறுவனத்தில் ஆய்வு செய்து மேற்கண்ட முடிவை நிலை நிறுத்தினர். இந்தத் தொழிற்சாலையில் 29 மேற்பார்வையாளர்கள் (supervisors) இருந்தார்கள். அவர்கள் உயர்தரத் தொழிலில் இருப்பவர்களை மிகுவாக மதிப்பிட்டும் (over-rate), குறைந்த தரத் தொழிலில் உள்ளவர்களைக் குறைவாக மதிப்பிட்டும் வந்தார்கள். தாங்கள் பிரதிநிதியாக இருக்கும் குழுவின்பால் அனுகூலமாகவோ எதிராகவோ இல்லாமலிருக்க அவர்கள் மனப்பான்மையை மாற்றுவதே ஒரு முக்கியப் பிரச்சினையாகும். இம் மேற்பார்வையாளர்கள் மூன்று குழுக்களாகப் பிரிக்கப்பட்டனர். இவற்றில் ஒரு குழு சொற்பொழிவு முறைக்கு விடப்பட்டது. இவர்களுக்கு மதிப்பீட்டு முறையில் உண்டாகும் தவறுகளை எவ்வாறு திருத்துவது என்று சொல்லப்பட்டது. இரண்டாம் குழு இப் பிரச்சினையை விவாதித்து ஒரு செயல் முடிவிற்கு வருமாறு விடப்பட்டது. மூன்றும் குழு கட்டுப்படுத்தப்பட்ட குழுவாக அமைந்தது. மற்றக் குழுக்களுடன் ஒப்பிடும்போது விவாதக் குழு மிகவும் குறிப்பிடத் தக்க முன்னேற்றம் காட்டியிருப்பது காணப்பட்டது.

மனப்பான்மை, நடத்தை ஆகியவற்றில் மாறுபாடு ஏற்பட வேண்டுமாயின் விவாதிக்கும் சுறுசுறுப்பான குழுவில் பங்கு கொள்வதே, செயலாற்றுச் சொற்பொழிவைக் கேட்கும் குழுவில் கலந்துகொள்வதைவிட மிகவும் பயனுள்ளது என்பது மேற்கண்டதிலிருந்து தெளிவாகின்றது. தனியன்கள் சுறுசுறுப்பாக ஒரு விவாதச் சிக்கலில் கலந்துகொள்வார்களானால் அவர்கள் அதில் தாங்களாக உட்பட்டவர்களாகின்றார்கள். ஒரு தனி மனிதன் முடிவைவிட குழு முடிவு இவர்களிடையே மிகவும் கட்டுப்படுத்தும் செல்வாக்கை உண்டாக்கிவிடுகின்றது. இது ஷெரீஃப் (Sherif) (2.547) சுட்டிக் காட்டுவது போல, 'மனப்பான்மை மாற்றும் முயற்சியில் ஒரு தீர்மான கட்டம் என்னவெனில் ஒரு தனியனை ஆய்படு பொருளில் உள்ளடக்குவதேயாகும்.' தனியனைத் தானாக உள்ளாக்குவதென்பது தொடர்புள்ள தான்-மனப்

பான்மைகளை (ego-attitudes) எழுப்புவதாகும். இம்மாதிரியான தனிப்பட்ட முறையில் உட்படுத்துவது கொடுத்து வாங்கும் சமூக இடைவினை முறையில் மிகுதிப்படுத்துகிறது.' வெறும் செய்தி அல்லது வாதப் பொருத்தமுடைய தர்க்கம் மட்டுமே தனியனின் மனப்பான்மையில் மாறுபாடு விளைவிப்பதில்லை. ஏனெனில், ஒரு மனன்பான்மையை மாற்றினால் அவன் போற்றப்படும் குழு இணைவிலிருந்து முறிவு பெறுகிறான்.

மேற்கண்டாற்போல் தனது மனப்பான்மையை மாற்ற வேண்டியிருப்பினும், குழுத் தரத்திலிருந்தே தனது மனப்பான்மையை உருவாக்குகின்றான். இது குழுத் தரத்திலிருந்து சில வழிகளில் மாறுபடுகின்றான் என்பதனைக் காட்டுகின்றது. மேலும், ,இஃது எளிதாகச் செய்யக்கூடிய செயலன்று. இது சமூகவயமாக்கலுக்கு (socialization) எதிராக உள்ளது. மாறாக, ஒரு குழுவில் **தனியன் ஒரு** பிரச்சினையை விவாதிப்பானாகில் மாறுபாட்டுக்கு அனுகூலமாக அவன் தனது நோக்குகளைச் சொல்லலாம். குழுவில் பல தனியன்களை இம் மாறுபாட்டினால் உள்ள நன்மைகளை எடுத்துக் கூறுவார்களானால் பின் இக் குழுவே முழுமையாக மாறிவிடும். குழு மாறுபட்டால், குழுவின் தரமும் மாற்றியமைக்கப்படுகின்றது. இது தனியனிடம் மாற்ற எண்ணத்தை வலிமைப்படுத்தும். மேலும், நாம் முன்பு கண்டதைப் போல குழுவின் புதுத்தரம், தனியனின் தனித்தரமாக அமைகிறது. இதன் பயனாக, ஷெரீஃப்பின் சோதனை விளைவு தெளிவாகக் காட்டியது போல, தனியன் குழுவிலாயினும் தனிமையிலாயினும் வேறுவகையாக நடப்பான். அதன் பிறகு, இவ்வாறு அடைந்த பொதுத் தரத்திலிருந்து உறுப்பினர் மாறுபடுவாரானால் அவன் தனது பயன் மதிப்புகளை (values) மீறுபவராகக் கருதுகிறார். ஏனெனில் அவன் குழுப் பயன் மதிப்புகளை அவனுடைய ஆளுமையில் நிலைநாட்டுகின்றான். இவ்வாறு, 'தனியனின் குழு முடிவில் தனித்த உள்ளீடு மனப்பான்மையிலும் நடத்தையிலும் பயனுள்ள மாற்றத்தை உண்டாக்குகின்றது' (2.548).

பூனாவைச் சேர்ந்த கொதுர்க்கர் (Kothurkar) உயர்நிலைப் பள்ளி மாணவர்களிடையே வகுப்பு (caste) மனப்பான்மையை மாற்றியமைக்க முடியுமா என்று காண ஆய்வு ஒன்று நடத்தினார். அவர் மூன்று முறைகளைப் பயன்படுத்தினார். அவை:

(a) முறையான பகுத்தறிவுள்ள சரித்திரப் பின்னணி கொண்ட பல இந்திய வகுப்புகளும் பிரிவுகளும் பற்றிய (castes and communities) கொள்கை.

(b) மன எழுச்சி வயப்பட்ட முறையீடுகளினுல் குழுவைத் தூண்டி பல்வேறுபட்ட வகுப்புகளிடையே உள்ள நல்ல சிறப்பி யல்புகளையும் அவை நாட்டின் வளர்ச்சிக்குச் செய்ததைக் கருதும் படி செய்வது.

(c) விவாதமிடுமுறை. கொதுர்க்கரின் உகம் (hypothesis) என்னவென்ருல் குழு விவாத நுண்முறையே மனப்பான்மையில் மாற்றத்தைக் கொண்டு வர, அறிவாய்ப்பு முறை, மனவெழுச்சி முறை ஆகியவற்றைவிடச் சிறந்தது என்பதாகும்.

மனவெழுச்சி முறையீடுகள் பெருமளவில் மாற்றத்தை விளை வித்தது. இருப்பினும் இம் முடிவுகள் புள்ளியியல் முறைப்படி குறிப் பிடத்தக்கதாக இல்லை. கார்ட்னர் மர்ஃபி (Gardner Murphy) (19.115), கற்பிப்பவர் உற்சாக மூட்டுவதனுல் மனவெழுச்சி முறையீடு மிகவும் சிறப்புடையதாக இருக்கும் என உறுதி செய்கின் ருர். இதற்கு மாருக செரீஃப் என்பார் பண்பாட்டு வேறுபாடுகளி னுல்தான் இவை உண்டாகின்றன என்று உறுதி செய்கிருர். சமூக வய செயன்முறையில் அதிகாரத்திற்குச் சார்ந்திருக்கும் இனங்களில் (community) விவாதிக்கும் முறை பயனளிக்கக் கூடியதாக இராது என்று சுட்டிக் காட்டுகின்ருர். அவர் பதிப்பித்த அறிக்கை யொன்றை எடுத்துக்காட்டுகின்ருர். அதில், ஜெர்மானிய இளை ஞன் ஒருவன் இரண்டாம் உலகப் போருக்குப் பின், இனி நடக்க இருப்பதைச் செய்ய யாராவது முன்னுக்கு வர வேண்டும் என்று கூறினுன் (2.548). கொதுர்க்கார் என்பவரே எழுதுவதாவது, 'அந்த முடிவுகள் எந்த அளவுக்குத் தகுதியுடையன என்று கூறுவதில் என்னுடைய பரிசோதனையின் முடிவுகளின் நம்பகத் தைப் பொறுத்தமட்டில் நான் திருப்தி அடைந்தேன். அதாவது பையன்களைப் பொறுத்தமட்டில் மனப்பான்மையை மாற்றி யமைப்பதில் சூழ்நிலை வழியாக மனவெழுச்சி முறையின் மூலம் மதிப்பும், மரியாதையும் பிற குழுக்களுக்குத் கொடுப் பதுவே உண்மை முறையையும் விவாத முறையையும்விடச் சிறந்ததாகும். ஆரம்ப எதிர்பார்ப்புகளுக்கும் கருதுகோள் களுக்கும் மாருக இந்தச் சிறு பையன்கள் விவாத முறையைச் சமூகத் தொடர்புகளின் முன்னேற்றத்திற்கு அனுகூலமான முறை யில் பயன்படுத்திக் கொள்ளவில்லை என்று தெரிகிறது. இது சரியான மனப்பான்மைகள் எவை என்பதனை நமது பையன்களே சொல்வதைவிட அவற்றை இன்று அவர்களுக்குச் சொல்லித் தரப்படுகின்றன. இது நமது பையன்களை ஜனநாயக ரீதியில் விவாதிக்கும் முறையில் பழக்க வேண்டும் என்பதனைக் குறிக் கின்றதா?' (19.115).

கொதுர்க்கார், செரீஃப் ஆகியவர்களின் கூற்றுகளில் போது மான அளவிற்கு உண்மை உள்ளது என்று கூறலாம். குறிப்பாக, பண்பாடு வேறுபாடுகள் உள்ளடக்கிய இடங்களில் விவாத முறை மற்ற முறைகளைவிட எப்பொழுதும் சிறந்த முறையாக இருக்க முடியாது. விவாத முறைக்கு ஊக்கமளிக்கும் குழுவில் இதுவே மிகவும் செல்வாக்குள்ள முறையாக இருக்கும் என்பதனை மனத்தில் கொள்ள வேண்டும். மேலும், பூனாவில் செய்த சோதனை யில் விவாத முறைக்கும் மனவெழுச்சி சார்ந்த முறைக்கும் பெரு மளவிற்கு வேறுபாடுகள் இல்லையெனக் காட்டியுள்ளமையை உணர வேண்டும். தான்—உள்ளடக்குதலே (ego-involvement) ஓர் அடிப்படையானது எனக் கூறலாம். இந்தக் குறிப் பிட்ட நிகழ்ச்சியில் (case) தான்-உள்ளடக்கம் கொண்டு வருவதில் மனவெழுச்சி முறையீடு விவாத முறையைப் போலவே நற்பலனளிக்கும்.

## தீவிரக் கொள்கையும் பழைமைபேணும் கொள்கையும்
## (Radicalism - Conservatism)

நாம் இங்கு எந்த முறையில் மனப்பான்மை அளவைகள் (scale) உருவாக்கப்படுகின்றன என்பதற்கும் என்ன முடிவுகள் இந்த அளவைகளைப் பயன்படுத்திப் பெறப்பட்டன என்பதற் கும் சில எடுத்துக்காட்டுகள் கொடுப்போம். சமூக, பொரு ளாதார, அரசியல் அமைப்புகளின்பால் உண்டாகும் மாற்றங் களின் திசை, அதன் வேகம் இவற்றைப்பற்றிய ஒரு பொதுவான மனப்பான்மை உள்ளது. இது 'தீவிரம்', 'பழைமை பேணுமை' என்னும் சொற்களால் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு சமு தாயத்திலும் சமூக அமைப்புகளில் மாற்றம் வேண்டுமென்னும் விருப்புடையவர்கள் இருக்கின்றார்கள். மாறாக, அம்மாதிரியான மாற்றங்கள் நிகழ்வதை விரும்பாதவர்களும் இருக்கின்றார்கள். மேலும், அவர்கள் உள்ளவை உள்ள நிலையிலேயே மிகவும் திருப்தியுடையவர்களாக இருக்கின்றார்கள். பழைமை பேணும் கொள்கையினர் கடவுளின் அருள் மக்கள் சமுதாயத்தை ஆளுகின்றது என்ற நம்பிக்கையுடையவர்களாயும், மரபு வழக்கு களுடன் இணைந்தும், தவிர்க்க முடியாத வகுப்புப் பிரிவு முறையில் நம்பிக்கையைக் கொண்டும், தனியர் சொத் தையும் தன்னுரிமையையும் இணைக்கின்றார்கள் எனக் கிர்க் (Kirk) (20) உறுதி செய்து கூறுகிறார். மனிதர்களின் சம உரிமையில் நம்பிக்கை, அதாவது சூழ்நிலை மாறினால், எல் லோரும் குறைபாடில்லாதவர்களாக ஆகிவிடுவார்கள். அதனால்,

சமுதாய முன்னேற்றத்திற்கு ஓர் எல்லேயே இராது எனக் கருதும் இயல்புகளால் 'அடிப்படை மாற்றியமைக்க விரும்பும் கோட்பாடு உடையவர்'களாகக் குறிக்கப்படுகின்றூர்கள். இவர்கள் மரபு வழக்குகளில் வெறுப்படைவதுடன் அரசியல் பொருளாதாரம் ஆகியவற்றில் உயர்வு, தாழ்வு அகற்றுவதில் (levelling) நம்பிக்கை கொண்டுள்ளார்கள். 'பிற்போக்கினர்' (reactionary) சமுதாய அமைப்புகளேப் பழைய நிலேயில் நிலேநாட்ட விரும்புகிறூர்கள். ஆனுல், 'பழைமை பேணுவோர்' பொருள்கள் இருக்கும் நிலேயிலேயே இருக்க விரும்புகின்றூர்கள். ஆனுல், முற்போக்கினர் (liberal) காலப் போக்கின் தேவைக்கு ஏற்ப இப்பொழுது இருப்பதை மாற்றியமைக்க விரும்பும் பொழுது முற்போக்கினர் நிலேபெற்றுள்ள சமுதாய முறையில் (order) தீவிரமான மாறுதல்களேக் கொண்டுவர விரும்புகின்றூர்கள். பொதுவாக, 'அடிப்படையையே மாற்றி அமைக்க விரும்பும் கோட்பாடுடையவர்' (radical) சமுதாய அமைப்புகளேச் சீர்திருத்துவதற்கு அனுகூலமாக இருப்பதுடன் மக்களிடையே உள்ள பிரிவுகளேக் குறிப்பாக எதிர்ப்பவர்களாக இருக்கின்றூர்கள். 'பழைமை பேணுவார்' சமூக மாற்றங்களுக்கு அனுகூலமற்ற மனப்பான்மையினராகவும் நிலேயானதும் அமைந்ததுமான வகுப்பில் விருப்பும் அதனே ஆதரிப்பவர்களாகவும் இருக்கின்றூர்கள்.

## எவ்வாறு அளவை (scale) உருவாக்கப்படுகின்றது

1957-ல் குமாரி எம். என். கமலா (21) மக்களிடையே பழைமை பேணும் கொள்கை, அடிப்படையை மாற்றியமைக்க விரும்பும் கொள்கை ஆகியவற்றை அளக்க ஒரு மனப்பான்மை அளவையை உருவாக்குவதற்கு முயற்சித்தார். இதற்கு அவர் மணவிலக்கு (divorce), கைம்பெண் மணம் (widow-marriage) நிலச் சிக்கல், தனியார் சொத்து, வருவாய்ப் பரவல், தொழிலாளர் சிக்கல், நாட்டுமயமாக்கல் (nationalisation) ஆகியவற்றைத் தேர்ந்தெடுத்தார். மணவிலக்கு, கைம்பெண் மணம் ஆகிய பிரச்சினேகளுக்கு அளவுகோல் தயாரிக்க அவர் தர்ஸ்ட்டனின் சம இடைவெளி நுண்முறையைப் பயன்படுத்திஞர். இப் பிரச்சினேகள் ஒவ்வொன்றுக்கும் சுமார் 200 கூற்றுகளேச் சேகரித்தார். அவற்றைப் பதிப்பித்தபின் மணவிலக்குப்பற்றிய கூற்றுகளே 98ஆகவும் கைம்பெண் மணம் பற்றிய கூற்றுகளே 96ஆகவும் குறைத்தார். இப் பிரச்சினே பற்றிப் பலதிறப்பட்ட கருத்துகளே வெளிப்படுத்தும் கூற்றுகளேயே கவனத்துடன் பயன்படுத்தப்பட்டன.

அடுத்தபடியாகக் கீழ்க்காணும் ஏழு அம்சங்களைக் கொண்ட மனப்பான்மைத் தொடர் ஒன்று தயார் செய்யப்பட்டது:

1. பிற்போக்கினர் (reactionary),
2. பழைமை பேணுவோர் (conservative),
3. ஒத்தியலுபவர் (conformist),
4. நடுத்தரமானவர் (moderate),
5. முற்போக்கினர் (liberal),
6. முன்னேற்றப் போக்கினர் (progressive),
7. அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் கோட்பாடு உடையவர் (radical).

56 நடுவர்களில் 42 ஆண்கள், 14 பெண்கள். இவர்களில் ஆசிரியர் (18), வழக்கறிஞர் (10), பொறிவல்லுநர் (5), மருத்துவர் (10), எழுத்தாளர் (3), சமூக-அரசியல் பணியாளர் (10) ஆகியோர் அடங்கியிருந்தனர். இவர்களுக்கு இந்த மனப்பான்மைத் தொடர் கொடுக்கப்பட்டது. இந்த ஏழு சொற்களும் ஒரு தனித்தனி அட்டைகளில் அச்சடிக்கப்பட்டிருந்தன. எல்லா நடுவர்களின் தீர்ப்பும் ஒரு பொதுவான அடிப்படையில் இருக்க வேண்டுமென்ற நோக்கோடு பின்காணும் சுருக்கமான விளக்கம் ஒவ்வோர் உறுப்புக்கும் கொடுக்கப்பட்டது.

1. **பிற்போக்கினர்**: பழைமையானதும் பயன்படுத்தப் படாததுமான பழக்கங்களையும் அமைப்புகளையும் நிலைநாட்டி சமூக முன்னேற்றத்தின் போக்கை மாற்ற மிகவும் போராடுபவர்.

2. **பழைமை பேணுவோர்**: பழைமைக்குப் புனிதத் தன்மை அளிப்பவரும், நிலைபெறும் சமுதாய முறையைக் காக்க முயல்பவர்; மாற்றங்களையும் முன்னேற்றங்களையும் எதிர்ப்பவர்.

3. **ஒத்தியலுபவர்**: நடைமுறையிலுள்ள சமூக முறையின் பரம்பரை வழக்கங்களிலும் வைத்துக்கோடல்களிலும் (conventions) தன் எண்ணத்தையும் செயலையும் பொருத்திக் கொள்பவர்.

4. **நடுத்தரமானவர்:** பொதுவாக வைத்துக்கோடல் களுடன் பொருந்தியும் ஆனால், சிறு செயல்களிலும் நடைமுறைச் சமுதாய முறையிலும் சில தேவையான மாறுதல்களை எதிர்க்காதவர்.

5. **முற்போக்கினர்:** நடைமுறைச் சமூக முறையில் சில திருத்தங்களையும் மாறுபாடுகளையும் விரும்புபவர். ஆனால், அவை தீவிரமாகவும் வழக்கிலுள்ள முறைக்கு மாறுபட்டதாகவும் இருக்கக் கூடாது என்பவர்.

6. **முன்னேற்றப் போக்கினர்:** நிலைபெற்றுள்ள சமூக முறையில் மிகப் பல படிப்படியான மாறுதல்களை உண் டாக்குவதற்கு ஆதரவு கொடுத்து வைத்துக்கோடல் களில் கண்மூடித்தனமான பற்றை மறுப்பவர்.

7. **அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் கோட்பாடு உடையவர்:** வழக்கிலுள்ள சமூக முறையை வேருடன் மாற்றி முழுதும் வேறுபட்ட திடீர் மாறுதல்களை உண்டாக்க முயல்பவர்.

98 கூற்றுகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு துண்டுத் தாளில் தட்டெழுத்தில் அச்சடித்து அவற்றை நடுவர்களிடம் கொடுத்து, மேற்கண்ட ஏழு வகைகளாகப் பிரிக்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டனர். இவ்வாறு நடுவர்களின் செயலாவது, ஒவ்வொரு கூற்றும் எவ்விதமான மனப்பான்மையை வெளிப்படுத்து கின்றது என்று உறுதி செய்வதாகும். அவர்கள் இக் கூற்று களனைத்தையும் ஏழு பிரிவுகளாகப் பிரித்து அடுக்கி வைக்க வேண்டும். நடுவர்கள் தங்கள் கருத்துப்படியன்றி சமூகத்தில் நடைமுறையில் காணப்படும் தரங்களையொட்டியே இக் கூற்று களைப் பிரிக்கும்படி கேட்டுக்கொண்டார்கள்.

ஒவ்வொரு வகைக்கும் ஒதுக்கப்பட்ட கருத்துகளின் எண் ணிக்கைக் கணக்கெடுக்கப்பட்டு அலைவுப் பரவல் (frequency distribution) தயாரிக்கப்பட்டது. அடுத்துக் குவிவு (cumulative) அலை வெண்களும், குவிவு விகிதங்களும் (proportions) கணக்கிடப்பட்டு ஒரு வரைகட்டத் தாளில் அமைக்கப்பட்டது. ஐம்பதாவது சதவீதப் புள்ளியைக் (percentile point) கொண்டு ஒவ்வொரு கூற்றின் அளவு மதிப்பும் பெறப்பட்டது. இடைக்கால்மான விலக்கத்தின் மூலம் ஒவ்வொரு கூற்றின் இரு பொருள் மயக்கம் (ambiguity) அளக்கப்பட்டது. 'ஒருவர்

மண முறிவு செய்துக்கொள்ளத் தேவைப்பட்டால், சமூகம் மறுத்தாலும் தயங்கக் கூடாது' என்ற கூற்றை எடுத்துக்கொண்டால் எந்த நடுவரும் இதைப் பிற்போக்கினர் அல்லது பழைமை பேணுவோர் அல்லது ஒத்தியலுபவர் பிரிவில் ஒதுக்கப்படவில்லை. ஒரு சிலர் இதனை நடுநிலையாளருக்கும் பலர் முற்போக்கினருக்கும் இன்னும் அதிகமானவர் முன்னேற்றப் போக்கினருக்கும் மிகப் பலர் அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் கோட்பாடு உடையவருக்கும் (radical) ஒதுக்கினுர்கள். இந்தக் கூற்றுக்கு 50ஆவது விழுக்காடு 6.0 (முன்னேற்றப்போக்கினர்), 0.31 என்ற குறைந்த கால்மான விலக்கமாகவும் இருக்கக் காணப்பட்டது.

இச் சிக்கலான சமூகச் சிக்கலில் தரமிடுபவரின் வயதும் பட்டறிவும் மதிப்பீடு செய்வதில் ஏதாவது செல்வாக்குக் கொண்டுள்ளனவா என்று காண முதுகலை (M.A.), முது அறிவியல் (M.Sc.) படிக்கும் 48 மாணவர்களை—24 பையன்களையும் 24 பெண்களையும் அதே மண முறிவுச் சிக்கல்களின் 98 கூற்றுகளையும் மதிப்பிட்டுத் தீர்வுகாணுமாறு கேட்டுக்கொள்ளப் பட்டனர். முதிர்ந்த தரமிடுபவருக்கு எல்லாக் கூற்றுகளுக்கும் அளவை மதிப்பீடு 321.7ஆகவும் கூட்டுச் சராசரி 3.28ஆகவும், மாணவர் தர மதிப்பீட்டிற்கு 320.8ஆகவும் கூட்டுச் சராசரி 3.27ஆகவும் இருந்தன. இவ்வாருன சமூகச் சிக்கல்களைப் பற்றிய தீர்ப்புகள் வயது, பட்டறிவுமாகிய மாறிகளால் (variables) பாதிக்கப்படுவதில்லை என்பது வெளிப்படுகின்றன.

நிலம், தனியார் சொத்து, வருவாய், தொழிலாளர், நாட்டுமயமாக்கல்பற்றிய சிக்கல்களைப் பொறுத்தவரை லிக்கர்ட்டின் கூட்டு அளவீடு முறைப்படியே அளவுகோல்கள் அமைப்பதில் பயன்படுத்தப்படுகின்றன. கீழ்வருபவை அவற்றில் பயன்படுத்தப்படும் சில கூற்றுகள்:

1. நிலக்கிழார்க் கொள்கை நீக்கல் (abolition of land lordism), தனியவருக்கோ மதத்திற்கோ கொடையளிப்பது நீக்கம் ஆகியவை அவசரமான நடவடிக்கையாகும்.

2. உழைப்பாளருக்கும் (labourers), தொழில் துறையினருக்கும் (professional) உள்ள ஊதிய வேறுபாடு குறைக்கப்பட வேண்டும்.

3. அரசாங்கம் எல்லாவகையான உற்பத்திகளையும் மேற்கொள்ள வேண்டுமென்பது ஒரு தீவிர நடவடிக்கையாகும்.

4. தொழிற்சங்கங்களை ஆதரிப்பதுமட்டுமன்றி மிகுந்த அளவில் ஊக்கமளிக்க வேண்டும்.

ராண்டம் சாம்பிள் (random sampling) முறையைப் பயன்படுத்தி 209 மாணவர்களைத் தேர்ந்தெடுத்து இக் குழுவிற்கு இந்த அளவைக் கொடுக்கப்பட்டது. 9 சதவீதத்திற்குக் குறைவான மாணவர்களே நடுநிலையான பதில்களைக் கொடுத்தனர் என்று கண்டுபிடிக்கப்பட்டது. வேறு வகையாகக் கூறினல், இக் குழு அனுகூலமான அல்லது அனுகூலமற்ற திட்டவட்டமான கருத்துகளைக் கொண்டிருந்தது. மாணவர்க் குழு முழுவதும் பொருளாதார மாற்றத்திற்கு அனுகூலமான மனப்பான்மையை வெளிக்காட்டியது.

## சில முடிவுகள்

ஹன்ட்டர் (Hunter) (22) தமது சமூக மனப்பான்மைச் சோதனையில் நீக்ரோக்கள், தொழிலாளர், சமூகச் சிக்கல்கள், மதம், ஜனநாயகம், நாட்டுப் பாதுகாப்புப்பற்றிய கூற்றுகளைச் சேர்த்துள்ளார். நெல்சன் (Nelson) (23) அமெரிக்காவின் பல பகுதிகளிலிருந்தும் 3780 மாணவர்களைச் சோதனை செய்து முதுநிலை (senior) மாணவர்களே கல்லூரி மாணவர்களில் மிகவும் முற்போக்குக் கொள்கையுடையவர்களாய் இருந்தார்கள் என்று கண்டார். கல்வி, முற்போக்குக் கொள்கைக்குச் சாதகமாக இருப்பதைக் கண்டார். ரெம்மர்சும், வெல்ட்மனும் (Remmers and Weltman) (24) உயர்நிலைப் பள்ளிகளில் இருந்து 207 மாணவர்களின் மனப்பான்மையையும் அவர்களின் பெற்றோர்கள் ஆசிரியர் ஆகியோரின் மனப்பான்மையை ஆராய்ந்ததில் தெளிவான தொடர்பு குடும்ப உறுப்பினர்களின் மனப்பான்மையில் இருப்பதைக் கண்டார். மேலும், அவர்கள் பெற்றோர்கள், குழந்தைகள் இவர்களிடையே மனப்பான்மைகளில் உள்ள ஒற்றுமையானது, ஆசிரியர்கண் மாணவர்களிடையேயுள்ள ஒற்றுமையைவிட அதிகமாக இருப்பதைக் கண்டார்கள். சீபரோ (Shepero) (25) சமூக மனப்பான்மைகளுக்கும் குழ்ந்தை வளர்க்கும் பழக்கத்திற்கும் மிகுந்த தொடர்பு இருப்பதைக் கண்டார். அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் கோட்பாடுடைய பெற்றோர்கள் கடுமை

யில்லாதவராயும் அன்பு காட்டுபவராயும் அவர்களின் குழந்தைக்கு உரிமை கொடுப்பவராய் இருப்பதையும் பழைமைக் கொள்கையைப் பேணும் பெற்றோர்கள் மிகவும் ஒழுக்கமானவராகவும் அவர்களின் குழந்தைகள் அடங்கிப்போவதையும் எதிர்பார்த்தனர் என்பதனைக் கண்டார். அடார்னோ (Adarno) (26) அரசியல்பொருளாதாரப் பழைமை பேணும் கொள்கை அளவையை, அதிகார ஆளுமையை நிருணயிக்க அமைத்தார். அவர் பழைமை பேணும் கொள்கைக்கும் இன—மையக் கொள்கைக்கும் (ethno-centrism) மிகுந்த தொடர்பு இருப்பதைக் கண்டார். சென்டர்ஸ் (Centers) (27) சமூகப் பிரிவுகளுக்கும் சமூக மனப்பான்மைகளுக்கும் தொடர்பு இருப்பதைக் கண்டார். உயர் சமூக நிலையினர் மிகவும் பழைமை பேணுபவராகவும், தாழ்ந்த சமூக நிலையினர் மிகவும் முற்போக்கினராகவும் இருப்பதைக் கண்டார். ஐசென்க் (Eysenck) (25) சமூக மனப்பான்மையை அளக்க 40 உறுப்படிகள் கொண்ட அளவையே அமைத்தார். அவர் இரண்டு பரிமாணம் ஒன்றுக்கொன்று நேர் கோணத்தில் இருப்பதாக ஒரு முறையை வகுத்துக் கொண்டார். (a) அடிப்படையையே மாற்றியமைக்க விரும்பும் கொள்கை-பழைமை பேணும் கொள்கை, (b) கடினமான அல்லது உறுதியான உள்ளம் (அதிகாரமுள்ளவன்)-மென்மையான மனம் (குடியரசு) என்னும் இரண்டு பருமன்கள் (dimensions) ஒன்றுக்கொன்று நேர் கோணத்தில் அமையுமெனும் முற்கோளை ஐசன்க்கு வெளிப்படுத்தினர். பழைமை பேணும் கொள்கையினராகவோ சம உடைமைக் கொள்கையினர் அல்லது பொது உடைமைக் கொள்கையினராகவோ இருப்பினும் நடுத்தர வகுப்புக் குழுவினர் மென்மையான உள்ளமும், உழைப்பாளர் வகுப்புக் குழுவினர் மிகவும் கடினமான உள்ளமும் கொண்டு இருந்தனர் என்று அறியப்பட்டது. இவர் மேலும் உழைப்பாளர் வகுப்பினர் நடுத்தர வகுப்பினரைவிட மிகவும் பழைமை பேணுபவராய் இருப்பதை அறிந்தார்.

### மனப்பான்மைகளும் பற்றுகளும் (Attitudes and sentiments)

இவ்வதிகாரத்தை முடிக்கு முன்னர் சுருக்கமாக மனப்பான்மை என்னும் கருத்துக் கோளுக்கும் (concept) பழைய கருத்துகளாகிய பற்று என்பதற்கும் உள்ள தொடர்பை விவாதிப்பது பயனுள்ளதாக இருக்கும். வெகு காலத்திற்கு முன்னரே ஷாண்ட் (Shand) (28) என்பார் அறிவு, மன எழுச்சி, அக்கறை இவற்றில் ஒரு அமைப்பு முறை உள்ளது என்றும் அஃது அகப்புற நிலைமைகளில் மாறுபாடுகளிலிருந்தும் நிலைபெற்றிருக்கின்றது

என்றும் உணர்ந்தார். அதன்பின் மக்டுகல் (29) பற்றை ஒழுங்கமைந்த நாட்டம் (dispositions) என்றும் அஃது ஆளுமையில் நிலைபெற்று நிற்கின்றது என்றும் எண்ணினர். நாம் மனப்பான்மைகளும் ஒரு குறிப்பிட்ட தன்மையில் பொருள்கள், குழுக்கள், மக்கள் ஆகியவர்களிடம் செயல்படவுள்ள ஒருவிதமான ஆயத்த நிலையை உள்ளடக்கியுள்ளது என்று கண்டோம். அவ்வாருனல், பழைய பற்று என்னும் கருத்துக்கும் புதிய கருத்தான மனப்பான்மை என்னும் கருத்துக்கும் இடையேயுள்ள தொடர்பு தான் என்ன? ஆஷ் (Asch) என்பார் கருத்துகள், பற்றுகள், மனப்பான்மைகள் என்பனவற்றை வேறுபடுத்திக் காட்டியுள்ளார் (5.563). ஆஷ் என்பாரைப் பொறுத்த வரையில்,

(a) கருத்துகள் என்பன தனியனிடம் உள்ள நம்பிக்கை செயல்முறை ஆகும். இவை சில சமூக விளைவுகளைப் (consequences) பெற்றுள்ளன. ஒரு தனியன் நிலையாகக் காங்கிரஸ் கட்சிக்குத் தனது வாக்குச் சீட்டு அளிக்கலாம். இருப்பினும் அவன் அரசியலிலும் காங்கிரஸ் கட்சியினிடத்தும் மேலீடான முறையில் அக்கறை கொண்டிருக்கலாம்.

(b) மாருக ஆழ்ந்த உணர்ச்சியும் மனவெழுச்சி மனநிலையும் ஒரு தனியனின் பரவலான சிக்கலுடைய செயல்களில் தொடர்பு கொண்டு இருக்கலாம். ஆஷ் இம் மனநிலைகளைப்(dispositions) பற்றுகள் என்று அழைக்கின்ருர். அவர் இரண்டு விதமான பற்றுகளை வேறுபடுத்துகின்ருர்— (i) சில பற்றுகள் மிகவும் அதிகமாகத் தனிப்பட்ட முறையில் தொடர்புகொண்டு குறைவான சமூகப் பயன்களுடன் இருக்கின்றன, எடுத்துக்காட்டாக, ஒரு தனியன் ஒருவளைக் காதலிப்பது அல்லது ஒருவன் தனது பேனுவிடம் பற்றை வளர்ப்பது நமக்குத் தனிப்பட்ட முறையில் பற்று இருப்பதற்கு விளக்கங்களாகும். (ii) இதற்கு மாருகச் சில பற்றுகள் தனிப்பட்ட தொடர்பும் சமூகத் தொடர்பும் கொண்டுள்ளன. அவற்றைக் குழுவிலுள்ள பலருடன் நாம் பங்கு கொள்கிருேம். இவ்வாருன மன நிலைகள் சமூக, பொருளாதார, அரசியல் ஆகிய பொது நலங்களைக் குறிக்கின்றன. ஆஷ் என்பாரைப் பொறுத்த வரையில் இவ்விரண்டாம் வகையான பற்று, சமூக மனப்பான்மைகள் என்று அழைக்கப்படலாம். மனப்பான்மைகளை ஆய்வது சமூக உளவியலின் முதன்மையான நோக்கமாகும். ஏனெனில், அவை ஒரு தனியனின் மையச் செயன்முறைகளை உள்ளடக்கி முக்கியமான சமூக விளைவுகளையும் பெற்றிருக்கின்றன.

இவ்வாறு கருத்துகள் தனியன் நோக்கில் விளிம்பான (peripheral). ஒன்றுகும். அவன் அவற்றில் மிகையாக உட்படவில்லை. ஆயினும், அவை சமூகப் பலன்களைக் கொண்டுள்ளன. இருப்பினும், இந்தச் சமூகப் பலன்களும் விளிம்பானதாகும் (peripheral). மாறுக, மனப்பான்மைகள் கருத்துகளைவிட அதிகமாகத் தனித்த முறையில் தொடர்பு கொண்டுள்ளன. அவை சமூகச் செயல்களையும் ஊக்குகின்றன. ஆகவேதான், நாம் முற்சார்புகளில் (prejudices) மனப்பான்மைகளை உள்ளடக்கி இருப்பதைக் காண்கின்றோம். கருத்துகள் நம்மை முற்சார் பிற்குக் கொண்டு போய்விடுவதில்லை. தனித்த முறையில் தொடர்பு கொண்ட பற்றுகளைப் பொறுத்த மட்டில் அவை தனியனை உட்படுத்துகின்றன. ஆனுல், அவை மிகுந்த சமூக முக்கியத்துவம் உடையனவல்ல. நமது நெருங்கிய நண்பர்கள், எதிராளிகள் ஆகியோர் நம்மைச் சுற்றிச் சிறிய அளவிலேயே அமைவர். இதற்கு மாறுக தனிப்பட்ட வெறுப்பு, சிறுபான்மையினரின் வெறுப்பாக மாற்றப்படுமானுல், பெரும்பான்மையினரின் வெறுப்பைச் சிறுபான்மையினர் மீது ஒருவனுல் மாற்றிவிடப்படுமானுல், நாம் தனிப்பட்ட பற்றிலிருந்து சமூக மனப்பான்மைக்கு மாற்றப்படுவது, அது சமூகப் போட்டியில் வருவதையும் காணலாம். இந்தச் சிக்கல்களை இனி வரும் அத்தியாயங்களான முற்சார்பு, சமூக விறைப்பு ஆகியவற்றை எடுத்துக் கொள்ளும்போது விவாதிப்போம்.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. ALLPORT F.H. 'The J. Curve Hypothesis of Conforming Behaviour'. 1934.5. 141-83. — *Journal of social Psychology.*

2. SHERIF and SHERIF, Harper, 1956. — *An Outline of Social Psychology.*

3. MARKS, 'Skin Color Judgements of Negro College Students', 1943.38. 370-76. — *Journal of Abnormal and Social Psychology.*

4. JOHNSON, 'Growing up in the Black Belt', 1941. — *American Council of Education.*

5. ASCH, Prentice Hall, 1952. — *Social Psychology.*

6. POSTMAN et al., 'Personal Values as Selective Factors in Perception', 1948-43, 142.54. — *Journal of Abnormal and Social Psychology.*

7. GARDNER MURPHY, — *'Presidential Address, South Western Psychological Association, Oklahoma,* 1954.

8. PROSHANSKY, 'A Projective Method for the Study of Attitudes', 1943.38. 393-95. — *Journal of Abnormal and Social Psychology.*

9. KUBANY, 'A Validation Study of the error-choice technique using attitudes on National Health Insurance', 1953.13, 157-63. — *Educational and Psychological Measurements.*

10. THURSTONE and CHAVE, Chicago University Press, 1929. — *The Measurement of Attitude.*

11. LIKERT, 'A Technique for the Measurement of Attitudes', 1932. No. 140. — *Archives of Psychology.*

12. FERGUSON, Mc Graw-Hill, 1952. — *Personality Measurement.*

13. HINCKLEY, 1932. — *Journal of Social Psychology.*

14. FARNSWORTH, 'Shifts in the Values of Opinion Items', 1943, 16. 125-8. — *Journal of Psychology.*

15. BOGARDUS, 'Measuring Social Distances', 1924. 25.9. — *Journal of Applied Social Psychology.*

16. NEWCOMB, Dryden, 1943. — *Personality and Social Change.*

17. LEWIN, 'Group Decision and Social Change', in Swanson et al., Holt, 1952. — *Readings in Social Psychology.*

18. CARTWRIGHT and ZANDER, Row Peterson, 1953. — *Group Dynamics.*

19. GARDNER MURPHY, Basic Books, 1953. — *In the Minds of Men.*

20. KIRK, Regnery, 1953. — *The Conservative Mind.*

21. M. N. KAMALA, 'Measurement of Attitudes', 1957. — *Unpublished Report in the University Library, Mysore.*

22. HUNTER, 'Attitude Change of College Freshmen', 1951-31. — *Journal of Psychology.*

23. NELSON, 'Radicalism and Conservatism in Student Attitudes', 1938. — *Psychological Monograph.*

24. REMMERS and WELTMAN, 1947. 26. — *Journal of Social Psychology.*

25. EYSENCK, Routledge and Kegan Paul, 1954. — *Psychology of Politics.*

26. ADORNO et al., Harper, 1950. — *Authoritarian Personality.*

27. CENTERS, Princeton University Press, 1949. — *Psychology of Social Classes.*

28. SHAND, Macmillan, 1921. — *The Foundations of Character.*

29. McDOUGALL, Methuen, 1928. — *Outlines of Psychology.*

# 12 பொதுமக்கள் கருத்து உருவாதலும் மாறுதலும்

## (FORMATION AND CHANGE OF PUBLIC OPINION)

சிற்சில சமயங்களில், பொதுமக்கள் கருத்து மிக்க வன்மை வாய்ந்தது என்பது எல்லோரும் அறிந்த உண்மையாகும். எல்லாக் காலங்களிலும், பல்வேறு பிரச்சினைகளின் மீதுள்ள பொதுமக்கள் கருத்து மிகத் தீவிரமாகவோ மிதமாகவோ இருப்பதை அறியலாம். ஒரு பிரச்சினையைக் குறித்து ஏற்படும் பொதுமக்கள் கருத்தானது, சில வேற்றுமைகளையும், அதன் அடிப்படையில் சில விவாதங்களையும் உள்ளடக்கியதாகவே இருக்கும்.

அவ்வாறன்றி, ஒருவன் தன்னுடைய கருத்துக்கு மற்றொருவன் ஒத்துவராமலிருப்பதை அறியும் போதுதான் அவன் தன் கருத்து குறித்து விழிப்படைகிறான். விளைவாக, ஒரு கருத்து பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும்போது அது குறித்து விவாதம் ஏற்படுவதில்லை. சிலர் இக் கருத்தின் பொருத்தப்பாட்டினைப் பற்றி வினவும்போது, அதனைப்பற்றி விவாதம் எழுகிறது. இதனால், இக் கருத்துபற்றி ஆதரித்துப் பேசவும், சான்று காட்டி விளக்கவும் நேரிடுகிறது. பொதுவாக ஏற்றுக்கொண்ட ஒன்றை மாற்றி அமைத்திட விரும்பும்போதும் பொதுமக்கள் கருத்து எழுகிறது.

### 'பொதுமக்கள்' என்ற சிறப்புச் சொல்லின் பொருள் (The meaning of the term 'Public')

நாம் முதலில் 'பொதுமக்கள்' என்ற சொல்லுக்குரிய திட்டவட்டமான கருத்தை அறிதல் வேண்டும். இதனைத் தெளிவுபடுத்த இதற்கும், 'கூட்டம்' என்ற கலைச் சொல்லுக்கும் உள்ள தொடர்பை ஆராயலாம். ஒரே இடத்தில் அநேக மனிதர்கள் நெருக்கமாக இருப்பதைக் கூட்டம் என்ற சொல் கொண்டு அழைக்கலாம். குறிப்பிட்ட பிரிவைச் சார்ந்த ஒரு சிறிய குழுவையோ தேசியக் குழுவையோ உலக

மக்கள் அனைவரையுமோ குறிக்கப் 'பொதுமக்கள்' என்ற சொல்லை நாம் பயன்படுத்தலாம். நாம் உலகக் கருத்து என அழைப்பது, உலக மக்களின் கருத்துப் போக்கைக் குறிப்பதாகும். பொதுமக்கள் என்ற கலைச் சொல், நெருக்கம் இல்லாத உளவியல் குழுவினை உணர்த்துகிறது. இதில் நேரிடைத் தொடர்பு ஏதும் இல்லை. ஆனால், பொதுமக்கள் என்பது உலகெங்குமுள்ள பரவலான மக்களைக் குறிப்பதாகும். ஆயினும், இம் மக்கள் செய்தித் தொடர்பு சாதனங்கள் மூலம் ஒரே வகையான தூண்டுதலுக்கு ஆளாகின்றனர். இதன் மூலம் உலகத்தின் பல்வேறு நாடுகள், கிராமங்களிலுள்ள மக்கள் ஒரு குறிப்பிட்ட கருத்தைப்பற்றி என்ன எண்ணுகிறார்கள்? என்ன செய்கிறார்கள்? என்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறது. நாம் பின்னர் காண இருப்பது போல், ஒரு கூட்டமோ அவையோ (audience) மாநாடோ ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குறிப்பிட்ட மனிதனின் வயப்படுகின்றது. மேலும், 'பொதுமக்கள்' என்ற சொல் வீடுகள், பொழுதுபோக்கு மன்றங்கள் (club), கடை வீதிகள் முதலியவற்றில் ஒரு குறிப்பிட்ட பிரச்சினையைப்பற்றிச் செயற்படும் மக்களையும் குறிக்கிறது. அவர்களிடையே காணப்படும் தொடர்பு நேரிடையாகவோ செய்தித்தாள் மூலமாகவோ வானொலி மூலமாகவோ ஏற்படுகின்றன. ஆனாலும், பொதுமக்களிடையே ஒரு சில கருத்துகளில் இணக்கமும், வேறு சில கருத்துகளில் மாறுபாடும் காணப்படுகின்றது. எனவே, மற்றவர்கள் தெரியாதவர்களாகவும், வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு தொலைவுகளில் இருப்பவர்களாகவும் இருந்தாலும் இவர்களிடையே இணக்கம், உரிமையுணர்ச்சி போன்ற உணர்வுகள் தோன்றுகின்றன. நெருக்க, உணர்வை ஏற்படுத்தும் பொருட்டுத் தனி மனிதனது அறிவோ அல்லது பத்திரிகையோ மாறுபட்ட கொள்கைகளில் ஈடுபட்டுள்ள தலைவர்களைப்பற்றிய கதைகளைக் கூறும். இது குறிப்பிட்ட தனியன்களிடம் ஒருமைப்பாட்டுணர்வை வளர்ப்பதுமட்டுமன்றி 'நாம்', 'அவர்கள்' என்ற குழு உணர்வையும் மக்களிடம் ஏற்படுத்துகிறது. எனவேதான், ஒரு குழுவோ கட்சியோ சங்கமோ கூட்டமோ இருப்பின் பொதுமக்கள் மிகவும் பயன் விளைக்கத்தக்கவர்களாகக் காணப்படுகின்றனர். பொதுமக்கள் எனப்படுவோர் ஒரு பொதுவான பிரச்சினையின் பால் ஒரே கருத்தினைக் கொண்டிருக்கும் ஒழுங்கமைந்த சங்க மக்களாவர். அதன் பயனாக ஏற்படும் வெளிப்பாடானது ஒரு குழுவைப் பொறுத்ததாகும். விளைவாக, ஒரு பிரச்சினை என்பது ஒரு முழுச் சமுதாயத்தின் பிரச்சினையாவதுடன் அனைவரையும் பாதிக்காவிடினும் பெரும்பான்மையானவர்களைப் பாதிக்கிறது.

## 'கருத்து' என்ற சிறப்புச் சொல்லின் பொருள்
(The meaning of the term 'Opinion')

கருத்து எனும் சொல் நம்பிக்கை என்பதனையே குறிக்கிறது. நம்பிக்கையில் பல வகைகளுண்டு. இவற்றில் சில, நமக்கு நம்பிக்கை அளிக்கும் செல்வாக்கான இடங்களிலிருந்து வருவதனால் நாம் அவற்றை எவ்வித ஐயப்பாடுமின்றி ஏற்றுக்கொள்கிறோம்; சிலவற்றை ஆதாரங்களின் அடிப்படையில் ஏற்றுக்கொள்கிறோம். இதனை அறிவு எனலாம். நாம் இவ்வகையான நம்பிக்கைகளைப் பற்றி ஆய்வு செய்யப்போவதில்லை.

ஒரே பொருளைப்பற்றிய பல்வேறுபட்ட நம்பிக்கைகளை ஏற்றுக்கொள்ள அனுமதிக்கும் ஒரு கருத்து மாறுபாடுடைய பொருளின்பால் உள்ள நம்பிக்கைகளைப்பற்றி ஆராய்வதே நமது குறிக்கோளாகும். எனவே, கருத்துகள் எனப்படுவன ஒரு கருத்து மாறுபாடுடைய பொருளின்பாலுள்ள நம்பிக்கைகளே ஆகும்.

நாம் கருத்தையும், பற்றையும் வேறுபடுத்திக் கூறலாம். பொருள்கள் அல்லது நிலைமைகளுடன் தொடர்பு கொண்டிருக்கும் மனவெழுச்சி நிலைகளே பற்றுகளாகும். மேலும், இவை கருத்து மாறுபாட்டிற்கு உள்ளடங்கியன அல்ல. சில நிலைமைகளை உள்ளடக்கிய, கருத்து மாறுபாடற்ற மனவெழுச்சி நிலைகளே பற்றுகளாகும். ஆனால், கருத்துகளானவை ஒரு கருத்து மாறுபட்ட வெளிப்பாட்டின்பால் உள்ள நம்பிக்கைகளாகும். இவ்வாறு பற்றுகள் கருத்துகளினின்று வேறுபட்டவை. நாம் கருத்திலிருந்து மனப்பான்மையை வேறுபடுத்திக் கூறலாம். மனப்பான்மையானது ஒரு செய்கைக்குச் சார்பாக இருக்கையில் கருத்தானது சொற்சார்ந்த ஒரு குறிப்பிட்ட குறியீடாகும். ஒரு குறிப்பிட்ட வெளிப்பாட்டின்பால் ஒரு பெரிய குழு கொண்டிருக்கும் மனப்பான்மையை மதிப்பிடப் பொதுமக்கள் கருத்து உதவுகிறது. ஒரு தனியன் ஒரு பொது வெளிப்பாட்டினிடத்துக் கொண்டுள்ள நோக்கு அனுகூலமாகவோ அனுகூலமற்றதாகவோ இருக்கலாம். இங்குதான் கருத்துக்கும் மனப்பான்மைக்கும் ஒற்றுமை காணப்படுகிறது. எனவே, கருத்தானது ஒரு தனியன் கருத்து மாறுபட்ட வெளிப்பாட்டிடத்தில் கொண்டுள்ள மனப்பான்மையை வெளிப்படுத்தும் ஒரு சொற்சார்ந்த துலங்கல் எனக் கூறலாம்.

## பொதுமக்கள் கருத்து என்பது என்ன?
## (What is public opinion?)

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு குறிப்பிட்ட பிரச்சினையைப் பற்றிச் சிறிய குழுவோ பெரிய குழுவோ கொண்டுள்ள கருத்தே பொதுமக்கள் கருத்தாகும். இதனால் பொதுமக்கள் கருத்து, காலத்திற்கேற்றாற்போல் மாறிவிடலாம். பொதுவாக, ஆசிய நாடுகளைப்பற்றிய பொதுமக்கள் கருத்து, குடியேற்ற ஆட்சிக்கு (colonialism) எதிராகவும், தன்மான உறுதிக்கும் (self-determination) சாதகமாகவும் அமையலாம். சமீபக் காலங்களில் பல ஆசிய நாடுகளில் ஜனநாயகத்தில் நம்பிக்கை இழந்த, சர்வாதிகார ஆட்சியில் உறுதியான நம்பிக்கை கொண்டிருக்கும் பொதுமக்கள் கருத்தை நாம் காண்கிறோம்.

மேலும், நாம் பொதுமக்கள் கருத்தை அவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பழக்க வழக்கங்களிலிருந்து வேறுபடுத்திப் பார்க்கலாம். இப் பழக்க வழக்கங்கள் சமூக நடத்தையை ஒழுங்குபடுத்துவனவாக அமைவதன் விளைவாக அவை சமூகத் தரங்களாகத் திகழ்கின்றன. இவையே செயல்களைச் செய்வதற்குச் சரியான முறையும், மரபு வரையறையுமாகும். மாறாகப் பொதுமக்கள் கருத்தானது கருத்து மாறுபட்ட வெளிப்பாட்டைக் குறித்த ஒரு கருத்தாகும். பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட பழக்க வழக்கங்கள் வாதத்துக்குரியனவாகலாம். இவ்வாறு நேர்ந்தால் இது பொதுமக்கள் கருத்துக்குரிய பிரச்சினையாகிறது. மேலும், மதிப்புகளிடையே போராட்டமும் எழலாம். இவ்வாறே, ஒருநிலை பெற்ற அரசியல் சட்டங்கூடத் தர்க்கத்திற்கு உட்படலாம். சான்றாக, அரசாங்கத்தைப் பொறுத்த மட்டில் கொடுந்தண்டனை சட்டத்திற்கு உட்பட்டனவாக இருக்கலாம். எனினும், ஒரு குழுவில் இச் சட்டத்தைப்பற்றி ஏற்படும் கருத்துமாறுபாடு ஒரு மாற்றத்திற்கும் அதன்மூலம் சட்டத்தை மாற்றவும் வழிகோலுகிறது. இவ்வாறாக, மக்கள் கருத்து ஓர் எதிர்ப்பு இருக்கும்போதே தோன்றுகிறது. இந்தக் குறுகிய வழியில் சமூக உளவியலானது, பொதுமக்கள் கருத்து எனும் பிரச்சினையை ஆராய்கிறது.

## பொதுமக்கள் கருத்து ஓர் செயன்முறை
## (Public opinion as a process)

நாம் முன்பு சுட்டிக் காட்டியது போன்று, பொதுமக்கள் கருத்தானது நிலையானதன்று. மேலும், இது கருத்து வேறுபாடு

கொண்ட ஒரு வெளிப்பாட்டினை உள்ளடக்கியது. இதன் விளை வாக, ஒரு வெளிப்பாட்டினில் தொடர்ச்சியான மாறுதலும் மேலும் இவ் வெளிப்பாட்டின் கருத்து மாறுபாட்டைக் குறித்து ஒரு குழுவின் கருத்திலும் தொடர்ச்சியான மாறுதலும் நேர் கின்றது. மக்களாட்சியில் பொறுப்புள்ள மக்களனைவரும் பொதுப் பிரச்சினைகளுக்குச் சரியானதொரு முடிவு காண்பதில் முக்கியப் பங்கு கொண்டுள்ளார்கள் என்பதனை நாம் அறிவோம். சமூக நலனைப் பாதிக்கும் பிரச்சினைகளை விவாதிப்பது மக்களின் கடமை, உரிமை என மக்களாட்சி கருதுகிறது. இவ் விவாதத்தின் அடிப் படையில், சட்டமன்றத்தின் வெளியேயும் உள்ளேயும் ஒருமனப் பட்ட தீர்மானம் எழலாம். அதுவே பொதுமக்கள் செயலுக்கு அடிப்படையாக அமைகிறது. பெரும்பான்மையோர் கொண்டுள்ள கருத்து மக்களாட்சியில், செயல் நிகழ்ச்சிகளுக்கு அடிகோலாக அமைகிறது என்பதனைக் குறிக்கிறது. மேலும், எந்த மக்களாட்சியிலும் சிறுபான்மையோர், பெரும்பான்மை யோரின் நோக்குகளினின்றும் மாறுபடுகின்றனர். எனினும், இச் சிறுபான்மையோர், பெரும்பான்மையோரின் முடிவுகளுக்குக் கட்டுப்பட்டேயாக வேண்டும். இருப்பினும், இச் சிறுபான்மை யோர், பொதுமக்கள் கருத்தை மாற்றி, அதைப் பெரும் பான்மையோர் ஏற்றுக்கொள்ள வழி வகுத்தால் இச் சிறுபான்மை யோரின் கருத்தானது பின் பெரும்பான்மையோரின் கருத்தாக மாறி அது செயல் திட்டங்களுக்கு ஆதாரமாக அமைகின்றது. கருத்து மாறுபட்ட வெளிப்பாடுகளும் இவ் வெளிப்பாடுகளுக்கு நிலவுகின்ற கருத்தும், காலத்திற்குக் காலம் மாறுவதனாலும் பொதுமக்கள் கருத்தானது தொடர்ச்சியாக மாறுகிற செயல் முறையாக அமைகிறது. சான்றாக, 'போதை' தரும் மது பானம் தனியனுக்கும் மேலும், சமுதாயத்திற்கும் கெடுதல் விளைவிக்கும் என இந்தியர்கள் கொண்ட பொதுக் கருத்தின்படி மதுவிலக்கு அமலானது. இது பழக்கவழக்கங்களைப் பொறுத் ததேயாகும். மக்கள் கொண்ட இவ்வுறுதியான கருத்தின்படி பல மாநில சட்டமன்றங்கள் மது விற்பதும், அருந்துவதும் குற்ற மெனச் சட்டங்கள் நிறைவேற்றின. இன்றோ, மதுவிலக்குப் பிரச் சினையானது இந்தியாவின் எல்லா மாநிலங்களுக்கும் ஒரு பிரச்சினை யாக நிலவுகிறது. இப் பிரச்சினையைப்பற்றிய கருத்துமாறுபாடு இச் சட்டத்தை வலிமை பெறச் செய்யவோ நீக்கவோ வழி வகுக்கலாம். இச் செயல் பொதுமக்கள் கருத்தை மாற்றி அமைப்பதற்கு இயங்குகின்ற சக்திகளைப் பொறுத்தேயுள்ளது.

## கருத்து ஆக்கத்தின் அடிப்படைப் படிகள்
## (Basic steps in opinion formation)

ஒரு வெளிப்பாட்டினை வரையறை செய்வது கருத்து உருவாக்கலின் முதற்படியாகும். சில தனியர்கள் அல்லது குழுக்கள் சில பிரச்சினைகளை ஒன்றுபடுத்தி அவற்றிற்கு முடிவு காண முயலுகின்றனர். இவர்கள் இப்பிரச்சினையை வரையறை செய்வர். மதுவிலக்குப் பிரச்சினையை நாம் ஓர் உதாரணமாகக் கொள்வோம். 1920—1930ஆம் ஆண்டுகளில் மகாத்மா காந்தியும் மற்றக் காங்கிரஸ் தலைவர்களும் இம் மதுபானப் பிரச்சினையை ஓர் உடனடித் தீர்வுகாண வேண்டிய பிரச்சினையாகக் கருதி அதற்குத் தீர்வு காண முற்பட்டனர். குறிப்பாக, மகாத்மா காந்தி மது விற்பனை வரி வாயிலாகக் கிடைக்கும் வருவாய் மாசுபடிந்த வருமானமெனக் கருதினார். இம் மாதிரியாக ஒரு தனியன் அல்லது குழு மக்கள் தாங்கள் அக்கறை கொண்டுள்ள ஒரு சமூகப் பிரச்சினையை வரையறை செய்து, அதைப்பற்றிப் பேசி மக்களின் கவனத்தை இப் பிரச்சினையின்பால் ஈடுபடுத்துவர். எனவே, கருத்து உருவாக்கலில் முன்னுரையான வரையறை முதற் கட்டமாகத் திகழ்கிறது.

அடுத்தக் கட்டம் ஆராய்தலாகும். இப் பிரச்சினையைப் பற்றிப் பல மக்களும், குழுக்களும் சிந்திக்கத் தொடங்குவர். இந்தப் பிரச்சினை எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதனை ஆராய்வர். இந்தப் பிரச்சினைக்குத் தகுந்த நடவடிக்கை எடுக்க இது சரியான நேரமா என்பதனை விவாதிக்கலாம். மேலும், இந்தப் பிரச்சினைக்கு முடிவு காண இயலுமா எனும் ஐயங்கள் எழலாம்.

எனவே, இக் கட்டத்தில், இப் பிரச்சினையைப்பற்றி ஆராயவும், உண்மைகளைக் காணவும், நிகழக்கூடிய தீர்வுகளைப்பற்றி அறியவும் முயலுகின்றனர். இப் பிரச்சினைகளை விவாதிக்கப் பல கூட்டங்கள் போடலாம். இக் கூட்டங்களின் விளக்கங்களைச் செய்தித்தாள்களில் வெளியிடலாம். இந்தப் பிரச்சினையைக் குறித்துச் செய்தித் தாள்களில் தலையங்கம் வரலாம்.

இவ்வனைத்தும் கருத்து ஆக்கலின் மூன்றும் கட்டத்திற்கு வழிவகுக்கிறது. இந்தப் பிரச்சினையை விவாதிக்கும் பொழுதும் உண்மைகளைச் சேகரிக்கும் பொழுதும் இப் பிரச்சினைகளுக்கான மாற்றுத் தீர்வு தோன்றலாம். விளைவாக, பல்வேறு குழுக்கள் இப் பிரச்சினையின்பால் அக்கறை கொள்வர். சிலர் இப்

பிரச்சினையைத் தொடங்கிய குழுவை ஆதரிப்பர். மற்றவர் இப் பிரச்சினைக்கான முடிவு திருப்தி அளிக்கவில்லை என்பதனை எடுத் துரைக்கலாம். எனவே இக்கட்டம் ஒரு போராட்டக் கட்டமாகும். இதனால், மனவெழுச்சிகளும் அதிகரிக்கலாம். மக்களின் நடத்தை, கும்பலின் நடத்தையைப் போலவும் தோன்றலாம். ஒரு பிரச்சினையின் முடிவை ஆதரித்தோ எதிர்த்தோ, கட்சிப் போர்க் குரல் (slogan) எழுப்பலாம். எதிர்க் கட்சியினர் இத் தீர்விற்குப் புறம்பான உண்மைகளைச் சேகரிப்பர். எடுத்துக் காட்டாக 1955—1956ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கச் சுகாதார அமைச்சரவை காசநோய்த் தடுப்பு அம்மைக் குத்தும் இயக்கத் தைத் (B.C.G.) தீவிரமாக்கியது. திரளான மக்களுக்கு இந்த அம்மை குத்தப்பட்டது. இதில் சென்னை சுகாதார அமைச்சரும் மிக்க கவனம் செலுத்தினர். திரு. இராஜகோபாலாச்சாரியார் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார். அவர் கருத்துக்குச் சென்னை மற்றும் வேறு பல மாநிலங்களின் மருத்துவர்கள் ஆதரவளித்தனர். இருதரப்பினரும் சில உண்மைகளையும் கருத்துகளையும் வெளிப் படுத்தினர். இப் போராட்டக் கட்டத்தின் ஒரு முக்கியமான அம்சம் யாதெனில் பகுத்தறிவிற்குகந்ததும், மனவெழுச்சிகளை உள்ளடக்கியதுமான முடிவுகள் நிலைபெற்றுள்ளமையாகும்.

உரையாடுதல், சொற்பொழிவுகள், பட்டி மன்றங்கள் போன்ற பல பிரச்சாரங்களினின்றும் பெரும்பான்மையான மக்கள் ஒரு பக்கத்திற்குச் சாதகமான முடிவிற்கு வருகிறார்கள். இவ்வாறாக, ஒருமித்தக் கருத்துத் தோன்றுகிறது. இதனின்று எல்லோரும் ஒரே மாதிரியான கருத்துக் கொண்டுள்ளனர் எனக் கூறுவது பொருத்தமற்றது. இப் பிரச்சினை குறித்து வாக் கெடுப்பு, சட்ட மன்றத்திலோ வெளியிலோ நடக்கவும் நேர லாம். பொதுமக்கள் கருத்தினை உள்ளடக்கிய பிரச்சினை எக் காலத்திலும் ஒருமனதான ஒப்புதலைப் பெற்றதில்லை. இங்கு மாறுதல் மட்டுமே காணப்படும். சிறுபான்மையோர் கருத்துப் பெரும்பான்மையோர் கருத்தாகவும் அல்லது மாறாகச் சிற்சில சமயங்களில் பெரும்பான்மையோர் கருத்து கைவிடப்பட்டு அது சிறுபான்மையோர் கருத்தாகவும் மாறும். சான்றாக, 1958ஆம் ஆண்டில் சில ஆசிய நாடுகளில் சர்வாதிகார ஆட்சிக்குச் சாதகமாக இருந்த சிறுபான்மையோரின் கருத்து வன்மை யடைந்து, இராணுவம் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டுமென்கிற பொதுமக்கள் கருத்து உருவானதன் விளைவாகச் சர்வாதிகார ஆட்சி ஏற்படலாயிற்று.

## பகுத்தறிவும் பகுத்தறிவற்ற அம்சங்களும்
(Rational and irrational aspects)

'ஒரு குழுவின் பகுத்தறிவான தீர்ப்பே பொதுமக்கள் கருத்து எனக் கருதியது' ஒரு பழங் கொள்கையாகும். கிடைத்துள்ள ஆதாரங்களின் அடிப்படையில் வெளிப்பாடுகளை ஆராய்ந்து சில நல்ல முடிவுக்குப் பொதுமக்கள் வருவர் எனக் கருதப்பட்டனர். ஆதலின், பொதுமக்களின் கருத்தானது எது உண்மையோ நல்லதோ அதற்குச் சாதகமாகவே அமைகிறது. இதற்கு மாறாக, பிரெஞ்சுப் புரட்சிக்குப் பின் நிலவி வரும் கருத்தானது மனிதன் பெரும்பாலும் பகுத்தறிவற்றும், மனக் கிளர்ச்சியுடையவனாகவும் திகழ்கிறான் என்பதாம். எனவே, பொதுமக்கள் கருத்தானது பெருமளவில் தலைவர்களின் உட்கிளர்ச்சியை (intrigues) பொறுத்தே அமைகிறது எனக் கருதினர். உண்மையல்லாதனவற்றையும், தீமை பயப்பனவற்றையும் அடிப்படையாகக் கொண்டும்கூட, பொதுமக்கள் கருத்தை மாற்றலாம். பகுத்தறிவற்றும், மனக் கிளர்ச்சி வயப்பட்டுமிருக்கும் பாமர மக்கள், பிரச்சினைகளுக்குச் சரியான முடிவு காணத் தகுதியற்றவர்கள் எனக் கருதப்பட்டனர். சில குறிப்பிட்ட தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதர்களாலேயே பகுத்தறிவு சார்ந்த முடிவுகளுக்கு வர இயலும் எனவும் எண்ணலாயினர்.

ஒருவனுடைய எண்ணமும் நடத்தையும் உயிரினத் தேவைகள் (biological needs), இளம் பருவத்துச் சமூக-கலாச்சாரப் பண்பாடு ஆகியவற்றின் ஆக்கநிலையிருத்தம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளன என நாம் முன்பே கண்டோம். பொதுவாக, ஒரு கருத்தானது மேற்கூறிய ஆழ்ந்தமைந்த தேவைகளை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது. விளைவாக, கருத்துகளானது முழுவதும் பகுத்தறிவு அடிப்படையில் அமைவதில்லை. இருப்பினும், பகுத்தறிவு, கருத்துக்கு அடிப்படையாக இருப்பதில்லை எனக் கூறவும் முடியாது. கருத்தானது, பகுத்தறிவு, உளக்கிளர்ச்சி, பற்று ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்தது என நாம் அறிவோம். எனவே, பொதுமக்கள் கருத்து மாற்றத்திற்கு மரபு, மதம், ஜனநாயகக் குறிக்கோள், நெறி, நேர்மை முதலியனவற்றிற்கு முறையீடு செய்வது பெரும் பயன் விளைவிக்கிறது. மேலும், முற்சார்பு எண்ணத்தைப் பலப்படுத்த ஆராய்ச்சி அறிவையும் பயன்படுத்தலாம். ஒரு பிரச்சினையின் சில அம்சங்களைத் தனியன்கள் முன் வைத்தால், அவர்கள் அவற்றிற்கு வேறு பல உண்மைகள் உள்ளனவா எனக் கண்டறியாமலும் ஒரு முடிவிற்கு வரலாம். இதன் காரணம் யாதெனின்,

ஒருவன் கருத்து அமைப்பதில் ஒரு புறம் உயிரினத் தேவைகளாலும், மறுபுறம் சமூகக் கலாச்சாரப் பண்பாடுகளாலும் ஆக்க நிலையிருத்தம் ஆகியவற்றினாலும் கவரப்படுகின்றான். சான்றாக மாநகரத்தில் வாழும் உயர்சாதி இந்துக்கள், தாழ்த்தப்பட்டோருக்கும் இதர மக்களைப் போன்று சம உரிமைகள் உள்ளன என ஏற்றுக்கொள்கிறார்கள். ஆனால், கிராமத்தில் வாழும் உயர்குல இந்துக்கள் பெரும்பாலும் உயிரினத் தேவைகள், இளம் பருவத்துச் சமூக கலாச்சாரப் பண்பாடு ஆகியவற்றினால் வயப்படுகிறார்கள். எனவே, கிராமங்களில் பொதுமக்கள் கருத்து மாறாமல் தாழ்த்தப்பட்டோரைக் குறித்த எண்ணம் வேறுபட்டுத் திகழ்கிறது. இதற்கொப்பான நிலை, அமெரிக்காவில் நீக்ரோக்கள் நடத்தப்படும் முறையாகும். அமெரிக்காவின் தென் மாநிலங்களில் நீக்ரோவைத் தாழ்த்தப்பட்ட குடியாகக் கருதும்போது வட மாநிலங்களிலுள்ள வெள்ளையர் நீக்ரோவைச் சம உரிமையுள்ள குடிமகனாக ஏற்றுக்கொள்கின்றனர். நீக்ரோ பிரச்சினையில், அவர்களைக் கையாளும் முறையில் தென் மாநிலங்களுக்கும், வட மாநிலங்களுக்குமுள்ள போராட்டம் நூறு ஆண்டுகளுக்கு மேல் காணப்பட்டு வருகிறது. எனவே, பொதுமக்கள் கருத்துக் கொண்ட பிரச்சினைகள் அறிவியல் அல்லது தத்துவ ரீதியில் முடிவிற்கு வரும் பிரச்சினைகள் அல்ல. இது போன்ற பிரச்சினைகள் சமூக நலனை ஒரு பக்கத்திலும் மறு பக்கத்தில் குழு மரபுகளையும் பாதிக்கின்றன. விளைவாக, மனவெழுச்சிகள், சார் பெண்ணங்கள், முற்சார்பு நிலைகள் (predispositions) முக்கியப் பங்கினைப் பெறுகின்றன. இதனால்தான், பொதுமக்கள் கருத்து உருவாக்குவதிலும், மாற்றுவதிலும் இவ்விரு குழுக்களுக்கு மிடையேயுள்ள போராட்டம் அதிகரித்துக் கும்பல் நடத்தையும், கொலை, தீயிடல், கொள்ளை போன்ற சட்ட விரோதமான செயல்களும் தென்படுகின்றன. மற்றுமொரு சான்றாக, இந்தியாவில் மொழிவாரி மாநிலங்கள் அமைக்கும் பிரச்சினையை 1955-56ஆம் ஆண்டில் விவாதிக்கும்பொழுது பல மாநிலங்களில் கும்பல் நடத்தைக் காணப்பட்டதை நாம் கூறலாம். எனவே, பொது மக்கள் கருத்து அமைவதில் பகுத்தறிவும், பகுத்தறிவற்ற சலுகைகளும் நிலவுகின்றன.

## கருத்து உருவாதலில் ஊக்கிகள் பங்கு
## (Motivation in opinion formation)

கருத்து உருவாக்குதலில் ஊக்கி மிகவும் முக்கியப் பங்கு வகிக்கிறது. சில தனியர்கள் அல்லது குழுவினரால் மேற்கொள்ளப்பட்ட சில புதுத் திட்டங்கள் தனியன்களைச் சாதகமாகவோ

பாதகமாகவோ பாதிக்கலாம். ஒருவனுடைய பழக்கமான எதிர் வினை ஒரு நிலைமையின் தேவைகளுக்கு ஈடு செய்ய முடியவில்லையாயின் அவன் மனமுறிவு அடைந்து அதன் விளைவால் புதுக் கருத்து அமைக்க அவனுக்கு ஆர்வம் எழுகிறது. எனவே, புதுமாதிரியான எதிர் வினை ஒரு நிலைமையைச் சமாளிக்கவும், சமூகப் பிரச்சினையைத் திருப்திகரமான முறையில் முடிக்கவும் குழுவால் இயலச் செய்கிறதென்று தனியன் உணர்கிறான். சான்றாக, இந்தியாவில் நிலச் சீர்திருத்தப் பிரச்சினையும் இதைப்பற்றிக் குறிப்பாக 1955 முதல் 1959ஆம் ஆண்டுவரை உருவான பொதுமக்கள் கருத்தையும் ஆராயலாம்.

இந்தியாவில் பல இலட்சக்கணக்கான மக்கள் நிலமில்லாத விவசாயிகளாய் இருப்பதனால், ஆந்திர மாநிலத்தில் சில மாவட்டங்களிலுள்ள கம்யூனிஸ்ட் கட்சி பாமர மக்களைக் கவர, நிலமானது அதை உழுபவனுக்கேயன்றி அதனுடைய உடைமையாளருக்கும் சொந்தமானதன்று என்னும் கருத்தை அமைப்பதில் பெரிதும் உதவியது. பெரும்பான்மையான நிலமற்ற விவசாயிகள் இக் கொள்கையை ஏற்றுக்கொண்டு அதன்படி நடந்தனர். இஃது அவர்கள் தேவைக்கு ஏற்ப இருந்தது. நிலத்தை உழுது பயிரிடும் விவசாயி, கடுமையாக உழைத்தும் நிரந்தரமான வறுமையிலும் துன்பத்திலும் வாழ, நில உரிமையாளர் யாதோர் உழைப்புமின்றி ஊதியம் பெறுவதாகக் கருதினார்கள். இவ்வாறு, பொதுமக்கள் கருத்து அமைவதில் வன்மையான ஊக்கிகள் உள்ளடங்கியுள்ளன. ஒரு பிரச்சினையின்பால் இவ்வூக்கிகள் இயங்கவில்லையெனில் அப் பிரச்சினையைப்பற்றிப் பொதுமக்கள் கருத்து எழாது. ஒருவன் எப் பக்கம் சேர்கிறான் என்பது அவர்களது ஊக்கிகளைப் பொறுத்துள்ளன. பெரும் நிலம் படைத்தவன், நிலச் சீர்திருத்தம் கொண்டுவரும் கட்சியினிடத்தில் பகைமை உணர்வு கொள்கிறான். ஆனால், நிலமற்ற விவசாயிகளும், நிலமற்றோரும் நிலச் சீர்திருத்தத்திற்கு ஆதரவாகத் திகழ்கின்றனர். எனவே, கருத்து அமைவது மிகச் சிறந்த பொருளாதாரச் சமூக நீதிகளை மட்டும் சார்ந்திராமல் நாம் நிலம் பெற்றுள்ளோமா, இல்லையா என்பது போன்ற சொந்த நிலைமைகளையும் சார்ந்துள்ளது. மற்றொரு சான்று யாதெனில் உடைமை மாற்று வரி (estate duty), சொத்து வரி போன்ற பல வரிகள் புகுத்தியதில் நாட்டினர் இவற்றிற்கு ஆதரவு தெரிவித்தனர். ஏனெனில், இம் மாதிரியான வரிவிதிப்புகள் பெரும் செல்வம் படைத்த சிறுபான்மை மக்களையே பாதிப்பதனால்தான் அவர்கள் ஆதரவு காட்டினர். எனவே, பொதுமக்கள் கருத்துப் பெரும்பான்மையான மக்களிடத்துச் செயல்படும் ஊக்கிகளைப் பொறுத்தே அமைகிறது.

## தலைமையும் பொதுமக்கள் கருத்தும்
(Leadership and public opinion)

பொதுமக்கள் கருத்து உருவாக்கலில் தலைவர்கள் பெரும் பங்கினைப் பெறுகிறார்கள். அவர்கள் ஒரு வெளிப்பாட்டினை வரையறை செய்வதில் உதவிபுரிகின்றனர். பொதுமக்களிடையே சில மனமுறிவுகளும், அவாக்களும் காணப்படலாம். தலைவரே இத் தெளிவற்ற, வன்மையான உணர்ச்சிகளை (feelings) சொற் சார்ந்தவையாகவும், பளிங்கு போன்ற தெளிவானவையாகவும் மாற்றுகிறார். உதாரணமாகப் பாலகங்காதர திலகர் 'சுய ராஜ்யம்' என்பது 'என் பிறப்புரிமை' என்று முழங்கியதாகும். நம் நாட்டின் மக்கள் அனைவரும் குறிப்பாகக் கல்வி கற்ற குழுக் கள் இந்தியாவில் ஆங்கிலேயே தலைமைக்கு எதிராக உள்ள தங்களின் மன எழுச்சிகளை இக் கூற்றில் கண்டனர். திலகரின் இவ் விளக்கக் கூற்றின் பயனால் நம் நாட்டில் சுயஆட்சிக்குச் சாதக மாக இருந்த பொதுமக்களின் கருத்து வன்மையடைந்தது. ஒரு குழுவின் அல்லது ஒரு நாட்டின் பெரும்பான்மையோரிடத்து, வன் மையான உணர்ச்சிகள் காணப்பட்டால், கிளர்ச்சிக்காரர் அவற்றைப் பொதுமக்கள் கருத்தாக உருவாக்குவதில் பெரும் பங்கினை வகிக்கிறார். மக்களது உணர்ச்சிகளைத் தட்டி எழுப்ப ஒரு தலைவன் பேச்சு, செய்தித்தாள் ஆகியவற்றைப் பயன்படுத்த லாம். பொதுவாக, தலைவன் ஒரு பிரச்சினையை எளிதாக்கு கிறான். ஒரு வல்லுநர் ஒரு வெளிப்பாட்டை ஆராய முனைந்தால் அதனைச் சரிவரப் புரிந்துகொள்ளுவதற்கு அவருக்குப் பல மாதங்கள் கடும் ஆராய்ச்சி தேவைப்படுகிறது. ஆனால், அந்தப் பிரச்சினை யைத் தீர ஆராயும்வரை பொதுமக்களுடைய கருத்து பொறுத் திராது. எடுத்துக்காட்டாக, ஒரு குறிப்பிட்ட காலத்தில் நடை முறையில் இருக்கும் கல்விமுறை பொருந்தாது எனக் கூறல் எளிமையானது. மேடைப் பேச்சாளர்கள் கல்விமுறை பொருந் தாது என்பதற்குப் பல காரணங்களும் எடுத்துக்காட்டுகளும் அளிக்கலாம். இவை, கல்விமுறை மாறுதலுக்கு அனுகூல மான பொதுமக்கள் கருத்தை எழுப்புகின்றன. ஒரு குறிப் பிட்ட காலத்தின் கல்விமுறை அமைப்பைப்பற்றி விரிவாகப் பகுத் தாராய்ந்து, அக் காலத்துச் சமூகத் தேவைகளைப் புரிந்து, மேலும் கல்வி முறையில் மாறுதல் கொணர்ந்தால் எவ்வாறு சமூகத் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலும் என்பதனைப்பற்றிய முன் னறிவிப்புகளைச் செய்தாலன்றிக் கல்வி முறையில் மாறுதல் புகுத்து வதும், நடவடிக்கை எடுப்பதும் மிகவும் கடினமானதாகும். ஆனால், ஒரு நாடானது புரட்சிகரமான மாறுதல்களுக்கு உட்பட்டிருக்கும் பொழுது, கல்விமுறை அக் காலத்துத் தேவைகளைப் பூர்த்தி செய்ய

வில்லை எனக் குற்றம் கூறல் மிகவும் சுலபமானதாகும். இதற்கு மாறாக, மக்கள் ஒரு குறிப்பிட்ட காலத்துச் செயல்களில் திருப்தி கரமாக இருந்தால், ஒரு புரட்சிக்காரர் அல்லது சீர்திருத்தவாதி அச் செயல்கள்பால் மக்களை அதிருப்தி அடையச் செய்வது என்பது ஒரு கடினமான காரியமாகும். எடுத்துக்காட்டாக, காந்திஜி 1936ஆம் ஆண்டு தமது 'ஆதாரக் கல்வி'க் கொள்கைகளை முறைப்படுத்திக் கூறினபொழுது அதற்குச் சிறிதளவே ஆதரவு காணப்பட்டது. எனவே, ஒரு தலைவன் பொதுமக்கள் கொள் கையை ஒரு நெறியில் திரட்ட அவன் மக்களின் உணர்ச்சிகளை நன்கு அறிதல் வேண்டும். இரண்டாவதாக, அவன் ஒரு வெளிப் பாட்டைப் பலருக்கும் புரியும்படி தெளிவுபடுத்தி எளிதாக்க வேண்டும். 'ஒரு தூண்டலின், ஒரு பகுதியை மட்டுமே புலனறிந்து மற்றதைப் புறக்கணிப்பது என்பது ஒரு பொதுவான எளிதாக்கல் முறையாகும். அவ்வாறான அரைகுறையான துலங்கல் நிகழ்வது ஏனெனில் ஒரு தனியன் முழுத் துலங்கல் அளிக்கத் திறமையில்லா தவனாய் இருப்பதனாலும் அல்லது அவனது முந்திய உந்து துலங் கலின் மற்றப் பகுதியைப் புலனறிவிலிருந்து தடுப்பதனாலும் ஆகும்' (1.81). எளிதாக்கல் பிரச்சினை, தேர்ந்தெடுத்த புலன்காட்சியை உள்ளடக்கியதாகும். இது தேவைகளையும் மன முறிவுகளையும் பொறுத்திருக்கிறது. கான்ட்ரில் (Cantril) கூறுவது போல், 'கருத்தானது அமைப்பற்று இருக்கும் பொழுதும், மக்கள் கருத் தேற்றத்துடன் நம்பகமான இடத்திலிருந்து விளக்கம் கேட்கும் பொழுதும் சொற்கூற்றுகள் செயலின் பொதுப்படையான நட வடிக்கைகள் மிகவும் முக்கியத்துவம் அடைகின்றன' (2.226). பொது சுகாதாரத் துறை, சுகாதாரப் பிரச்சினைகளைக் குறித்துப் பிரச்சாரம் நடத்தியபொழுது யாதொரு பொதுமக்கள் கருத்தும் இருக்காது. பெரும்பான்மையோர் இச் சுகாதார அதிகாரிகள் கூறுவதில் அக்கறையற்றவர்களாய் இருப்பார்கள். ஆனால், கொள்ளை நோய் காணப்பட்டால், மக்கள் கலக்கமுற்றுச் சுகாதார அதிகாரிகளைக் கலந்தாலோசித்து அவர்களுக்கு முழு ஒத்துழைப்பு அளிப்பதற்கான பொதுமக்கள் கருத்து உருவாகிறது. இவ்வா றாகப் பொதுமக்கள் கருத்து அமைய தலைமை மட்டும் போதாது. மக்களிடையே சில அவாக்கள் காணப்படும்பொழுது மட்டுமே தலைமைத்தன்மை முக்கியத்துவம் பெறுகிறது. ஒரு தலைவன் இது போன்ற நிலைமைகளை உருவாக்க முடியாது. ஆனால், அவை இருக்கும்போதே அவற்றைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். பொதுமக்கள் கருத்துத் திரட்டுவதில் தலைவன் தன் குழுவிற்கு வெளிப்பாட்டினை வரையறுக்கலாம். அவன் ஒரு குறிப்பிட்ட செயல் திட்டத்தைத் தெளிவாகக் கூறினால் அது பொதுமக்கள் இடையே மட்டுமன்றி அவன் குழு உறுப்பினர்களிடையேயும்

பெருமதிப்புக் கொண்டிருக்கும். ஒரு தலைவனுடைய திட்டம் குழு முழுவதற்கும் பிடித்திருக்க வேண்டுமாயின் அத் திட்டம் கருத் தேற்றமும் விளக்கங்களும் பெருமளவு செயற்படும் பொருட்டுப் பெரும்பாலும் அமைவுற்றதாக இருக்க வேண்டும்.

## பொதுமக்கள் கருத்தை அளவிடல்
## (Gauging public opinion)

மிகப் பரந்த அளவில் பொதுமக்கள் கருத்தை அளவிடப் பயன்படும் முறைகளைப் பண்புத்தரமானதாகவும் (qualitative), அளவுக்குரியதாகவும் (quantitative) பிரிக்கலாம்.

பொதுமக்கள் கருத்து மாறுதலை அறிய வரலாற்று முறையும் உதவுகிறது. இம் முறையைப் பயன்படுத்தி, பொதுமக்கள் கருத்து எவ்வாறு கடந்த ஆண்டுகளில் மாறுதல் அடைந்தது என்பதை அறியலாம். உதாரணமாக, ராபர்ட் கிளைவ் (Robert Clive) 1757-ல் பிளாசி யுத்தத்தில் வெற்றியடைந்தபொழுது பிரிட்டிஷ் அரசாங்கத்தைப்பற்றிய பொதுமக்கள் கருத்து இந்தியாவில் சரிவர நிலவவில்லை. நம் நாட்டில் பல பகுதிகளில் பிரிட்டிஷ் அதிகாரம் வலிமை பெற்று, அவர்கள் இந்து, முகலாய, ஃபிரெஞ்சு, டச்சு மற்றும் இதர ஐரோப்பியக் காலனிகளை முறியடித்தபொழுதுதான் பொதுமக்கள் கருத்து வலிமையடைந்து 1857ஆம் ஆண்டு இந்தியச் சுதந்திரப் போராட்டம் ஏற்பட நேர்ந்தது. இந்தியப் படையின் பெருத்த தோல்வி, நம் நாடு முழுமையிலும் செயல் இன்மைக்கு (absence of activity) வழி வகுத்தது. 1885-ல் இந்திய தேசிய காங்கிரஸ் அமைக்கப்பட்டபொழுது இந்தியர்களின் துன்பத்தை நீக்குமாறு ஆங்கிலேயரிடம் வேண்டிக்கொண்டதில் நம் தலைவர்கள் திருப்தி கொண்டனர். அதாவது, பொதுமக்கள் கருத்து ஆங்கிலேய ஆட்சிக்கு எதிராக இல்லை. மாநகரங்கள், கிராமங்கள் ஆகியவற்றில் கற்றோர், பாமரமக்கள் ஆகியோரிடத்துத் திலகர், மகாத்மா காந்தி போன்ற தலைவர்கள் பணிபுரியத் தொடங்கியதும்தான் பொதுமக்கள் கருத்து மாறி அது 1942ஆம் ஆண்டு உச்சநிலை அடைந்து காந்தியின், 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் தோன்றியது. எனவே, வரலாற்று முறையைப் பயன்படுத்தி, பொதுமக்கள் கருத்து ஒரு குறிப்பிட்ட மக்களிடம் எவ்வாறு மாறுதல் அடைகிறது என்பதை ஆராயலாம். இவ்வாறே இந்தியாவில் தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றத்திற்கான பொதுமக்கள் கருத்தினை அறிய, அரசியல் சட்டத்தில்

ஏற்பட்டுள்ள மாறுதல்கள் மட்டுமல்லாமல் தாழ்த்தப்பட்டோருக்கான கல்வி, சமூகச் சேவைகளில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை ஆராய்வதன் மூலமாகவும் அறியலாம்.

இதுபோன்றே சமூகத்தில் பெண்களின் தகுதியைப்பற்றிய இந்தியர்கள் கருத்து எவ்வாறு மாறுதல்கள் அடைந்தன என்பதை அறிய பெண்கள் இயக்க வரலாறு, (women's movement) பெண்கள் தொடர்புகொண்டுள்ள பல நிறுவனங்கள், அண்மை ஆண்டுகளில் சட்டப்படியான (legal) பெண்கள் தகுதியைப் பாதித்த சமூகச் சட்டங்கள் போன்றவை பெருமளவு உதவுகின்றன. எந்த எண்ணிக்கையில் பல்வேறு நிலைகளில் பலதரப்பட்ட தொழில்களில் பெண்கள் அமர்த்தப்பட்டனர், மேலும், எதுபோன்ற தொழில்களில் அவர்கள் அமர்த்தப்படுகிறார்கள் என்பதனை ஆராய்வதன் மூலம் பெண்கள் தகுதி, சமூகம், பொருளாதாரம், பொதுப்பணி ஆகியவற்றில் அவர்களின் பங்குபற்றிய பொதுமக்கள் கருத்து மாறுதல்களை அறியலாம்.

கருத்து அறிய, தனியாள் வரலாறு (case study) முறையும் ஒன்றாகும். ஒரு குழுவில் சிலரைப் பேட்டி காணுவதின் மூலம் அந்தக் குழுவின் கருத்து மாறுதல்களை அறிய முடியும். எடுத்துக்காட்டாக, லாஸ்கரின் (Laskar) குழந்தைகளின் இன மனப்பான்மை ஆய்வை ஆராயலாம் (3). நீக்ரோக்களைப்பற்றி வெள்ளையர்களின் கருத்தில் ஏற்படும் மாற்றங்களை ஆராய முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. லாஸ்கரின் ஆய்வில் ஒருவன், தன் குழந்தைப் பருவத்தில் நீக்ரேக்களை வெறுக்கக் கற்றுக்கொடுக்கப்பட்டதையும் மேலும், நீக்ரோக்கள் கொடியவர்கள், அவர்கள் தன்னைத் தாக்கி, கொலை செய்பவர்களாகவும் சித்தரிக்கப்பட்டதையும் நினைவுப்படுத்திக் கூறினான். தன் பெற்றோர்கள் எவ்வாறு இம் மனப்பான்மைகளைப் பதியவைத்தனர் என்பதனையும் நினைவுபடுத்தி உரைக்கலானான். அவன் பெரியவனானதும் அப்பிரச்சினையை நன்கு அறிந்ததும் நீக்ரோக்கள்பால் உள்ள மனப்பான்மையில் மாறுதல் அடைந்ததை எடுத்துரைத்தான். நீக்ரோக்களின் முக்கிய நோக்கம் பிறரைக் கொல்லுவது அன்று என்பதைப் பின்னர் அறிந்தான். இருப்பினும் நீக்ரோக்கள்மேல் வெறுப்புத் தொடர்ந்து காணப்பட்டது. தாழ்த்தப்பட்டோர் பிரச்சினை அல்லது இந்தியர் முகமதியரிடத்துக் கொண்டுள்ள மனப்பான்மையில் மாறுதல்கள் அல்லது முகமதியர்கள் இந்துக்களிடத்துக் கொண்டுள்ள மனப்பான்மையில் மாறுதல்கள் குறித்துப் பொதுமக்கள் கருத்து மாறுதல்கள் அறிய மேற்கூறிய முறையில் ஆய்வுகள் இந்தியாவிலும் மேற்கொள்ளலாம்.

இவ்விரு பண்புத்தர முறைகள் மிகவும் பயனுள்ளதாக இருப்பினும் அவை சில குறைபாடுகளையும் கொண்டுள்ளன. இம் முறைகளைக் கையாண்டு பொதுமக்கள் கருத்தைக் காண்பது அரிது. எனவே, பொதுமக்கள் கருத்தைத் திறம்பட அறிய, சமீப காலத்தில் அளவுக்குரிய முறைகள் தோற்றுவிக்கப்பட்டன.

## சோதனை சார்ந்த முறை
## (Quasi—experimental method)

செய்தித்தாள் தலையங்கம் எவ்வாறு ஒரு குழு மக்களின் கருத்தைப் பாதிக்கிறது என்பதை அறிய முயற்சிகள் எடுக்கப் பட்டன. மெயரின் (Maier) (4) பழைய ஆய்வை இங்கு நாம் குறிப்பிடலாம். ஐயோவா பல்கலைக்கழக மாணவர் தினசரி செய் தித் தாளில் ஆஸ்திரேலியாவின் முன்னாள் பிரதமரைக் குறித்து எழுதிய தலையங்கம் பயன்படுத்தப்பட்டது. இப் பரிசோதனைக் குட்பட்ட 203 மாணவர்கள் அப் பிரதமரைக் குறித்து ஏதொன் றும் முன்னரே அறிந்திருக்கவில்லை. இப் பிரதமர் சொற்பொழிவு சுற்றுப்பயணம் செய்வதாகக் கற்பனை செய்து அவரைப்பற்றித் தலையங்கம் அத் தினசரிச் செய்தித்தாளில் இரண்டு மாதங்கள் எழுதப்பட்டன. ஒரு குழு மாணவர்கள் சாதகமான தலையங்கத் தையே வாசிக்க, மறு குழு பாதகமான தலையங்கத்தையே வாசித் தனர். இரண்டு வாரங்களுக்குப் பின் சில சோதனைகள் கொடுக் கப்பட்டன. இதில் ஆஸ்திரேலியப் பிரதமரைக் குறித்துச் சாதக மான தலையங்கத்தை வாசித்த மாணவர்களில் 98% அனுகூலமான ஓரவஞ்சகத்துடனும் (bias), அவரைக் குறித்துப் பாதகமான தலையங்கத்தை வாசித்த மாணவர்களில் 86% பகைமையான விருப்பங்கொண்டிருப்பதையும் காணப்பட்டது. நான்கு மாதங் களுக்குப் பின் இவர்களுக்கு இரண்டாவது சோதனை கொடுக்கப் பட்டது. இதிலும் இப் பிரதமரைக் குறித்து முன் காணப்பட்ட நோக்கங்களே இக் குழுக்களில் வெளிப்பட்டன. ஓரவஞ்சக மான கருத்து ஒரு பக்கம் அல்லது மறுபக்கம் விளைவிக்க, இரண்டு மாதங்களில் பயன்படுத்திய 15 தலையங்கங்கள் எவ்வ ளவு பயன் அளித்ததோ அதே பயனை 7 தலையங்கங்கள் அளித்த தில் காணப்பட்டது. ஒரு தனியன், மக்கள் அல்லது வெளிப்பாடு களின்மேல் கொண்டுள்ள கருத்து, செய்தித்தாளின் தலையங்கத் தினால் பாதிக்கப்படுகின்றன என்பதனை மேற்கூறிய ஆய்வு வெளிப் படுத்துகிறது. இந்தக் குறிப்பிட்ட பரிசோதனையில் எவனைப் பற்றித் தலையங்கங்கள் எழுதப்பட்டனவோ அவன் அத் தலையங் கங்கள் படிக்கும் குழுவிற்கு எவ்விதமான வினையும் விளைவிக்கக் கூடியவனாக இல்லை. இச் சோதனை முன்னாள் ஆஸ்திரேலியப் பிரத

மரைக் குறித்து இருக்கையில் இதில் ஆட்படுநர்கள் அமெரிக்க மாணவர்களாக இருந்தனர். மக்கள், பத்திரிகை தலையங்கத்தி ஞல்மட்டுமன்றி ஒரு தனியன் அல்லது ஒரு வெளிப்பாட்டைத் தழுவிய மற்ற அனுபவங்களினுலும் பாதிக்கப்படுகிருர்கள் என் பதை நாம் மனத்தில் கொள்ளல் வேண்டும். மக்கள், ஒரு பிரபல மனிதனிடத்தோ அல்லது கட்சியினிடத்தோ அதிருப்திக் கொண் டால் அவற்றைக் குறித்து அவதூருக வெளிவரும் வெளியீடுகளை விரும்பிப் படிப்பர் என்பது ஓர் உண்மையாகும். பிரபல மனி தர்கள் அல்லது கட்சிகள் செல்வாக்கைத் தாக்கி எழுதும் சில செய்தித் தாள்களை நாம் இங்குக் குறிப்பிடலாம். திரைப்படங்கள் பயன்படுத்தி மக்கள் கருத்து எவ்வாறு மாறுதல் அடைகிறது என்பதை அறிய சில ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. சமூக திட்டங்கள், தேசிய விஸ்தரிப்புத் திட்டங்கள், புகைவண்டியில் நெரிசல், சுகாதாரப் பிரச்சினைகள் போன்றவற்றில் மக்கள் கொண் டுள்ள கருத்துகளை மாற்றி அமைக்க மத்திய அரசாங்கம் செய்திப் படங்களை (documentary) வெளியிட்டுள்ளன. இவை மக்கள் கருத்தை மாற்றி, அவர்களின் நடத்தையில் மாறுதல் கொண்டுவரும் என்பதில் ஐயமில்லை.

## பதிப்பாசிரியர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் முதலி யோருக்கு வரும் கடிதங்களைப் பாகுபடுத்தல்

(Analysis of letters to editors, legislators etc.)

பொதுமக்கள் கருத்தை அறியும் வழி முறைகளில் ஒன்று னது செய்தித்தாள் மற்றும் இதர வெளியீடுகளில் பிரசுரமா கும் ஆசிரியருக்கான கடிதங்களை ஆராய்தலாகும். மக்கள் சில பிரச்சினைகளை எவ்வாறு கருதுகிருர்கள் என்பதை அறிய இக் கடிதங்கள் உதவுகின்றன. அடிக்கடி செய்தித்தாளில் ஒரு திட் டத்தை ஆதரித்தோ எதிர்த்தோ தொடர்ச்சியாகக் கடி தங்கள் வெளிவரலாம். இவ்வாறே சட்டமன்ற உறுப்பினர்கள், அமைச்சர்கள் ஆகியோருக்கு மக்கள் சில பிரச்சினைகள்பால் கொண் டுள்ள கருத்தைக் கடிதம் அல்லது தந்தி மூலம் தெரிவிக்கலாம். இருப்பினும், ஒரு சிலரே இது போன்ற கடிதங்கள் எழுது கிருர்கள். எடுத்துக்காட்டாக, ஒரு வகுப்பின் 50 மாணவர்களில் மூவரே செய்தித்தாள்களுக்குக் கடிதங்கள் எழுதியுள்ளனர். இம் மூவர் ஒரு குறிப்பிட்ட பிரச்சினையின்பால் அதிக அக்கறை செலுத் தியதனுல்தான் செய்தித் தாள்களுக்குக் கடிதங்கள் எழுதினுர்கள். இப்படிப்பட்டவர்களே செய்தித் தாள்களுக்குக் கடிதங்கள் எழுது வர். இவர்கள் சில நிகழ்ச்சிகளினுல் பெரும் அதிர்ச்சி அல்லது கொடுஞ்சினங்கொண்டு தங்கள் கருத்தை வெளிப்படுத்துவர்,

ஆனல், பெரும்பான்மையோர் யாதொரு கருத்துமின்றி, அப்படி இருப்பினும் அதை வெளிப்படுத்த முனைவதில்லை. பெரும்பாலும் மக்கள் இப் பிரச்சினைகளைக் குறித்துத் தங்கள் உரையாடலில் விமரிசிப்பர். இவர்களில் சிலர், மிகவும் உற்சாகத்தோடு அல்லது மிகவும் சினத்துடன் இருக்கலாம். எனினும், செய்தித்தாள் ஆசிரியருக்கு வரும் கடிதங்களைக்கொண்டு ஒரு பிரச்சினையைக் குறித்துப் பொதுமக்கள் கருத்தை அறிய இயலாது. இங்கு நாம் வைநட் (Wynat), எர்சாக் (Herzog) (5) நடத்திய ஆய்வைக் குறிப்பிடலாம். இவர்கள் அமெரிக்காவில் 1940-ல் நிறைவேற்றிய இராணுவ ஆட்திரட்டு மசோதாவைக் (Selective Service Bill) குறித்து 14 செனடர்களுக்கு (senetors) வந்த 13,000 கடிதங்களைப் பாகுபடுத்தினர். அமெரிக்கா, இரண்டாம் உலகப் போரில் புகுமுன் பெரும்பான்மையான அமெரிக்க மக்கள் இராணுவத்திற்குக் கட்டாய ஆட்சேர்ப்பை ஆதரித்தனர். இதற்கு மாருக 90% கடிதங்கள் இம் மசோதாவை எதிர்ப்பதாக இருந்தன. இக் கடிதங்களில் பெரும்பான்மை நகரங்களிலிருந்தும், மாநகரங்களிலிருந்தும் வந்தனவாகக் காணப்பட்டன. மக்கள் தாங்கள் கொண்டுள்ள கருத்துகளுக்கு ஒத்தக் கருத்துக் கொண்டுள்ள ஆட்சிமன்ற (senate) உறுப்பினர்களுக்குக்கூட கடிதம் எழுதி ஆதரவு அளித்தனர். மேலும், மக்கள் தங்கள் கருத்துக் கொண்டுள்ள சட்டமன்ற உறுப்பினர் (legislators) களுக்கும் கடிதங்கள் எழுதுகிருர்கள். இக் கடிதங்களின் வாயிலாய் ஒரு சட்டமன்ற உறுப்பினர் தாம் நினைப்பது போலவே எல்லா மக்களும் நினைக்கிருர்கள் என்கிற பொதுமைக் கருத்தைப் பெறுகிருர். இக் கடிதங்களில் 30% ஏதாவது ஒரு நிறுவனத்தினல் ஊக்குவிக்கப்படுகிறது. எனவே, அமைச்சர்கள் அல்லது சட்டமன்ற உறுப்பினர்களுக்கு வரும் கடிதங்கள், மக்கள் என்ன நினைக்கிருர்கள் என்பதனை வெளிப்படுத்தாது, பொதுமக்கள் கருத்துக்கு இக் கடிதங்கள் ஓர் அத்தாட்சி எனக் கூறுவதில் மிகவும் எச்சரிக்கையாய் இருத்தல் வேண்டும்.

## வாக்கெடுப்பு முறை
## (Polling method)

சமீப காலமாகப் பொதுமக்களின் கருத்தை அறிவதற்கு ஒரு நுண்முறை உருவாக்கப்பட்டுள்ளது. இந் நூற்ருண்டின் ஆரம்ப காலத்தில் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் உள்ள பத்திரிகை நிறுவனங்கள் தங்கள் வாசகர்களுக்குப் பத்திரிகைகளுடன் வாக்குச் சீட்டுகளையும் அனுப்பிவைத்து நாட்டின் முக்கிய விஷயங்கள் குறித்துத் தங்கள் கருத்துகளைத் தெரிவிக்கும்படி வேண்டுகோள்

விடுத்திருந்தன. தங்களுக்கு வந்த இம் மாதிரியான கருத்துகளை ஆராய்ந்து பார்த்ததில் 12லிருந்து 20 சதவீதம் வரை பிழைகள் காணப்பட்டன. பின் இந்தப் புதிய நுண்முறை வணிக ஆராய்ச்சியாக வளர்ச்சியடைய தொடங்கியது. உற்பத்தியாளர்கள் தாங்கள் உற்பத்தி செய்த பொருள்களின் தரத்தையும், தங்கள் போட்டியாளர்களின் பொருள்களின் தரத்தையும், பரிசீலித்து அதன் மூலம் மாற்றங்கள் செய்து தங்கள் வணிகத்தைப் பெருக்க முயன்றனர். இந்த நுண்முறை மூலம் மக்களின் கருத்துகளை அறிந்து வந்தனர். நுகர்வோரின் விருப்பங்களைப்பற்றிய பல முக்கிய ஆராய்ச்சிகள் நடந்தன. இதைப் போலவே வானொலி நேயர்களின் விருப்பங்களை அறிந்து அவர்களுக்கு மேலும் நல்ல நிகழ்ச்சிகளை ஒலிபரப்ப அமெரிக்காவின் பல்வேறு வானொலி நிலையங்கள் பற்பல ஆராய்ச்சிகளை மேற்கொண்டன. திரள் உற்று நோக்கு முறையினைப் பயன்படுத்திய பேட்டியாளர்கள் நேரடியாகப் பல்வேறு இடங்களில் மக்களைச் சந்தித்து அவர்களின் உரையாடல்களைக் கேட்டுப் பொதுமக்கள் கருத்தின் போக்குகளை அறிந்தனர்.

வெவ்வேறு அமைப்புகளால் எடுக்கப்பட்ட இந்த முயற்சிகள் கட்டுபாடான முறையில் பொதுமக்கள் கருத்தினை அளவிடவும், அவற்றை அறிய கடைபிடிக்கும் முறைகள்பற்றி அறிவியல் ஆய்வு செய்யவும் வழி வகுத்தன.

1930ஆம் ஆண்டில் அமெரிக்கா, பிரிட்டன் மற்றும் பல நாடுகளில் பொதுமக்கள் கருத்தினை வாக்கெடுப்பு முறையில் அறிய பல நிறுவனங்கள் தோன்றின. அமெரிக்காவில் ஜனாதிபதி தேர்தலில் யார் வெற்றி பெறுவார் என்பதை அறியவும், இரண்டாவது உலகப் போரைப்பற்றிய அமெரிக்க மக்களின் கருத்தை அறியவும் பல முக்கிய ஆராய்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. 1936-ல் நடந்தேறிய அமெரிக்க ஜனாதிபதி தேர்தலுக்குச் சில மாதங்களுக்கு முன், அமெரிக்காவில் உள்ள கருத்தாராய்வு நிறுவனம் (Institute of Opinion Studies) யார் வெற்றி பெறுவார் என்பதனை முன்னறிவிப்பதற்கான சோதனையை மேற்கொண்டது. பேட்டியாளர்களை நியமித்து அவர்கள் மக்களிடம் சென்று அவர்களின் விருப்பங்களைப்பற்றி நேரடியாகக் கேட்டு அறிந்தனர். இந்தப் பேட்டி அளிப்பு முறையின் முடிவையொட்டி முன்னறிவிப்புகள் தரப்பட்டன. இந்த முன்னறிவிப்பில் குறைபாடுகள் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றிற்கான காரணத்தை அறியும் பொருட்டு ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டன. மாதிரி, பேட்டி காணும் முறை, கேள்வி அமைப்பு, விவரம்

சேகரிப்பது ஆகியவற்றில் பிழைகள் இருப்பதாகக் கண்டறியப் பட்டன. சான்ருக, இந்தியாவில் கருத்துகள் அளவீட்டின் போது நகரத்தில் உள்ள மக்களைமட்டும் பேட்டி கண்டால், நிச்சயமாகத் தேர்தல் முன்னறிக்கைகளில் தவறு இருக்கும். ஏனெனில் வேட்பாளர்கள் நகரத்தில் மட்டுமல்லாமல், கிராமங்களிலும் பெருமளவில் இருக்கிருர்கள். ஆகையால், சமீபகாலமாக மக்கள் தொகையின் உண்மையான பிரதிபலிப்பு மாதிரியைத் தேர்ந்தெடுப்பதில் மிகக் கவனமாக இருக்கிருர்கள். இதனை நமக்குத் தெரிந்த ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம். வீட்டிலுள்ள தாய், அடுப்பில் இருக்கும் சோறு வெந்துவிட்டதா என்று பார்ப்பதற்கு ஒரு கரண்டியை எடுத்து, அக் கரண்டியின் மூலம் சோற்றைப் பாத்திரத்திலிருந்து எடுத்து சில பருக்கைகளைத் தொட்டுப்பார்த்துச் சோறு வெந்துவிட்டது என்று தீர்மானிக்கிருள். ஒரு முழு பாத்திரத்திலுள்ள சோறு வெந்துவிட்டதா என்று பார்ப்பதற்கு ஒரு சில பருக்கையின் மூலமே அவள் முடிவெடுக்கிருள். அதைப் போலவே ஒரு வியாபாரி தன் கடைக்கு விற்பனைக்கு வந்திருக்கும் தானிய மூட்டைகள் திருப்திகரமாக உள்ளனவா என்று பார்ப்பதற்கு மூட்டையை முழுவதுமாக அவிழ்க்காமல் குத்தூசியின் மூலம் மூட்டையில் அங்கும் இங்கும் துளை செய்து மாதிரித் தானியங்களின் மூலம் அந்த முழு மூட்டையின் தரத்தை அறிந்து கொள்கிருன். இந்த முறை தற்போது பொதுமக்களின் கருத்தினை ஆராய்வதற்குக் கையாளப்படுகிறது. மக்கட்தொகையில் சில வேற்றுமைகள் உள்ளன. உதாரணமாக, பால், வயது, கல்வி, வசிக்குமிடம், கிராமம், நகரம், தொழில் முறை, வருவாய், செல்வம் போன்ற பல காரணிகளைக் கூறலாம். இந்தியாவில் மேற்கண்டவற்றுடன் சாதி, மதம் ஆகியவற்றையும் சேர்க்க வேண்டும். நமது மாதிரிகள் மேற்கூறிய மாறுபடும் தன்மையுள்ளவற்றின் உண்மையான பிரதிபலிப்பாகவும், சரியான விகிதத்தில் அமைந்ததொன்ருகவும் இருந்தால்தான் நமது முடிவுகள் நடத்தையுடன் ஒன்றியிருக்கும்.

கேள்விகள் அமைப்பதிலும் பிழைகள் நேரிடலாம். எல்லா மக்களுக்கும் ஒரே முறையில் தெளிவாகப் புரியக் கூடியக் கேள்வியை அமைப்பது எளிதான ஒன்றன்று. கேள்விகள் திருப்திகரமானதாக இருக்க பலவித நுண் முறைகள் கையாளப்படுகின்றன. கடைசியாக, கேள்விகள் கேட்கப்படுவதற்குமுன் அதைப் பல தடவை மாற்றி அமைத்தும், முன் சோதனைகளுக்குப் பயன்படுத்தியும் அதைச் சரிபார்க்க வேண்டும். கேள்வியின் வரிசைப் பட்டியலும் முக்கியக் காரணியாக அமைகிறது. காண்ட்ரில் (Cantril) (2.28) என்பார் 1939ஆம் ஆண்டு, செப்டம்பர் திங்கள்

முதல் நாள் தேசிய மாதிரியில் கீழ்க்காணும் இரண்டு கேள்விகள் கேட்டிருப்பதனைக் கண்டார்:

(1) அமெரிக்கா தனது குடிமகனை இங்கிலாந்து, பிரான்ஸ் படைகளில் சேர அனுமதிக்க வேண்டுமா?

(2) ஜெர்மானிய படையில் கலந்துகொள்ள அமெரிக்கா தனது மக்களுக்கு அனுமதி அளிக்குமா?

மேற்கண்ட வரிசைப்படி கேள்விகள் கேட்கப்பட்டதன் மூலம் மாதிரியில் 45 சதவீதம் முதல் கேள்விக்கு 'ஆம்' என்றும், மாதிரியில் 31 சதவீதம் இரண்டாவது கேள்விக்கு 'ஆம்' என்றும் பதிலளித்தனர். கேள்விகளை மாற்றி அமைத்துக் கேட்ட போது 22 சதவீதம் ஜெர்மனிக்குச் சாதகமாகவும் 40 சதவீதம் பிரான்சு, இங்கிலாந்து படைகளுக்குச் சாதகமாகவும் பதிலளித் தனர். நேசப் படைகளின் பட்டியலில் சேர விரும்பி பதிவு செய்துகொண்ட சமயம். ஜெர்மன் படையில் சேருவோர்க்கும் அதே சலுகைகளை அளிக்க வேண்டுமென உணர்வதைக் கண்ட னர். ஆனால் அதே கேள்வியில் ஜெர்மானிய படைபற்றி முதலில் கேட்டபோது ஒரு சிலரே அமெரிக்க குடிமக்களுக்கு அத்தகைய சலுகைகளைத் தர விரும்பினர். கேள்விப்பட்டியலின் வரிசை எவ் வகையானாலும், அமெரிக்கர்கள் நேச நாடுகளை விரும்பியதும், ஜெர்மனியை வெறுத்ததும் தெளிவாகத் தெரிகிறது.

இப் பிரச்சினையைப்பற்றி விரிவாகப் போவது தேவையற் றது. 1940-ல், ஜனாதிபதி தேர்தலின் முன்னறிவிப்பில் கணிச மான அளவில் தவறுகள் குறைந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இத்தவறுகள் ஆறு சதவீதத்திலிருந்து மூன்று சதவீதமாகக் குறைக் கப்பட்டன. இந்த ஓட்டளிக்கும் முறையைப்பற்றிய அறிவியல் சார்ந்த ஆய்வுகள் மக்களின் எதிர்கால நடத்தையைப்பற்றிய முன்னோக்குகளின் மதிப்பை உயர்த்தியுள்ளது. இது பொதுமக்கள் கருத்துச் சோதனைகளின் முக்கியத்துவத்தைக் காட்டுகிறது.

இந்தியாவில் இந் நுண்முறைகளைப் பயன்படுத்தி நடை பெற்ற பணிகள் சிலவற்றை எடுத்துக்காட்டாக இங்குக் காண் போம். இந் நூலாசிரியர் சமூக, பொருளாதார மற்றும் பல பிரச்சினைகளைப்பற்றிய சென்னை மாநில மாணவர்களின் கருத்து களை அறியும் பொருட்டு ஒரு தேர்வாராய்வு நடத்தினர் (6). சென்னை மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து 591 மாணவர்களிடம், 'சாதி முறைகள் திருப்திகரமானவையா;

சகிக்கமுடிந்தவையா ; சகிக்க இயலாதவையா?' என்கிற கேள்வி கேட்கப்பட்டது. இம் மாணவர்களில் 11 சதவீதத்தினர் சாதி முறை திருப்திகரமானதென்றும் 32.2 சதவீதத்தினர் அது சகிக்கத் தக்கதே என்றும் 55.8 சதவீதத்தினர் சகிக்க இயலாதது என்றும் கருத்துத் தெரிவித்தனர். 1 சதவீதத்தினர் மட்டுமே யாதொரு கருத்தும் தெரிவிக்கவில்லை. மேற்கண்ட ஆய்வைச் சாதி முறைப் படி பிரித்துப் பார்த்ததில் 42 சதவீதம் பிராமணர்களும், 64.8 சதவீதம் பிராமணர் அல்லாதாரும் சாதிமுறை சகிக்க இயலா தது என்று வலியுறுத்துவதாகக் கண்டறியப்பட்டது. மாணவர் களை அவர்களது மொழிவாரியாகப் பிரித்துப் பார்த்ததில் 48.3 சதவீதத் தெலுங்கு மாணவர்களும் 51.2 சதவீதத் தமிழ் மாணவர் களும் 61.5 சதவீதக் கன்னட மாணவர்களும் 70.8 சதவீத மலையாள மாணவர்களும் சாதி முறை சகிக்க இயலாதது என்று வலியுறுத்துவதாகக் கண்டறியப்பட்டது.

அச் சமயத்தில் (1951) தீவிரமாக விவாதிக்கப்பட்ட, இந்தி யாவில் மொழிவாரி மாநிலங்கள் அமைப்பதுபற்றிய பிரச்சினை தொடர்பான வினாக்களும் கேட்கப்பட்டன. ஆராயப்பட்ட 591 மாணவர்களில் 36.4 சதவீதத்தினர்மட்டுமே மொழிவாரி மாநிலங் கள் உருவாவதை ஆதரித்தனர் என்றும் 61.2 சதவீத மாண வர்கள் அதை எதிர்த்தனர் என்றும் கண்டார். மாறாக, இக் குழு முழுமையும் மொழிவாரி மாநில அமைப்பிற்கு ஆதரவாக இல்லை. இச் சோதனைக்குள்ளானவர்களை மொழிவாரியாகப் பிரித்துப் பார்த்ததில் தெலுங்கு மாணவர்கள் மொழிவாரி மாநில அமைப்பிற்குப் பெரும் ஆதரவு அளித்தனர். மொத்தக் குழுவில் 19.3 சதவீதத்தினரும் தெலுங்கு மாணவர்களில் 36.6 சதவீத மாணவர்கள் மொழிவாரி மாநில அமைப்பு உடனடியாகத் தேவை என்று கருதுவதாகக் கண்டறியப்பட்டது. மொத்தக் குழுவில் 56.1 சதவீத மாணவர்களும், தெலுங்கு மாணவர்களில் 33.9 சதவீதத்தினரும் மொழிவாரி மாநில அமைப்பிற்கு எதிர்ப்புத் தெரி வித்தனர் (7). 1953-ல் ஆந்திர மாநிலமே முதன் முதலாக இந்தியாவில் அமைக்கப்பட்ட மொழிவாரி மாநிலம் என்பது அனைவரும் அறிந்ததே. இவ்வாறாகக் கருத்தாய்வுகள் நமக்கு மக்களின் கருத்துப் போக்குப்பற்றிச் சுட்டிக்காட்டுகின்றன.

1953-ல் இந் நூலாசிரியர் பாராளுமன்றத்தில் விவாதிக்கப் பட்ட இந்துச் சட்டம்பற்றி (Hindu Code Bill) மைசூர் மாநகர மக்களின் கருத்துகளை அறிய ஒரு கருத்தாராய்வு (investigation) நடத்தினார் (8). பரிசோதனைக்குட்பட்ட 1,303 நபர்களில் 530 பெண்களும் 733 ஆண்களும் இருந்தனர். இச்

சோதனைக்குட்பட்டவர்களில் தொழிலாளர்கள் (218), ஆசிரியர்கள் (169), வழக்கறிஞர்கள் (49) மருத்துவர்கள் (35) மற்றும் பலர் இருந்தனர். 459 மாணவர்களும் 844 மாணவர் அல்லாதாரும் தங்களது கருத்துகளைத் தெரிவித்தனர். ஒரு தார மணத்திற்கு (monogamy) 84.36 சதவீதத்தினர் ஆதரவளித்தனர். மேலும், அரிசனங்கள் பலதார மணத்திற்கு (polygamy) கடுமையான எதிர்ப்புத் தெரிவிப்பதாகவும், உழவர்கள் மிதமான எதிர்ப்புத் தெரிவிப்பதாகவும் கண்டறிந்தனர். இந்து மதத்தவரில் 15.48 சதவீதத்தினரும், அரிசனங்களில் 7.58 சதவீதத்தினரும் வொக்கலிகர்கள் (vokkaligas) 29.89 சதவீதத்தினரும் பலதார மணத்திற்கு ஆதரவு தெரிவித்துள்ளனர். மாணவர்களிடையேயும் (82.03%) மாணவர்களல்லாதாரிடத்தேயும் (85.30%) கருத்துவேறுபாடு இல்லை எனக் கண்டறியப்பட்டது. இறுதியாகக் கல்வியறிவு ஒருதார மணம்பற்றிய கருத்தைப் பாதிப்பதில்லை என அறியப்பட்டது. 88.15 சதவீதம் கல்வியற்ற பெண்களும் 74.69 சதவீதக் கல்வியற்ற ஆண்களும் ஒருதார மணத்தை ஆதரிக்கையில் 91.80 சதவீதக் கல்லூரி மாணவிகளும் 85.3 சதவீதக் கல்லூரி மாணவர்களும் இதற்கு ஆதரவளித்தனர். ஒருவரின் வயது ஒருதார மணத்தைப்பற்றிய கருத்தைப் பாதிப்பதில்லை என்றும் அறியப்பட்டது. இருபது வயதுக்குட்பட்டவர்களில் 83.34 சதவீதத்தினரும் நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களில் 84.77 சதவீதத்தினரும் ஒருதார மணத்தை ஆதரித்தனர்.

## பொதுமக்கள் கருத்து அளவீட்டின் நிலைத்தன்மையும் நம்பகமும்

(Constancy and reliability of public opinion surveys)

பொதுமக்கள் கருத்து அளவீடுகளின் நம்பகத்தை (reliability) உயர்த்தும் பொருட்டுப் பல முறைகள் கையாளப்படுகின்றன. வாக்கெடுப்பவர்களும் பொதுமக்கள் கருத்தளவீட்டில் ஈடுபட்டிருக்கும் மற்றவர்களும் இதனை அறிவதற்கான கேள்விகளைத் தெளிவாகவும் சார்பற்றும், சுருக்கமாகவும் அமைக்க முயற்சிக்கின்றனர். இக் கேள்விகட்குப் பல பதில்கள் கொடுக்கப்பட்டிருந்தால் அவை சுருக்கமாகவும் தெளிவாகவும் அமைய வேண்டும். இவ்வாறு பிழைகளைக் குறைக்கவும், முடிவின் நம்பகத்தை உயர்த்தவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

அளவிடும் கருவியில் ஏதேனும் சில மாறுதல்கள் ஏற்பட்டாலும் முடிவுகள் உறுதியாக அமையுமா? என்பது நிலையானத் தன்மைக்கு (constancy) ஒரு பிரச்சினையாகும். முன்பே கண்ட

வாறு கேள்விமுறை, கொடுக்கப்பட்ட விடைகள், கேள்வி அமைப்பு முறை மற்றும் பல முடிவுகளைப் பாதிக்கலாம். அளவீட்டுக் கருவியில் சிறிதளவு மாறுதல்கள் நேரிடினுங்கூட அவை மனப்பான்மையில் மாறுதல்களை விளைவித்து அதன் விளைவால் முடிவுகளின் உறுதித் தன்மைப் பாதிக்கப்படலாம். இதன்மூலம் ஒரு கருத்தாய்வு சோதனைக்குக் கவனமுள்ள முன் சோதனை (pre-test) தேவை என்பதனை உள்ளடக்கியுள்ளது.

அடுத்த பிரச்சினை நம்பகத்தைத் தழுவியது ஆகும். ஒரு குழுவினிடத்துக் கேள்விகளை இரண்டாவது முறையாகக் கேட்டால் அல்லது ஒத்த குழுவிடத்து இதே கேள்விகளைக் கேட்டால் இக் கேள்விகள் ஒத்த முடிவுகளைத் தருமா? கேள்விகள், அதற்கான மாற்று பதில்கள் (alternative response) தெளிவாகவும், சார்பற்றும், சுருக்கமாகவும் அமைப்பதனால் பதில்களின் நம்பகத்தை உயர்த்தலாம் என்று அறிகிறோம். கருத்தாய்வு அளவீட்டில் காணப்படும் கேள்விகட்கும் அன்றாட வாழ்க்கையில் காணப்படும் கேள்விகட்கும் பெருமளவில் வேறுபாடுகள் உள்ளன என்பதை உணர வேண்டும். அன்றாட வாழ்க்கையில் கேட்கப்படும் கேள்விகள் குழப்பம் மிகுந்தும், தவறானவையாகவும் தெளிவற்றும், நீளமாகவும் உள்ளன. இவ்வாறே பதில்களும் குழப்பம் மிகுந்தும் தெளிவற்றும் காணப்படுகின்றன. கருத்தாய்வு நடத்துபவர் முன்னெச்சரிக்கையாகவே, தான் உபயோகிக்கும் அளவீட்டுக் கருவி நம்பகமான முடிவுகளை அளிக்குமா என்று உறுதி செய்து கொள்ளுகின்றார். சந்தை ஆராய்ச்சிகளில் (market research) பயன்படுத்தும் எளிதான கேள்விகள் ஒரேமாதிரியான உயர்ந்த நம்பகத்தை அளிக்கின்றன என்பதை அறிவோம். ஜென்கின்ஸ் (Jenkins) (9) நுகர்வோரைப் பார்த்து எந்த வகையான ------- நீங்கள் கடைசியாக வாங்கினீர்கள்? என்ற கேள்வியைக் கேட்டு இரண்டு நாள்கள் கழித்து அதே கேள்வியைக் கேட்டதில் 97 சதவீதத்தினர் அதே வகையான பீர் (beer) வாங்கியதாகவும், 93 சதவீதத்தினர் அதே வகையான தக்காளி ரசம் (tomato juice) வாங்கியதாகவும், மிகக் குறைந்த சதவீதத்தினர் அதாவது 87 சதவீதத்தினர் அதே வகையான கைக் கழுவு நீர் (hand lotion) வாங்கியதாகவும், 85 சதவீதத்தினர் அதே வகையான கார் டயர்களை (car tyre) வாங்கியதாகவும் குறிப்பிட்டுள்ளார். ரூஸ்வெல்ட், நல்ல, சுமாரான, கெட்ட பணியை நாட்டுக்குச் செய்கிறாரா? என்ற கேள்விக்கு 1940ஆம் ஆண்டுகளில் ஒரு சிறு மாதிரியிடத்து (small sample) கேட்ட போது 79 சதவீதத்தினர் ஒரே மாதிரியான பதில்களை அளித்ததாக மாஸ்டெல்லர் (Mosteller) கூறியதைக் காண்ட்ரில் (Cantril)

நினைவு கூருகிருர் (2.100). பொதுமக்கள் கருத்தாய்வு அளவீட்டில் காணப்படும் கேள்விகள் திட்டவட்டமான பொருளை அல்லது செயலைக் குறித்தோ காணப்படின், அக் கேள்விகளின் பதில்களின் நம்பகத்தன்மை உயர்ந்து காணப்படுகிறது. இக் கேள்விகள் பொதுப் பிரச்சினைகளைத் தழுவி இருப்பின் இப் பதில்களின் நம்பகத்தன்மை ஓட்டெடுப்புச் சூழ்நிலைகளையும் பொறுத்துள்ளது என்பதை நாம் அறிய வேண்டும். பொது நிகழ்ச்சிகளில் (public events) ஏற்படும் சில மாற்றங்கள்கூட பதில்களில் மாறுதல்களை விளைவிக்கக்கூடும். உதாரணமாகக் காங்கிரஸ் நிறுவனம் அதன் சமுதாயக் கொள்கையைப் 'பொதுவுடைமைச் சமுதாயம்' (socialistic pattern of society) என்ற வார்த்தைகளை உபயோகித்து உருவாக்கியபோது நாடு முழுவதும் தேசியமயக் கொள்கைக்கு ஆதரவு அளித்தது. இன்சூரன்சு கம்பெனிகளை நிருவகித்தவர்களில் சில செல்வந்தர்கள் அக் கம்பெனியின் மூலதனத்தைக் கையாண்டதாகத் தெரிய வந்ததால், அக் கம்பெனிகளைத் தேசிய மயமாக்குவதற்கு ஆதரவாகப் பொது மக்களின் கருத்து வலிமை பெற்றுக் காணப்பட்டது. மாருக 'முந்ரா விவகாரம்' (Mundhra deal) குற்றச்சாட்டுகள் தேசிய மயக் கொள்கைக்கு எதிரான மனப்பான்மையை மக்களிடம் உருவாக்கியது. எனவே, கருத்தாய்வு அளவீடுகள் திரும்பச் செய்யும்போது ஒரே முடிவு பெறுவதானது அந்த அளவீடுகள் செய்யும்போது அந்தக் குழு இருந்த நிலைகளைப் பொறுத்துள்ளது. இவ்வாறு பல பிரச்சினைகள் காணப்படினும் பொதுமக்கள் கருத்து அளவீட்டு முடிவுகள், மக்கள் எவ்வாறு சிந்திக்கிருர்கள் என்பதைப்பற்றி அறிய மிகவும் பயன்படுகிறது.

### பொதுமக்கள் கருத்தாய்வுகளின் ஏற்புடைமை (The validity of public opinion studies)

பொதுமக்கள் கருத்தாய்வுகளின் முடிவுக்கும் அவர்களின் உண்மையான நடத்தைக்கும் உள்ள தொடர்பு மற்ருெரு பிரச்சினையாகும். இதுவே ஏற்புடைமைப் பிரச்சினையாகும். நாம் கண்டறிந்த முடிவுகள் இதர முடிவுகளுடன் ஒத்திருக்கின்றனவா என்பதையும் நாம் கண்டறிய வேண்டும். இது சொல்லுக்கும் செயலுக்கும் இடையே உள்ள சிக்கலான தொடர்பைப் பற்றிய மனித நடத்தையின் பல்வேறு பிரச்சினைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது (1.146). ஒரு குறிப்பிட்ட துறையில் ஏற்புடைமை உள்ளது எனக் காட்ட குறிப்பிடத்தக்க அளவு சான்றுகள் கிடைத்துள்ளன. அமெரிக்காவிலும் இதர நாடுகளிலும் தேர்தல் முடிவுகளைப்பற்றிய முன்னறிவிப்பைப் பொறுத்தவரை, வாக்

கெடுப்போர் முன்னறிவிப்பிற்கும் தேர்தல் முடிவிற்கும் உள்ள வேறுபாடு மாதிரி பிழையளவிற்குட்பட்டே காணப்படுகிறது. நியூ யார்க் மாநகர ஆளுநர் தேர்தலில் 200 மக்களடங்கிய சிறு குழுவினைப் பேட்டி கண்டு, தேர்தல் முடிவு முன்னறிவிப்பில் 5 சதவீதத்திற்குட்பட்டே பிழைகள் இருப்பதைக் காண்ட்ரில் (Cantril) நிரூபித்தார். மொத்த ஜனத் தொகையின் இயல்புகள் அனைத்தும் இம் மாதிரியில் அமையுமாறு குழுவினைத் தேர்தெடுப்பது அத்தியாவசியமானதாகும்.

இந் நூலாசிரியர் ஆய்வுகளில் பொதுமக்கள் கருத்தளவீட்டில் குறிப்பிடத்தக்க அளவில் ஏற்புடைமை இருப்பதைக் கண்டறிந்தார். உதாரணமாக, மொழிவாரி மாநிலங்கள் அமைப்பது பற்றிய ஆய்வில் ஆந்திர மாணவர்கள் ஆந்திர மாநிலம் அமைப்பதில் ஊக்கத்துடன் இருந்ததுமட்டுமன்றி அஃது உடனடியாக அமைய வேண்டும் எனக் கருதுவதாகவும் கண்டார். இவ்வாய்வு 1951ஆம் ஆண்டு நடந்தேறிய இரு வருடங்கட்குள் ஆந்திர மாநிலம் 1953-ல் உருவாக்கப்பட்டது. கல்லூரி மாணவர்களிடையே நடத்தப்பட்ட இக் கருத்தாய்வுகள்கூட பொதுமக்களின் உணர்ச்சிகளை அறிய உதவுகிறது. ஒரு மாநகரில் திருமணத்தைக் குறித்த கருத்தாய்வில் பெரும்பாலான மக்கள் ஒருதார மணத்தை ஆதரித்தனர் என்று கண்டதை இங்கு மற்றோர் உதாரணமாகக் கூறலாம். இவ்வாய்வு 1953ஆம் ஆண்டு நடந்தேறிய மூன்று வருடங்கட்குள் 1956ஆம் ஆண்டு நாடாளுமன்றத்தில் ஒரு தாரமணத்தை ஆதரிக்கும் இந்து திருமண சட்டம் (Hindu Marriage Act) அமுலாக்கப்பட்டது. 'இரண்டாம் உலகப் போர் முடியும் தருணத்தில் போர்வீரர்களிடையே நடத்திய மனப்பான்மை ஆய்வுகளின் முடிவானது, தேர்ச்சியுள்ள 8 சதவீதத்தினரே (vetrans) இந்திய அரசு உரிமைச் சட்டத்தை (G. I. Bill of Rights) பயன்படுத்திக்கொள்வர் என்பதே. ஆனால், 8.1 சதவீதத்தினரே மேற்படிப்புக்கான நிறுவனங்களில் சேர முயற்சி செய்தனர். இது சமீப காலத்தில் நடந்த ஏற்புடைமை சோதனைக்கு எடுத்துக்காட்டாகும்' (10.139).

மக்கள் கருத்தாய்வுகளின் ஏற்புடைமைப் பிரச்சினை ஒரு எளிய பிரச்சினையன்று என்பதனை நாம் உணர வேண்டும். சில சமயங்களில் 14 சதவீதத்தினர்வரை பேட்டி காண்பவர்களின் வேண்டுகோள்களை நிராகரித்தனர் என்பதனைக் காண்ட்ரில் (Cantril) கண்டறிந்தார். சிலர் தங்கள் கருத்துகளை வெளியிட விரும்பாததே இதற்குக் காரணமாகும். மேலும், இது கருத்தறியும் பிரச்சினையின் தன்மையைப் பொறுத்தமைகிறது. பொது

மக்கள் கருத்தறியும் ஒரு பொதுப் பிரச்சினையானது பெருவாரியான மக்களைப் பாதித்துக்கொண்டிருந்தால் அல்லது தங்கள் வாழ்க்கையைப் பாதிப்பதாயிருந்தால் சிறுபான்மையோர் மட்டுமே இப் பிரச்சினைக்குத் தங்கள் கருத்துகளை வெளியிட மறுப்பர் என்பதை நாம் உணர வேண்டும். பதில் சொல்பவர் சிந்திக்காத பல பிரச்சினைகளைக் கேள்விகளாக எழுப்பினுல் அவர் பதில் கூற இயல்வதில்லை. இது போன்ற சூழ்நிலையில் அதாவது முதல் கேள்விக்கு அவர் பதில்கூற இயலாமல் இருக்கும் தறுவாயில் மேற்கொண்டு தொடர்வது உசிதமன்று. இவ்வழிகளினுல் நாம் முன்னறிவிப்புப் பிழைகளைக் குறைப்பதோடு மட்டுமன்றிச் சிந்திக்காமல் வெளியிடப்படும் கருத்துகளை ஒதுக்கிவிட முடிகிறது. இதுபோன்ற ஆய்வுகளில் ஈடுபடும் பேட்டி காண்பவர்கள் பிழைகளை அகற்ற பல ஆய்வுகளின் மூலம் தணிக்கை செய்யவேண்டியது அவசியமாகிறது.

## தேர்தல்களின் நடைமுறை முக்கியத்துவம் (The practical importance of polls)

இந்தச் சிறு பகுதியை முடிக்குமுன் தேர்தல்களின் நடைமுறை முக்கியத்துவத்தைச் சற்றே காண்போம். மேற்கண்டவாறு வணிக நிறுவனங்கள் விற்பனை ஆராய்ச்சி முறைகளைப் பயன்படுத்திக் கொண்டன. மக்களின் தேவைகளை நுகர்வோரின் (consumer) தேவை மாற்றங்களுக்கான காரணங்களையும் முன்பே தெரிந்துகொள்ளல் உற்பத்தித் திட்டங்களைப்பற்றி இறுதி முடிவு எடுக்க மிகவும் பயன்படுகிறது. விளம்பரங்களில் உபயோகிக்கவும், பொதுமக்களைக் கவரும் வார்த்தைகளை அறியவும், ஒருகுறிப்பிட்ட உற்பத்திப் பொருளின் தன்மைகளைப்பற்றிப் பொதுமக்கள் கொண்டுள்ள கருத்துகளை அறியவும் போட்டிகள் நடத்தப்படுகின்றன. செய்தித் தாள்களில் வரும் போட்டிகளின் ஒரு குறிப்பே இம் முறையைத் தொழில், வணிக, விளம்பர நிறுவனங்கள் எவ்வாறு பயன்படுத்துகின்றன என்பதை விளக்கும்.

அரசாங்கங்களும் தேர்தல் முறைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருக்கின்றன. சென்ற போரில் ஜெர்மன், ஜப்பான் ஆகிய நாடுகளின் சர்வதிகார அரசுகள் எந்த அளவிற்கு மக்களை வழிகாட்டுவதில் அதிகாரிகள் வெற்றி கண்டுள்ளனர் என்பதை அறியும்பொருட்டுக் கருத்தாய்வுகள் நடத்தினர் (11). இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் அவற்றின் அரசுகள் தங்கள் கொள்கைகளை உருவாக்கும் பொருட்டு மக்களின் விருப்பங்களை அறிய வாக்கெடுப்பு முறையைப் பயன்படுத்தின. உருவாக்கிய திட்டங்

களினுல் மக்களிடையே ஏற்பட்ட பொதுவான, குறிப்பிடத்தக்க மாறுதல்களைப்பற்றி அறியவும் வாக்கெடுப்பு முறையை இவ்வரசுகள் பயன்படுத்தின. போர் மூண்ட பிறகு, உணவும் மற்ற நுகர்வோர் வாணிகப் பொருள்களும் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் பங்கீடு முறையில் வழங்கப்பட்டபோது பல கட்டுத் திட்டங்களின் பயனுல் மக்களிடையே ஏற்பட்ட மாறுதல்களையும் அவர்களின் தேவைகளையும் அறியும் பொருட்டும் வாக்கெடுப்பு முறை கையாளப்பட்டது. அமெரிக்காவில் கருவூலத் துறை (treasury department) விவசாயத் துறையின் தேர்தல் நிறுவனத்தை, யுத்தநிதிப் பத்திரங்களை விற்பதில் தொடர்புடைய முக்கியமான உந்துக்களை அறியும் அடிப்படை ஆய்வுகளை நடத்தும் பொருட்டுக் கடன் வாங்கியது (1.160).

## கூட்டத் தொடர்பு முறை ஊடகங்கள் (The mass media of communication)

இன்றைய பொதுமக்கள் கருத்து உருவாதலையும் மாறுதலையும் புரிந்துகொள்ள, தொடர்புகளை உருவாக்கும் முறைகளைப் புரிந்துகொள்வது அவசியம். நவீன சமுதாயத்தில் பொதுமக்கள் கருத்தைத் தன்வசப்படுத்தும் பொருட்டுப் பலமுறைகள் கையாளப்படுகின்றன. பல்வேறு தொடர்பு முறைகளின் (communication media) இடையில் செய்தித்தாள், வானொலி, திரைப்படம் ஆகியன எந் நாட்டிலும், உலக முழுதும் கோடிக்கணக்கான மக்களை அடைவதால் இவை மிகவும் முக்கியமான தொடர்பு முறைகளாகும். ஒவ்வொரு நாளும், சிறு நகரங்களிலும்கூட நூற்றுக்கணக்கான பல்வேறு பலமொழிப் பத்திரிகைகள் விற்கப்படுகின்றன. அதேபோல ஒவ்வொரு நாளும் எல்லா நேரத்திலும் இந்தியாவிலுள்ள வானொலி நிலையங்கள்மட்டுமன்றி உலகெங்குமுள்ள பல்வேறு வானொலி நிலையங்கள் செய்திகளையும், மனமகிழ்ச்சியூட்டும் நிகழ்ச்சிகளையும் ஒலிபரப்புகின்றன. திரைப்படங்களைப் பொறுத்தவரை, இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் தயாரிக்கப்பட்ட படங்கள் மாநகரங்களிலும், நகரங்களிலுமுள்ள திரை அரங்குகளில்மட்டுமன்றிக் கிராமங்களிலும்கூட காட்டப்படுகின்றன. இந்தக் கூட்டத்தைத் தொடர்பு முறைகளில் நிகழ்ச்சி நடத்த ஒரு சில நிமிடங்களில் அல்லது ஒரு சில மணிகளில் நிகழ்ச்சிபற்றிய செய்திகள் உலக முழுதும் வானொலி, செய்தித்தாள் திரைப்படம் மூலம் பரப்புகின்றன. இவ்வாருக, நேரமும் இடமும் நவீன கண்டுபிடிப்புகள் மூலம் உலக முழுவதும் செய்திகளைப் பரப்பச் செலவழிக்கப்படுகின்றன.

நவீன நகர்ப்புற சமுதாயத்திற்கும், நவீன கிராமப்புற சமுதாயத்திற்கும் மற்றப் பழங்கால சமுதாயங்கட்குமிடையேயுள்ள மிகப் பெரிய வேறுபாடு யாதெனில் கருத்துருவாக்கலில் கையாளப் படும் தொடர்பு முறைகளைத் தன்னகத்தே கொண்டிருத்தலாகும். முதனிலைக் குழு அமைப்புகளில் மக்களிடையே நடந்த உரையாடல்களே கருத்துருவாக்கத் தொடர்பில் முதலிடம் வகித்தது. வதந்திகளும் செய்திகளும் பண்டைய சமுதாயங்களில் ஒருவருடன் ஒருவர் பேசுவதன் மூலமே பரப்பப்பட்டன. இன்றும்கூட கிராமப் புறங்களில் இம் முறை பின்பற்றப்படுவதைக் காணலாம். தொழில்மயமாக்கல், நகர்மயமாக்கல், மத்திய ஆட்சியமைப்பு இவற்றினுல் கூட்டத்தொடர்பு முறைகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகின்றன. அச்சு, தந்தி, தொலைபேசி, வானொலி, தந்தி முறை தட்டச்சுப்பொறி ஆகிய முறைகளினுல் செய்தித் தொடர்பு முறைகள் மிகவும் சிக்கல் மிகுந்து காணப்படுகின்றன. இவ்வாருகச் சமுதாயக் கூட்டத்தின் வளர்ச்சியோடு கூட்டத்தொடர்பு முறையும் வளர்ச்சியடைகிறது என்பது தெளிவாகிறது.

## செய்தித்தாள் (Newspaper)

நவீன செய்தித்தாள்கள், குறிப்பாக நாளிதழ்கள் சமீப காலத்தில் தோன்றியனவாகும். முதல் வெற்றிகரமான நாளிதழ் இலண்டனில் 1702-ல் நிறுவப்பட்டது. 19ஆம் நூற்ருண்டின் துவக்கத்தில் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் நவீன முறை தினசரி செய்தித்தாள்கள் துவங்கப்பட்டன. 19ஆம் நூற்ருண்டின் துவக்கத்தில்கூட பெரும்பாலான செய்தித்தாள்கள் கருத்துகளை வெளியிடும் பத்திரிகைகளாகவே இருந்தன. வாசகர்களின் கருத்துகளை அறியும்பொருட்டு அவர்களைக் கவர சில செய்திகளை வெளியிட்டனர். அந் நாள்களில் பெரும்பாலான பத்திரிகைகள் அவதூறுகளை அச்சடிப்பதன் மூலம் அல்லது அவற்றைத் தடுத்து நிறுத்துவதன் மூலம் செல்வம் சேர்ந்தனர்.

நவீன செய்தித்தாள் தொழிற்புரட்சியின் ஒரு விளைபொருளாகும். தொழிற்புரட்சியின் விளைவுகளால் சமுதாயத்தில் குறிப்பாக இங்கிலாந்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. தொழிற்புரட்சி ஒருவகையில் கூட்டத் தொடர்புகளுக்குதவும் கண்டுபிடிப்புகளின் முன்னேற்றத்திற்கும், மற்ருெருவகையில் வணிக நிறுவனங்கள் தங்கள் பொருட்களுக்கு விளம்பரங்கள் செய்யவும் வழிகாட்டின. விளம்பரங்களின் வகையினுல் செய்தித் தாள்கள் நேர்மையானவையாகவும், ஒப்புக்கொள்ளத்தக்கவையாகவும், மதிப்பிற்குரியனவாகவும் மாறிவிட்டன (1.425). இந்த வணிக

நிறுவனங்கள் வேண்டிய செய்தித்தாள்களின் பரவல், நிகழ்ச்சி களின் ஒப்பீட்டு அடிப்படையில் சார்பற்ற செய்தி அறிவிப்பினுல் நிறைவேற்றப்பட்டது. நவீன செய்தித்தாள்களின் வளர்ச்சிக்குக் காரணமான மற்றொரு காரணி, ஜனநாயகத் தேசியத்தன்மை யும், திரளான மக்களிடையே கல்வியின் பரவலும் ஆகும். மேற்கத்திய ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் 19ஆம் நூற்றுண்டின் பெரும்பான்மையான மக்கள் கல்வியறிவு ஊட்டப் பட்டனர். ஜனநாயகத்தைப் பாதிக்கும் பிரச்சினைகளைப்பற்றி அவர்கள் அறிந்துகொள்ள விரும்பினுர்கள். அவர்கள் தேர்தல் களைப்பற்றியும், பாராளுமன்றத்தின் நடவடிக்கைகளைப்பற்றியும் அறிந்துகொள்ள விரும்பினுர்கள். இந்தியாவில் தினசரி செய்தித் தாள்கள் ஜனநாயக இயக்கத்தினுலும், பொது இயக்கங்களின் பாலுள்ள ஆர்வத்தினுலும் தங்களை உருவாக்கிக்கொள்ள முடிந்தது.

இந்தியாவில் 1957, டிசம்பர் 31ஆம் தேதி வரை, 5,932 செய்தித்தாள்களும், பத்திரிகைகளும் வெளிவந்தன. அவற்றின் இடையே 446 தினசரிகளும் 1,589 வாராந்தரிகளும், 517 மாதமிருமுறை இதழ்களும், 2,351 மாதாந்திரிகளும் இருந்தன. அவற்றில் 20 சதவீதம் ஆங்கில மொழியிலும், 19 சதவீதம் இந்தி மொழியிலும், 8.7 சதவீதம் உருது மொழியிலும், மற்ற மொழிப் பத்திரிகைகள் 8 சதவீதத்திற்கு குறைவாகவும் இருந் தன.

பத்திரிகை பரவலைப் பொறுத்தவரை 31.49 இலட்சம் தினசரிகளும், 30.52 இலட்சம் வாராந்திரிகளும், 31.62 இலட் சம் மாதாந்தரிகளும் ஒன்று சேர்ந்து மொத்தத்தில் 83 சத வீதத்தை அமைக்கின்றன (19.176).

இந்தியாவிலும் மற்ற நாடுகளிலும் நவீன பத்திரிகை உல கின் ஓர் ஒப்பற்ற போக்கு, செய்தித்தாள்களின் பொருளடக்கத் தைக் கட்டுப்படுத்தும் நபர்களைக் கொண்ட ஒரு சில கூட்டங் களின், ஒருமுகப்படுத்தப்பட்ட சக்திகளின் பெருக்கைப் பொறுத் துள்ளது. செய்தித்தாள்களின் பரவல் அதிகமாக வெளியிடு வதற்கான விலை மதிப்பும், தேவைப்படும் மூலதனமும் அதிகமா கிறது. மற்றச் செய்தித் தாள்களை வாங்கவும் அல்லது ஒரே சமயத்தில் நாட்டின் பல பாகங்களிலிருந்து செய்தித்தாள்களை வெளியிடவும் சிலருக்கு இது வழிகாட்டுகின்றது. உதாரணமாக 'டைம்ஸ் ஆப் இந்தியா' குழு பல செய்தித்தாள்களை நாட்டின் பல பாகங்களிலிருந்து வெளியிடுகின்றது. அவர்கள் பல சஞ்சி

கைகளையும் வெளியிடுகின்றனர். அதேபோல், 'இந்தியன் எக்ஸ் பிரஸ்' குழுவைச் சேர்ந்த செய்தித்தாள்கள் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் வெளியிடப்படுவதல்லாமல் பல மொழிகளிலும் வெளியிடப்படுகின்றன. அமெரிக்காவில் 1918-1944 அதற்குட்பட்ட காலத்தில் செய்தித்தாள்களின் மொத்தப் பரவல் 60 சதவீதம் உயர்ந்திருக்கும்போது தினசரி செய்தித்தாள்களின் மொத்தப் பரவல் 19 சதவீதம் குறைந்திருக்கின்றது என அறிவிக்கப்படுகின்றது. 18 தினசரி செய்தித்தாள்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் 14 நபர்களில் 1 சதவீதத்தினர் 24 சதவீதம் தினசரி பத்திரிகைகளின் பரவலை அடக்கியாள்வதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது (1.426). பத்திரிகைப் பரவல் அதிகமாகும்பொழுது அவற்றைக் கட்டுப்படுத்தும் குழுக்களின் எண்ணிக்கைக் குறைகின்றது.

செய்தித்தாள்களின் மற்றொரு முக்கியத்தன்மை, செய்தித்தாள்களின் விளம்பரங்கட்கும் பரவலுக்கும் இடையேயுள்ள தொடர்பாகும். செய்தித்தாள்களின் பரவல் அதிகமானால்தான் செய்தித்தாள்களின் அதிபர்கள் அவற்றை நடத்த முடியும். பரவல் அதிகரித்தலுடன் விளம்பரங்களினால் வரும் வருமானமும் அதிகரிக்கின்றது. செய்தித்தாளின் வருவாயில் 10லிருந்து 35 சதவீதம்வரைமட்டுமே வாசகர்களிடமிருந்து நேரடியாகக் கிடைக்கின்றது என்று மதிப்பிடப்பட்டிருக்கின்றது, மீதி விளம்பரதாரரிடமிருந்து வருகின்றது. பரவலில் உண்டாகும் உயர்வுடன் விளம்பரங்களினால் வரும் வருவாய் உயர்வதால் செய்தித்தாள்களின் இதழ் விலை குறைகின்றது. செய்தித்தாள்களின்மீது ஒரு முறை பார்வையைச் செலுத்துவதிலேயே பெரும்பான்மையான பகுதியை விளம்பரங்கட்கு ஒதுக்கப்பட்டிருப்பதை அறிகிறோம். திரைப்பட விளம்பரங்களும், உற்பத்தியாளர்களின் விளம்பரங்களும், கூட்டுக்குழுவின் அபிவிருத்தியாளர்களும் (promotors of a company) அதிகமான பகுதியை உபயோகித்துக்கொள்கின்றனர். இது நவீன செய்தித்தாள்களின் மற்றொரு தன்மைக்கு வழிகாட்டுகின்றது. விளம்பரம் செய்பவர்கள் செய்தித்தாள்களில் வரும் தலையங்கங்களையும், செய்திகளையும் கட்டுப்படுத்த முற்படுகின்றனர். குறிப்பாகச் சிறு சமுதாயங்களில் உள்ளூர் விளம்பரம் செய்வர்களைப் பகைத்துக்கொண்டால் ஒரு செய்தித்தாள் வளர இயலாது. உதாரணமாக 1947-ல் வடக்கு டெக்கோட்டா சமுதாயத்தைச் சேர்ந்த சில வணிகர்கள், ஒரு வெளியிடுபவர் தான் கருதிய தனி மனித முதலாளித்துவத்தைத் தாக்கியதையும் 'ஹென்றி வாலாஸ்' (Henry Wallace) என்பவருக்கு ஆதரவு தெரிவித்ததையும், கூட்டுறவு, ரஷ்யாவுடன்

அமைதி, அரசாங்கத்தினரால் கட்டுப்படுத்தப்பட்ட வணிகம் ஆகியவற்றை எதிர்த்தனர்.

அவர்களில் பெரும்பாலோனோர் தங்கள் விளம்பரங்களைத் திரும்பப் பெற்றுக்கொண்டதன் மூலம் அப் பத்திரிக்கை நிறுவனத்தை விற்கும்படி செய்துவிட்டனர். 'இந்து', 'ஸ்டேட்ஸ் மேன்', 'டைம்ஸ் ஆப் இந்தியா' ஆகிய தலைசிறந்த தினசரிகள் பெரும்பான்மையான பரவலையும் அதே சமயத்தில் செல்வ வளத்தினையும் கொண்டிருக்கின்றன என்பதைக் கருத்திற்கொள்ள வேண்டும். விளைவாக அவற்றின் வருவாய் விளம்பரங்களினால் கிடைப்பதாய் இருப்பினும் தனிப்பட்ட விளம்பரதாரர்கள் அச்சுறுத்த இயலாது.

ஒரு செய்தித்தாள் பல பிரிவுகளைக் கொண்டிருக்கும். அஃது உள்ளூர் செய்திகளையும், தேசியச் செய்திகளையும், உலகச் செய்திகளையும் அளிக்கும். அந்தச் செய்திகள், மக்கள் ஆர்வம் கொண்டுள்ள அண்மைக்கால நிகழ்ச்சிகளைப்பற்றி இருக்கும். மேலும், பெரும்பாலான செய்திகள், உலக புகழ் பெற்றவர்களையும், நாட்டுப்புகழ் பெற்றவர்களையும் உள்ளூரில் புகழ்பெற்றவர்களையும் பற்றி இருக்கும். வணிக மூலதனங்களைப்பற்றியும் விளையாட்டுகளைப்பற்றியும், கருத்துப் படங்களைப்பற்றியும் இருக்கும். வாரத்திற்கு ஒரு முறை மகளிருக்காகவும், குழந்தைகளுக்காகவும் புத்தக விமர்சனத்தையும் வெளியிடலாம். இந்தியாவிலும், உலகில் உள்ள மற்ற நாடுகளிலும் பெரும்பாலான செய்தித்தாள்கள் சோதிட முன் அறிவிப்புகளை வெளியிடும் பிரிவுகளைக் கொண்டுள்ளன. அகில உலக அல்லது நாட்டு நிகழ்ச்சிகளைக் கொண்டாடக் கூடுதல் பதிப்புகளும் (supplement) வெளியிடப்படலாம்.

ஒரு செய்திக் கதையைத் தொகுப்பதில் பல உளவியல் தன்மைகள் பயன்படுத்தப்படுகின்றன. மனித சமுதாயத்தில் உளப் போராட்டங்கள் (conflict) அறிந்துகொள்வதில் மக்கள் ஆர்வம் கொண்டுள்ளனர். எனவே, எப்போதாவது கலகம் தொழிற் சச்சரவு அல்லது போர் மூளும்போது அவற்றைப்பற்றிய விரிவான அறிக்கை வெளியிடப்படும். வழக்கத்திற்கு மாறான நிகழ்ச்சிகளிலும் உணர்ச்சியூட்டும் நிகழ்ச்சிகளிலும்கூட மக்கள் ஆர்வம் கொண்டுள்ளனர். எனவே ஊழல், கொள்ளை, வெள்ளம், தீ இவற்றைப்பற்றிய கதைகளும் வெளியிடப்படுகின்றன. வாழ்க்கைப் பிரச்சினைகளில் இருக்கும் ஆர்வம், கொலைகள், விவாகரத்து வழக்குகள், பாலின நடத்தைகளுடன் தொடர்புடையவைப்பற்றி

யும் வெளியீடுகள் வருவதற்கு வழிகாட்டுகின்றன. மக்கள் புதிய கண்டுபிடிப்புகளில் ஆர்வம் கொண்டிருப்பதனுல் செய்தித்தாள்களில் நவீன தொழில்நுட்ப முறைகளுக்கான பெரும்பகுதி ஒதுக்கப்படுகிறது.

எழுத்தறிவுப் பெருக்கத்துடன், நாட்டுப்புறங்களில் செய்தித்தாள்களும் பெருகுகின்றன. முற்காலத்தில் கல்கத்தா, பம்பாய், சென்னை, டில்லி ஆகிய பெரிய நகரங்களில் மட்டுமே தனிச் சிறப்புடைய செய்தித்தாள்கள் வெளியிடப்பட்டு வந்தன. ஆனுல், அண்மைக் காலத்தில் நாம் இரு போக்குகளைக் காண்கிறேம். பல்வேறு இந்திய மொழி செய்தித்தாள்கள் பெருகிய அதே சமயத்தில் சிறு நகரங்களிலும் செய்தித்தாள்கள் வெளிவருகின்றன. ஒவ்வோர் இந்திய மாநிலத்திலும் இப்போது ஆங்கிலத்திலும் இந்திய மொழிகளிலும் செய்தித்தாள்கள் வெளியிடப்படுகின்றன. வெளியூரில் பதிப்பாகும் தாள்கள் வருவதில் தாமதம் ஏற்படுவதால் உள்ளூரிலிருந்தே வெளியிடப்படும் செய்தித்தாள்களை வாங்கவிரும்புகின்றனர். உள்ளூர் நிகழ்ச்சிகளைப்பற்றிய உள்ளூர் சமூகத்தைப் பாதிக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றிய செய்திப் பிரச்சினைகளும் உள்ளூர் பதிப்பில் உள்ளன. முடிவாக, விளம்பரங்களைப்பற்றிய பிரச்சினைகளும் உள்ளன. இவற்றையெல்லாம் உள்ளூர்ச் செய்தித்தாள்களுக்கு ஆதரவாக வழிகாட்டுகின்றன.

செய்தித்தாள்களின் முதலாளிகளின் கொள்கைகளுக்கும், அவைகட்கு ஆதரவளிக்கும் விளம்பரதாரர்களின் கொள்கைகளிலுமுள்ள வேறுபாடுகளின் விளைவாகப் பல செய்தித்தாள்கள் ஒரே நிகழ்ச்சியைப் பல கருத்துகளையும் மனப்பான்மைகளையும் தோற்றுவிக்கும் வகையில் வெளியிடலாம். செய்தித்தாள் ஒரு செய்தியை முக்கியமானதாகக் கருதினுல் அதனை முதல் பக்கத்தில் அல்லது நடுப்பக்கத்தில் வெளியிடலாம். அவ்வளவு முக்கியமற்றதாகக் கருதினுல் மற்றப் பக்கங்களில் வெளியிடலாம். ஒரு செய்தித்தாள் மக்கள் கருத்தை வயப்படுத்த செய்தித் தலைப்புகளின் அளவும் ஒரு முக்கிய வழியாகும். வாசகர்களின் கவனத்தைக் கவர்வதற்குச் செய்தித் தலைப்புகள் பெரியதாக இருக்க வேண்டும். செய்தித் தலைப்புகட்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சொற்களைப் பொறுத்தே மக்களின் நோக்கும் இருக்கும். வெவ்வேறு செய்தித்தாள்கள் தலைப்புகட்காக வெவ்வேறு சொற்களையும் சொற்றொடர்களையும் செய்தியறிக்கையிலிருந்து தேர்ந்தெடுக்கலாம். இது மக்களின் மனத்தில் பல்வேறு கருத்துகளைத் தோற்றுவிக்கும். மற்றொரு முறை (technique) முதல் வாக்கியம் அல்லது முதல் பத்தி வெளியிடப்பட்டிருக்கும் முறைபற்றியது ஆகும், மக்கள்

கருத்தைச் செய்திகளின் நீளமும் பாதிக்கும். முடிவாகப் பதிப்பாசிரியர் செய்திகளைப்பற்றி எழுதும் தலையங்கம் வாசர்களின் மனத்தில் அதைப்பற்றி ஒரு கருத்தை உருவாக்கலாம்.

இந்த முறைகளை ஒரு குறிப்பிட்ட நாளின் பல செய்தித்தாள்களை ஒப்பிடும்போது கண்டறியலாம். செய்தி ஒன்றாக இருப்பினும் கருத்து வேறுபாடுகட்கு அடிகோலும் வகையில் பெரும்பாலான இம் முறைகள் பயன்படுத்தப்படுவதையும் காண்கிறோம். ஒரு பொது அலுவலர் தமது சொற்பொழிவை முன்னதாகவே கொடுத்துவிட்டிருந்தும்கூட அவரது சொற்பொழிவு பல்வேறு பத்திரிகைகளில் பல்வேறுவிதமாக வெளியிடப்படலாம்.

மக்களிடையே மக்கள் கருத்து உருவாவதற்குச் செய்தித்தாள்கள் வழிகாட்டும்போது, மக்களின் கருத்து, பத்திரிகை அதிகாரிகள் தங்கள் கருத்துகளை வலியுறுத்தும் தலையங்கங்களையும் பாதிக்கின்றன. எனவே, செய்தித்தாள்கட்கும் அதன் வாசகர்கட்கும் எப்போதும் தொடர்பு இருந்துகொண்டிருக்கிறது. தலையங்கங்கள் எவ்வாறு மக்களிடையே செல்வாக்குடையதோ அவ்வாறே மக்களின் கடிதங்களும் பதிப்பாசிரியர்களிடையே செல்வாக்குப் பெற்று விளங்குகின்றன. எனவேதான் பதிப்பாசிரியர்க்கு வரும் கடிதங்கள் பத்திரிகையின் வெகு முக்கியப் பகுதியாக விளங்குகின்றன. சில சமயங்களில் செய்தித்தாள்களும்கூட மக்களின் தேவைகளை அறியும் பொருட்டுக் கருத்தாய்வுகளை நடத்துகின்றன. மக்களின் ஆர்வங்களுக்கேற்றவாறு அவர்கள் பல புதிய பகுதிகளை அறிமுகப்படுத்தவும், வெளி நாட்டிலிருந்தும் உள்நாட்டிலிருந்தும் செய்திகளைச் சேகரிக்கவும் மக்கள் தேவைகளை அறியும் பொருட்டுச் செய்தித்தாள்கள் கருத்தாய்வுகளை நடத்துகின்றன.

**வானொலி (The radio)**

அண்மைக் காலங்களில் வானொலி ஒரு முக்கியமான கூட்டத் தொடர்பு முறையாயிற்று. முதல் உலகப் போரின்போது அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் சில முக்கிய அதிகாரிகள் தொடர்புகொள்ள வானொலி பயன்படுத்தப்பட்டது. ஆனால், 1930 வாக்கில் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் வானொலி ஒரு மிக முக்கியமான தொடர்பு முறையாகவும் பெரும் தொழிலாகவும் உருவெடுத்தது. ஆய்வுகளின்படி 90 சதவீதத்திற்கு மேற்பட்ட அமெரிக்கக் குடும்பங்களில் ஒரு வானொலிப் பெட்டியாவது இருக்கிறது. 1947-ல் இந்தியாவிலிருந்த 6 வானொலி நிலையங்கள் 1959-ல் 28 வானொலி நிலையங்களாக அதிகரிக்கப்

பட்டன. 1927ஆம் ஆண்டில் இந்தியாவில் 3,954 வானொலி பெட்டிகளே இருந்தன. இது 1947-ல் 248,274 ஆகவும், பின்னர் 1959-ல் 1,230,814 ஆகவும் உயர்ந்தன. 1949-ல் இந்தியாவில் 192,172 வானொலிப் பெட்டிகள் இறக்குமதி செய்யப்பட்டன. 3,036 வானொலிப் பெட்டிகள் இந்தியாவிலேயே உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் 1957-ல் 4,393 வானொலிப் பெட்டிகள் மட்டுமே இறக்குமதி செய்யப்பட்டன. 190,690 வானொலிப் பெட்டிகள் இந்தியாவிலேயே உற்பத்தி செய்யப்பட்டன (19.171-175). அமெரிக்க ஐக்கிய நாடுகளைத்தவிர மற்றெல்லா நாடுகளிலும் அரசாங்கம் வானொலி ஒலிபரப்புவதை மேற்பார்வையிடுகிறது அல்லது நேரடியாகக் கட்டுப்படுத்துகிறது. உலக முழுவதும் நடக்கும் ஒலிபரப்பல்களில் நாம் மூவகை வேறுபாடுகளைக் கண்டறியலாம். ஒரு பக்கத்தில் சர்வாதிகார நாடுகளில் உதாரணமாக நாஜி ஜெர்மனி, ரஷ்யா ஆகிய நாடுகளில் வானொலி பரப்புதல் முழுவதையும் அரசாங்கமே கட்டுப்படுத்துகின்றது. இதற்கு மாறாக அமெரிக்கா போன்ற நாடுகளில் ஒலிபரப்புதல் என்பது பத்திரிகை வெளியிடுவது போன்ற நிகழ்ச்சியாக இருக்கின்றது. எந்த ஒரு தனிப்பட்ட மனிதனோ நிறுவனமோ தனக்குச் சொந்தமான வானொலி நிலையத்தை அதற்குத் தேவையான தனி உரிமை பெற்று ஆரம்பிக்கலாம். இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் அமெரிக்காவில் மட்டும் 100 நீள் அலைவரிசைகளைப் பயன்படுத்தி 1,000 வானொலி நிலையங்கள் உள்ளன. அரசாங்கம் வானொலி நிலையங்கட்கிடையே ஒலிபரப்புதலில் எவ்வித இடர்பாடும் இல்லாமல் கட்டுப்படுத்துகிறது. அதே சமயத்தில் ஒலிபரப்பு நிகழ்ச்சிகளில் தலையிடுவதில்லை. மேற்கூறிய இரண்டு முறைகட்குமிடையே இந்தியா, இங்கிலாந்து, கனடா ஆகிய நாடுகளில் அரசாங்கம் ஒலிபரப்பு தலைக் கவனிக்க ஒரு குழுவை அமைத்துள்ளது. ஒலிபரப்புதல் முழுவதையும் இக் குழுவே கவனித்து வருகிறது. அரசாங்கம் இதனை மேற்பார்வைமட்டுமே செய்கிறது. பிரான்சு, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் அரசாங்க ஒலிபரப்பு நிலையங்களும் தனியார் ஒலிபரப்பு நிலையங்களும் போட்டியிட்டுக்கொண்டு நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகின்றன. இவ்வாறு பலதரத்தில் பல்வேறு வானொலி பரப்புதலை அரசாங்கங்கள் கட்டுப்படுத்துகின்றன.

பெரும்பாலான மக்கள் பொழுதுபோக்குக்காக வானொலியை விரும்பிக் கேட்கின்றனர். 48 சதவீதம் இசையும் 4 சதவீதம் நாடகங்களும் அகில இந்திய வானொலியில் ஒலிபரப்பப் படுகின்றன (19.171). பொதுவாக வானொலிப் பெட்டிகள் வீட்டிலோ பொது இடத்திலோ மோட்டார் வண்டியிலோ பேருந்

திலோ வைக்கப்பட்டிருக்கின்றன. அண்மைக் காலங்களில், ஒவ்வொருவரும் கையில் எடுத்துச் செல்லும் வகையில் சிறு வானொலிப் பெட்டிகளும் கிடைக்கின்றன. வீட்டு வேலைகளைக் கவனிக்கும்போது இல்லாள் வீட்டிலிருக்கும் வானொலிப் பெட்டியிலிருந்து நிகழ்ச்சிகளைக் கேட்கிறாள். குழந்தைகள் தாங்கள் விளையாடும்போதும் படிக்கும்போதும் நிகழ்ச்சிகளைக் கேட்கலாம். தொழிற்சாலையில் தொழிலாளர்கள் தங்கள் ஓய்வு நேரங்களில் வானொலி கேட்கிறார்கள். அ.இ.வா. (அகில இந்திய வானொலி) மத்திய நேரங்களில் தொழிலாளர்களுக்கான நிகழ்ச்சிகளை நடத்துகின்றது. கிராமங்களில் மற்றக் குடிமக்கள் தங்கள் வேலைகளை முடித்த பின், பூங்காவிலோ பொது இடத்திலோ வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்கக் கூடுகின்றனர். அமெரிக்காவில் பேருந்து ஓட்டுநர் வெகுதூரப் பயணத்தின் மனச் சோர்வை மாற்றும்பொருட்டுப் பேருந்திலுள்ள வானொலியைத் திருப்புவது போல் இந்தியாவில் மோட்டார் வண்டியிலும், பேருந்திலும் வானொலிகள் அவ்வளவு பிரபலமடையவில்லை. பெரும்பாலான வானொலி நேரம், இசை, நாடகம் மற்ற வகையான பொழுது போக்கு நிகழ்ச்சிகளை ஒலிபரப்பச் செலவிடப்படுகிறது. செய்தியும் கல்வியும் பொதுமக்கள் நன்கு அறியும்பொருட்டு ஒலிபரப்பப் படுகின்றது. 1935க்கு முன்பே கான்ட்ரிலும் (Cantril) ஆல்போர்ட்டும் (Allport) வானொலியைப்பற்றிய தங்கள் ஆய்வுகளை வெளியிட்டனர் (12). அவர்களது ஆய்வுகள் பல சுவையான தகவல்களை வெளியிட்டன. உதாரணமாக மக்கள் பொதுவாகப் பெண் ஒலிபரப்பாளர்களைவிட ஆண் ஒலிபரப்பாளர்களை அதிகமாக விரும்புகின்றனர் என்பது கண்டறியப்பட்டது. மேலும், அவர்கள் மக்கள் தரமான உச்சரிப்பை விரும்புகிறார்கள் எனவும் கண்டறிந்தனர். மக்கள் போலி நடையையும் பயிற்சியற்ற குரல்களையும் விரும்புவதில்லை எனக் கண்டறிந்தனர். அவர்களாகவே அளிக்கும் பொதுவான அறிக்கைகளும், அவர்களாகவே கூறும் குறிப்பிட்ட விவரங்களும் விரும்பப்படவில்லை என்றும் அவர்கள் கண்டறிந்தனர். பொதுவான அறிக்கைகளும் குறிப்பிட்ட விவரங்கள் அல்லது எடுத்துக்காட்டுகளும் சேர்ந்த ஒரு கூட்டே மிகப் பயனுடையதாகும். சொற்பொழிவைப் பொறுத்த வரை, சிறப்பான பேச்சு என்பது ஒரு நிமிடத்திற்கு 150லிருந்து 160 வார்த்தைகள் வரை இருக்க வேண்டும். கல்வி, மற்ற விஷயங்களைப்பற்றிய ஒலிபரப்பின் நிகழ்ச்சிக் காலம் 15 நிமிடங்களே மிகுந்த பயனுடையது எனக் கண்டறியப்பட்டது. இந் நிகழ்ச்சிக் காலம் நாடகத்திற்கும் மற்றப் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகட்கும் இன்னும் அதிகமாக இருக்கலாம். சொற்பொழிவைவிட உரையாடல் மிகவும் சுவையானதாக இருப்பதாகக் கண்டறிந்

தனர். அமெரிக்க ஒலிபரப்பு நிலையங்களின் வருமானம் விளம்பரதாரர்களிடமிருந்தே வரினும், விளம்பரதாரர்கள் மிகச் சிறிதளவே விரும்பப்பட்டனர் எனவும் கண்டறியப்பட்டது. உண்மையில் 82 சதவீதத்தினர் விளம்பரங்களை வெறுப்பதாகக் கூறினர். விளம்பரங்களை நிகழ்ச்சியாக ஒலிபரப்புவது நேரடியாக விளம்பரம் செய்வதைவிட பயனுடையது என அவர்கள் கண்டறிந்தனர்.

எல்லா நாடுகளிலும் செய்தி ஒலிபரப்புதலுக்கு வானொலி ஒரு முக்கியமான வழியாகப் பயன்படுகிறது. இந்தியாவில் காலை, மதியம், மாலை, இரவு ஆகிய பல்வேறு நேரங்களில் பல்வேறு மொழிகளில் செய்திகளை நாம் கேட்கிறோம். அமெரிக்காவில், ஒரே வானொலி நிலையத்திலிருந்து உலகச் செய்திகள் பலமுறை ஒலிபரப்பப்படுகின்றன. 'உலகச் செய்திகளைச் சீக்கிரமாகவும், அடிக்கடியும், திறமையாகவும் வானொலி அளிக்கின்றது. விரிவாக்கப்பட்ட செய்தித் தலைப்புகளுடன்கூடிய சில அறிக்கைகள் விமர்சகர்கள் தங்கள் தலையங்கங்களமைக்கவும் அல்லது நேயர்கட்கு மகிழ்ச்சியூட்டவும் பயன்படுகின்றது' (1.469). இவ் விஷயத்தில் இந்தியாவில் வானொலிச் செய்தி முற்றிலும் மாறுபாடானது. இந்தியாவில் செய்தி ஒலிபரப்பல்கள் எவ்வித விமரிசனமும் இன்றிச் செய்தியைமட்டும் ஒலிபரப்புகின்றன. இஃது அ.இ.வா. பின்பற்றும் ஒரு சிறந்த வழியாகும். இந்தியாவில் 22 சதவீத ஒலிபரப்பு நேரம் செய்திகளை ஒலிபரப்பச் செலவழிக்கப்படுகின்றது (19.171). மேலும், அ.இ.வா. செய்தித் தலைப்புகளை அளித்து அதன் பின்னர் விவரங்களை ஈற்று இறுதியாகத் தலைப்புகளுடன் முடிகின்றது. இம்மாதிரி திரும்பக் கூறல் சுலபமாகப் புரிந்துக்கொள்ளவும், நினைவில் இருத்திக்கொள்ளவும் உதவி புரிகின்றது. செய்திகளை அளிக்கும்போது தரும் விமரிசனங்கள் கொள்கை பரப்புதல் மதிப்பைக் கொண்டிருப்பினும் மக்களைச் செய்திகளை ஒரு நோக்கில் காணும்படி செய்ய இயலாது.

ஒவ்வொரு நாட்டினருடைய பிரபலமான ரசனைகளைப்பற்றி நாம் அறிந்துகொள்ள இசை பயன்படுகிறது. இந்தியாவிலும், உலகின் மற்ற நாடுகளிலும் மக்கள் மெல்லிய இசையையும், உணர்ச்சி மேலிடும் இசையையும் விரும்புகின்றனர். கர்னாடக இசையை (classical music) மிகச் சிலரே விரும்புகின்றனர். வானொலி கேட்பதில் பெரும்பாலானோர் இளையோர், வாலிபர், தொழிலாளர்கள், விவசாயிகள், அவர்களது குடும்பங்கள் ஆகும். இம் மக்கள் கர்னாடக இசையைப் பாராட்ட தேவையான பயிற்சியும் முதிர்ச்சியின்மையாலும் அவற்றை ரசிப்பதில்லை. இந்தியாவில்

அகில இந்திய வானொலி, வானொலியில் பிரபலமான திரைப்படப் பாடல்களை நிறுத்த தீவிர நடவடிக்கை எடுக்க முயற்சித்தது. அதன் விளைவாக இலங்கை வானொலி, கோவா வானொலி மற்றும் பாகிஸ்தான் வானொலி மிகவும் பிரபலமடைந்தன. ஆகையால் அ.இ.வா. இப்போது டெல்லி, பம்பாய் ஆகிய வானொலி நிலையங்கள் தனது நிகழ்ச்சி முறைகளை மாற்றித் திரைப்படப் பாடல்கட்குத் தனிக் கவனம் செலுத்துகிறது. அமெரிக்காவிலும்கூட இத்தகைய போக்கே காணப்படுகிறது. உதாரணமாக, ஃபீல்ட் என்பாரும் லாஸர்ஸ்ஃபெல்ட் என்பாரும் (Field and Lazars feld) (13) கல்லூரிக்குச் செல்பவர்களைத் தவிர மற்றப் பெரும்பாலான அமெரிக்கர்கள் பிரபலமான அல்லது உணர்ச்சியூட்டும் இசையையே விரும்புகின்றனர் எனக் கண்டறிந்தனர். உலகில் உள்ள எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் வெகு சிலரே உயர்தர இசையில் ஆர்வமிக்கவர்களாயிருப்பர்.

பெரும்பான்மையினர் இசையில் பயிற்சியின்மையாலோ வயதின் காரணத்தினாலோ பிரபலமடைந்த இசையையே இன்றியமையாததாகத் துய்த்து மகிழ்கின்றனர். ஆனால் இஃது ஒலி பரப்பும் அதிகாரிகளை அச்சமடையச் செய்தல் கூடாது. எந்தச் சங்கீதக் கல்வியும் வன்முறையின்றிப் புகுத்தப்பட்டால்தான் வேண்டிய பயனை விளைவிக்கும். அவ்வாறன்றி அது நேரடியாகச் செய்யப்பட்டால் அது சினங்கொள்ளுதலுக்கும், ஏன்? கிளர்ச்சிகட்கும் கூட வழிகாட்டியாய் அமையும்.

ஒரே சமயத்தில் கோடிக்கணக்கான மக்கள் வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்பதால் வானொலி ஒரு மிகுந்த பயனுடைய கூட்டத் தொடர்பு முறையாக விளங்குகிறது. காலத்தையும் நேரத்தையும் வானொலி வெல்கிறது. கிரிகெட் பந்தயங்கள் விளையாடப் படும்போது நாடெங்கிலும் கோடிக்கணக்கான மக்கள் விமரிசனம் (comment) கேட்கும்பொருட்டு வானொலியைக் கேட்கின்றனர். நடந்துகொண்டிருக்கும் நிகழ்ச்சிகளை விமரிசிக்க ஒரு தனித் திறமை தேவைப்படுகிறது. இப் பந்தயங்களைக் காணவியலாத கோடிக்கணக்கான மக்களின் கவனத்தைக் கவரும் வகையில், ஒரு நிகழ்ச்சியைக் கவனித்து விமரிசிப்பது எல்லோராலும் முடிவதில்லை. நாட்டில் மிகப் பெரிய ஊர்வலம் அல்லது மிக முக்கியமான கூட்டங்கள் நடைபெறும்போது இத்தகைய விமர்சனங்களை நாம் கேட்கலாம். இவையெல்லாம் நாட்டிலும் உலகிலும் என்ன நடந்துக்கொண்டிருக்கின்றன என்பதை மக்களுக்கு அறிவிப்பதில் மிக்க முக்கியத்துவம் கொண்டிருக்கின்றன. நிகழ்ச்சி நடந்த சில நிமிடங்கட்குள்ளாகவோ நிகழ்ச்சி நடக்கும் போதேயோ

உண்மை நிகழ்ச்சிகளை அப்படியே அல்லது அதுபற்றிய செய்திகளை வானொலி ஒலிபரப்புகின்றது. வானொலி கேட்கும் மனிதன் அச் செய்திகளைப்பற்றி மற்றவர்களுடன் பேசக்கூடும். இவ்வாறாக, வானொலி ஒலிபரப்புதல் மூலம் செய்திகளும் அதன் எதிர்வினைகளும் பெரும்பான்மையான மக்களை வெகு சீக்கிரம் அடையும். இது வானொலியின் ஒரு குறிப்பிடத்தக்க பண்பாகும். அது மக்கள் கருத்தை உருவாக்கவும் பின் அதை மாற்றவும் உதவுகிறது.

**திரைப்படம்** (The motion picture)

திரைப்படம் மற்றொரு வலிவுமிக்க கூட்டத் தொடர்பு சாதனமாகும். 1958-ல் இந்தியாவில் தயாரிக்கப்பட்ட 295 திரைப்படங்களில் 116 இந்தி மொழியிலும் 61 தமிழ் மொழியிலும் தயாரிக்கப்பட்டன (19.179). கேளிக்கைகள், கல்வி, கொள்கை பரப்பல் ஆகியவற்றிற்கு ஒரு சிறந்த கருவியாகத் திரைப்படம் விளங்குகிறது. ஒலியும் காட்சியும் தனித்தனியாக இருப்பதைக்காட்டிலும் இணைந்திருப்பது தெளிவை உண்டாக்குவதால் 1920ஆம் ஆண்டுகளில் மௌனப் படங்களுடன் ஒலியை இணைத்துத் திரைப்படங்களை மேலும் பிரபலமாக்கிற்று. திரைப்படங்கள் இடம், காலம் இவற்றிடையே விரைவான மாற்றங்கள் ஏற்பட உதவுகின்றன. மேலும், நாடகம் காட்டவியலாத பல விவரங்களைத் திரைப்படம் வெளியிடுகின்றது. இருப்பினும் நாடகத்திலிருப்பது போல் நடிப்பவர்க்கும் அதைப் பார்ப்பவர்க்கும் இடையேயும் இடைவினை (interaction) திரைப்படங்களில் இன்மையால், திரைப்படம் நாடகம் விளைவிக்கும் பயனைத் தோற்றுவிக்க முடிவதில்லை. வானொலி நாடகம் வானொலி அவையை (radio audience) பெற்றிருப்பதால் இடைவினையை (interaction) பெறுகின்றது. ஆனால், இதைத் திரைப்படங்களில் பெற சாத்தியமில்லை. அங்கு இயக்குநரும் பணியாளரும்தாம் அவையோராக இருக்க முடியும். எனவே, பணியாளர் ஒரு காட்சி, அதைப்பார்க்கும் மக்களிடையே எத்தகைய பயனை விளைவிக்கும் என்பதைத் தீர்மானிக்கும் திறமையை வளர்த்துக்கொள்ளல் வேண்டும்.

ஒரு மதிப்பீட்டின்படி திரைப்படத்திற்குச் செல்பவர்களில் 22 சதவீதத்தினர் 14 வயதுக்குட்பட்டவர் என்றும் 56 சதவீதத்தினர் வயதுவராதவர்கள் (minors) என்றும் அறியப்பட்டது. இவ்வாறாக, இளையோர்கள் திரைப்படம் செல்பவர்களில் பெரும்பான்மையினராக விளங்குகின்றனர். திரைப்படம் செல்பவர்

களில் ஏறக்குறைய 50 சதவீதத்தினர் சனி, ஞாயிற்றுக்கிழமைகளில்தான் செல்கின்றனர். இவ்வாறாகப் பெருவாரியான மக்களின் பொழுதுபோக்குச் சாதனமாகத் திரைப்படம் விளங்குகின்றது.

வியாபார நோக்குடன் பொழுதுபோக்கிற்காக வெளியிடப்படும் திரைப்படங்களையும் தகவல்களளிக்கும்பொருட்டு வெளியிடப்படும் திரைப்படங்களையும் நாம் எளிதில் வேறுபடுத்தி அறியலாம். உண்மையில் இவ்வேறுபாடு கடினமானதன்று. வியாபார நோக்குடன் வெளியிடப்படும் திரைப்படங்கள்கூட படிப்பினை அளிப்பது போலவே கல்விப் படங்களும் பொழுது போக்கு அம்சங்களைக் கொண்டிருக்கின்றன. தொழிற்சாலை அல்லது தரைப்படை இவற்றிற்கான பயிற்சித் திட்டங்களை விளக்கவும், மனித உடலைப்பற்றிய விஞ்ஞான அறிவைக் கற்பிக்கவும் வெளியிடப்படும் படங்களைப் போன்று சில குறிப்பிட்ட திறமைகளைப் போதிப்பதே குறிக்கோளாகக் கொண்ட படங்களும் வருகின்றன. மேலும், ஏன் சமுதாயப் பிரச்சினைகள் நிலவுகின்றன என்றும் சமூகத்தின் பொதுநலஞ்சார்ந்த நிறுவனங்கள் எவ்வாறு செயல்படுகின்றனவென்றும் விளக்கிடும் செய்திப்படங்களும் (documentaries) வருகின்றன. இந்தியாவின் அரசு திரைப் படத்துறையினரால் தயாரிக்கப்பட்ட படங்கள் அகில உலக பரிசுகளைப் பெறுமளவிற்கு மிக உயர்ந்த தரத்தைக் கொண்டிருக்கின்றன. 1958ஆம் ஆண்டின் இறுதிவரை 397 செய்திப்படங்களும் (documentaries) 533 செய்திக் கதிர்களும் (news reels) தயாரிக்கப்பட்டிருக்கின்றன (19.182). மூன்றாவதாகச், செய்திக் கதிர்கள் இடம் பெறுகின்றன. அவற்றின் நோக்கம் கல்விக்கு உதவி புரிவதும் உலகிலும் நாட்டிலும் நடக்கும் நிகழ்ச்சிகளின் முக்கியத்துவத்தை மக்களுக்குணர்த்துவதுமேயாகும்.

செய்தித்தாள்களையும் வானொலியையும் போலவே திரைப் படங்களும் மக்கள் கருத்து உருவாவதில் செல்வாக்குப் பெற்று விளங்குகிறது. அதே சமயம் மக்கள் கருத்தும் திரைப்படங்களை உருவாக்குவதில் செல்வாக்குடன் விளங்குகிறது. அதனால்தான் மக்கள் கருத்தை மாற்றியமைக்க, கொள்கைகளைப் பரப்பும் வேலைகட்குத் திரைப்படங்களைப் பயன்படுத்துகின்றனர். உதாரணமாக, ஜனநாயக மற்ற நாடுகளில் திரைபடத் தொழில் அரசின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழ்ச் செயல்படுகிறது. அவர்கள் ஆழ்ந்து ஆராய்ந்து திட்டமிட்டுத் தங்கள் கொள்கைகளைப் பரப்பும் சாதனங்களாகத் திரைப்படங்களைத் தயாரிக்கின்றனர். ரஷ்யப் படங்கள் தங்கள் நாட்டின் பெருமையையும் பொதுவுடைமைக் கருத்துக்

களின் புகழையும் மிகவும் வலியுறுத்துகின்றன. இவ்வாறே நாஜி களின் காலத்திலும் நாஜிக் கட்சியின், ஜெர்மானிய வாழ்க்கை முறையின் புகழை வலியுறுத்துவனவாக திரைப்படங்கள் வெளி யிடப்பட்டன. 'ஜெர்மானியத் திரைப்படத் தயாரிப்பாளர்கள் செய்தித் திரைப்படங்களை உளவியல் சண்டை முறையின் மிகவும் வலிமைவாய்ந்த சாதனங்களாக வளர்த்தனர். போலந்து, நார்வே, பிரான்சு ஆகிய நாடுகளிடையே ஜெர்மானியத் தரைப் படை அணிவகுத்துச் செல்லுதலைக் காட்டும் படங்கள், தடுமாறிக் கொண்டிருந்த நடுநிலைமை நாடுகள் மனத்தில் ஜெர்மானியன் வலி மைபற்றிப் பதியவைக்க திறமையான வகையில் பயன்படுத்தப் பட்டன (1.504). இவ்வாறே போருக்கு முன்பும், போர் நடக்கும் போதும் ஜப்பானியத் திரைப்படங்கள் மக்கள் கிழக்காசிய நாடுகள் செழிப்படைய உதவ வேண்டும் என்னும் கருத்தை வலியுறுத்து வனவாய் இருந்தன.

ஒவ்வொரு நாட்டிலும் திரைப்படங்கள் தணிக்கை செய்யப் படுகின்றன. திரைப்படங்களில் வரும் சமுதாய நலத்திற்குச் சீர்கேடு விளைவிக்கும் சில பகுதிகளை வெட்டிவிடும் அதிகாரம் தணிக்கைக் குழுவிற்கு அரசாங்கம் அளித்திருக்கிறது. 1922ஆம் ஆண்டிலேயே அமெரிக்கத் தயாரிப்பாளர்களும், இயக்குநர்களும் அமெரிக்கத் திரைப்பட சங்கத்தை நிறுவி, தங்கள் கதைகளையும் வெளியிடும் முன்பே படங்களையும் தணிக்கைக் குழுவின் விமரிச னத்தை முன்னே அறியும் பொருட்டு அச் சங்கத்திற்கு அனுப்பி வைத்தனர். அக் காலத்தில் திரைப்படத் தொழில் என்பது கீழ்த் தரமான நெறியற்ற படங்களைத் தயாரிப்பதாகவும், நடிகர்களும் நடிகைகளும் படங்களில் சமுதாய நெறிகளிலிருந்து விலகியிருப்ப தாகவும் கருதப்பட்டு வந்தது. இந்தச் சங்கம் பேசும் படங்கள் தயாரிப்பைக் கவனிக்க ஒரு விதித் தொகுதியை உருவாக்கிற்று. அது கீழ்க்காணும் முன்னுரையுடன் தொடங்கிற்று:

திரைப்படத் தயாரிப்பாளர்கள் உலக மக்கள் தங்களிடம் கொண்டுள்ள உயர்ந்த நம்பிக்கைகளை உணர்ந்துகொண்டதால் சிறந்த பொழுதுபோக்குச் சாதனமாக உருவாக்கினர்.

ஒரு நாட்டு வாழ்க்கையில் மிகுந்த செல்வாக்குடையன கலையும், பொழுதுபோக்கும் என்பதனையும் மக்கள் தங்கள்மீது கொண்டுள்ள நம்பிக்கையால் தங்கள் பொறுப்பையும் உணர் கிறார்கள். எனவே, திரைப்படங்கள் தெளிவாகப் போதனைக்கும் பரப்புதலுக்குமன்றி முக்கியமாகப் பொழுதுபோக்கிற்காகவே இருப்பினும், அவை ஆன்மீக வளர்ச்சிக்கு அல்லது சிறந்த சமூக

வாழ்க்கை முறைக்கு அல்லது சரியான சிந்தனைக்கு நேரடிப் பொறுப்பேற்கலாம் என்பதை அவர்கள் உணர்கிறார்கள்.

அந்த விதித் தொகுதி மூன்று பொதுக் குறிக்கோள்களைக் கீழ்க் கண்டுள்ளவாறு கூறியுள்ளது:

(1) திரைப்படத்தைக் காண்பவரின் மனநெறித் தரத்தைக் குறைக்கும் வண்ணம் எந்தத் திரைப்படமும் தயாரிக்கப்படமாட்டாது. எனவே, அவையோரின் பரிவு உணர்ச்சி (sympathy) குற்றம், தவறு செய்தல், பாவங்கள் இவற்றின் பக்கம் திருப்பப்படமாட்டாது.

(2) பொழுதுபோக்கிற்குத் தேவையான சரியான வாழ்க்கைத்தரம் மட்டுமே அளிக்கப்படும்.

(3) இயற்கையான அல்லது மனிதச் சட்டங்கள் என்றுமே கேலிக்குள்ளாக்கப்படாது. சட்ட மீறலுக்குப் பரிவு உணர்ச்சியைத் திரைப்படங்கள் உண்டாக்காது.

இவ்வாறாக முதலிலிருந்தே திரைப்படத் தொழிலும் பொது மக்களும் அரசும் திரைப்படங்கள் எவ்வாறு மக்கள் கருத்தையும் அதன் மூலம் சமுதாய நடத்தையையும் பாதிக்கின்றன என்பதை அறிந்தே உள்ளனர். இதனால்தான் மக்கள் கருத்தை ஏமாற்றல், கொடுமைக்கு ஆதரவாக மாற்றிவிடக்கூடிய படங்கள் உருவாவதைத் தடைசெய்ய தொடர்ச்சியான முயற்சிகள் மேற்கொள்ளப் படுகின்றன.

1941ஆம் ஆண்டு ஏப்ரலிலிருந்து 1942ஆம் ஆண்டு பிப்ரவரி வரை வெளியிடப்பட்ட 100 ஹலிவுட் படங்களைத் திருமதி ஜோன்ஸ் என்பார் (14) பகுத்தாய்ந்தார். அவர் 186 முக்கியக் கதாபாத்திரங்களில் 126 ஆண்களாகவும் மூன்றில் இரண்டு பங்கினர் பெற்றோர் செல்வாக்கிலிருந்து விடுபட்ட பொருளாதாரச் சுதந்திரம் உடையவர்களாகவும் இருந்தனர் என்றும் கண்டறிந்தார். இந்தப் பெரிய கதாபாத்திரங்களில் 46 சதவீதம் பணக்காரர்களாகவும் 32 சதவீதம் சிறு பணக்காரர்களாகவும் 17 சதவீதம் ஏழைகளாகவும் இருப்பதைக் கண்டார். மீதியிருக்கும் 5 சதவீதத்தினரை எதிலும் சேர்க்கவியலாதவராய் இருந்தார். இது பெரிய கதாபாத்திரங்களில் பெரும்பான்மையானவர்கள் பணம் மிகுந்தவர்கள் அல்லது சிறு பணக்காரர்கள் என்று காட்டுகின்றது. அவர் மேலும் பெரிய கதாபாத்திரங்களில் (major characters)

76 சதவீதத்தினர் மணமாகாதவர்களாகவும் 19 சதவீதத்தினர் மணமானவர்களாகவும் 5 சதவீதத்தினர் விவாகரத்துப் புரிந்தவர் அல்லது பிரிக்கப்பட்டவர்களாகவும் இருந்தனர் என்றும் கண்டறிந்தார். இவ்விவரங்கள் எவ்விதமானவர்களை ஒத்திருக்க மக்கள் விரும்புகின்றனர் என்பதைக் காட்டுகின்றன. கதைச் சுருக்கத்தில் மறைந்து கிடக்கும் உந்துக்கள்பற்றியும் அவர் ஓர் ஆராய்ச்சி நடத்தி 80 சதவீதப் பெண்களும், 64 சதவீத ஆண்களும் காதலை விரும்புகின்றனர் என்று கண்டறிந்தார். மற்ற உந்துக்களிடையே புகழ், நன்மதிப்பு, கௌரவம் ஆகியவை 26 சதவீதமாகவும் பாதுகாப்பான ஆரோக்கியமான வாழ்வு 16 சதவீதமாகவும் பணம் 10 சதவீதமாகவும் கடமையிலீடுபாடு 9 சதவீதமாகவும் இருப்பதை அவர் கண்டறிந்தார். இவ்வாறாகப் படங்களில் மேம்பட்ட உந்து காதலே என்பதையும் கண்டறிந்தார். உந்துக்களால் மனமுறிவு அல்லது உந்து நிறைவேறுதல் இவற்றிடையே உள்ள விகிதத்தை அறியும் பொருட்டு இவற்றைக் காட்டும் திரைப்படங்களையும் அவர் ஆராய்ந்தார். அவர் 61 சதவீதம் விரும்பிய இலக்கை அடைவதாகக் கண்டறிந்தார், 10 சதவீதம் மனமுறிவு அடைவதாகவும் கண்டறிந்தார். 14 சதவீதம் சில உந்துக்கள் நிறைவடைதலையும் சில உந்துக்கள் மனமுறிவு விளைவதையும் அவர் கண்டறிந்தார். மீதியிருந்த 5 சதவீதத்தினரை அவரால் எதிலும் சேர்க்க இயலவில்லை. இவ்வாறாக இந்தப் படங்களின் ஆய்வு பணமிகுந்த மணமாகாத காதலிக்கும் நபர்களின் வாழ்க்கைபற்றித் தயாரிப்பாளர்கள் படமெடுக்கின்றனர் என்று காட்டுகின்றது. இஃது அவையோரிடம் காணப்படும் முக்கிய உந்துக்கள்பற்றிய கருத்தை வெளியிடுகின்றது. இந்தியப் படங்களில் செல்வச் செழிப்பு மிகுந்த பகட்டான காட்சிகளில் மக்கள் ஒன்றிவிடுகின்றனர். திரைப்படம் செல்பவர்களில் பெரும் பகுதியினர் ஏழைகளே. எனவே, அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்று செல்வம் கொழித்ததாயிருப்பினும், இந்தியாபோன்று ஏழை நாடாக இருப்பினும் ஒரே போக்குத்தான் காணப்படுகிறது. ஏழை, பணக்காரர்களிடையே ஒருங்கிணைக்க விரும்புகின்றான். அதேபோல் ஓரளவு பணமுள்ளவன் மிகுந்த பணமுள்ளோரிடையே தன்னை ஒருங்கிணைக்க விரும்புகின்றான்.

1933-ல் டேல் (Dale) (15) என்பார் திரைப்படங்களின் பொருளடக்கத்தைப் பிரித்தாராய்ந்தார். அவ்வாறே ரோஸன் (Rosten) (16) என்பார் அதையே 1941ஆம் ஆண்டில் ஆராய்ந்தார். திரைப்படங்களில் ஆதிக்கம் செலுத்தும் கருத்துகளை டேல், ரோஸன் இவர்களின் ஆய்வு முடிவுகளை டூப் என்பார் ஒருங்கிணைத்தார்.

**காதலைப் பொறுத்தவரைக் கீழ்க்காணுபவை முதன்மையான கருத்துகளாய் இருந்தன :** காதல் மற்றெல்லாவற்றையும் புறக் கணிக்கிறது. காதல் உயர்ந்தது. முதற்காதல் வியப்பிற்குரியது. தாயின் அன்பு புனிதமானது.

**மனிதச் சுபாவத்தைப்பற்றிய கருத்துகளாவன:** மோசமான நபர்களினால் போர்கள் மூளுகின்றன. நன்னம்பிக்கை, சோர்வு மனப்பான்மையைவிடச் சிறந்தது. மக்கள் கெட்டவர்களாகவும் நல்லவர்களாகவும் இருக்கிறார்கள். ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் புகழ்ச்சியை விரும்புகின்றனர். ஆண்கள் கெட்டவர்களாதலால் குற்றங்களைச் செய்கின்றனர்.

**சமுதாய இலக்கு அல்லது நோக்கம்பற்றிய கருத்துகளாவன:** தமது காரியத்தில் விடாமுயற்சியுடன் முயல்பவர் தமது சமூக, பொருளாதார நிலையை உயர்த்திக்கொள்ள முடியும். அதிர்ஷ்டம் நற்குணம், நற்செயல் ஆகியவை தேர்ச்சித் திறமை, நுண்ணறிவு ஆகியவற்றைவிட மிக முக்கியமானது. தியாகத்திற்குப் பரிசும், தன்னலத்திற்குத் தண்டனையும் உண்டு. பாவத்தின் கூலி தண்டனைதான். மனிதன் செய்த கொடுமைகளை அவன் மரணமடையும்போது மறந்துவிட வேண்டும். பழிவாங்குதல் மதிப்பிற்குரியதாய் இருக்கும்பட்சத்தில் சரியானதே.

**வரலாறுபற்றிய கருத்துகளாவன:** முற்பட்ட நாள்களில் வாழ்ந்திருத்தல் மிகவும் வியக்கத்தக்கதோர் அருமையாகும். ஒருவரது நாட்டு வரலாறு குற்றமற்ற புகழுடையது. சிறந்த மனிதர்களினாலும் சிறு நிகழ்ச்சிகளினாலும் வரலாறு உருவாக்கப் பட்டும் மாற்றியமைக்கப்பட்டும் வருகிறது.

**இன வகைகள்பற்றிய முக்கியக் கருத்தானது:** தன் நாடு உலகிலேயே மிகச் சிறந்தது எனவும், வெளிநாட்டார் அபாயகர மானவர்கள் அல்லது அறிவற்றவர்கள், மிகவும் விசித்திரமான வர்கள் எனவும் கருத்து நிலவுகிறது. நீக்ரோக்கள் சோம்பேறிகள் மேலும் அவர்கள் எப்போதும் வேலைக்காரர்களாக இருக்கிறார்கள்.

**தொழிற் குழுக்களைப்பற்றிய கருத்து:** காவலர்கள் (police) அறிவற்றவர்கள் எனவும் துப்பறிபவர்கள் அறிவுக் கூர்மையுள்ள வர்கள் எனவும் கருத்து நிலவுகிறது. கலைஞர்கள் அரைக்கிறுக் கர்கள். பேராசிரியர்கள் நடைமுறைக்கு ஒவ்வாதவர்கள், விஞ் ஞானிகள் ஓர் இரவில் பல அதிசயங்களை ஆற்ற முடியும் (1.512-513).

திரைப்படங்களின் முக்கியக் கருத்து ஒரு குழுவின் ஒருபடி வார்ப்புகள்பற்றிய (stereotypes) உட்காட்சியை (insight) நமக்கு அளிக்கின்றது. பல மொழிகளில் தயாரிக்கப்பட்ட இந்தியப் படங்களைப்பற்றிய இத்தகைய ஆராய்ச்சி செய்யப்பட்டால் அது சுவைமிக்கதாக இருக்கும்.

ஒரு குழுவின் நடப்பிலுள்ள நடைமுறை மாதிரிகளை (current norms) எந்த அளவுக்குத் திரைப்படங்கள் வெளியிடுகின்றன என்பதைக் கண்டறிய 1933-ல் பீட்டர்ஸ் (Peters) (17) என்பார் ஓர் அளவீட்டை உருவாக்கினுர். ஆதிக்கம் செலுத்தும் பெண்களின் இயல்பு, காதலித்தல், சிறுபான்மையினரை நடத்தும் முறை, பெற்றோர்கள் குழந்தைகளை நடத்தும் முறை ஆகிய நான்கு துறைகளை அவர் தேர்ந்தெடுத்துக்கொண்டார். பெண்களின் ஆதிக்க நிலையைப் பொறுத்தவரை திரைப்படங்கள் ஒப்புக்கொள்ளக்கூடிய நிலையிலிருந்து தாழ்ந்திருந்தன என்பதை அவர் கண்டறிந்தார். காதலித்தலைப் பொறுத்தவரை சமுதாயம் சரியானது என்று ஒப்புக்கொள்பவற்றையே திரைப்படம் பிரதிபலிக்கின்றது. சிறுபான்மையினரை நடத்தும் முறையைப் பொறுத்தவரை திரைப்படங்கள் சமுதாயத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட நடைமுறைகளைவிட உறுதியாக மேலானவற்றையே பிரதிபலிக்கின்றன. அதே போன்று சமுதாய நடைமுறையில் காணப்படும் பெற்ருேர் குழந்தைகளை நடத்தும் தரம் திரைப்படங்களில் உயர்ந்தே இருக்கின்றது. திரைப்படங்களில் இந்திய நடிக, நடிகையர்கள் முத்தமிடுவதையும் வேறுவகையாகக் காதல் புரிவதையும் தணிக்கைக் குழு அனுமதிப்பதில்லை என்று இந்தியப் படத் தயாரிப்பாளர்களிடையே நிலையான கருத்து நிலவுகிறது. முத்தமிடுதல், கட்டியணைத்தல் ஆகிய காட்சிகளையுடைய மேல்நாட்டுப் படங்களை அனுமதிக்கும் தணிக்கைக் குழு, அத்தகைய காட்சிகளை எடுக்க இந்தியப் படத் தயாரிப்பாளர்களை அனுமதிப்பதில்லை ஆகையால், அது நிலையான கொள்கையுடையது அன்று என்று திரைப்படத் தயாரிப்பாளர்கள் வற்புறுத்திக் கூறுகின்றனர். இந்நூலாசிரியர் இப் பிரச்சினைபற்றிய மாணவர்களின் கருத்துகளை அடிக்கடி கேட்டு, அவர்கள் அனைவரும் இந்தியத் தணிக்கைக் குழுவின் செய்கையை ஆதரிப்பதாகக் கண்டார். அமெரிக்க, ஐரோப்பிய படங்களில் வருவதுபோல் கட்டியணைத்தல், முத்தமிடுதல் ஆகிய காட்சிகளில் இந்திய நடிக நடிகையர்கள் நடித்தால் அஃது அதிர்ச்சி அளிப்பதாக இருக்கும் என மாணவர்கள் கருதுகின்றனர். அவர்கள் கருத்துப்படி மேல்நாட்டுப் படங்கள் மேல்நாட்டு முறைப்படி காதலித்தலைக் காட்டுவதால் அவற்றைத் திரையிடுவதில் எவ்விதத் தீங்கும் கிடையாது. ஆனுல், நம் நாட்டில் அங்கீகரிக்கப்

பட்ட சமூக வழக்கங்களுக்கு ஏற்ற காதல் காட்சிகளை இந்தியப் படங்கள் கொண்டிருத்தல் வேண்டும். இஃது ஒரு குறிப்பிடத் தக்க சுவையானதொன்றாகும். மேல்நாட்டுப் படங்களினால் இந்திய காதலிக்கும் முறை பெருமளவில் மாறவில்லை என்பதை இது காட்டுகின்றது. திரைப்படங்களில் பல நாட்டுக் காதல் முறைகளைப் பார்த்தாலும் ஒரு சமுதாயம் தனது விதிகளையும் சட்டங்களையுமே பின்பற்றுவதாகத் தெரிகிறது.

**திரைப்படங்களின் சமூக விளைவுகள்** (Social effects of the motion pictures)

1930ஆம் ஆண்டுகளின் தொடக்கத்தில், அமெரிக்காவில் திரைப்படங்களைக் காண்பதனால் ஏற்படும் குறுகிய கால விளைவுகளைப்பற்றிப் பல ஆய்வுகள் நடத்தப்பட்டன (18). ஓர் ஆய்வில் 26 சதவீதப் பையன்களும் 14 சதவீதப் பெண்களும் ஒரு திரைப் படத்தைப் பார்த்துவிட்டுத் தூங்கும்போது சாதாரணமாக அசைவுகளைவிட அதிகமான அசைவுகளுடன் தூங்கினர் என்று கண்டு அறியப்பட்டது. ஆனால், அவ்விளைவுகள் திரைப்படம், திரைப் படம் பார்ப்பவர்களின் வயது, பால், சமூக, பொருளாதார நிலை, கல்வி ஆகியவற்றைப் பொறுத்துள்ளன. மற்றோர் ஆய்வு, அபாயம்பற்றிய படங்கள் 12 வயதுக்குட்பட்ட பிள்ளைகளிடமும், காதல், பால்பற்றிய காட்சிகள் 16 வயதுக்கு மேற்பட்ட இளையோர்களிடமும் (P.G.R.) உள சரும மறிவினை எழுச்சி யூட்டுகின்றன என்று அறிவித்தது. ஒரு திரைப்படத்தைப் பார்த்த வுடன் குறைந்த கல்வியுடையவர்கள் அல்லது இளையவர்களைவிட முதியவர்கள் அல்லது அதிகக் கல்வியுடையவர்கள் மனவெழுச்சி கட்குக் குறைந்த அளவே ஆளாகிறார்கள் என்று கண்டறியப்பட்டது. குழந்தைகளும் வயது வந்தவர்களும் ஒரு திரைப்படத் தைக் கண்டவுடன் பல தகவல்களை நினைவில் வைத்திருக்கின்றனர். இனம், குற்றம், போர் போன்றவற்றுடன் தொடர்புடைய திரைப் படங்களைப் பார்த்தால் மக்களின் கருத்துகளையும் மனப்பான் மையையும் பாதிக்கின்றன என்று ஆய்வுகள் காட்டுகின்றன. இவ்வாறாகத் திரைப்படங்கள் தனியனிடத்தில் ஏற்படுத்தும் விளை வுகள் திரைப்படத்தின் கருத்து, திரைப்படத்தின் தன்மை, அவனது இயல்பு ஆகியவற்றைப் பொறுத்துள்ளன. எனவே, ஒரே திரைப்படம் வெவ்வேறு தன்மையுடைய மக்களிடையே வெவ்வேறு விளைவுகளைக் கொண்டிருக்கும்.

பொதுவாக, திரைப்படங்கள் இளங்குற்ற நடத்தைகளை அதிகரிக்கின்றன என்ற கருத்து நிலவுகிறது. இளங்குற்றவாளிகள்

மற்ற இளைஞர்களைவிட திரைப்படங்கட்கு அதிகமாகச் செல்வது உண்மையாயிருக்கையில் திரைப்படங்கள் அவர்களை இளங்குற்றவாளிகளாக்கிற்று என்று வலியுறுத்த இயலாது. ஏனெனில், இப் பிள்ளைகள் பெற்றோர்களின் பல கட்டுப்பாடுகளையும் மீறுவதோடு அடிக்கடி திரைப்படமும் செல்கின்றனர். ஒரு வகையில் திரைப்படங்கள் நமது மனக்கோட்டை (fantasy) வாழ்க்கைக்குக் காரணமாய் அமைகின்றன என்பதில் ஐயமில்லை. திரைப் படத்தைப் பார்க்கும் மக்களுக்கு அதில் வரும் பகட்டான காட்சியமைப்புகளும் (setting), ஆடம்பரமான பொருட்களும் (furniture), நேர்த்தியான கார்களும், கணக்கற்ற வேலையாட்களும் சிலிர்ப்பூட்டுகின்றன. அவ்வாறே படங்களில் காட்டப்படும் நடிக, நடிகையரின் மகிழ்ச்சி, துயரம், அபாயம் இவற்றோடு ஓர் ஒன்றுதல் (identification) ஏற்படுகின்றது. திரையில் காணும் காதல் காட்சிகள் இளைஞர்களைக் கவர்கின்றன. மேலும், ஒரு வக்ரமமான (vicarious) திருப்தி அவர்களிடையே நிலவுகிறது. நாடகம், கதை, வானொலி போலவே திரைப்படமும் நமது நிறைவேறாத ஆசைகட்கு ஒரு பழக்கப்படுத்தப்பட்ட வெளிவழி (outlet) ஆகும். திரைப்படம் செல்லுதல் ஒரு சமுதாயக் குற்றமாகக் கருதப்படுவதில்லை. ஒருவன் மிக அதிகமாக அடிக்கடி திரைப்படம் செல்வானேயானால் அப்போதுதான் அவன் புறக்கணிக்கப்படுவான். அஃது ஒரு வழக்காக்கப்பட்ட வெளிவழியாக இருப்பதாலும் பலதரப்பட்ட கல்வி, செல்வம் உடையவர்கள் காண்பதாலும் கெடுதலான விளைவுகள் ஏற்படுவதில்லை. குறிப்பாக, மாநகரங்களில் மக்கள் இளைப்பாரவும் பொழுதுபோக்கிற்காகவும் திரைப்படங்கட்குச் செல்லுகின்றனராகையால் திரைப் படங்களில் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் அதிகமாக இருக்கின்றன என்று கூறப்படுவது உண்மையே. எந்தவிதமான படமும் ஆயிரக்கணக்கான மக்களை ஒவ்வொரு நாளும் கவர்கின்றது. இக் காரணத்தினால்தான் படத் தயாரிப்பாளர்கள் தங்கள் படங்கள் உயர்தரமாய் இருக்கும்பொருட்டுத் தங்கள் பொழுதுபோக்கு, அறிவூட்டும் படங்களின் தயாரிப்பின் தரத்தைத் தாங்களே அமைக்க வேண்டும் என்று கூறப்படுகின்றது. ஆனால், திரைப்படங்களில் காட்டப்படும் குற்றங்களே சமுதாயத்தில் குற்றங்களுக்குக் காரணம் என்னும் பிரபலமான கருத்துக்குப் போதிய ஆதாரங்கள் இல்லை. திரைப்படங்கள் மக்களின் சமூக வாழ்க்கையைப் பிரதிபலிக்கின்றன. மேலும், அவை மக்களின் சமுதாய ஆர்வங்களையும் பிரதிபலிக்கின்றன. எனவே, திரைப்படங்கள் சமூக நிறுவனங்கள் சமுதாய நடவடிக்கைகளைவிட தனது செல்வாக்கில் அபாயகரமானதாக இருக்க முடியாது. இளங்குற்ற நடத்தைப்பற்றி

மேலும் சிலவற்றைப் பின்வரும் அத்தியாயத்தில் பார்ப்போம் (20ஆவது அத்தியாயத்தைப் பார்க்க).

செய்திக் கதிர் அல்லது வானொலி அறிக்கை போன்று திரைப் படம் நமது ஒருபடிவார்ப்புகளையும் கட்டுக்கதைகளையும் (myth) உருவாக்கி அதற்குக் காரணமாய் அமைகின்றது. எனவே, ஒரு நாடகம் அல்லது திரைப்படம் நம்மிடையே ஏற்படுத்தும் விளைவு அன்றைய சமுதாயப் பிரச்சினைகளைப் பொறுத்துள்ளது. எடுத்துக் காட்டாக, ஒரு சண்டைப் படம் மக்களைச் சமாதான காலங்களில் துயரமடையச் செய்கிறது. ஆனால், அதே படம் போர்க் காலங் களில் மக்களை வீறுகொண்டெழச் செய்கிறது. அதேபோல் சண்டைப் படம் அமைதியிழந்தவர்க்கு உளச் சோர்வு அளிக்கும் போது போர்த்துறை பணியாளர்க்கு மகிழ்ச்சியளிக்கிறது. எனவே, மக்களின் மனப்பான்மை சமுதாய நடவடிக்கைகள், அக் காலத்தின் தட்ப வெட்பநிலை ஆகியவை ஒரு படத்திற்கு மக்கள் அளிக்கும் வரவேற்பைத் தீர்மானிக்கின்றன. அவ்வாறே தொழிற்சங்கம் பற்றிய படம் தொழிற்சங்கத்தினரைக் கவரும்போது தொழிலதி பர்களையும் மேலாளர்களையும் உளச் சோர்வடையச் செய்கிறது. 1950ஆம் ஆண்டுகளில் நிலச் சீர்திருத்தம்பற்றிய கருத்துகள் மக்கள் மனங்களைக் கலக்கியதால் அப்போது வெளிவந்த படங்கள் நிலஞ்சார்ந்த பிரச்சினைகளைப்பற்றியவையாக இருந்தன. ஏராள மான நிலமற்ற விவசாயிகளும் உழைப்பாளிகளும் இப் பிரச்சினை களில் பெருமளவு ஆர்வங்கொண்டிருந்தனர். எனவே, படத் தயாரிப்பாளர்கள் திறனுள்ள வியாபாரியாகச் சமுதாய பிரச்சினை களைப் பயன்படுத்தி வெற்றிப் படங்களை உருவாக்குகின்றனர். ஆனால், இதை ஒரு முழுமையான வியாபாரப் பயன்படுத்துதல் என்று கூறிவிடமுடியாது. மக்கள் இத்தகைய படங்களைப் பார்த்த பின் நிலமற்ற விவசாயிகளின் நிலமையையும் அதே சமயத்தில் நிலச்சுவான்தார்களின் நிலையையும் அறிந்து இப் பிரச்சினைப்பற்றித் தெளிவுகொள்கின்றனர். இவ்வாறாக, நடப்புச் சமுதாயப் பிரச் சினைகளைப்பற்றிய படங்கள் மக்கள் கருத்தைத் தன்வயப்படுத்து கின்றன. ஒரு நிகழ்ச்சியாலோ ஒரு கூட்டத்தொடர்பு முறை யாலோ மக்கள் கருத்துத் தீர்மானிக்கப்படுவதில்லை என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு தனியனின்மீது ஏராளமான செல்வாக்குகள் மோதுவதால் அவனது கருத்து முழுக்க முழுக்க எந்த அனுபவத்தின் அடிப் படையில் அமைந்துள்ளது என்பதைக் கூற இயலாது. நம் வாழ்க் கையில் நடைபெறும் உண்மை நிகழ்ச்சிகள் கடின உழைப்பு, மற்றவர்களுடன் நமது தொடர்பு ஆகியவை, அரசியல்வாதியின் பேச்சு, செய்தித் தலைப்புகள், உணர்ச்சியூட்டும் திரைப்படம் ஆகிய

வற்றைவிட பெருமளவில் நம்மைப் பாதிக்கின்றன. எனவே, கூட்டத் தொடர்பு முறைகளின் முக்கியத்துவத்தை உணருங்கால், அதைப் பெரிதாக்கி நமது உயர்ந்த தரங்களைக் கொண்டு அவை மக்களின் ஒழுக்கத்தைக் கெடுக்கின்றன என்ற கருத்தை ஏற்படுத்தக் கூடாது. மக்கள் கருத்தைப் பல காரணிகள் தன் வசப்படுத்து கின்றன. ஒரு படத்தின் விளைவை மற்றொரு படம் அல்லது செய்தித்தாளில் வரும் கட்டுரை அல்லது ஒரு பொது விரிவுரை அல்லது சொற்போர் போக்கிவிடலாம்.

## மேற்கோள் நூற்பட்டியல்


1. DOOB, Holt, 1948. — *Public Opinion and Propaganda.*

2. CANTRIL, Princeton University Press, 1944. — *Gauging Public Opinion.*

3. LASKER, Holt, 1929. — *Race Attitudes in Children.*

4. MEIER and ANNIS, 1934.5. 65-81. — *Journal of Social Psychology.*

5. WYNANT and HERZOG, 1941.5. 359-82 & 590-624. — *Public Opinion Quarterly.*

6. KUPPUSWAMY, 'A Statistical Study of Attitude to the Caste System in South Inida', 1956.42. 169-206. — *Journal of Psychology.*

7. KUPPUSWAMY, 'Attitude to the Formation of Linguistic States', 1954.23. 555-7. — *The Eastern Economist.*

8. KUPPUSWAMY, Asia Publishing House, Bombay, 1957. — *A Study Opinion Regarding Marriage and Divorce.*

9. JENKINS, 1938.22. 1-8 — *Journal of Applied Psychology.*

10. REMMERS, Harper, 1954. — *Introduction to Opinion and Attitude Measurement.*

11. NIELSON, 1946.2. 2-13. — *Journal of Social Issues.*

12. CANTRIL and ALLPORT, Harper, 1935. — *The Psychology of the Radio.*

13. FIELD and LAZARSFELD, University of North Carolina Press, 1946. — *The People Look at Radio,*

14. DOROTHY JONES, 1942.6, 411-28. — *Public Opinion Quarterly.*

15. DALE, Macmillan, 1933. — *The Content of Motion Pictures.*

16. ROSTEN, Harcourt Brace, 1941. — *Hollywood.*

17. PETERS, 1933. — *Motion Pictures and Standards of Morality.*

18. CHARTERS, 1933. — *Motion Pictures and Youth.*

19. INDIA 1959, Government of India, 1959. —

# 13. கொள்கைபரப்பல்

## PROPAGANDA

### இச் சொல்லின் சிறப்பு

(The reputation of the term)

ஆங்கில மொழியில் 'கொள்கைபரப்பல்' என்னும் சொல் அதற்கு எதிரான மனவெழுச்சிகளை உருவாக்குகிறது. கொள்கை பரப்பல் ஒரு நேர்மையற்ற, தவறான வழியில் செலுத்தும் கள்ளத் தனமான முறையாக நோக்கப்படுகிறது. சிந்தனையற்ற மக்கள் கூட்டத்திற்குத் தவறாகக் கருத்துகளை அளித்து அவர்களைத் தவறான வழியில் செலுத்தும் ஒரு முறையாகக் கொள்கைபரப்பல் நோக்கப்படுகின்றது. பொதுமக்கள் கருத்தை உருவாக்குதலில் கொள்கைபரப்பல் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதை ஆய்வதே இவ்வத்தியாயத்தில் நமது நோக்கமாகும். குறிப் பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட குழுவில் தனியன் சமூகமயமாக்கு தலில் கொள்கைபரப்பல் ஒரு முக்கிய முறையாகப் பயன்படுகிறது. கொள்கைபரப்பல் என்னும் சொல் 'பிறப்பி' அல்லது 'புதுப்பி' என்னும் பொருள்கொண்ட இலத்தீன் மொழிச் சொல்லிலிருந்து உருவாயிற்று. ஒவ்வொரு மதமும் தனது கொள்கைகளைப் பரப்ப ஒரு சில வழிகளைப் பயன்படுத்துகிறது. இவ் வகையில் ஒவ்வொரு மத நிறுவனமும் மக்களைத் தன்வசப்படுத்தி ஒரு குறிப்பிட்ட கருத்தையும் வாழ்க்கை முறையையும் ஏற்குமாறு செய்ய கொள் கைபரப்பலைப் பயன்படுத்துகின்றது.

1920, 1930ஆம் ஆண்டுகளில் 'கொள்கைபரப்பல்' என்னும் சொல் ஆங்கில மொழியில் ஒரு கெட்ட பெயரைத் தேடிக் கொண்டது. இவ்விளைவுக்கு மூன்று காரணங்கள் உண்டு. முதலா வதாக, போர்க் காலங்களில் இரு தரப்பிலுமுள்ள நிபுணர்களும் கொள்கைபரப்பல் முறையைப் பயன்படுத்திப் பொய்களைப் பரப் பினர். தொழில் நுணுக்க முன்னேற்றத்தினால் உருவான கூட் டத் தொடர்பு முறைகளில் ஒவ்வொரு நாடும் தனது வெற்றி பற்றியும் எதிரிகளின் தோல்விபற்றியும் பொய்த் தகவல்களைப் பரப்பின. இரண்டாவதாக, அதே நேரத்தில் சோவியத் ரஷ்யா, இத்தாலி, ஜப்பான் ஆகிய அரசுகள் தமது மக்களுக்கு உலகத்தை

ஆளும் திறனைப்பற்றி முன்னறிவிப்பு விடவும் மற்ற நாடுகளைக் கொடூரமானதாக நோக்கவும் தத்தமது கலாசாரக் கொள்கை பரப்பு அமைச்சரகத்தை உருவாக்கினர். அவர்கள் பத்திரிகை, வானொலி, திரைப்படம் ஆகியவற்றையும் கட்டுப்படுத்தினர். தங்கள் கொள்கைகளிலிருந்து மாறுபட்ட தனியர்களையும் குழுக்களையும் அவர்கள் தண்டித்தனர். ஒவ்வொரு நாடும் தங்களது ஒருமுகப்படுத்தும் முகாம்களைக் (concentration camps) கொண்டிருந்ததோடல்லாமல் எதிராளிகளிடையே பயத்தையும் உருவாக்கியிருந்தது. இச் செயல்களே 'கொள்கைபரப்பல்' என்னும் சொல்லுக்கு ஒரு கெட்ட பண்பை அளித்துவிட்டது. மூன்றாவதாக, உலகிலுள்ள ஆங்கிலம் பேசும் நாடுகளின் மக்கள் ஜனநாயக முறையில் நம்பிக்கை கொண்டிருந்தமையாகும். அவர்கள், தனியன்கள் எவ்விதப் பயமுமின்றித் தாங்களாகவே தீர்வு காண வேண்டும் என்னும் நோக்கைக் கொண்டிருந்தனர். இதுவும் கொள்கைபரப்பலின் முறைகட்கு எதிரானதொரு மனவெழுச்சியை உருவாக்கியது.

## கொள்கைபரப்பலும் கல்வியும்
## (Propaganda and Education)

இவ்விரு சொற்களிடையேயுள்ள வேறுபாட்டை நாம் அறிவதன் மூலம் இவை தம்மகத்தே கொண்டுள்ள முறைகளை நாம் புரிந்துகொள்ள முடியும். நாம் மேற்கண்டது போல கொள்கை பரப்பல் தவறான வழிகாட்டுவதாகவும், நேர்மையற்றதாகவும் நோக்கப்படுகிறது. ஆனால் கல்வி, நேர்மையானதாகவும், ஒழுக்கமானதாகவும், ஒளியூட்டுவதாகவும், தன்னலமற்ற போதனையாகவும் நோக்கப்படுகிறது. எவ்வாறாயினும், கல்வியும், கொள்கைபரப்பலும், மக்களைத் தம் வசப்படுத்தப் பயன்படுகின்றன என்பதை அறிய வேண்டும். பழைய தலைமுறையினரும், கல்வி முறைகளும் இளைஞர்களைத் தம் வசப்படுத்த முயல்கின்றனர். இது சமூகமயமாதலின் ஒரு பகுதியாகும். கல்விக்கும் கொள்கைபரப்பலுக்கும் இடையேயுள்ள வேறுபாடு என்னவெனில் கொள்கைபரப்பல் கருத்தேற்றத்தின் அடிப்படையுடையதென்றும், கல்வி விவரம் ஆய்வு, சிந்திப்பது ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளதென்றும் சில சமயங்களில் கருதப்படுகின்றது. இந்த வேறுபாடு பொருந்தக்கூடியதாயினும், நாம் வயது வந்தோர் குழுவுடன் தொடர்புகொள்ளும்போது சிறுவர்கள் எவ்வாறு பார்க்கப்படுகின்றார்கள் என்று எண்ணுவோமாயின் இந்த வேறுபாடு பயன்படுவதில்லை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். குழந்தை சமூகவயமாக்கப்படும் முறைகளில்

பெரும்பாலானவை கருத்தேற்றத்தை அடிப்படையாகக் கொண் டுள்ளன. கருத்தேற்றங்களால் தவறாகச் செலுத்தப்படாமல் தனியன்களை அவர்களாகவே எண்ணும்படி செய்வதே, குறிப்பாக உயர்நிலைப்பள்ளி, கல்லூரி நிலைகளில் கல்வியின் குறிக்கோள் என்பது ஐயத்திற்கிடமற்ற உண்மையாகும். கல்வியின் வாயிலா கவே குடிமக்கள் வெவ்வேறு கட்சிகளின் பேச்சுகளையும், கொள் கைபரப்பலையும் கேட்டு எது சரியானது, நல்லது, உண்மையானது என்று முடிவு செய்கின்றார்கள் என்று சமுதாயம் உறுதி செய் கிறது.

தனியனின் திறம், அறிவு இவற்றை அதிகப்படுத்துவதே கல்வியின் ஒரு முக்கியக் குறிக்கோளாகும். ஆனால், எத்தகைய அறிவைப்பற்றி நாம் எண்ணுகின்றோம்? கொள்கைபரப்புபவரும் அறிவைப் பரப்புகின்றார். அப்படியானால் கல்வியின் மூலம் பெற்ற அறிவுக்கும், கொள்கைப்பரப்பலின் மூலம் பெற்ற அறிவுக்கும் உள்ள வேறுபாடுதான் என்ன? பள்ளி, கல்லூரி இவற்றிலிருந்து பெறும் அறிவு சரியானது என்று தகுதி பெற்றவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுச் சரிபார்க்கவும்படுகின்றது. எனவே, கல்வியை யும், கொள்கைபரப்பலையும் வேறுபடுத்தி வரையறை செய்வது மிகவும் கடினமானதாகும். சோவியத் ரஷ்யாவிலும், நாஜி ஜெர்மனியிலும் பள்ளிகளே கொள்கை பரப்புவதற்காகப் பயன் படுத்தப்பட்டன. பாட நூல்களில் பாடங்கள் ஒரு குறிப்பிட்ட அரசு அமைப்பு, சமுதாயம் இவற்றைப் புகழ்ந்தும் வேறு அமைப் புகளைக் கண்டித்தும் எழுதப்பட்டன. குழந்தைகளின் கதைப் புத்தகங்கள்கூட கம்யூனிஸத்தைப் பரப்ப ரஷ்யாவிலும், சீனாவி லும் பயன்படுத்தப்படுகின்றன. இது போன்ற செய்திகள் அந் நாடுகளில் குழந்தைகளை வளர்க்க மிகவும் இன்றியமையாதவை, பயனுள்ளவை, உண்மையானவை என்று ரஷ்யாவிலும், சீனாவி லுமுள்ள தகுதிவாய்ந்தவர்கள் எண்ணுகிறார்கள். இது போன்ற வெவ்வேறு நாடுகளின் வரலாற்று நூல்கள் கொள்கைபரப்பல் செய்திகளைப் பெருமளவில் கொண்டிருந்தன. ஆங்கிலேயர் ஆட்சி யில் குழந்தைகளுக்கான இந்திய வரலாற்று நூல்கள், ஆங்கிலே யர்கள் இந்தியாவில் செய்த பணிகள் குறித்துப் புகழ்ந்தும் ஆங்கி லேயர்களின் செல்வாக்குப் பரவுவதை எதிர்த்த இந்தியர்களைக் கண்டித்தும் காணப்பட்டன. 1857ஆம் ஆண்டுப் போரை இந் தியர்கள் 'விடுதலைப் போர்' எனக் கூறியபோது ஆங்கிலேய வரலாற்றாசிரியர்கள் இதனைச் 'சிப்பாய்க் கலகம்' (Sepoy Revolt) என்று அழைத்ததை ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். ஐக்கிய நாடுகளின் கல்வி, சமூக, பண்பாட்டுக் கழகம் பள்ளி மாணவர்களின் வரலாற்று நூல்கள் ஒவ்வொரு நாடும் அதன்

முன்னேற்றத்திலும் பண்பாட்டிலும் அந் நாட்டின் பெரியார்களும், பிற நாட்டின் செல்வாக்கும் பங்கு கொண்டுள்ளதுபற்றிப் பராபட்சமின்றி எழுதப்பட்டுள்ளதா என்று காண ஒரு திட்டத்தை அமைத்துள்ளார்கள். இவ்வாறாகக் கல்வி எங்கு முடிகின்றது? கொள்கைபரப்பல் எங்குத் தொடங்குகிறது? என்று ஒரு வரையறை செய்வது மிகவும் கடினமானதாகும்.

கல்வியின் குறிக்கோள் மக்களை உண்மையை நாடிச் செலுத்தற்கே என்று வற்புறுத்திக் கூறலாம். இஃது ஆய்வு மனப்பான்மையும், தீர்வு காணுவதில் தனியுரிமையையும் எடுத்துக்காட்டுகின்றது. கொள்கைபரப்பலை ஒரு குறிப்பிட்ட மதம் மேற்கொண்டாலும் அல்லது சர்வாதிகார அரசு மேற்கொண்டாலும் இந்தக் குறிப்பிட்ட நோக்கில் கொள்கைபரப்பலுக்கும் கல்விக்கும் இடையே ஒரு வேறுபாடுள்ளது என்று உறுதியாகக் கூறலாம். இதன்படி கொள்கை பரப்பில் ஆய்வு முறையைத் தூண்டாமல் தயாராக உள்ள கருத்துகளை அளிக்கின்றது என்று காணுகின்றோம். வேறுவிதமாகக் கூறினால் கொள்கைபரப்பலின் நோக்கம் யாதெனில், ஆய்வில்லா மனத்தை உண்டாக்குவதேயாகும். மாறாகக் கல்வியின் நோக்கம் மக்கள் சுதந்திரமாக எண்ண உதவுவதேயாகும். இதன் காரணமாக மதங்களும் சர்வாதிகார அரசுகளும் ஆளுவோரின் கருத்திலிருந்து மாறுபட்ட நோக்கம் கொண்டோர்களைத் தண்டிக்கிறார்கள். கொள்கைபரப்பல் சுதந்திரமாகச் சிந்திப்பதை எதிர்க்கும்போது, உண்மையான கல்வி கட்டுப்பாடில்லாச் சிந்தனைக்கு வழிவிடுத்து ஊக்குவிக்கின்றது.

நாம் கொள்கைபரப்பல் நேர்மையற்றது, அறமற்றது அல்லது தவறுபடச் செலுத்துவது என்று உறுதியாக முடிவு கட்டுதல் கூடாது. பல நற்பணிகட்குக் கொள்கைபரப்பல் தேவைப்படுகின்றது. எடுத்துக்காட்டாக, ஒரு நாட்டின் சுகாதாரத்துறை குழு வாழ்வில் சில போக்குகளை எதிர்க்கவும், சில நோய்களை அடியோடு ஒழிக்கவும் அது கண்டிப்பாகக் கொள்கைபரப்பல் நுண்முறைகளை மேற்கொள்ள வேண்டும். பன்னெடுங்காலத்திற்கு முன்பே இந்தியா தனியனின் நலத்திற்கு (personal hygiene) மிகுந்த கவனிப்பைக் கொடுத்து வந்துள்ளபோதிலும், வழக்கத்தில் 80 முதல் 90 சதவீதப் பொதுமக்கள் உடல் தூய்மையில் எந்த விதக் கவனமும் செலுத்துவதில்லை. எல்லோரும் தவறாமல் குளிக்க வேண்டும், நாள்தோறும் உடைகளைத் தூய்மையாக்க வேண்டும், வீட்டையும் சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று பரப்புவது நமது இன்றியமையாத பணி ஆகும். இதை ஒரு நல்ல கொள்கைபரப்பலின் மூலமே

நகரங்கள், சிற்றூர்கள், பள்ளிகள், மருத்துவமனைகள் ஆகியவற்றில் செய்ய முடியும். இதனைப்போன்றே கொள்ளைநோய் அல்லது நச்சுக்காய்ச்சல் இருக்கும் தருணத்தில், கொள்கைபரப்பல் ஊர்தி மூலம் எல்லா இடங்களுக்கும் சென்று மக்களை அம்மை தடுப்பு ஊசி போடுதல் முதலிய வழிகளில் அவர்களை நோய்த் தாக்குதலிலிருந்து காப்பாற்றிக்கொள்ளும்படி பிரச்சாரம் செய்ய வேண்டும். இவ்வாறு, நெருக்கடி காலங்களிலும், பஞ்சம், வெள்ளப்பெருக்கு, தொற்றுநோய் ஆகிய காலங்களிலும் கொள்கைபரப்பலைப் பயன்படுத்தியே மக்களுக்கு நேர இருக்கும் அபாயத்தை உணர்த்தி அதிலிருந்து தப்பும் வழிகளையும் கூற முடியும். இவ்வாறே சுதந்திரப் போராட்டத்தின்போது காந்தியடிகளும் அவரைப் பின்பற்றியவர்களும் கல்லாதவர்களையும், கற்றவர்களையும் விழித்தெழச் செய்யவும், சுதந்திரம் வேண்டுமென்ற உணர்வையூட்டவும் கொள்கைபரப்பல் நுண்முறைகளைப் பயன்படுத்தினர். குடியேறியோர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற குடியாட்சி வழியில் வாழ்வு என்று கூறும் கொள்கை பரப்பலைப் பயன்படுத்துதல் தவறான வழியில் செலுத்துவது, நேர்மையற்றது என்று கூற இயலாது. ஒரு குழுவின் தீர்வு, மதிப்பு, குறிக்கோள் இவற்றை அறிந்துகொள்ளுதல் செய்திகள் கல்வி பற்றியதாக நோக்கப்படுமா அல்லது கொள்கை பரப்பல்பற்றியதாக நோக்கப்படுமா என்று அறிய மிகவும் அவசியமானதாகும். அமெரிக்காவில் குடியாட்சியின் குறிக்கோளைப்பற்றிய சொற்பொழிவுகளைக் கல்வி என்று நோக்கும்போது, சர்வாதிகார நாடுகளில் இதே சொற்பொழிவுகள் கொள்கைபரப்பலாக நோக்கப்பட்டுப் பேசியவர்களையும், அதற்கு ஏற்பாடு செய்தவர்களையும் கைது செய்து தனித்த முகாம்களுக்கு அனுப்பிவிடுவார்கள். இவ்வாறாகச் சிக்கல்களை எவ்வாறு குழு நோக்குகின்றதோ அச் சிக்கல்களுக்கு மேற்கொள்ளப்படும் கொள்கைபரப்பல் நுண்முறைகளைப் பொறுத்துக் கொள்கைபரப்பல் இருக்கும். எடுத்துக்காட்டாக, இந்தியாவில் கடந்த சில ஆண்டுகளாகக் காங்கிரஸ் கட்சியும், அரசும் மேடையிலும் செய்தித்தாள்களிலும் 'சமவுடைமை இலக்குச் சமுதாயத்தின்' இன்றியமையாத சிறப்புக் குணங்களை வரைந்தும் விவரித்தும் காட்டியபோது, இதனை மற்ற அரசியல் கட்சிகளும், இத் திட்டத்தினால் பாதிக்கப்பட்ட மக்களும் இதனைக் கொள்கைபரப்பல் என்று கொண்டார்கள். மாறாக, தொழில் துறையினரும், வணிகர்களும் மேடையிலும் செய்தித்தாள்களிலும் தனியார் தொழிலின் தேவைபற்றிப் பேசினால் சில அரசியல் கட்சிகளும், அரசும் இதனைக் கொள்கைபரப்பலாகக் கொள்கின்றது. எனவே, நாம் இதனைக் குறிப்பிட்ட காலத்தில் குழுவின்

பொது மாதிரி, சமூக இலக்கு இவற்றுடன் தொடர்பு கொண்டதும் சார்ந்ததுமான சிக்கல் எனக் கொள்ளலாம்.

பொதுவாகக் கொள்கைபரப்பல் மக்களின் நம்பிக்கைகளையும், மனப்பான்மைகளையும், இறுதியாக அவர்களின் செயல்களையும் தன்வசப்படுத்த முயற்சி செய்கிறது என்று எடுத்துக் கொள்ளப்படுகின்றது. கொள்கைபரப்பலின் குறிக்கோள் கருத்துகளையும், மனப்பான்மைகளையும் தன்வசப்படுத்தி அதன் மூலம் அவர்களின் நடத்தையையும் வசப்படுத்துவதாகும். செல்வாக்கும், பெற இருக்கின்ற திட்டமான நம்பிக்கைகளும், மனப்பான்மைகளும் தாமே மதிப்புடையதும், சமூகத்தில் விரும்பப்படுவதும் இல்லை என்ற பொதுவான எண்ணம் உள்ளது என்று நாம் முன்பே கண்டோம். கொள்கைபரப்பாளர், மக்களின் திட்டமான நம்பிக்கைகளையும், மனப்பான்மைகளையும் வசப்படுத்த முயல்வது சில மறைவான உள்நோக்கம் அவர் கொண்டிருப்பதால்தான் என்று கருதுகிறோம். அதன் பயனாக, ஒருவன் கொள்கைபரப்பலால் தூண்டப்பட்டிருப்பானேயானால் அவனுடைய துலங்கல்கள் ஆய்வில்லாதனவாக இருக்கும் என்று கொள்ளப்படுகின்றது. அவை பகுத்தறிவு ஆராய்ச்சியின் அடிப்படையில் அமையாமல், கொள்கைபரப்பாளரின் நோக்கம், எடுத்துக் கொண்ட உண்மைகள் இவற்றின் அடிப்படையில் அமையும்.

இவற்றிற்கு மாறாகக் கல்வியின் இலக்கு ஒரு தனியனது அறிவைப் பெருக்க வழிகாணுவது என்று எண்ணப்படுகிறது. இங்குக் கல்விக்கும் கொள்கைபரப்பலுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டைக் காண்கின்றோம். கொள்கைபரப்பல் மக்களின் நம்பிக்கைகளையும் மனப்பான்மைகளையும் வசப்படுத்தி இயக்க முயலும்போது, கல்வியின் குறிக்கோள் மக்களிடையே அறிவைப் பெருக்குவதாக உள்ளது. அதன் பயனாக, கல்வி கொடுக்க முயலும் திட்டமான அறிவு பயனுள்ளதாகவும், சமூகத்தில் விரும்பப்படுவதாகவும் நோக்கப்படுகின்றது. கல்வியின் அடிப்படையில் எழும் நடத்தை தனியனையும், சமூகத்தையும், பொது நலத்தையும் முன்னேற்றுவதாகும். இறுதியாகக் கற்றோரின் துலங்கலானது அறிவாராய்ச்சி என நம்பப்படுகின்றது. அத் துலங்கல், அறிவாய்வை அடிப்படையாகக் கொண்டிருக்க, கொள்கைபரப்பலால் தூண்டப்பட்ட தனியனது துலங்கல் அறிவாய்வற்றதும், காரணமற்றதுமாகும் என நம்பப்படுகின்றது.

இது நம்மைக் கொள்கைபரப்பலிலும், கல்வியிலும் உள்ள **புலனுணர்வில்** வேறுபாடு ஏதாவது இருக்கின்றதா என்று காண

வேண்டிய அடிப்படைச் சிக்கலுக்கு எடுத்துச் செல்கின்றது. ஆசிரியரும் கொள்கை பரப்ப வேண்டும் என்னும் நினைவிலி விருப்பம் கொண்டவராக இருக்க முடியும். இதனை விளக்குவதற்காக, நாம் தாண்டைக்கின் கணித நூலில் உள்ள கணக்குகளுக்குப் பிரீமனின் பகுப்பாய்வைக் கொடுக்கலாம் (1). தாண்டைக்கின் புத்தகத்திலுள்ள பல கணக்குகள் தனியார் சொத்து, ஊதியம், வட்டி முதலியனபற்றி முதலாளித்துவ நோக்கை வற்புறுத்திக் கூறியுள்ளமையைப் பிரீமன் காட்டியுள்ளார். ஆக, பிரீமனின் கருத்துப்படி, இக் கணக்குகள் சில பொருளாதார நடைமுறைகளுக்கு ஏற்பக் குழந்தைகளின் நம்பிக்கை, மனப்பான்மை இவற்றை வலியுறுத்துவனவாக உள்ளன. அமெரிக்காவின் தெற்கு மாநிலங்களிலும், பிறவற்றிலும் பஞ்சாலைகளில் வேலை செய்யும் நீக்ரோக்களுக்குக் குறைந்த ஊதியம், சத்துக் குறைவான உணவுகளைப்பற்றிய கணக்குகள் கொடுக்கும் கணித நூல்பற்றி மக்களின் கருத்து எவ்வாறு இருந்திருக்கும் என்று கற்பனை செய்து பார்க்குமாறு பிரீமன் கேட்டுக்கொள்கின்றார். இம் மாதிரியான கணக்குகள் குழந்தைகளைத் தாண்டைக்கின் நூலைப் போன்றோ அல்லது பிறவற்றைப் போன்றோ கணித விதிகளைத் திறமையாகக் கற்றுக்கொள்ளும்படி செய்யும். ஆனால், அவ்வாறான நூல்கள் கொள்கைபரப்பி என்றும், சிறந்த கணிதப் புத்தகமாக இருக்கத் தகுதியற்றது என்றும் விமர்சிக்கப்படும். மையர்ஸ் (2) கருத்தேற்றத்தின் மூலம் நடத்தையைக் கட்டுப்படுத்துவதுபற்றிய சோதனையை எடுத்துக்காட்டாகக் கூறலாம். வெளி நாட்டில் பிறந்த அமெரிக்கப் படை வீரர்களுக்கு ஆங்கிலத்தில் கடிதம் எழுதுவதுபற்றிக் கற்பிப்பதில், அவருடைய முறையானது எவ்வாறு கடிதம் எழுதுவது என்று கற்பிப்பதோடுமட்டுமல்லாமல் குறிப்பிட்ட கருத்துகளும், உண்மைகளும் அந்த மாதிரிக் கடிதங்களில் கற்பிக்கப்பட்டன. அது வெளிநாட்டில் பிறந்த வீரர்களை அமெரிக்கர்களைப் போல ஆக்குவதற்கும் உதவுவதாக இருந்தன. இந்த முறை மாணவர்கள் கடிதம் எழுதும் திறனை முன்னேற்றியதோடு அவர்களின் நம்பிக்கையிலும் மனப்பான்மையிலும் அமெரிக்க வாழ்முறையைத் தூண்டுவதில் வெற்றி கண்டது என மையர்ஸ் கண்டறிந்தார். இங்கு நாம் நினைவுக் கொள்கைபரப்பலுக்கு ஓர் எடுத்துக்காட்டைப் பார்க்கின்றோம்.

தாண்டைக்கின் கணக்குகளைப் பிரீமன் 'நினைவிலிக் கொள்கை பரப்பல்' என்று கூறும் போது, மையர்ஸின் மாதிரிக் கடிதங்கள் 'நினைவுக் கொள்கைபரப்பல்' என்று காண்கின்றோம். நினைவுக் கொள்கைபரப்பலுக்கும் நினைவிலிக் கொள்கைபரப்பலுக்கும் இடையே என்ன வேறுபாடு இருக்கிறது? தாண்டைக்கின் நோக்

கமும் மையர்ஸின் நோக்கமும் வேறுபட்டவை என்பது வெளிப் படை. சில பொருளாதார நடைமுறைகளைக் கொள்கைபரப்ப லின் மூலம் பரப்ப வேண்டும் என்பது தாண்டைக்கின் எண்ண மன்று. ஆனால், மையர்ஸ் வெளிநாட்டில் பிறந்த வீரர்களின் நம்பிக்கையையும், மனப்பான்மையையும் தூண்டி அவர்களை அதி கமாக அமெரிக்க முறையைப் பின்பற்றச் செய்யவேண்டும் எனப் பெரிதும் விரும்பினர். எப்படி இருப்பினும், குழந்தைகளின் மீதோ வீரர்களின் மீதோ உண்டான விளைவுகளைப் பொறுத்தவரை ஆசிரியர்களின் 'எண்ணங்களில்' இருந்த வேறு பாடுகளின் காரணத்தால் இவை மாறவில்லை. இதன் பயனுக, விருப்பங்களில் வேறுபாடு இருப்பினும் உளவியல் வழிமுறைகளைப் பொறுத்தவரை வேறுபாடு இல்லை. கொள்கைபரப்பலில் உள்ள இன்றியமையாத உளவியல் முறைகள் எந்த வகையான கல்வி கற்பதிலும் ஒன்று போலவே உள்ளன. கொள்கைபரப்பலிலாயி னும் அல்லது கல்வியிலாயினும் நினைவுநிலை அல்லது நினைவிலிநிலை விருப்பாயினும், மக்கள் நம்பிக்கையையும், மனப்பான்மையை யும் தூண்டுகின்ற சிலவற்றைக் கற்கின்ருர்கள். இந்த அடிப் படை முறையில் எவ்விதமான வேறுபாடும் இல்லை. கிரச்சும் கிரச்சுஃபீல்டும் எழுதுவது போல, 'பொருளோ நிகழ்ச்சியோ கொள்கைபரப்பும் தன்மையில் இருக்குமாயின், இது பொருளை அல்லது நிகழ்ச்சியை உண்டாக்குபவர் அல்லது துவக்குபவரின் உள்ளார்ந்த நினைவு விருப்பமாக இருக்க வேண்டுமென்பது இல்லை. ஆனல் சொல்லுபவர் அப் பொருளின் விளைவுகளை ஏற் கின்ருரா ஏற்பதில்லையா என்பதில் உள்ளது என்று வலியு றுத்தப்பட வேண்டும். அறிவியல் பகுப்பு முறையில் கொள்கை பரப்பல், கொள்கைபரப்பாமை என்பனவற்றின் அடிப்படை முறைகளிடையே வேறுபாடு காணுவதற்கு வழியில்லை' (3.332).

## கொள்கைபரப்பலின் தேவை
(The need for propaganda)

கொள்கைபரப்பல் என்னும் சொல் அனுகூலமற்ற மனப் பான்மையைத் தூண்டிவிட்டதன் காரணத்தாலும், நுண்ணறிவு, மனவெழுச்சி இவை கொள்கைபரப்பல் நுண்முறையால் தவறு படச் செலுத்தப்படுவதாலும், நாம் இதன் பயன்மதிப்பைக் குறைத்துக் காணுகின்ற முயற்சி இருக்கக் காணுகின்ருேம்.

நாம் மேலே கண்டவாறு பல சமூகச் சிக்கல்களில் கொள்கை பரப்பலைப் பயன்படுத்த வேண்டிய தேவை இருக்கின்றது. மக்களுக்குப் பல சமூகச் சிக்கல்களைப்பற்றிய விழிப்புணர்ச்சியின்

முக்கியத்துவத்தை உணர்த்துவது தேவையாகின்றது. சான்றாக, காசநோய் (tuberculosis) ஒவ்வோர் ஆண்டும் பல உயிர்களைப் பலிக் கொள்கிறது. இதன் காரணமாக, மருத்துவத் துறையினரும் மத்திய, மாநில அரசுகளும் பல அட்டவணைகள், சிறு நூல்கள் முதலியவற்றைத் தயாரித்து அவற்றின் மூலம் இந் நோய் பரவுவதைத் தடுப்பது, இந் நோயிலிருந்து தம்மையும், தம் குழந்தைகளையும் காப்பது எப்படி என்று விளக்கியது. மக்கள் இப் பிரச்சினையை அறியவும், அதனின்று தங்களைக் காத்துக்கொள்ளவும் இது மிகவும் இன்றியமையாததாக உள்ளது. காசநோயை ஒழிப்பதற்காகப் பணம் திரட்டும் நோக்கோடு 'காசநோய் பில்லைகளை' ('T. B. seals') அஞ்சல் அலுவலகங்களும், பிற நிறுவனங்களும் விற்கின்றன. இதனைப் போன்றே, தொண்டு மனப்பான்மையுடைய நிறுவனங்கள், மாநில அரசு, மத்திய அரசு ஆகியவற்றால் உருவாக்கப்பட்ட நல்வழித் திட்டங்களின் பயன் மதிப்பை மக்களுக்கு உணர்த்துவது மிகவும் தேவையாக உள்ளது. சான்றாக, 'சமுதாய நலம்', 'யோஜனா', 'ஸ்வாட் இந்த்' முதலிய பல 'வெளியீடுகள்' (journals) இப்பொழுது வெளியிடப்படுகின்றன. இவ் வெளியீடுகள் பல மொழிகளில் வெளிவரும். இவை பல அமைப்புகளின் நிகழ்ச்சிகளைப் பயனுள்ள முறையில் வெளியிடுகின்றன. மேலும், அவற்றைப்பற்றிய சிக்கல்களை அவற்றில் விருப்பமுள்ள சிலர் விவாதிக்கின்றார்கள். இவ் வெளியீடுகள், செய்திகளின் இருப்பிடமாகவும், மேலும் மக்களிடையே சமுதாயத்தை முன்னேற்றும் இந்த முக்கியமான கூறுகளைப்பற்றி அவை ஊக்கத்தை உண்டாக்குவனவாகவும் இருக்கின்றன. இதன் பயனைக் கொள்கைபரப்பல் என்னும் சொல்லுக்குத் தவறான பொருள் கொடுத்தமையால் தவறான நோக்கங் கொண்டு எல்லாக் கொள்கைபரப்பலும் தவறுபடச் செலுத்துவது, குற்றமுடையது என்று முடிவு செய்தல் கூடாது. நாம் முன் அத்தியாயத்தில் கண்டது போல, பொதுமக்கள் கருத்தானது, பொதுமக்கள் விவாதத்தை உட்கொண்டுள்ளது. பொதுமக்கள் விவாதத்திற்கு ஒரு பொருள் இருக்க வேண்டும். அப்போதுதான் தொண்டு செய்யும் நிலையங்கள், மாநில நிலையங்கள் இந்தச் சிக்கல்களைப்பற்றி மக்கள் அறியும்படி செய்ய கொள்கை பரப்பல் நுண் முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. அடுத்து வரும் அத்தியாயத்தில் நாம் படிக்க இருப்பதுபோல மாநாடு, விவாத அரங்கம், குழு விவாதங்கள் ஆகியவற்றின் நோக்கங்களும் இதுவே. இவையாவும் சமுதாயத்தில் முற்காலத்திலும் இக் காலத்திலும் மக்களைச் சிக்கல்களை அறியும்படி செய்யவும், அவர்கள் தாமாகவே முடிவெடுக்கவும் பயன்படுத்திய நுண் முறைகள் ஆகும். இந்த நுண்முறைகளின் மூலம் மக்களைத் தவறு

படச் செலுத்துவதும், சிக்கலின் வேறு பகுதிகளும் உள்ளன, அவை விவாதத்தின் பின்னரே முடிவு கட்ட வேண்டும் என்று அறியாமல் முடிவுகளையும், கருத்துகளையும் எவ்வித விவாதமுமின்றி அதனை ஏற்குமாறு செய்வதே இதன் தீங்காகும்.

இறுதியாகக் கொள்கைபரப்பலானது பணியச் செய்வதாகவும் மக்கள் கட்டுப்படாத உள்ளத்துடன் இருப்பதைத் தவிர்ப்பதாகவும் இருக்கக் கூடாது. கொள்கைபரப்பலில் தவறு இல்லை. ஆனால், கொள்கைபரப்பலைச் சகிக்க முடியாததாகச் செய்வதில் தான் தவறு இருக்கின்றது.

## மொழியும் கொள்கைபரப்பலும்
## (Language aad propaganda)

கொள்கைபரப்பல் பேச்சு வடிவிலிருப்பினும், எழுத்து வடிவிலிருப்பினும் மொழியின் ஊடாகவே செயல்படுகிறது. சுருக்கமாகக் கொள்கைபரப்பலில் மொழியின் இன்றியமையாமையைக் காண்போம். 'கொள்கைபரப்பல்' (பேசுவதும் எழுதப்படுவதும்) மனிதனைக் கட்டுப்படுத்தும் ஆற்றல்களில் மிகவும் வலிமைவாய்ந்ததாக உயர்ந்துள்ளது. இஃது அழிவு தேடும் அணுகுண்டைவிட வலிமை வாய்ந்த ஆயுதமாகவும், ஐக்கிய நாடுகளைவிட பயன் தரக்கூடிய அமைதியை உருவாக்கும் கருவியாகவும் இருந்து வருகின்றது. கட்டுப்படுத்தும் நுண்முறையான கொள்கைபரப்பலின் குணங்களில் அதன் மலிவுத் தன்மை, சூழ்ச்சித் தன்மை, எண்ணிறந்த ஆற்றல்கள் ஆகியவை கூறப்படுகின்றன' (3.316).

பொதுவாகச் சொற்கள் பொருள்களின் அல்லது செயலின் குறியீடுகள் என்று கொள்ளப்படுகின்றன. அதனால், மொழி ஒரு வகையான நடைத்தைக்குப் பதிலாக இருக்கின்றது என்று மேற்கொள்ளப்படுகின்றது. மாறாகப் பொருள் எவ்வாறு நோக்கப்படுகின்றதோ அது போலவே சொற்களும் நோக்கப்படுகின்றன என்று வற்புறுத்திக் கூறப்படுகின்றது. நவீன கல்வியின் அடிப்படை நடைமுறையாகக் குழந்தைகளுக்குச் சொற்களையும், சொற்றொடர்களையும் சேர்த்துக் கற்பிக்கப்பட வேண்டும் என்று காணப்படுகின்றது. இதற்கு ஒரு விளக்கமும் காட்டலாம். ஒரு வலிமை வாய்ந்த ஒலி கேட்டால் நாம் அதனால் அதிர்ச்சியடைவோம் அல்லது அதற்குப் பயத்துடன் எதிர்வினை செய்வோம் என்பது வெளிப்படை. இங்கு நமது எதிர்வினை பலத்த ஒலியையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவ்வொலியானது பொருள் குறிக்கும் வழியில் நோக்கப்படுகிறதேயன்றி வேறு

ஏதாவதுகுறியீடு என்று கொள்ளப்படுவதில்லை. நாம்முன்புகண்ட வாறு (அத். 8) பிறர் சொன்ன சொற்களுக்கு ஏற்ப அல்லது பேசுதற்கு ஏற்ப நாமாகவே பொருந்தியமைக்கின்றோம். அதாவது பொருள்களுக்கு ஏற்ப நாம் பொருந்துவது போல, சொற்களுக்கு ஏற்பவும் பொருந்திக்கொள்கிறோம். ஒருவன் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களால் தூண்டப்படுவதுபோலவே அவனிடம் கூறிய சொற்களாலும் தூண்டப்படுகின்றான். 'நாம் ஒரு சொல்லை அல்லது சொற்றொடரைச் கேட்டாலோ ஒரு சொல்லையோ சொற்றொடரையோ செய்தித்தாளில் பார்த்தாலோ நாம் பொருளையும் அதனுடன் பார்க்கின்றோம். மேலும், நாம் அச் சொற்கள் அல்லது சொற்றொடர்களுக்கு உலகிலுள்ள பிற பொருள்களுக்கு எதிர்வினை செய்வதைப் போலவே எதிர்வினை செய்கின்றோம்' (3.327-8). சொற்களைப் பயன்படுத்துவதன் மூலம் கொள்கைபரப்புபவர் மக்களின் நடத்தையில் பெரும் மாற்றங்களைக் கொண்டு வருகின்றார். இதுவே கொள்கைபரப்பலின் ஒப்பிலா ஆற்றலுக்குக் காரணமாகும். சொற்களையும், சொற்றொடர்களையும் திறமுடன் பயன்படுத்தி கூப்பாடுகளைத் (slogans) திரும்பத் திரும்பச் சொல்லுவதே கொள்கைபரப்பலின் அடிப்படை நுண்முறை என்று தவறுபட எண்ணல் கூடாது. சொற்கள் பயன்படுத்தப்படும் இடத்திற்கேற்ப உட்பொருளுடனும், வெளிப் பொருளுடனும் புரிந்துகொள்ளப்படுகின்றன. வேறு விதமாகக் கூறினால், பேச்சுக் கொள்கைபரப்பல் ஏன் நம்ப வைக்கும் திறனுடையதாக இருக்கிறது என்று அறிய அதனைக் கேட்போரின் மெய்ப்பாடுகளும் நோக்கங்களும் எவை என்று அறிந்துகொள்ள வேண்டும். நடைமுறையில் உள்ள நம்பிக்கைகள், தேவைகள், மனப்பான்மைகள் ஆகியன பேச்சைக் கேட்போரிடம் எவ்வாறு உள்ளது என்று அறிந்துகொள்ள வேண்டும். சொற்கள், மக்களின் தேவைகள் ஆகிய இவ்விரண்டு கூறுகள் எவ்வாறு மக்களை வசப்படுத்துகின்றன என்பனவற்றைப் புரிந்து கொண்ட பின்னரே கொள்கைபரப்பலின் ஒப்பில்லாத் தன்மையை முழுதும் அறிய முடியும். இதற்கு ஒரு விளக்கங்கொடுக்க வேண்டுமானால், இந்தியாவில் அரசியல் கட்சிகள் அரசின் பல செயல்களைப்பற்றி மக்களின் கருத்து மனப்பான்மையை மாற்றக் கொள்கைபரப்பலில் ஈடுபட்டுள்ளன. அவர்கள் உணவுப் பற்றாக் குறை போன்ற சிக்கல்களை எடுத்துக்கொண்டு அரசுக்கு எதிரான மனப்பான்மைகளை வளர்க்க முயன்றார்கள். சான்றாக, அவர்கள் குடியரசு நாள் அல்லது சுதந்திர தினம் ஆகிய நாள்களில் 'அறப் போர்' நடத்த முயன்றார்கள். சான்றாக, 1958-ல் அப்பொழுது மைசூர் மாநிலத்தின் ஆளுனராக இருந்த மைசூர் மன்னர் தசரா விழாவின்போது யானையின்மீது ஊர்வலம் வருவதற்கு

எதிராக 'அறப்போர்' ஒன்றைத் தொடங்கினார்கள். மன்னராட்சியின் நினைவாக மன்னர் யானைமீது நகர் வலம் வருவது உண்மையே. ஆனால், மக்கள் எல்லோருமாக இக் கொள்கைபரப்பலுக்குப் போதிய கவனம் செலுத்தவில்லை. ஏனெனில், மைசூரைத் தசரா விழாவின்போது பார்க்கவும், அப் பெரும் ஊர்வலத்தைக் காணவும் இருந்த விழைவானது மன்னராட்சி பழக்கத்தை ஒழித்துக்கட்ட வேண்டும் என்பதனைவிட மிகவும் வலிமை பொருந்தியதாக இருந்தது. பெரும்பாலும், பெரும்பாலான மக்கள் மன்னராட்சி முறைக்கும் சுயாட்சி முறைக்கும் இருந்த முரண்பாட்டை அந்த அரசியல் கட்சித் தலைவர்கள் நோக்கியதுபோல் நோக்கவில்லை போலும். குழுப் பொது மாதிரிக்கு எதிரான சொற்கள் தாமாகவே மக்களின் கருத்து நம்பிக்கை, மனப்பான்மை, நடத்தை ஆகியவற்றைத் தூண்டும் வலிமையற்றுப் போகும்.

## கொள்கைபரப்பலும் கருத்தேற்றமும்
### (Propaganda and suggestion)

டார்டே (Tarde), லீபான் (Libon) ஆகிய சமூகவியலார்கள் கருத்தேற்றத்தைச் சமூக நடத்தையை விளக்கும் ஒன்று என்று எண்ணினர். சமூகவியலார்கள் கொள்கைபரப்பலின் தனித்த செயல்படுத்தும் தன்மையைக் கருத்தேற்றத்தின் தனித்தன்மையிலிருந்து வருவது என்று விளக்க முற்பட்டார்கள். சிலர் கருத்தேற்றத்திற்கு மிகவும் உட்படுகின்றார்கள் என்று கொள்ளப்படுகின்றது. அதனால், கொள்கைபரப்பல் கருத்தேற்ற வழிகளைக் கொண்டுள்ளது. ஆனால், பல அண்மைக்காலச் சோதனைகள் கருத்தேற்குமை தனியர்களிடத்தே உள்ள பண்பன்று. ஆனால், அது அவர் இருக்கும் சூழ்நிலையின் தேவைகள், மனவெழுச்சிகள், நம்பிக்கைகள் இவற்றையே பொறுத்துள்ளது என்று காட்டுகின்றன. அவ்வப்பொழுது நிகழ்கின்ற உளவியல் சூழ்நிலை வேறுபாடுகளைப் பொறுத்து மக்களிடம் கொள்கைபரப்பலின் செயலையும் விளைவையும் காண வேண்டும். ஆக, எவ்வெத்தன்மையுடைய உளவியல் சூழ்நிலைகள் கருத்தேற்குமையை அதிகப்படுத்துகின்றன என்னும் வினா எழுகின்றது? ஒருவனது மனப்பான்மையையும், நம்பிக்கையையும் எவ்வித அறிவாய்வோ அல்லது உய்த்துணர்தலோ மாற்றும்படி செய்ய மதிப்புக் கருத்தேற்றத்தை ஒரு சிறந்த உதாரணமாக அளிக்கிறார்கள். பிரிஜ்ஜஸ் (4) என்பார் ஒருவரை வேறுபட்ட படங்களின் அழகுப் பயன் மதிப்புகளை மதிப்பிடுமாறு கேட்டுக் கொண்டபோது மிகச் சிறந்தது, மிகவும் மோசமானது என்று பகுப்பதில் பெரும்பாலோர்களின் கருத்து

களால் தூண்டப்பட்டார் என்று கண்டுள்ளார். பிரிஜ்ஜஸ் இதனைப் 'பெரும்பாலோர் மதிப்பு விளைவு' (majority prestige effect) என்றழைத்தார். நாம் நமது குழு வாழ்வில் பெரும் பாலோர் எதனைச் சரியானது, விரும்பக்கூடியது என்று எண்ணு கிறார்களோ அதனையே சரி என்றும் விரும்பத்தக்கதென்றும் ஏற்கின்றோம். நாம் முன்னர் கண்டது போன்று, இது சமூகவய மாதலில் இன்றியமையாத ஒரு கூறு ஆகும். பொருத்தமான சமூகத் தூண்டுதலுக்கு அதாவது, பரிசு, வெறுப்பு, புகழ்ச்சி, குற்றச்சாட்டு ஆகியவற்றிற்கு ஏற்பத் தனியன் பழக்கப்படுத்தப் படுகின்றான். தனியன் குழு வழிகளை ஏற்காவிடில் அவன் பல துன்பங்களையும், துயரங்களையும் அடைகின்றான். அதனால், அவற் றிற்கு ஒரு முடிவு காண குழு வழிகளை அவன் மேற்கொள்கின் றான். இந்தப் பெரும்பாலோர் மதிப்பானது கொள்கைபரப்பல், விளம்பரம் ஆகியவற்றில் தனித்த நுண்முறையாகப் பயன்படுத்தப் படுகின்றது. விளம்பரம் செய்வோர் மதிப்புக் கருத்தேற்றத்தின் மேற்கூறிய இரண்டு கூறுகளைப் பயன்படுத்துகின்றார்கள். அவர்கள் ஒரு குறிப்பிட்ட சோப்பு (soap) பல்லாயிரக்கணக்கானவர்களால் பயன்படுத்தப்படுகின்றது என்று கூறலாம். ஒவ்வொருவரும் பயன்படுத்துவதனால் உங்களையும் அதனைப் பயன்படுத்துமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றது. மேலும், இந்தப் பெரும்பாலா னோர் மதிப்புக் கருத்தேற்றம் ஏற்கப்படுகின்றது. விளம்பரம் செய்வோர் பயன்படுத்தும் வேறுவழி 'வல்லுநர் மதிப்புக் கருத்தேற்றம்' (expert prestige suggest on). இங்கு இவர்கள் இந்திய ஜனாதிபதி, அவர்களின் செய்பொருளுக்கு நற் சான்றிதழ் வழங்கியுள்ளார் அல்லது தனிப்பற்றுக்குரிய நடிகர், அவர்களின் செய்பொருளைப் பயன்படுத்துவதோடு அதனைப் புகழ் கின்றார் அல்லது ஒரு புகழ்ச்சி வாய்ந்த வேதியியல் ஆய்வுக்கூடம், அவர்களின் செய்பொருளைச் சோதனை செய்து நற்சான்றிதழ் வழங்கியுள்ளது என்று கூறுவார்கள். கொள்கைப்பரப்பலிலும் நாம் இவ்விரண்டு வகையான மதிப்புக் கருத்தேற்றங்களை மக்களைத் தூண்டப் பயன்படுத்துகின்றோம்.

டன்கர் (5) உணவு தேர்ந்தெடுத்தலில் சமூகக் கருத்தேற் றத்தின் விளைவை நிருணயிக்க ஒரு சோதனையை நடத்தினார். போற்றுதற்குரியவர் உணவு என்று கொடுத்தால், அது விரும்பி ஏற்றுக்கொள்ளப்படுவதைக் கண்டார். இங்குப் பொதுவாக, மேற்கொள்வது என்னவென்றால் மதிப்புக் கருத்தேற்றத்தால் ஒரு பொருள் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படுகின்றது என்பதாகும். டங்கரைப் பொறுத்தவரை மதிப்புக் கருத்தேற்றத்தால் ஒரு பொருள் விரும்பப்படுமானால் அப் பொருளின் மீதுள்ள கருத்தும்

மாறுபடும். இப்பொழுது பொருள் வேறுவிதமாகப் பார்க்கப் படுகின்றது. மேலும், இந்தக் கருத்து மாற்றமே இதனை மதிப்பீடு செய்வதில் அல்லது தீர்வுகாணுவதில் மாற்றத்தை ஏற்படுத்து கின்றது. சில ஆண்டுகளுக்கு முன்னர்வரை இந்தியாவில் தக்காளி நல்ல காய்கறி வகை அல்லது பழவகை என்று எண்ணப்படவில்லை. அது சமையலுக்குப் பயன்படுத்தப்படவுமில்லை; பச்சையாகவும் பயன்படுத்தப்படவில்லை. ஆனால், இன்று நாடு முழுவதும் தக்காளியைப் பயன்படுத்துகின்றார்கள். மக்கள் இப்பொழுது தக்காளியை உணவாகக் கொள்வதன் நன்மையையும், அதன் சுவையையும் மிகவும் புகழ்கின்றார்கள். இங்கு நாம் வல்லுநர் மதிப்பின் முக்கியத்துவமும் (expert prestige value), குழு மதிப்பின் முக்கியத்துவமும் செயலாற்றுவதை அறிகின்றோம். உணவு வல்லுநர்கள் தக்காளியின் முக்கியத்துவத்தைப் பற்றிச் சொல்வதனாலும், மருத்துவர்கள் தக்காளியின் பயனைக் கூறுவதாலும், பெரும்பாலான மக்கள் பயன்படுத்தத் துவங்கியதாலும், பெரிய அளவில் பயன்படுத்துவதாலும் மக்கள் இதனை மிக அதிகமாகப் பயன்படுத்தினார்கள். மேலும், இன்னொரு காரணம், தாய் குழந்தைக்குத் தக்காளிச்சாறு கொடுத்ததே. இவ்வாறு புதிய தலைமுறை வேறுவிதமாக வளர்க்கப்பட்டது. ஆக, திட்டமான ஓர் உணவைப் பல காரணங்களினால் தேர்ந்தெடுக்கின்றோம். நாம் வேறு ஒரு விளக்கத்தையும் எடுத்துக்கொள்வோம். இந்தியாவில் மதிப்புள்ள தானியங்களாக அரிசியும், கோதுமையும் உள்ளன. தென் மாநிலங்களில், கிராமங்களில் கேழ்வரகு, சோளம் முதலியவற்றை உணவாகப் பயன்படுத்தினார்கள். அவர்கள் நகரத்திற்குக் குடியேறினால் அல்லது கல்வியறிவு பெற்றுக் காலக்கோலம் கொள்வார்களானால், அவர்கள் நகரத்தினரைப் போல வாழவும், அரிசியை உணவாகக் கொள்ளவும் முயலுகிறார்கள். அவர்கள் முன்னர் பயன்படுத்தியதும், உண்டு வளர்ந்ததுமான உணவு வகைகளைப் பயன்படுத்தவும் வெட்கப்படுகின்றார்கள். அடுத்த தலைமுறையில், குடும்பத்தில் உணவு முறையில் உள்ள மாற்றத்தின் காரணமாகக் குழந்தைகள் அரிசி உணவில் பழக்கப்பட்டமையால் அங்கு அரிசி உணவை விரும்புவதற்கும் கேழ்வரகு உணவை விரும்புவதற்கும் எந்தவிதமான முரண்பாடும் இராது. மேலும், இங்கு நாம் குழுக் கருத்தேற்றத்தின் தூண்டுதலைக் காண்கின்றோம். நகரமாந்தரைப் போலக் குறிப்பாகத் தன்மதிப்புள்ள குழுவில் இதனைக் காண்கின்றோம். இப்பொழுது சிக்கல் என்னவென்றால், குழுக் கருத்தேற்றத்தால் அல்லது வல்லுநர் கருத்தேற்றத்தால் தனியன் தனது நம்பிக்கையையும், மனப்பான்மையையும் மாற்றிக்கொள்கின்றானா என்பதுதான். டங்கரின் கருத்துப்படி பொருள் எவ்வாறு

கருதுகின்றோமோ அதாவது அப்பொருள் பெற்ற பயன்மதிப்பிற் கேற்ப இம்மாற்றம் நிகழ்கின்றது. பொருளைப்பற்றிய கருத்து அல்லது எண்ணம் அப் பொருள் ஒரு புதிய தொடர்பில் கொடுக் கப்படுவதனால் மாற்றியமைக்கப்படுகின்றது. இங்கு மனநிலையில் ஒரு மாற்றம் ஏற்படுகின்றது. அச் சூழ்நிலை மாறுமானால் நோக்கி லும் ஒரு மாறுபாடு உண்டாகின்றது. அதாவது, மதிப்புக் கருத் தேற்றம் இங்குத் தோற்றம், கற்றல், எண்ணல் ஆகிய முறை களின் அடிப்படையில் செயல்படுகின்றது.

விளங்குவதற்காக நாம் இன்னொரு சோதனையையும் கூறலாம். ஆசும் அவருடைய கூட்டாளிகளும் (6) பல தொழில்களை மதிப்பிடுவதில் குழு மதிப்புக் கருத்தேற்றம் எவ்வாறு மாற்றத்தை ஏற்படுத்துகின்றது என்று காண முயன்றனர். கணக்கர் துறை, வாணிகம், பல் மருத்துவம், பொறியியல், பத்திரிகைத் தொழில், சட்டம், மருத்துவம், இசை, அரசியல் ஆகிய பத்துத் தொழில் களை மதிப்பிடுமாறு நான்கு குழு மாணவர்களை அவர் கேட்டுக் கொண்டார். நுண்ணறிவுத் தேவை, சமூகத்திற்குப் பயன், நேர்மைத் தன்மை, குணத்தின் மாறுத்திடத்தன்மை ஆகிய குண நலன்களின் அடிப்படையில் தரமிடுமாறு கேட்டுக்கொண்டார். ஓர் ஆராய்ச்சிக் குழுவிற்கு முன்னர் பரிசோதனையில் ஈடுபட்ட 500 கல்லூரி மாணவர்களும் அரசியலை ஐந்து குண நலன்களிலும் மிகவும் உயர்வாகத் தரமிட்டார்கள் என்று சொல்லப்பட்டது. இரண்டாம் பரிசோதனைக் குழுவிற்கு முன்பு தரமிட்ட 500 மாணவர்களும் ஐந்து குண நலன்களிலும் அரசியலைக் கடைசியாகத் தரமிட்டார்கள் என்று சொல்லப்பட்டது. மூன்றும் பரிசோதனைக் குழுவிற்கு முன்பு தரமிட்ட 500 மாணவர்களும் அரசியலைச் சமூகப் பயனில் மிக உயர்வாகவும், நுண்ணறிவுத் தேவையிலும் மற்றக் குண நலன்களிலும் கடைசியாகவும் தரமிட்டார்கள் என்றும் சொல்லப்பட்டது. பின் நான்காம் குழு கட்டுப்படுத்தப்பட்ட குழுவாக அவர்கள், மதிப்பீடு எவ்விதத் தூண்டுதல்களும் இன்றித் தரமிட்டார்கள். கட்டுப்படுத்தப்பட்ட குழுவினர் அரசிய லார்களை நுண்ணறிவு, சமூகப் பயன் ஆகியவற்றிற்கு 8ஆவது வரிசைப்படியை (rank) அளித்தார்கள் என்று காணப்பட்டது. மாறாக, முதல் பரிசோதனைக் குழு அரசியலார்கள் நுண்ணறிவு, சமூகப் பயன் ஆகிவற்றிற்கு எட்டாவது இடத்திலிருந்து நான்காம் இடத்திற்கு உயர்த்தினார்கள். அரசியலை ஐந்து குண நலன்களிலும் கடைசியாகப் பெரும்பாலானோர் வரிசைப்படுத்தியுள்ளார் என்று சொல்லப்பட்ட இரண்டாம் குழு, அரசியலார்களைக் கட்டுப் படுத்தப்பட்ட குழு கொடுத்த 8ஆம் இடத்திலிருந்து நுண்ணறி விற்கு 9ஆம் இடத்திற்கும், 8.5 எனச் சமூகப் பயனுக்கும்

வரிசைப்படுத்தினார்கள். அரசியல் சமூகப் பயனுடைமையில் உயர் வாகவும், நுண்ணறிவுடைமையில் கடைசியாகவும் வரிசைப்படுத் தியுள்ளனர் என்று சொல்லப்பட்ட மூன்றும் சோதனைக் குழு அரசியலைச் சமூகப்பயனுடைமையில் 8ஆம் வரிசைப்படியிலிருந்து (கட்டுப்படுத்தப்பட்ட குழுவால் கொடுக்கப்பட்ட வரிசைப்படி) 5ஆம் வரிசைப்படிக்கும், நுண்ணறிவுடைமையில் 8ஆம் வரிசைப் படியிலிருந்து (கட்டுப்படுத்தப்பட்ட குழுவால் கொடுக்கப்பட்ட வரிசைப்படி) 9ஆம் வரிசைப்படிக்குத் தாழ்த்தினர். ஆக, இச் சோதனையிலுள்ள பல குழுக்களும் அதற்குக் கொடுக்கப்பட்ட பெரும்பாலோர் மதிப்புக் கருத்தேற்றத்திற்கேற்ப அரசியலார்களை வரிசைப்படுத்தினர். பின் பரிசோதனையாளர்கள் ஆட்படுநரை, 'நீங்கள் எவ்வகையான அரசியலார் கொண்ட குழு அல்லது குழுக்களைத் தீர்ப்பளிக்கும்போது மனத்தில் கொண்டிருந்தீர்கள்?' என்று கேட்டார்கள். இவ் வினவுக்கு அவர்களின் விடையிலிருந்து அரசியல் என்னும் சொல்லுக்கு வேறுவேறு குழுவினர், வெவ் வேறான பொருள் கொண்டார்கள் என்று தெரிந்தது. அதாவது, இந் நான்கு குழுக்களும் ஓரே வகையான பொருளை மதிப்பீடு செய்யவில்லை. சான்றாக, முதல் சோதனைக் குழுவினர் கூறியது என்னவென்றால், தேசிய அரசியல், ராஜதந்திரி, அரசியல் ஒரு தொழில் என்று எண்ணியதாகக் கூறினர். இரண்டாம் பரிசோ தனைக் குழுவினர் அரசியலைப்பற்றியும், அருகிலுள்ள அரசிய லார்களையும் மனத்தில் கொண்டதாகக் கூறினார்கள். ஆக, அரசியல் என்னும் சொல்லின் பொருளைக் குழுவின் மதிப்புக் கருத்தேற்றத் திற்கு ஏற்பத் தனியன்கள் மாற்றிக்கொண்டார்கள். பின்பு பரிசோதனையாளர்கள் ஆட்பட்டோரைப் பேட்டி காணும்போது அவர்கள் பெரும்பாலோர் மதிப்புக் கருத்தேற்றத்தால் தூண்டப் பட்டார்களா? என்று கேட்டார்கள். அவர்கள் கருத்தேற்றத் தால் பாதிக்கப்பட்டவர்களாக இருந்தும், பலர் தரங்களை வரிசைப்படுத்துவதற்குமுன் கொடுக்கப்பட்ட பெரும்பாலோர் மதிப்புக் கருத்தேற்றத்தினால் தொழில்களைத் தரமிடுவதில் பாதிக்கப்படவில்லை என்று கூறினார்கள். ஆய்வாளர்கள் இஃது ஆட்படுபவர்கள் பொய் சொல்வதனால் அன்று. ஆனால், அவர்களின் துலங்கல்களில் மாற்றம் நிகழ்வதைப்பற்றி அவர்கள் அறியவில்லை என்பதாலேயே மாற்றம் அடைந்தமையால், அதன் பயன் மதிப்பு களும் மாறின. மேலும், மதிப்புக் கருத்தேற்றம் உறுதியாக்கப் பட்டமையால் அவர்களின் கருத்தில் மாற்றம் நிகழ்ந்தமையை அறியவில்லை.

பெற்றோர்களை எல்லாத் துறைகளிலும் வல்லுநர் என்று குழந்தை எண்ணுகின்றது. எனவே, பெற்றோர்கள் என்ன சொன்

ஞலும் அதனை பேருண்மையாகக் குழந்தைகள் கொள்கிருர்கள். இங்குதான் நாம் வல்லுநர் மதிப்புக் கருத்தேற்றம் சமூகக் காரணியாகக் கொள்கைபரப்பலில் மிகப் பெரும் செல்வாக்குக் கொண்டுள்ளதைக் காணுகின்றேம். இதேபோன்று குழந்தை சமூகவயமாக்கலின் மூலம், குழுப் பொது மாதிரியை ஏற்று, அதனுல் குழு எவற்றையெல்லாம் ஏற்கின்றதோ அவற்றையெல்லாம் குழந்தையும் ஏற்கின்றது. இது பெரும்பாலோர் மதிப்புக் கருத்தேற்றத்தின் அடிப்படையில் உள்ளது. ஆனுல், நன்கு அமைக்கப்பட்ட நம்பிக்கை முறையின் மூலமே, இக் கருத்தேற்றங்கள் சரியான பகுப்பாய்வு முறையினுல்தான் தனியன்கள் வசப்படுத்தப்படுகின்ருர்கள் என்பதனை உணர்தல் வேண்டும். இம் மாதிரியான சூழ்நிலைகளில் ஒரு வல்லுநரின் கருத்து அவர் எத் துறையில் வல்லுநராகக் கருதப்படுகின்ருரோ அதனைப் பொறுத்தே அவருடைய கருத்து மதிப்பீடு செய்யப்படும். அதே போன்று பெரும்பான்மையோரின் கருத்தும் ஒரு குறிப்பிட்ட அமைப்பில் குழுப் பொது மாதிரியுடன் தொடர்பு கொண்டால்தான் மதிக்கப்படும். இதற்கு மாருக, தனியன்களின் நம்பிக்கைத் திட்டம் தெளிவில்லாமல் அமைக்கப்படுவதனுல், மூலத்தைப் பொறுத்தவரை குறிப்பிட்ட வேறுபாடு மதிப்பீட்டில் இராது. சான்ருகக் காந்தியடிகளின் போதனைகள் நாட்டினமைப்பிலும், மத அமைப்பிலும் உயர்வாகக் கருதப்பட்டதோடல்லாமல் மற்ற ஒவ்வொரு செயலிலும் அதிகமான மக்கள் கந்தியடிகளின் கருத்துகளை உயர்வாக, சிறப்பாகக் கருதினுர்கள். சமூக வாழ்வின் குறைபாடுகளில் இது முக்கியமானதொன்ருகும். கொள்கைபரப்பலானது தவருன வழிகளில் செலுத்தாமல் இருக்க, தனியன்கள் அதிகமான ஆய்வு மனப்பான்மையைக் கொண்டிருக்க வேண்டும். இதனுல் வல்லுநர்களின் கருத்தை ஏற்று அவர்களின் சொந்த வழியில் அதனை மதிப்பீடு செய்வார்கள். இருந்த போதிலும், தலைவனின் சொற்களை எல்லாத் துறைகளிலும் ஏற்பதென்பது மக்களின் பொதுவான போக்காக இருக்கின்றது. சான்ருக, சோவியத் நாட்டில் குருச்சேவ், ஸ்டாலினைப்பற்றிய வரலாற்றை எடுத்துக்காட்டும் வரை, ஸ்டாலினை நாட்டுத் தலைவராக மட்டுமல்லாமல் ஒரு சிந்தனையாளராகவும், திறனுய்வாளராகவும், விஞ்ஞானியாகவும் மதித்தனர். இதே போன்ற நிலை இட்லருக்கும் ஜெர்மனியில் ஏற்பட்டது. மதித்து ஏற்றுக்கொள்ளப்பட்ட தலைவரின் பெயரில் இது போன்ற புனை கதைகள் சொல்லுவதனுல் கொள்கை பரப்பலானது மிகவும் வெற்றிகரமானதாகின்றது. குடும்பத்திலும், பள்ளியிலும் சமூக வயமாக்கப்படுதல், மக்களை, ஒரு வல்லுநர் எத் துறையில் வல்லுநராக இருக்கின்ருரோ அத் துறைக் கருத்திற்கே மதிப்புக் கொடுத்து மற்றத் துறைகளுக்கும், அதனைப் பொது

வாகக் கொள்ளாமல் வழிகாட்ட வேண்டும். ஒரு குறிப்பிட்ட சிறப்பின் காரணமாக மதிக்கப்படுபவரின் சொற்களை ஏற்றுக் கொள்வதும், தள்ளிவிடுவதுமான உயர்ந்த திறனாய்வுக்குக் கல்வியின் மூலமாகவே மக்களைக் கொண்டு செல்ல முடியும்.

பெரும்பான்மையோர் கருத்தைப் பொறுத்தவரை இது போன்றே ஆய்வுக் குறிப்புகளைப் பெறலாம். தனியன்கள் ஒரு குறிப்பிட்ட குழுவைச் சேர்ந்தவர்கள் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. மேலும், குழுப் பொது மாதிரிகள் பின்பற்றுதல் வேண்டும். ஆனால், நம்முடைய போக்கானது குழுப் பொது மாதிரியைப் பொதுவானதாக்கிக் குழுப் பொது மாதிரியைத் தேவையான, தேவை இல்லாத இடங்களிலும்கூட ஏற்கும் தன்மையைப் பெற்றுள்ளோம். சான்ருக, குறிப்பிடத்தக்க சிறப்புக் கூறுகளில் குழு வாழ்வைப் பொறுத்தவரை குழு என்ன நம்புகின்றதோ அதுவே மிகவும் முக்கியமானதாக அமைகின்றது. ஆனல், தனியன் எல்லா மாறுதல்களையும், எதிர்ப்பானுல் குழுப் பொது மாதிரிக்கு எதிராக எக் கூற்றிலாவது மாறுபட்டால் அத் தனியன் ஆய்வு முறையில் நடக்கவில்லை என்ருகும். அறிவியலிலும், தொழில் நுணுக்கத் துறையிலும் முன்னேற்றம் ஏற்பட்டிருப்பினும், விஞ்ஞான காலத்திற்கு முந்திய முறையை வேளாண்மை, வீடு கட்டுவது, பாதையமைப்பது, உணவு சமைப்பது முதலியவற்றில் பயன்படுத்துவது பெரும்பான்மையினரின் கருத்துக்குத் தவருன மதிப்பை அளிப்பதனுலேயே ஆகும். இங்குதான் வல்லுநர் புதிய கருத்துகளின் மூலம், புதிய விளைவுகளைக் கொண்டுவருவதனுல் குழுவின் பெரும்பான்மைக் கருத்தை முழுவதுமாக மாற்ற முயல்கின்ருர்.

காபின் (Coffin) (7) 'கருத்தேற்றம், கருத்தேற்கும் தன்மை மேலும், இச் சிக்கல்களைப்பற்றிய பரிசோதனை ஆய்வுகளைச் சுருக்கிச் கூறும்போது, பெரும்பான்மையோர் கருத்தின் பயன் அல்லது வல்லுநர் கருத்தானது, குழு ஆராயும் சிக்கல்களைச் சார்ந்து உள்ளது' என்று முடிவு கூறுகின்ருர். பிரச்சினை சமூகப் பொது மாதிரிக்கு ஏற்ப இருக்குமாயின் பெரும்பான்மையினரின் கருத்துக் குழுவை மிகவும் தன் வயப்படுத்துவதாக இருக்கும். மாருக, பிரச்சினை தனியனின் சொந்தப் பிரச்சினையுடன் அல்லது சூழ்நிலையுடன், சமூகப் பொது மாதிரியைப் பாதிக்காமலும், அதனை உட்கொள்ளாமலும் இருக்குமானுல் வல்லுநர் மதிப்பு மிகவும் செல்வாக்கு உடையதாக இருக்கும். சான்ருக, பொறியியல் துறையில் வல்லுநர் கருத்து, பெரும்பான்மையினரின் கருத்தைவிட திடமாகப் பங்குகொள்ளும். ஆனல், நம் நாட்டைப் போன்ற நாடுகளில் எது சமூகப் பொது மாதிரி என்றும்,

எது நுண்முறையைச் சார்ந்தது என்றும் வரையறுப்பது மிகவும் கடினமானதாகும். இந்தியாவில், வாழும் வழிகளின் பல கூறுகள் சமூகப் பொது மாதிரியாலேயே பெறப்படுகின்றன என்று கொள்ளலாம். இதுவே, ஏன்? வல்லுநர் கருத்து மதிக்கப்படுவதில்லை அல்லது பின்பற்றப்படுவதில்லை என்பதற்குக் காரணமாகும். சான்ருக, இந்திய விவசாயி கையாளும் முறைகள் மிகவும் முற்காலத்தவையாகும். இம் முறைகள் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் உருவாக்கப்பட்டவை. ஒரு வல்லுநர் ஒரு கிராமத்திற்குச் செல்வாராஞல் அவருடைய கருத்துப் பயன் தராது. ஏனென்ருல் வேளாண்மையில் சமூகப் பொதுமாதிரியானது வல்லுநரின் கருத்தைக் காட்டிலும் வலிமை வாய்ந்ததாக இருப்பதால் நுண்முறையானது பயன்பெருது. இதுவே 17, 18ஆம் நூற்ருண்டுகளில் ஐரோப்பிய நாடுகளில் இருந்த நிலையாகும். 19, 20ஆம் நூற்ருண்டுகளில்தான் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் அறிவியலிலும், பொறியியலிலும் ஏற்பட்ட முன்னேற்றத்தின் காரணமாக வல்லுநரின் கருத்து மதிக்கப்பட்டது. இதில் இந்திய விவசாயிகள் மிகவும் பிடிவாதமுடையவர்களாய் உள்ளனர். கொள்கைபரப்பலின் நுண்முறைகளால் மட்டுமே விஞ்ஞான முறைக்கு முற்பட்ட முறைகளிலிருந்து விஞ்ஞான முறைக்கு விவசாயிகளை மாற்ற முயல்வது பயனளிக்காது. பரிசோதனை முறைகளின் மூலம் பழைய விவசாய முறையில் பெற்ற விளைச்சலுக்கும், புதிய முறையில் பெற்ற விளைச்சலுக்கும் உள்ள வேறுபாட்டைக் காட்டிஞல்தான் அவர்களிடையே நம்பிக்கையை ஊட்ட முடியும். அதன் பிறகே அவர்கள் பழைய வேளாண்மைச் சமூக நோக்கிலிருந்து வல்லுநர் கருத்து நோக்கிற்கு மாறி, வல்லுநர் கொடுத்த கருத்தைப் பின்பற்றுவார்கள். வெறும் பேச்சை எவ்வளவு திறனேடு பேசிஞலும் அஃது அவர்களை நம்பும்படி செய்யாது. அதனை மெய்ப்பித்துக்காட்டிஞல்தான் அவர்களிடையே நம்பிக்கையை ஊட்ட முடியும்.

1953-54-ல் 4 இலட்சம் ஏக்கர்களில்தான் ஜப்பானிய விவசாய முறை பயன்படுத்தப்பட்டது, ஆஞல், 1957-58-ல் இது 40 இலட்சம் ஏக்கர்களாக உயர்ந்துள்ளது என்று மத்திய அரசின் விவசாய அமைச்சர் (8) வலியுறுத்திஞர். பழைய முறை சராசரி விளைச்சல் ஏக்கருக்கு 20.14 மணங்கு நெல் மட்டுமே கொடுக்க, ஜப்பானிய முறை ஏக்கருக்கு 34 மணங்கு கொடுத்தது என்றும் உறுதிபடுத்தியுள்ளார். இவ்வமைச்சர் 1961ஆம் ஆண்டிற்குள் அதாவது இரண்டாம் ஐந்தாண்டு திட்டத்தின் இறுதியில் ஜப்பானிய முறையில் 80 இலட்சம் ஏக்கர்களைப் பயிர் செய்ய முடியும் என்று நம்புகின்ருர். ஆக, இந்திய விவசாயி புதிய முறை

அதிகமான விளைச்சலைக் கொடுக்கும் என்று மெய்ப்பிக்கப்பட்டால் புதிய முறைக்கு மாறத் தயாராக உள்ளார்.

எனவே பெரும்பான்மையினர் மதிப்பாக இருந்தாலும் அல்லது வல்லுநர் மதிப்பாக இருந்தாலும் முதலில் நோக்கப்படுகின்ற பொருளின் தன்மையை மாற்றுவதன் மூலம் கருத்தேற்றமானது மிகவும் பயனுள்ள வகையில் செயலாற்றுமாறு செய்யலாம். எனென்றால் பொருளானது வேறு வழியில் பார்க்கப்படுவதனல் கொடுக்கப்பட்ட கருத்தேற்றம் ஏற்படுகின்றது. மதிப்புக் கருத்தேற்றம் செய்பவருடன் ஒரு தனியன் சில சமயங்களில் ஒத்துப்போக வேண்டிய அவசியம் ஏற்படுவதனல், மதிப்புக் கருத்தேற்றம் ஏற்கப்படுகின்றது. கருத்தேற்றம் செய்பவருடன் ஒரு தனியன் ஒத்துச் செல்வதனல் இது நிகழ்கிறது.

இதுவே இந்தியாவில் இப்பொழுது மிகவும் இன்றியமையாத காரணியாக இருக்கின்றது. காந்தியடிகளுடனும் அவருடைய கருத்துகளுடனும் பெருந்தலைர்கள் ஒத்து உணர்ந்ததனல்தான் அவர் நாட்டின் பல சமூகப் பழக்கங்களில் பெரும் மாறுதல்களைக் கொண்டு வர முடிந்தது. நாம் இச் சிக்கல்களைப்பற்றித் தலைவர் (அத்தியாயம் 19) என்ற தலைப்பை மேற்கொள்ளும்போது வெகுவாக விவாதிப்போம்.

## கொள்கைபரப்பலின் நுண்முறைகள்
## (Techniques of propaganda)

இப்பொழுது நாம் கொள்கைபரப்பலில் பயன்படுத்திய நுண் முறைகளை ஒருங்கே காண்போம். இவற்றை இவ்வத்தியாயத்தின் முற்பகுதிகளில் விவாதித்தோம். இவற்றையெல்லாம் ஒரு பிரிவிற்குள் கொண்டு வருவோமாஞல் தெளிவாக ஆராயலாம்.

(a) ஆற்றல் வாய்ந்த கொள்கைபரப்பலின் சிறந்தவர் குழுவிற்கு என்ன தேவையோ அதனுடன் கொள்கைபரப்பலைச் சேர்த்துக்கொள்வார். இதுவே, பயனுறுதியுள்ள கொள்கைபரப்பலின் ஓர் இன்றியமையாத தன்மையாகும். கொள்கைபரப்பில் எவ்வளவு நன்ருகத் திட்டமிடப்பட்டிருந்தாலும் அது மக்களின் தேவையுடன் தொடர்பற்று இருக்குமாயின் அதற்குப் பயன்மதிப்பின்றிப் போகும். 1950ஆம் ஆண்டுகளின் பிற்பகுதியில் கேரளா போன்ற சில மாநிலங்களில் கம்யூனிஸ்ட் கட்சியினர்

**(Communist Party)** மேற்கொண்ட நுண்முறையால் வெற்றி பெற்றதை ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். கேரளா மாநிலத்தில் மிக அதிகமான மக்கள் வாழ்வதனுலும், பொருளாதார நிலை அங்கு மிகவும் திருப்தியற்று இருப்பதனுலும், கற்ருர் பலரும் வேலைவாய்ப்பின்றி இருப்பதனுலும் அங்கு எப்பொழுதும் பூசல்கள் இருந்து வருகின்றன. மற்ற மாநிலங்களில் அதே நுண்முறையினுல் மக்களிடம் எவ்வித எண்ணங்களையும் ஏற்படுத்த முடியவில்லை, ஏனென்ருல், பிற மாநிலங்களிலும் பொருளாதார நிலை திருப்தியற்று இருப்பினும், இடர் நிறைந்ததாக இல்லை. மார்க்ஸின் (marx) நுண்முறைகளின்படி கம்யூனிசக் கொள்கையானது தொழில் துறையில் சுரண்டல் இருக்குமிடங்களில் செழிப்புடையதாக இருக்கின்றது என்பதனை நாம் கூறலாம். இருப்பினும், 1940, 1950ஆம் ஆண்டுகளில் இந்தியத் தொழிலாளர்களில், தொழில் துறைத் தொழிலாளர்களே மிக அதிகமான ஊதியம் அளிக்கப்பட்டார்கள். எனவே, பம்பாய், அகமதாபாத் போன்ற தொழில் வளமுள்ள இடங்களில், பிற இடங்களில் உள்ள நிலமற்ற தொழிலாளர்களிடம் தமது கொள்கைபரப்பல் நுண்முறையால் கம்யூனிஸ்ட் கட்சியினர் அதிக வெற்றியைப் பெற்றது போல் வெற்றிபெற இயலவில்லை. ஒரு திறம் வாய்ந்த கொள்கையைப் பரப்புபவர் மக்களின் தேவைகள், குழுவின் பெரும்பான்மையோரால் மனமுறிவுகள் முதலியவற்றை முதலில் அறிந்து கொள்ள வேண்டும். பெரும்பான்மையினரிடம் மனமுறிவுகள் இல்லையானுல் எவ்வளவு நன்கு அமைக்கப்பட்ட எந்த நுண்முறையும் முற்றிலும் தோல்வியுறும். இவ்வாருக, கொள்கைபரப்பலின் வெற்றி, மக்களின் தேவை, மனவெழுச்சி இவற்றைப் பொறுத்து இருக்கின்றது.

(b) இரண்டாவதாக, கொள்கைபரப்பலின் வெற்றி, சூழ்நிலையின் நோக்கங்களைப் பொறுத்தும் உள்ளது. அதாவது, மக்களின் நம்பிக்கை தெளிவாக வரையறுக்கப்பட்டிருந்தால், கருத்தேற்றங்கள் பயனளியா. மக்கள் கலக்கமான சூழ்நிலையில் இருந்து, அதனை அவர்கள் நன்கு புரிந்துகொள்ளாமல் இருப்பார்களானுல், கொள்கைபரப்புபவர் வெற்றிகரமாகத் தமது சொந்த நோக்கங்களுக்கு அச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொள்வார். விரும்பத்தகாத சமூக விளைவுகளை விளைவிக்கும் கொள்கைபரப்பல், கட்டுப்பாடில்லாத வெளியீடுகள் இருப்பின் வெற்றிபெருது. ஒரே செய்தித்தாளில் பிரச்சினையின் பல கருத்துகளைப் பிரசுரித்தல், தவருன கொள்கைபரப்பல் வெற்றி காண முடியாது. இவ்வாறு ஒரு பிரச்சினையின் பல கருத்துகளை மக்கள் படிப்பார்களே

யானால், அதன் தன்மையை நன்கு அறிய முடியும். இதன் புய ளுகச் சுரண்டல்கள் நிகழ இயலாது.

(c) நடைமுறையிலுள்ள மக்களது நம்பிக்கை அமைப்பிற்கு மாருகக் கொள்கைபரப்பல் இருப்பதைவிட குழு நம்பிக்கை அமைப்பதற்கேற்ப இருக்குமானுல் அஃது உடனே ஏற்றுக்கொள் ளப்படும். எனவே, ஒரு நல்ல கொள்கைபரப்புபவர் முதலில் குழு என்னென்ன நம்பிக்கைகள், மனப்பான்மைகள் ஆகியவற்றைக் கொண்டுள்ளன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். மக்களின் வாழ்க்கைத் தத்துவங்களே (philosophy) அறிந்துகொண்டால்தான் அவருடைய கொள்கைபரப்பலே நடைமுறையிலுள்ள நம்பிக்கை களுக்குப் பொருந்துமாறு அமைத்துக்கொள்ள முடியும். பொது வாக, இந்தியாவில் எல்லா அரசியல் கட்சியினரும், கம்யூனிஸ்ட் கட்சியினர் உட்பட கதர் ஆடையை அணிவார்கள். இஃது ஏனென் முல், கடந்த 40 ஆண்டுகளாக அதாவது, 1920-ல் இருந்து கதர் என்பது உண்மைக்கும், நாட்டுணர்ச்சிக்கும் தொடர்பு கொண்டுள்ளது. ஆகவே, பல்வேறு அரசியல் கட்சியினரும் கதர் அணிவதன் மூலம் விரைவாகவும், எளிதாகவும் மக்களே வசப் படுத்த முடியும் என்று அறிந்துள்ளார்கள். இந்தியாவில், பெரும் பாலோரின் பொருளாதாரப் பிற்போக்கை உணர்ந்ததன் அடை யாளமாகக் கதர் உள்ளது. இதேபோன்று இந்தியாவில், பிற கூப்பாடுகளேவிட (slogans) மதக் கூப்பாடுகளே எளிதாக வெற்றி பெறுகின்றன. 'இஸ்லாமியம் ஆபத்தில் உள்ளது' என்று சொல்லுவது முஸ்லிம் மக்களே வலுப்படுத்துவதற்கு ஒரு மிகவும் ஆற்றல் வாய்ந்த ஆயுதமாக உள்ளது. இதனேப்போலவே 1857-ல் இந்து வீரர்களே ஆங்கில அரசு பசுவின் கொழுப்பைப் பயன்படுத்துமாறு கட்டாயப்படுத்தியதனுல் தமது மதம் ஆபத்தில் உள்ளது என்று எண்ணி ஒன்று சேர்ந்தார்கள். இன்றும்கூட 'பசு கொலே'யைப்பற்றி எந்த வேண்டுதல்கள் செய் தாலும் அது மிகவும் பயன் தருவதாக இருப்பதற்குக் காரணம் இந்துக்கள் பசு கொலேயை மிகவும் வெறுக்கிருர்கள் என்பதனு லாகும். குழுவின் தேவைகளேப்பற்றிய முழுமையான தெளி வான ஆய்வு பயளளிக்கும் கொள்கைபரப்பலுக்கு மிகவும் முக்கி யமாக இருப்பதனேப் போலவே, மக்களே முழுமையாகவும், தெளி வாகவும் அறிந்துகொள்வதும் மிகவும் பயனுள்ளதாகும்.

(d) ஒரு நம்பிக்கை நேராகத் தாக்கப்படுமானுல் கொள்கை பரப்பலானது பயனற்றதாகப் போகும். எனவே, மேற்கொள்ளப் படும் நுண்முறைகளுள் 'மறைமுகம்' கொள்கைபரப்பல் என்பதும் ஒன்று. கொள்கைபரப்புபவர் நேராக நம்பிக்கையைத்

தாக்கமாட்டார். ஆனால் அதனை மறைத்து, அந்த நம்பிக்கையின் விளைவுகளைச் சுட்டிக்காட்டுவார். காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாட்டில் மக்களுக்கு, படைக்குக் கட்டாய ஆட்சேர்ப்பதற்கு மிகவும் வலிமையான எதிர்ப்பு நம்பிக்கை இருந்து வருகின்றது. அவர்கள், மக்கள் கட்டாய இராணுவப் பயிற்சியைப் பெறுவது விரும்புவதில்லை. ஆனால் பிரான்ஸ், ஜெர்மனி, பெல்ஜியம், நெதர்லாந்து ஆகிய நாடுகளில் கட்டாய இராணுவப் பயிற்சியை ஏற்பதற்குக் காரணம் அங்கு நடைமுறையில் உள்ள நம்பிக்கைக்கு அஃது உகந்ததாக உள்ளது. அமெரிக்க இளையோர்களைப் படைப்பயிற்சி பெறுவதற்கு ஆதரவளிப்பவர்கள் அமெரிக்கர்களின் அடிப்படையான நம்பிக்கையைத் தாக்கவில்லை. அவர்கள் இராணுவப் பயிற்சி சிறிது காலம் பெறுவதினாலுள்ள பயன்களை அதாவது, எவ்வாறு புதிய திறன்களை அறிவதற்கு உதவுகின்றது? எவ்வாறு கல்வி வாய்ப்புகளை விரிவுபடுத்துகின்றது? எவ்வாறு மக்களின் உடல் நலனை உயர்த்துகிறது? எவ்வாறுபொழுதுபோக்கு வசதிகளை அளிக்கின்றது? என்பனபற்றி அவர்கள் கூறுகின்றார்கள். இவற்றின் மூலமே மக்களை இராணுவப் பயிற்சிக்குச் சேர்வதில் ஆர்வம் உடையவர்களாக ஆக்கினார்கள். ஆயுள் காப்பீட்டுக் கழகம் (life insurance) காப்பீடு செய்வது குழந்தைகளின் கல்வி, மகளின் திருமணம் ஆகியவற்றிற்குப் பயன் அளிக்கிறது என்று வலியுறுத்திக் கூறுகின்றார்கள். இவ் வழியிலேயே காப்பீட்டிற்கு எதிரான நம்பிக்கையையும், அதன் விளைவையும் தவிர்க்க முடிகின்றது. மேலும், முற்காலத்தில் இந்தியாவில் நல்வாழ்வுப் பழக்கங்களை கருத்தேற்றத்தின் மூலம் புகுத்தியதைப்பற்றிக் குறிப்பிடலாம். குளிப்பது நலத்துடன் சேர்க்கப்படாமல் மதத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. குறிப்பாகத் தென்னிந்தியாவில் வெள்ளியன்று வீடு முழுவதும் தூய்மை செய்வது மதத்துடன் தொடர்பு செய்யப்பட்டுள்ளது. மக்கள் உணவு உட்கொள்வதற்கு முன் கடவுள் வணக்கம் செய்வதில் மகிழ்ச்சியடைந்தனர். வழிபாட்டு அறையினுள் சென்று வழிபடுவதற்கு முன் குளித்தல் வேண்டும் அல்லது முகம், கை, கால் இவற்றையாவது கழுவ வேண்டும். இம்மாதிரியே பெரும்பாலான நலமளிக்கும் பழக்கங்கள் ஒவ்வொரு நாளும் குழந்தைகள் இடையே உருவாக்கப்படுகின்றன.

(e) கொள்கைபரப்பலானது, நாம் முன் கண்டதுபோல், அதாவது, கருத்துகளை எவ்வித ஆய்வுமின்றி ஏற்றுக்கொள்ளும் கருத்தேற்றத்தைக் கொண்டுள்ளது. இந் நோக்கை அடைய, ஒரு சிறந்த முறை என்னவெனில், எக் குழுவிற்குக் கொடுக்கும் திட்டம் அதன் செயல்முறை முதலியவற்றை ஒரு மதிப்புள்ள

மனிதனை அக் குழுவிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டும். குழுவில் மிகவும் மதிப்புள்ள அத் தனியன், இத் திட்டத் தொடக்கத்தில் அதன் செயல்முறையில் தொடர்பு கொள்வாராஞல் அத் திட்டம் வெற்றி பெறும். மாறுக, குழுவில் மதிப்பில்லாத, மதிக்கப்படாத தனியன்களைக் கொண்டு தம் திட்டத்தை மேற்கொள்வார்களாஞல் கொள்கைபரப்பல் வெகுவான வெற்றி வாய்ப்புகளை இழந்து விடும். நாட்டு விடுதலைப் போரின்போது காங்கிரஸ் கட்சி மகத்தான வெற்றி பெற்றதற்கு முக்கியக் காரணங்களில் ஒன்றுனது, காந்தியார் ஒவ்வொரு மாநிலத்திலும், மாநகரிலும், நகரிலும் மதிப்புள்ள தலைவர்களை, ஆவலுள்ள காங்கிரசாராக்குவதில் வெற்றி கண்டதேயாகும். இதுவே, காங்கிரசு மேற்கொண்ட நிகழ்ச்சி முறைகளுக்கு மக்கள் மிக்க மகிழ்ச்சியோடும் ஊக்கத்தோடும் ஆதரவாக இருந்தற்குக் காரணமாகும்.

மேலும், மதிப்பின் மூலம் கருத்தேற்றம் செய்ய வேறு ஒரு நுண்முறையும் உள்ளது, இது பெரும்பாலான மக்கள் குழுவின் குறிக்கோள், செயல்முறை இவற்றிற்கு ஏற்ப இருக்கிறுர்கள் என்று உறுதி செய்துகொள்வதாகும். இந்தியாவின் ஒரு சில பகுதிகளில் கம்யூனிஸ்ட் கட்சியினர் எவ்வித வெற்றியைப் பெற்றுலும் அது பெரும்பான்மையோர் மதிப்பின் காரணத்திஞலேயாகும். எங்கெங்கு நிலத் தகராறு உள்ளதோ அங்கெல்லாம் கிராமம் கிராமமாகச் சென்று நிலம் இல்லாத பெரும்பாலான நிலமில்லா உழைப்பாளிகளைத் தமது கொள்கையைப் பின்பற்றுபவர்களாகச் செய்கிறுர்கள். இதஞலேயே காங்கிரசு கட்சியினர், கம்யூனிஸ்ட் கட்சியினர் ஆகியோரின் முரண்பாடு 'நிலமற்றவர்களுக்கும் நிலச்சுவான்தார்கட்குமிடையேயான முரண்பாடாக மாறியது. காங்கிரசு மதிப்புள்ள மக்களின் மதிப்பை அதாவது, நிலம் உடையவர்களின் மதிப்பைப் பெறும்போது கம்யூனிஸ்ட் கட்சியினர் நிலம் இல்லாத பெரும்பாலான பரிதாபத்திற்குரிய பொருளாதார நிலையையும் உடைய கிராம உழைப்பாளர்களின் மதிப்பைப் பெறுகின்றுர்கள். இந்த முரண்பாட்டைத் தவிர்க்க திட்டக் குழு, அமைச்சர்கள், காங்கிரசு கட்சி ஆகியன புதிய கருத்தை அதாவது கூட்டுறவுச் சங்கங்களைக் கிராமங்களில் அமைத்து, அதன் மூலம் நிலத்தில் விளைவைப் பெருக்கலாம் என்றும், குடிசைத் தொழில்களின் மூலம் வீட்டில் வருவாயைப் பெருக்கலாம் என்றும் எடுத்துக்கூறி வருகின்றுர்கள்.

பெரும்பாலோர் மதிப்பு, பெரும்பாலானவர்களைப் பின்பற்றுபவர்களாகச் செய்யும் ஒரு வலிமை பொருந்திய தூண்டுதலாக இருக்கின்றது. குழுவில் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட கட்சி

யின் சார்பாக இருக்கின்றனர்கள் என்று உறுதி செய்யப்படுகின்றது. இது மேலும் அதிகமானவர்கள் ஒரு கட்சியில் சேரத் தூண்டுவதாக இருந்து கட்சியைப் பின்பற்றுபவர்களின் எண்ணிக்கையை மிகைப்படுத்தும். இதுவே 'முரசு வண்டி' (band wagon) நுண் முறை என்றழைக்கப்படும். இந்த நுண்முறையைப் பொதுவான ஒரு சமூகச் சிக்கலுக்குப் பயன்படுத்தலாம்.

(f) கொள்கைபரப்பலை மேற்கொள்ளும் குழு மக்களுடன் தொடர்பு கொள்ளவும், பொதுக் கூட்டங்களில் பேசவும், தனியான கூட்டங்களை நடத்தவும் தகுந்த ஆட்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்டவரின் உடை, பேச்சு, மொழி, பயன்படுத்தும் பொருள்கள் முதலியன குழுவினால் ஏற்றுக்கொள்ளப் பட்டதாக இருக்க வேண்டும். 'கலங்கச் செய்யும் நாவன்மை படைத்த பேச்சாளர்களை (orator-agitators) பேசத் தேர்ந் தெடுக்க வேண்டும். புதிரான வழியில் பேசுவோர், பேசுபவரின் பேச்சு குழுப் பொது மாதிரிக்கு ஒவ்வாது இருக்குமானால் அப் பேச்சும் கொள்கைபரப்பலும் வெற்றிபெற மாட்டா. கொள்கைப் பரப்பல் நிகழ்த்துபவரைக் குழு முழுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதை நாம் மனத்தில் அடிப்படையானதாகக் கொள்ளவேண்டும். கொள்கைபரப்பலை நிகழ்த்தும் தனியன்கள் ஏற்றுக்கொள்ளப்படவில்லையானால், கொள்கைபரப்பலும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. எனவேதான் சரியான ஆட்களைத் தேர்ந்தெடுப்பதில் மிக்க கவனம் செலுத்துதல் வேண்டும். குழு உறுப்பினர்களிடையே சாதகமான மனப்பான்மையை உண்டாக் கப் பிற நுண்முறைகளும் மேற்கொள்ளப்படுகின்றன. சான்றாக ஆசிரியர்கள் ஒரு நல்ல பள்ளியை அவர்கள் வாழும் பகுதியில் நிறுவ முடியும் அல்லது திறமை வாய்ந்த மருத்துவர்கள் அவர்களின் பகுதியில் நல்ல மருத்துவ வசதிகளை உண்டாக்க முடியும். தனியன்களிடையே சாதகமான மனப்பான்மையை உண்டாக்கிய பின் அவர்கள் செய்த குழுப் பணியின் காரணமாகக் கொள்கை பரப்பலின் மற்ற நுண்முறைகளைப் பயன்படுத்தி அவர்கள் தங்களுடைய நோக்கத்தை நிறைவேற்றலாம். குறிப்பாகக் கிராமங் களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், தாழ்த்தப்பட்ட பிரிவினர் ஆகியோரிடம் கல்லாமை, அறியாமை, ஏழ்மை என்ற பிற இருப் பதனால் மற்ற நுண்முறைகளினால் மாற்ற முடியாதபொழுது அரசைப்பற்றியோ அரசியல் கட்சியைப்பற்றியோ நல்ல மனப் பான்மையை உருவாக்குவதற்கு மேற்சொன்ன சில முறைகளை மேற்கொள்ள வேண்டும்.

## திரும்பத் திரும்பக் கூறல் (Repetition)

இட்லர் தமது மியின் காம்ப் (Mein Kampf) (9) என்னும் நூலில் கொள்கைபரப்பலின் அடிப்படையான முறை வெறும் திரும்பத் திரும்பத் கூறலே என்று வற்புறுத்துகின்ருர். அவர், 'கொள்கைபரப்பல் தன்னளவில் சிறிதாகிக் கொண்டு அதனை மிகவும் வலியுறுத்தித் திரும்பத் திரும்பக் கூறவேண்டும். அதனுடன் உலகிலுள்ள பிற பல பொருள்களில் உள்ளதைப் போல நிலைத்திருத்தலே வெற்றியின் முதலும், மிகவும் முக்கிய மானதுமான நிலையாகும்' என்று எழுதுகின்ருர். இந்தத் தொடர் ஒருவகையில் சரியானதும், மற்ருெருவகையில் தவறுனதுமாகும். திரும்பத் திரும்பக் கூறுவதனுல் மட்டும் எதனைத் திரும்பத் திரும்பச் சொல்கிருர்களோ அதனை ஏற்கும்படி செய்ய எவ்வித மான மாயத்திறனும் அவனிடம் இல்லை. ஒரு பொய்யைத் திரும்பத் திரும்பக் கூறிஞல் அது நம்பப்படமாட்டாது, நம்பிய உண்மையை இதற்கு மாறுகவும் சொல்ல முடியாது. ஒரு கருத்து ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமானுல் அக் கருத்து, அக் குழுவின் ஏதாவது ஒரு தேவையைப் பூர்த்தி செய்வதாக இருக்கவேண்டும். சில குறிக்கோள்களைப் பூர்த்தி செய்யும் ஒரு பொய் ஏற்றுக் கொள்ளப்படுமானுல், பின்னர் திரும்பத் திரும்பக்கூறி அதனுடன் ஒரு கட்டுக்கதையைச் சேர்த்தால் அது நம்பப்படும். இங்குதான் இட்லரின் முறை சரியென்று ஆகின்றது. காட்டாக, இட்லரின் கட்டுக்கதையும் (myth) பெரும் பொய்யே. அதாவது, அவரே மாபெரும் வல்லமைபடைத்தவர். ஆகவே அவர் ஜெர்மானியர்கள் உலகையே வெற்றிகொள்ள போர் மேற்கொள்ள முடியும் என்ற கட்டுக்கதை பெரும் பொய். ஒரு தனியன் எவ்வளவு வல்லவனு யினும், உயர்ந்தவனுயினும் அவனை இவ்வுலகில் எதிர்க்க முடியாத ஆற்றலுடையவன் என்று எண்ணுவது குழந்தைத் தனமாகும். இப் பொய்யானது குழவி வளர்ப்புப் பள்ளியில்தான் செல்லுபடியா கும். அப்படியாஞல் மேலானதும், மிக்க நுண்ணறிவு பெற்றதான ஜெர்மனியின் மக்கள் இட்லரின் கட்டுக்கதையை ஏன் நம்பினர்? இதற்குக் காரணம் அப்பொழுது இருந்த மக்களின் தேவையும் மனமுறிவுமேயாகும். அவர்கள் முதல் உலகப் போரில் தோல்வியடைந்திருந்தனர். மேலும், வர்செய்ல்ஸ் (Versailles) உடன்படிக்கையால் மிகவும் தாழ்த்தப்பட்டனர். அவர்கள் இழந்த தன்மானத்தை ஈடுகட்ட, போர் முறையில், ஜெர்மனி யைச் சுற்றிய நாடுகளை வெற்றிபெற குறிப்பாக, பிரான்சைக் கைப்பற்ற விழைந்தனர். இட்லர் இதனைத் திருப்தி செய்தமை யால் அவருடைய அரசியல் கொள்கைபரப்பு அமைச்சகம் அப் பொழுது பெரு வெற்றியுடையதாக இருந்தது. கொள்கை

பரப்பலில் திரும்பத் திரும்பக் கூறுவது மிகவும் இன்றியமையாத ஒன்றேயாயினும் இதற்கு இரண்டாம் தரமான மதிப்பே இருக்கின்றது. குழுவின் தேவை, மன முறிவு இவற்றுடன் தொடர்பு கொண்டு மக்கள் குழு அக் கருத்தை ஏற்றுக்கொள்வதில்தான் அதன் தலையாய மதிப்பு இருக்கின்றது.

## பொதுமக்கள் செய்தித்தொடர்புகள்
## (Mass communications)

வெற்றி அடைகின்ற கொள்கைபரப்புபவர் பல வழிகளில் தமது செய்தியைத் திரும்பத் திரும்பக் கூறுவார். நாட்டின் பல பகுதிகளிலும் பொதுக்கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யப்படும். அக் கூட்டங்களில் பேசப்பட்ட செய்திகளை மக்கள் மறுமுறையும் படிக்கச் செய்தித்தாள்களில் அவை பதிக்கப்படும். அக் கூட்டங்களில் பேசப்பட்ட செய்திகளை மக்கள் மறுமுறையும் கேட்க அச் செய்திகள் வானொலியின் மூலமும் ஒலிபரப்பப்படும். ஒரு நிகழ்ச்சியின் முழு விவரங்களையும், செயல் முறைகளும், அந் நிகழ்ச்சி நடக்குமன்றும், மறுநாளும் பல தடவை அந் நிகழ்ச்சியைக் குறித்த நேர்முக வருணனை வானொலியின் மூலம் ஒலி பரப்பப்படலாம். சிறப்புப் பொருட்காட்சிகளை ஏற்பாடு செய்து படங்கள், கருத்துப் படங்கள், விளக்கப் படங்கள், அட்டவணை மூலம் புள்ளி விவரங்களைக் காட்டுதல், திரைப் படங்கள், செய்திக் காட்சி இவற்றின் மூலம் மக்களுக்கு விளக்கலாம். செய்தித்தாள்களில் சிறப்பு மலர் வெளியீடுகளின் மூலம் குறிப்பிட்ட பிரச்சினையின் எல்லா வகையான செய்திகளையும் எழுதும்படி செய்து புதிய கருத்தை மீண்டும் நாட்டில் உள்ளவர்களைப் படிக்கச் செய்யலாம். ஒரு குறிப்பிட்ட பிரச்சினையில் விருப்பமுள்ள வல்லுநர்களால் அச் சிக்கல்களைப்பற்றிக் கட்டுரைகள் எழுதப்படலாம். துண்டுப் பிரசுரங்களைத் தயாரித்து அதனை இலவசமாகவோ மலிவாகவோ மக்களிடையே வழங்கலாம். விலையுயர்ந்த நூல்களையும் அச்சிட்டு, குறைந்த விலையில் அதனை விற்கலாம். சிறப்பு இலக்கியங்களின் மூலம் பள்ளி மாணவர்கள், இளையோர்கள், வயது வந்தோர் ஆகியவர்களுக்குப் பொருந்துமாறு கொள்கைப்பரப்பலை மேற்கொள்ளலாம். 'சான்று முறை'யைப் ('testimonial device') பயன்படுத்தி, அதன் மூலம் தாம் மதிக்கும் ஒருவர் என்ன சொல்கின்றார் என்பதனை ஏற்கும்படியும், தாம் வெறுக்கும் ஒருவர் என்ன சொல்கிறார் என்பதை வெறுக்கும்படியும் செய்யலாம். பல, பொதுமக்கள் செய்தித் தொடர்பு முறைகளின் மூலம் விருப்பமுள்ள ஒருவர் ஒரு சமுதாயத்தை உருவாக்கவும், அதன் ஒருமைப்பாட்டை உடைக்கவும்

செய்யலாம். பொதுமக்கள் செய்தித்தொடர்பு முறையில் எவ்விதமான 'கேடும்' இல்லை என்று உணர வேண்டும். இதனைச் சமுதாயத்தின் நலனுக்கோ அதன் ஒருமைப்பாட்டைக் கெடுத்துப் புதிய சமுதாயத்தை உருவாக்கவோ இம் முறையைப் பயன்படுத்தலாம்.

## சொல்லொப்புதலும் ஒழுபடித்தன்மைகளும் (Verbal sanctions and stereotypes)

ஒருபடித்தன்மைகளைப் பயன்படுத்திக் கொள்வதே கொள்கை பரப்பலின் மற்ளெருரு மிக முக்கியமான முறையாகும். ஒரு தனியனுக்கோ குழுவிற்கோ கெட்ட பெயரைச் சூட்டி அதன் மூலம் அவர்களை எவ்வித ஆய்வுமின்றித் தள்ளும்படி செய்யலாம். போரின் போது, பகை நாடு கொடிய மக்களைக் கொண்டுள்ளது என்று சித்தரிக்கப்படுகின்றது. இம் முறையே, 'சூழ்ச்சிப் போர்' (cold war) என்ற பெயரில் இந் நாளில் பயன்படுத்தப் படுகின்றது. இருதரப்பினரும் ஒரு நாட்டினர் மற்ற நாட்டினரைக் கொடியவர் என்றும், ஐந்தாம்படை வேலையைப் பயன்படுத்து கின்றனர் என்றும் சித்தரிக்கிறார்கள். இம் முறையே எதிர்கட்சியினருக்கு எதிராக அல்லது சமூகக் குழுவிற்கு எதிராகக் கொள்கையைப் பரப்பும்போது கையாளப்படுகின்றது. ஒரு கட்சி 'முதலாளி'களையும், 'பெருநிலக்கிழார்'களையும் 'சுரண்டல்காரர்' களையும்கொண்டதென்றும், மற்றொரு கட்சி வன்மையான சமூக அரசியல் புரட்சிகளில் விருப்பங்கொண்ட எதிர்ப்பாளர்களான 'கிளர்ச்சிக்காரர்'கள், 'கம்யூனிஸ்ட்டுகள்' ஆகியவர்களைக் கொண்டதென்றும் நோக்கப்படுகிறது. இம் மாதிரியே சொற்களையும், புனைப் பெயர்களையும் பிற கட்சிகளுக்குச் சூட்டி அவர்களின் மதிப்பைக் கெடுப்பதன் மூலம் மக்களின் மனத்தில் தமக்குச் சாதகமான மனப்பான்மையை உருவாக்க முயல்கிறது.

இது போலவே கொள்கைபரப்பலானது ஒரே படித்தன்மையைப் பயன்படுத்திக் குறிப்பிட்ட குழு அல்லது தனியர்கள் இடையே சாதகமான மனப்பான்மையை உருவாக்கிக்கொள்ள முடியும். இந்தியாவில் ஒருபடித்தன்மையால் மக்கள் மனத்தில் சிறந்தவர் ஒருவரைப்பற்றி உயர்வான எண்ணத்தை உண்டாக்கு கிறார்கள். காந்தியார் ஒரு சிறந்தவர், காந்தியாரே இந்தப் பட்டப்பெயரைக் கண்டு கலவரப்பட்டிருக்கின்றார். பல முறை அவரே தாம் ஒரு எளிய மனிதரென்றும் தாம் செய்தவற்றை எந்த மனிதரும் செய்ய முடியும் என்றும் கூறியிருக்கின்றார். எனினும் 'மகாத்மா' என்று சொல்லும் பழக்கம் மறையவில்லை.

மகாத்மா என்ற சொல்லில் உள்ள சாதகமான தன்மையாலேயே இன்றும் அவரைப்பற்றிப் பேசும்போது மிகவும் மதிப்புடன் பேசுகிருர்கள். இது போன்றே காங்கிரஸ் என்னும் அரசியல் கட்சி காந்தியாரின் புகழ், கட்சியில் காந்தியாரின் பங்கு, காந்தியாரின் படத்தை வைத்திருப்பது போன்ற முறைகளின் மூலம் மக்களைக் கட்டுப்படுத்தி இந் நாட்டிலுள்ள பெரும்பாலானவர்களின் அன்பையும் மதிப்பையும் இக் கட்சி பெற்றிருக்கின்றது. 1959, 1960-ல் இந்தியக் கம்யூனிஸ்ட்டுக் கட்சி ஓர் 'அமைதி மேற்கொள்வது' என்ற ஏற்பாட்டின் மூலம் இந்தியாவின் பிரதமரான நேருவிற்குச் சமாதானக் கோட்பாடு, கூட்டுச்சேராக் கொள்கை ஆகியவற்றிற்கு ஆதரவளித்தது. இவற்றின் மூலம் சீனச் சிக்கலைச் சமாளிக்கவும் பிற்போக்காளரையும் போர் வெறி கொண்டவர்களைக் கண்டிக்கவும் பிரதமருக்கு எதிரானவரைத் தடுக்கவும் முயன்றனர்.

ஆக, சரியான முறையில் சொற்களைப் பயன்படுத்திஞல் மக்களிடம் சாதகமான அல்லது பாதகமான மனப்பான்மை, கருத்து இவற்றை எந்தக் குழுவிலும் உருவாக்க முடியும், இது தனியனே குழுவோ மேற்கொண்ட எந்தவிதமான வேலை முறைக்கும் உதவுவதாகவும் உறுதியளிப்பதாகவும் இருக்கும்.

## கூப்பாடுகள் (Slogans)

பொதுமக்களை மாற்றும் வேலை முறைகளில் கூப்பாடுகள் ஒரு செயல் முறையாகும். பெல்லாக்கு (10) கூப்பாடுகளை, 'பேச்சுச் சொற்றொடர்கள் காலத்திற்கேற்ப சுருக்கமானதாக, ஏவலைப் பயன்படுத்தி அணிவகுப்புக் கூச்சலைக் குறிப்பது' என்று வரையறுக்கின்ருர். ஆகக் கூப்பாடுகள் சுருக்கமாகவும், காலத்திற்கும், சூழ்நிலைக்கும் பொருத்தமானதாகவும் இருக்கின்றன. அவை தனியன்களைச் செயலுக்குத் தூண்டுவதில் மிகவும் வலிமையுடையதாக இருக்கின்றன. அவை மக்களின் கவனத்தைக் கவர்வதாலும், குழு மக்கள் எல்லோருமாகச் சேர்ந்து அதனைச் சொல்வதாலும் அவர்களின் மனப்பான்மைகளும், மன எழுச்சிகளும் வலுவூட்டப்படுவதனல் கூப்பாடுகள் மிகவும் வலிமையுடையனவாக இருக்கின்றன. நம்பிக்கைகளைத் திடப்படுத்தி மக்களை அக் கூப்பாடுகள் என்ன செய்யச் சொல்கின்றனவோ அதனைச் செய்ய அவர்கள் ஆய்த்தமாவார்கள். இதுவே கூப்பாட்டின் சிறப்பாகும். இது சுருக்கமாகவும், குறிப்பிட்ட சூழ்நிலைக்கு ஏற்றவாறும் இருப்பதனால் அதற்கு நன்ருக நினைவில் இருத்தும் தன்மை இருக்கின்றது.

ஆகவே, இதனைச் சிறு குழந்தையும், அனுபவமுள்ள தொழில் வல்லுநரும் மனத்தில் வைத்துக்கொள்ள முடியும். இந்தியாவில், திலகரின் 'சுதந்திரம் எனது புறப்புரிமை' என்ற கூப்பாடு, இந்த நூற்றுண்டின் முற்பகுதில் மிகவும் வலிமை உள்ளதாகவும், மக்களுக்குச் சுதந்திர உணர்ச்சியையும், அஞ்சாமையையும், தியாக உணர்வும் பிறவும் விடுதலைப் போரின் போது மிகவும் தேவையாக இருந்தமையால் மக்களை ஒருமைப்படுத்தும் வலிமை மிக்க கூப்பாடாக இருந்தது. காந்தியடிகளும் கூப்பாடுகளை உருவாக்குவதில் வல்லுநராக இருந்தார். தம்முடைய எல்லாத் திட்டங்களிலும் கூப்பாடுகளை உருவாக்கி நாடு முழுவதையும் சுறுசுறுப்பாக்கித் தமது சுதந்திரப் போரில் திடமுள்ளவர்களாக இருக்குமாறு செய்தார். 1942-ல் காந்தியடிகள் உருவாக்கிய 'வெள்ளையனே வெளியேறு', 'செய் அல்லது சாவு' (Do or Die) என்ற கூப்பாடுகளின் வலிமை வாய்ந்த தூண்டுதலை அளவுக்கு மேல் மதிப்பிட இயலாது.

கூப்பாடுகள் மக்களின் கவனத்தைக் கவரக் காரணம் அவை மோனையுடன் அமைக்கப்படுவதனுல்தான். இரண்டாவதாக, அதன் எளிமை, சுருக்கம், சந்தம் இவை நினைவு கொள்வதற்கு உதவியாக இருக்கின்றன. மூன்றுவதாக உணர்ச்சியூட்டும் பொருள் மிகப் பொதிந்த சொற்கள் கூப்பாடுகளில் பயன்படுத்தப்படுவதனுல் எவரும் அந்தக் கூப்பாட்டை அறிந்துகொள்ளவும், சொற்களில் உள்ள உணர்ச்சித் தூண்டலின் தன்மையால் தூண்டப்படுகின்றுர்கள். காட்டாக, 'சுதந்திரம், சகோதரத்துவம், சமத்துவம்' என்னும் பிரெஞ்சுப் புரட்சியின்போது எழுப்பப்பட்ட கூப்பாடு கடந்த இரண்டு நூற்றுண்டுகளாக வலிமையுடன் இருந்ததுடன், மனித சமுதாய வரலாற்றில் மிகவும் வலிமை வாய்ந்ததாக இருந்துவரும். இதே போன்று, 'வேலை செய்ய உரிமை', 'நிலமற்றோர்க்கு நிலம்', 'உழுவோருக்கு நிலம்' போன்ற பிற கூப்பாடுகள் மிகவும் பொருள் பொருந்தியதாகவும் உணர்ச்சியூட்டுவதாகவும் இருப்பதுடன் மிகவும் வலிமை வாய்ந்த தூண்டுதலையும் கொண்டுள்ளது. ஆக, கூப்பாடு குழுவில் ஒரு குறிப்பிட்ட தேவைக்குப் பொருந்துவதாக இருந்தால்தான் மதிப்புடையதாக இருக்கும். 'வேலை செய்ய உரிமை' போன்ற கூப்பாடுகள் மிக அதிகமான வேலை வாய்ப்பும், குறைந்த ஆட்களும் உள்ள நாட்டில் மதிப்புடையதாக இராது. ஒவ்வொரு தொழிற்சாலையும், அலுவலகமும் நிலையான 'வேலை காலி இல்லை' என்ற அறிக்கைப் பலகையையும், அதிகமான வேலை வாய்ப்பின்மையையும் கொண்ட இந்தியா போன்ற நாடுகளில்தான் அக் கூப்பாடு வலிமையுடையதாக இருக்கும். மேலும், மிகப் பெரிய இடப் பரப்பும், குறைந்த மக்கட்தொகையும் கொண்ட நாடுகளில்

'நிலம் நிலமில்லாதவர்களுக்கு' என்ற கூப்பாடு எவ்விதமான பயனையும் கொடாது. பயிரிடுவோர் பயிரிடும் நிலத்தின் உரிமையாளராக இல்லாத போதும், நிலத்தேவையுள்ளபோதும் இந்தக் கூப்பாடுகள் மக்களின் மனத்தைக் கவர இயலும். எனவே, வெறும் கூப்பாடுமட்டும் எவ்வளவு நன்றாகச் சொல்லமைப்புப் பெற்றிருந்தாலும், எவ்வளவு சுருக்கமாக இருப்பினும் வெற்றி பெறாது. ஒரு கூப்பாடு வெற்றி பெற வேண்டுமானால் குழுவிற்குக் கூப்பாடு போடும் தேவைகள் இருக்க வேண்டும். இந்தியாவில் அடிக்கடி நாம் கேட்கும் மற்றக் கூப்பாடுகள் 'சிபாரிசு', 'லஞ்சம்' ஆகியவையாகும். இச் சொற்களுக்கு மிகப் பெரிய குறிப்பிடத்தக்க பயன் இன்று உள்ளமைக்குக் காரணம் இந் நாட்டின் வேலையில்லாத் திண்டாடமேயாகும். மிகவும் குறைந்த வேலை வாய்ப்புகளே உள்ளன. ஒரு வேலைக்கு விளம்பரம் கொடுக்கப்பட்டால், சில நூறு பேர்களாவது மனு செய்வர். ஆனால் அதில் ஒருவர் மட்டுமே அதனைப் பெறுவார். இவ்வேலைக்கு முழுத் தகுதி பெற்றும் வேலை கிடைக்காமல் போகுமானால் கட்டயமாக அவர்களிடம் மன முறிவு இருக்கத்தான் செய்யும். வேலை வாய்ப்பு அதிகமாக்கப்பட்டாலொழிய 'சிபாரிசு' என்னும் இக் கூப்பாடு நிற்காது. ஆகவேதான் ஐந்தாண்டுத் திட்டங்களில் திட்டக் குழு வேலை வாய்ப்புகளை அதிகரிக்க மிகவும் பாடுபட்டு வருகின்றது. ஆண்டு வருவாய் 300 ரூபாய்க்கும் குறைவாக இருக்கும் ஒரு சாதாரண மனிதனுக்கும், இன்ப வாழ்வு வாழும் உயர் அரசியல் தலைவர்கள், தொழிலதிபர்கள், ஆட்சித் துறையினர் ஆகியோருக்குமிடையே மிகப் பெரும் வேறுபாடு இருப்பதனால்தான் இங்குச் செல்வர்கள் செல்வத்தை அறமற்ற வழியில் பெறுகின்றனர்கள் என்ற எண்ணம் இருந்து வருகின்றது. சாதாரமானவருக்கும், செல்வந்தர்க்கும் இடையே உள்ள இந்த இடைவெளியைப் போதிய அளவு சரி செய்யாவிடில் 'லஞ்சம்' என்னும் கூப்பாடும் ஓயாது; ஒழியாது. திட்டக் குழுவின் முக்கியமான நோக்கங்களில் இதுவும் ஒன்றாகும். இவ்வாறாக, ஒரு குழுவின் கூப்பாடு பயன் விளைவிக்க வேண்டுமானால், அஃது அக் குழு எதிர் நோக்கும் இன்றியமையாத, முக்கியச் சிக்கலைத் தீர்ப்பதாகவும், அதற்குப் பொருந்துவதாகவும் இருக்க வேண்டும். இது கூப்பாடு கூறும் தீர்வு சரியானது எனக் குறிக்காது. காட்டாக, இந்தியாவில் 'நிலமற்றோர்க்கு நிலம்' என்னும் கூப்பாடு சரியானதன்று, ஏனெனில், இங்கு மக்கள் தொகை பெரிது. இந்த முறையில் பயன்தரக்கூடியதாக எந்த வழி வகையும் செய்ய இயலாது. பொருளாதார ஏழ்மையைப் போக்க தொழில் மயமாக்குவதே வழியாகும். அதனால் சிலர், மிகச் சிலரே இந்த உறுதியற்ற பயிர்த் தொழிலை மேற்கொள்ளலாம். இருப்பினும், இந்தக்

கூப்பாடு கிராமங்களில் 'நிலத் தேவை' இருக்கும் வரை வலிமை யுடையதாகவும் வெற்றியளிப்பதாகவும் இருந்து வருகின்றது.

## தூண்டுதலும் கொள்கைபரப்பலும்
## (Motivation and propaganda)

நாம் மேற்கண்டது போலவே கொள்கைபரப்பல் என்னும் சொல்லுக்கு இரண்டு பொருள்கள் உள்ளன. இச் சொல்லுக்கு நடுநிலையான ஒரு பண்புக் குறியீடும் இருக்கின்றது. இதனை நாம் நியூகோம்பின் (11.207) வரையறையில், அதாவது 'சிலரது மக்கள் தொடர்பின் மூலம் மனப்பான்மையை வயப்படுத்தும் திட்டமிடப்பட்ட முயற்சி' என்று காண்கிறோம். இதற்கு மாறாகக் கொள்கைபரப்பல் என்பது, மக்களைத் தவறான வழிகளில் செலுத்தி நடத்தையைக் கட்டுப்படுத்தும் முயற்சியே என்றும், இதனால் கொள்கைபரப்பல் பொய்மையை எங்கும் பரப்பும் ஒரு வழிமுறை என்றும் கருதப்படுகின்றது. (இதுவரை நாம் கண்டதுபோல்) கொள்கைபரப்பலை மக்களின் அல்லது தனியனின் நலனுக்காகப் பயன்படுத்தக் கூடியதொரு நுண்முறை அல்லது குழுவையும், தனியனையும் தவறான வழியிலும், தனக்குப் பயனுள்ள வழியில் நடத்தக் கூடியதுமான தன்மையையும் பெற்றது என்று தெளிவாக நாம் அறிய வேண்டும். எனவே, கொள்கை பரப்பல் நுண்முறையில் தவறு இல்லை. ஆனால், அந்த நுண்முறை களைச் சமூக நலனுக்குப் பயன்படுத்தாது தமக்கும், தமது பயனுக் குமே பயன்படுத்தும் தனியன் அல்லது குழுவினரிடம்தான் தவறு இருக்கின்றது. இப்போது நாம் கொள்கைபரப்பல் எவ்வாறு தூண்டுதலை உட்கொண்டுள்ளது என்று காண்போம்.

ஒரு கொள்கைபரப்புபவர் (நல்லவரோ, கெட்டவரோ) குழுவின் தேவையை ஆராய வேண்டும். அவர் முறிவை உண்டாக்குவதற்குக் காரணமான தேவைகளைக் கண்டுபிடிக்க வேண்டும். இந் நிறைவேறாத தேவைகளைப் பூர்த்தி செய்யும் முயற்சிகளைக் கொள்கைபரப்பல் தன்னகத்தே கொண்டுள்ளது. எடுத்துக்காட்டாக, ஆந்திர மாநிலத்தில் தெலுங்கானா மாவட் டங்களில் கம்யூனிஸ்ட் கட்சியினர் பழைய ஐதராபாத் மாநிலத்தில் பல நூற்றாண்டுகளாக 'ஜமீன்தாரி' (zamindari) முறை மேலோங்கி இருந்ததனால் நிலமற்ற விவசாயிகள் அங்கு அதிகமாக இருந்ததைக் கண்டனர். ஆகவே, தம் கட்சியை வலுவாக்க, நில மற்றோருக்கு நிலத் தேவையைப் பூர்த்தி செய்ய நிலம் வழங்கும் திட்டங்களை வகுத்தனர். அவர்கள், நிலச்சுவான்தாரர்களிடம் வேலை செய்யும் கல்லாத, அறியாமையில் மூழ்கிக் கிடக்கும் விவ

சாயத் தொழிலாளர்களுக்கு நிலப்பட்டாக்களை வழங்கினார்கள். 1950ஆம் ஆண்டு வாக்கில் இந்தக் கட்சி மிகவும் வலிமையுடைய தாயிற்று. இப் பிரச்சினையை அறிய அப்பொழுதுதான் வினோபா பாவே தெலிங்கானாப் பகுதிக்குச் சென்றார். அவர் மக்களின் தேவைகளைக் கண்டார். அவரும் மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யத் திட்டங்களை மேற்கொண்டார். ஆனால் இத் திட்டம் நிலக் கொடை இயக்கமாக இருந்தது. அதன் மூலம் நிலமுடைய பெரு நிலச்சுவான்தார்களையும், சிறு நிலச்சுவான்தார்களையும் ஆறில் ஒரு பங்கு ($\frac{1}{6}$)சொத்தைக் கொடுக்குமாறு கேட்டு, நிலமுடையோர் தாமாக மனமுவந்து கொடுத்த நன்கொடையை நிலமில்லாத விவசாயிகட்குப் பகிர்ந்து கொடுக்க முயன்றார். இவ்வாறு கம்யூனிஸ்ட் கட்சியினரும், வினோபா பாவேயும் கொள்கைபரப்பலின் ஒரே வகையான நுண்முறையைக் கையாண்டார்கள். கம்யூனிஸ்ட் கட்சியினர் நிலச் சொந்தக்காரர்களைப்பற்றி நிலமற்ற உழைப்பாளி களிடம் வெறுப்பு உணர்ச்சியைத் தூண்டிவிட,வினோபா பாவே நிலமுள்ள செல்வர்களிடம் நிலமற்ற உழைப்பாளிகளின்பால் அன்பை உண்டாக்கினார். வெறுப்பு, சமுதாயத்தில் ஒழுங்கின் மைக்கு வழிகாட்டி அதன் விளைவாக நில உடைமையாளர்களைக் கொலைச் செய்ய தூண்டியது, ஆனால் அன்பு, சமுதாய நல அமைப் பிற்கும் சமூக முன்னேற்றத்திற்கும் வழிவகுத்தது. எனவே, மக்களிடையே ஒரு கொள்கையை அல்லது மக்களுக்கு ஏற்ற திட்டத்தை உண்டாக்கப் பயன்படுத்திய தூண்டுதல் முறை, கொள்கைபரப்பலானது மக்களின் தேவையை அறிந்ததாகவும், அவர்களின் வளர்ச்சிக்கும், மனவெழுச்சிக்கும் வேண்டுகோள் விடுப்பதாகவும் இருக்கின்றது. முடிவுகள் சமுதாயத்தை உரு வாக்குவதாகவோ தகர்த்தெறிவதாகவோ இருப்பது கொள்கை பரப்பல் முறையைப் பயன்படுத்திய தனியன்கள் அல்லது குழுக்களின் நோக்கத்தையும், தூண்டுதலையும் பொறுத்ததே யாகும்.

நாம் மேலும் ஓர் எடுத்துக்காட்டளிப்போம். இந்திய புகைவண்டித் துறை பயணச் சீட்டு இல்லாமல் பிரயாணம் செய் பவர்களைக் குறைக்கவும், அதன் மூலம் நாட்டின் வருவாயைப் பெருக்கவும் பெருமளவில் கொள்கைபரப்பலில் இப்பொழுது ஈடுபட்டுள்ளது. அவர்கள் 'புகைவண்டித் துறை நாட்டுக்குரியது', 'புகைவண்டித் துறைப் பொருள்கள் உங்களுடைய பொருள் கள்' என்னும் கூப்பாடுகளை உருவாக்கி மக்களின் தேவைக்கு ஏற்பச் செய்கிறார்கள். இதற்கு மாறாக, சிறிய நகரங்களில் இருந்து 5 அல்லது 10 மைல் தொலைவு செல்ல வேண்டிய பள்ளி மாணவர்களிடையே கொள்கைபரப்பல் செய்கின்றார்கள்.

அவர்கள் 'நீங்கள் ஏன் பயணச் சீட்டை வாங்க வேண்டும்? புகை வண்டித் துறை நம்முடையது. ஆகவே, வண்டியில் ஏறி பள்ளிக்குச் செல்லுங்கள்' என்று சொல்கின்றார்கள். எனவே, கொள்கைபரப்பலை ஆக்கும் அல்லது அழிக்கும் நோக்கங்களுக்குப் பயன்படுத்தலாம்.

கொள்கைபரப்பலின் அடிப்படையான கூறு என்னவெனில் அது மக்களின் விருப்பங்களையும், உரிமைக் கோரிக்கைகளையும் தகுந்த திட்டங்களின் மூலம் திருப்தி செய்ய முயல்வது ஆகும். இதற்கு மக்களின் மனப்பான்மை, நடத்தை இவற்றின் மீது ஆழ்ந்த விளைவுகளை உண்டாக்கும் தன்மை உள்ளது. பொது மக்கள் தொடர்பின் மூலம் மக்களின் தேவை, மனவெழுச்சி இவற்றைப் பயன்படுத்தி மக்களிடமுள்ள பேராற்றலை நம்மால் வெளிக் கொணர முடியும். இதனையே காந்தியாரும் 1920 முதல் 1948ஆம் ஆண்டு வரை மேற்கொண்டார். அவர் சமுதாயத்தில் உள்ள பேராற்றல்களைத் தம் கொள்கைபரப்பல் முறைகளின் மூலம் உணர்ச்சியற்ற இந்த நாட்டைச் சமுதாய நலத்தில் ஆர்வமும் சுதந்திர உணர்ச்சியுமுள்ள ஆக்கமுடைய நாடாக மாற்றினார். ஆகவே, வேண்டுகோள்களும், வசப்படுத்தல்களும் மனவெழுச்சிகளையும், விருப்பங்களையும் எழுப்பி அதனைத் தூண்டுவதாக இருந்தன.

சமுதாயத்தைச் சிதறியடிக்க கொள்கைபரப்பலைப் பயன்படுத்தினால், கொள்கைபரப்பலின் நுண்முறைகள் தனியன்களின் பிரித்தாளும் முயற்சிகளுக்கு மட்டும் பொருந்துமேயல்லாமல் முழு ஆளுமை அமைப்பிற்கு அது பொருந்தாது. காட்டாக, மேற்கண்ட கம்யூனிஸ்ட்டுகளின் திட்டங்கள் நிலமற்ற உழைப்பாளிகள் நிலவுடைமையாளர்கள் மீது வெறுப்புறுமாறு செய்து, நிலச் சொந்தக்காரர்களிடையே அச்சத்தை உண்டாக்கியது. மேலும், இத் திட்டங்கள் நிலமற்றோருக்கே பொருந்துவதாக இருந்தது. அவை மனவெழுச்சிகளுக்குக் கவர்ச்சியூட்டுவனவாகவும், சிந்தனையைத் தடைசெய்வதாகவும் இருந்தது. காட்டாக ஒருபுறம் நிலமற்றவர்களுக்கு நிலம் வேண்டுமென்ற விருப்பமும், நிலச் சொந்தக்காரர்களிடம் வெறுப்பும் இருக்கும். அதனைப் போலவே அவருக்கு எது நல்லது? எது நியாயமானது? என்ற அடிப்படையான எண்ணமும் இருக்கும். கொள்கைபரப்பல் நுண்முறைகள் சினம், வெறுப்பு ஆகிய மனவெழுச்சிகளை உண்டாக்குவதாகவும், தூண்டுவதாகவும் சரியானது, அறமானது என்பவற்றைத் தடை செய்வதாகவும் உள்ளது. மாறாக, குழு முழுமைக்கும் உலகம் முழுவதற்கும் நலம் விளைவிக்கும் சர்வோதயக்

கொள்கை போன்ற கொள்கைபரப்பல்கள் மனவெழுச்சித் தேவை களுக்கும், சமூகப் பொதுமாதிரியைத் தூண்டுவதாகவும் இருந்து, ஒரு பகுதி ஆளுமைக்குமட்டும் பொருந்தாமல் ஆளுமை அமைப்பு முழுமைக்குமே பொருந்தும். இங்குதான் சுதந்திரம் பெறு முன்னும் பெற்ற பின்னும் காங்கிரஸ் கட்சித் தொண்டர்களி டையே மிகப் பெரிய வேறுபாட்டைக் காண்கின்ருேம். காங்கிரஸ் கட்சித் தொண்டர்கள் நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன் நாட் டின் செல்வச் செழிப்பிற்கு வழி காணப் பாடுபட்டார்கள். ஆனால், நாடு சுதந்திரம் பெற்றபின் அதே காங்கிரஸ் கட்சித் தொண்டர்கள் காங்கிரஸ் கட்சியின் நலனுக்காக ஏன்? இன்னும் இழிவாகக் கட்சி யின் உள்ளேயே அவருடைய பிரிவினருக்காகப் பாடுபடுகின்றனர். எனவேதான் நாட்டில் காங்கிரஸ் அல்லாத மக்கள் காங்கிரஸ் கட்சியைப்பற்றி ஒரு நடுநிலை மனப்பான்மையுடன் இருக்கின் ருர்கள். சில வேளைகளில் காங்கிரஸ் கட்சியை வெறும் அரசியல் கட்சி என்றும், சில வேளைகளில் சுதந்திரத்திற்குப் போராடிய தொரு கட்சி என்றும் மக்கள் கருதுகின்ருர்கள்.

கொள்கைபரப்பல் மத நோக்கத்திற்காகவும் பயன்படுத்தப்படு கின்றது. எடுத்துக்காட்டாக, முஸ்லீம் லீக், இந்து மகாசபை முத லிய பேரவைகள் முறையே 'இஸ்லாம் ஆபத்தில் உள்ளது' அல்லது 'இந்து மதம் ஆபத்தில் உள்ளது' என்ற கூப்பாடுகளை எழுப்பி மக்களின் நம்பிக்கை, மனப்பான்மை, நடத்தை முதலியவற்றைத் தூண்டிப் பொதுமக்கள் தொடர்பால் அவர்களைப் பயமுறுத்தித் தாம் அன்புடனும், மதிப்புடனும் மேற்கொள்ளும் மதம் தாக்கு தலால் ஆபத்தில் உள்ளதென்றும், மேலும், அம் மதம் பிற குழு வினர் திட்டத்தால் ஒழிக்கப்படலாம் என்ற எண்ணத்தையும் எழுப்பலாம். ஆகவே, கொள்கைபரப்பல் நுண்முறைகள் மக்களின் தேவைகளையும், வெறுப்புகளையும், பொருமைகளையும் அல்லது அவர்களின் குழு நலத்திலுள்ள முழு விருப்பையும் ஒரு குறிப்பிட்ட செயலுக்கு உணர்ச்சியற்ற நிலையிலிருந்து திடமான விருப்பத்தை உண்டாக்கப் பயன்படுத்தப்படுகின்றது.

## கொள்கைபரப்பலைப்பற்றிய பரிசோதனை ஆய்வுகள் (Experimental studies regarding propaganda)

கொள்கைபரப்பலைப் பாதிக்கும் காரணிகளை ஆராயப் பல பரிசோதனைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், கொள்கைபரப்ப லினல் உண்டாகும் விளைவுகளை ஆராயவும் பரிசோதனைகள் செய்யப்பட்டுள்ளன. இத் துறையில் நடந்தேறியுள்ள சில ஆய்வு

களைச் சுருக்கமாக இங்குக் காண்போம். பெர்ல் துறைமுகம் (Pearl Harbour) ஜப்பானியர்களால் 1941-ல் தாக்கப்பட்டபோது வியக்கத்தக்க வகையில் கல்லூரி மாணவர்களின் மனப்பான்மை நடுநிலையிலிருந்து போரில் பங்கு கொள்ளும் அளவிற்கு மாறுபட்டது என்று ஸ்டேக்னர் (Stagnor) (12) கண்டறிந்தார். 1939ஆம் ஆண்டில் இரண்டாம் உலகப்போர் தொடங்கியபோது அமெரிக்கர்கள் நடுநிலைமைக்கு ஆதரவளித்தனர். அவர்கள் இங்கிலாந்துடனும் பிரான்சுடனும் கூட்டுச் சேர விரும்பவில்லை. ஆனல், அவர்களின் சொந்தக் கடற்படை பெர்ல் துறைமுகத்தில் தாக்கப்பட்டபோது அமெரிக்க உரிமைக்கு ஊறு ஏற்பட்டமையாலும், கொள்கைபரப்பலாலும் மனப்பான்மையில் மாறுதல் ஏற்பட்டது. நடுநிலைமையிலிருந்து மாறுபட்டுப் போரில் ஈடுபடும் விருப்பம் அவர்களுக்கு உண்டாயிற்று. எதிரி நாடுகளைப்பற்றிய அமெரிக்க மாணவர்களின் மனப்பான்மை பெருமாற்றத்திற்கு உட்பட்டதை ஸ்டேக்னர் (13) கண்டார். அவர்கள் மேலும் மேலும் ஜெர்மானியர்களுக்கும் இத்தாலியர்களுக்கும் ஜப்பானியர்களுக்கும் எதிரான மனப்பான்மையுடையவர்களாக இருந்தனர் என்று கூறுகிறர். இவ்வாருக, இந் நாடுகளைப்பற்றிய அமெரிக்க மாணவர்களின் மனப்பான்மை போர்ச் செய்தி, கொள்கை பரப்பல் இவற்ருல் மிகவும் பாதிக்கப்பட்டது.

அவ்லண்டும் (Hovland), விஸ்சும் (Weiss) (14) பல ஆய்வுகளை மேற்கொண்டு செய்தித் தொடர்பின் மூலத்தை மாற்றி மக்களின் மனப்பான்மையைச் செய்திகளுக்கு எதிராக மாற்றலாம் என்று கண்டுள்ளார்கள். அவர்கள் ஒத்திருக்கும் இரு செய்திகளை அவற்றின் பொருளின் காரணமாக அல்லாமல் அவற்றின் மூலத்தின் காரணமாக வேறுபட்ட எதிர்வினைகளை உண்டாக்கியதைக் காட்டினர். ஆகவே, கொள்கைபரப்பலுக்கு நமது நடத்தையைப் பாதிக்கும் இரண்டு உள்ளார்ந்த ஒத்த காரணிகள் உள்ளன. அவை (அ) செய்தியின் பொருள் மக்களின் தேவைகளுக்குப் பொருந்துவதாக அல்லது மக்களின் தேவைகளுக்குப் பொருந்தாமலும் இருக்கலாம். அது மக்களின் தேவைகளுக்கு ஏற்ப இருப்பின் கொள்கைபரப்பல் வெற்றிபெறும், இல்லையேல் தோல்வியுறும். (ஆ) பொருளுக்கும் மேலாகச் செய்தியின் மூலமும் ஒரு காரணமாக இருக்கின்றது. பெரு மதிப்பிற்குரிய ஒருவரிடமிருந்து செய்தி வருமாயின், அச் செய்தியின் பொருள் ஏற்றுக்கொள்ளப்படும். இல்லையேல் அது தள்ளப்படும். வானொலியில் ஒலிபரப்பப்படும் செய்திகளுக்கும், செய்தித்தாள்களில் பதிப்பிக்கும் செய்திகளுக்கும், புகழ்ச்சிக்குரியவர்கள் அனுப்பிய செய்திகளுக்கும் நம் மனப்பான்மை ஒருவிதமாக இருக்க, நாம்

மதிக்கத்தகாத நபரிடமிருந்து வரும் (apta) வம்புச் செய்திகளுக்கு நம் மனப்பான்மை வேறுவிதமாகக் காணப்படுகிறது.

பல்லாண்டுகளுக்கு முன் அனிசும், மேயரும் (15) பதிய வைத்த பொருள்களின் (planted content) மூலம் நம்பிக்கை களும், மனப்பான்மைகளும் எவ்வாறு பாதிக்கப்படலாம் என அறிய ஒரு சோதனையை நடத்தினர். மூன்று குழு மாணவர்கள் இச் சோதனைக்கு ஒத்துழைத்தனர். ஒரு குழுவினர் பல்கலைக்கழக செய்தித்தாளில் ஆஸ்திரேலிய அரசு அலுவலர் அமெரிக்காவிற்கு வந்து செல்ல இருந்ததைப்பற்றி மிகவும் கவனமாக எழுதப்பட்ட சாதகமான தலைப்புச் செய்திகளைப் படித்தனர். இரண்டாம் குழு மாணவர்கள் அதே வேளையில் ஆஸ்திரேலிய அரசு அலுவல ருக்குப் பாதகமான முறையில் எழுதப்பட்ட தலைப்புச் செய்திகளைப் படித்தனர். மூன்றும் குழுவினர் இத்தகைய செய்திகளற்ற செய்தித்தாள்களைத் தினமும் படித்தனர். சாதகமான தலையங்கங் களைப் படித்தவர் சாதகமான ஒருபுறச்சாய்வைப் பெற, பாதக மான தலையங்கச் செய்திகளைப் படித்தவர் பாதகமான ஒருபுறச் சாய்வுடன் காணப்பட்டனர். இவ்விரண்டு குழுக்களும் கட்டுப் படுத்தப்பட்ட குழுவிலிருந்து குறிப்பிடத்தக்க அளவில் மாறுபட்டனர். ஆகவே, ஒருவர் ஒரு தனியனைப்பற்றியோ நிகழ்ச்சிகளைப்பற்றியோ ஒரு புறச்சாய்வான செய்தியைப் படித்தால் அவர் அதனை ஏற்பர். இதுவே வலியுறுத்திச் சொல் வதன் பயன் ஆகும். எவ்வித மாறுபாடும் இல்லாத செய்தியைப் படித்தால் அல்லது கேட்டால் எது திரும்பத் திரும்பக் கூறப்படு கின்றதோ அதனை ஏற்கும் மனநிலை ஏற்பட்டுவிடும்.

நம்பகமான ஒருவரிடமிருந்து ஒருபுறச்சாய்வான செய்தியைப் பெறுவாரானல் அதனை ஏற்கும் மனநிலை அதனைச் சரியானது என்று கொள்ளுவதாக இருக்குமேயல்லாமல் ஒருபுறச்சாய்வுடையது என்று எண்ணுவதில்லை என்னும் பொதுவான மேற்கோளை இச் செய்தி உறுதி செய்கின்றது. இதுவே சர்வாதிகார அரசுகள் தம் கொள்கைபரப்பலில் மேற்கொள்ளும் பொதுவான நெறியாகும். சான்ருக, நாஜி ஜெர்மனியில் (16) பொதுமக்கள் தொடர்பு முறைகளான வானொலியிலும், பிறவற்றிலும்போட்டிக் கொள்கை பரப்பல் நீக்கப்பட்டது. ஆகவே, ஜெர்மானியர்கள் ஒரு கூற் றையே கேட்டனர். இரண்டாவதாக, செய்தியை வெளியிடும் அதாவது அரசைப் புகழக்கூடியதாக மதித்தனர். ஜெர்மானிய அரசு நேச நாடுகளினுல் தோல்விக்கு மேல் தோல்வி கண்ட மையால் தனது புகழ்ச்சிக்குரிய நிலையை நிலைநிறுத்த இயலாது என்று எண்ணினுர்கள். இஃது அரசுக்கு எதிராக ஓர் எதிர் வினையை மக்களிடையே உண்டாக்கியது.

ஒரே சமயத்தில் ஒரு செய்தியைப் பல கோணங்களில் ஒருவனுக்கு அளிப்பதனுல் ஏற்படும் விளைவுகளை அறிய பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. நோயர் (Knower) (17) மது விலக்கின் நன்மை தீமைகளைப்பற்றிக் கூறினுர். மதுவிலக்கின் சாதகமான நோக்கை இயல்பாகவே பெற்றவர்கள் அதே கருத்தையே விவாதத்திற்குப் பின்னும் கொண்டிருப்பதைக் கண்டார். அதேபோல மதுவிலக்கிற்கு எதிரானவர்கள் பாதகமான மனப்பான்மைகளைத் தொடர்ந்து மேற்கொண்டனர். ஆகவே, செய்தியின் இரண்டு தன்மைகளும் கொடுக்கப்பட்டால் எதிர்ப்பு எண்ணங்கள் வலிவு பெற்றன. வேறு விதமாகக் கூறினுல், தனியன்களிடையே நடைபெறும் விவாதங்களால் அவர்கள் கொண்டுள்ள கொள்கை பாதிக்கப்படுவதில்லை. ஒரு பிரச்சினையில் அக்கறையுள்ளவரும், அரசும் அடிக்கடி செய்தியின் ஒரு தன்மையைமட்டுமே கொடுத்து வருமாஞல் அதற்குச் சாதகமான நோக்கினரும், பாதகமான நோக்கினரும் ஒரே நோக்கை ஏன் பெற்றிருக்கின்ருர்கள் என்பது நமக்கு இப்போது விளங்குகிறது. செய்திக்குப் பாதகமான நோக்கம் கொண்டவர்களும், தம் நோக்கை மாற்ற முயல்வதற்குக் காரணம் இப்பொழுது அவர்களுடைய பாதகமான மனப்பான்மையை மீண்டும் உறுதிப்படுத்த ஏதும் இல்லை.

கொள்கைபரப்பல் குழுப் பொது மாதிரிக்கு எதிராகச் செல்லுமாஞல் அதன் விளைவை அறியப் பரிசோதனைகள் செய்யப் பட்டுள்ளன. கெல்லியும், வோல்கார்ட்டும் (Kelley and Volkart) (18) மேலதிகாரியிடமிருந்து (authority) அனுமதி பெற்றுச் சாரணச் சிறுவர்கள் இடையே ஒரு சோதனையைச் செய்தனர். அவர்கள் ஒரு கொள்கையைப் பரப்பினுர்கள், அக் கொள்கை பரப்பலானது வழிவழிவரும் சாரணர்களின் கைத்தொழில், முகாம் செல்லல் முதலியவற்றின் முக்கியத்துவத்தைக் குறைத்து மாருகச் சாரணர்கள் வாழும் நகரிலேயே தம் செயல்களை மேற்கொள்ளுமாறு வற்புறுத்தியது. இச் செய்தியால் சாரண இயக்கத்தில் மிகுந்த மதிப்பைக் கொண்டவர்கள் குறைந்த அளவிலேயே பாதிக்கப்பட்டார்கள் என்று கண்டுபிடிக்கப்பட்டது. மேலும், அவர்கள் இம் மாதிரியான செயல்களைப் பொறுமையுடன் கேட்டதற்குக் காரணம் சாரண அதிகாரிகள் அங்கு இருந்தமையாலேயே என அறியப்பட்டது. ஆகவே, குழுப் பொது மாதிரிக்கு எதிராகக் கொள்கைபரப்பல் செல்லுமாஞல் அது ஏற்கப்படாது (19). மேலும் செய்தியின் சாரம் குழுப் பொதுமாதிரிக்கு எதிராக இருக்குமாஞல் அச் செய்தி 'ஒரு கொள்கைப்பரப்புவது' அல்லது 'ஒருதலைச் சார்புடையது' என்று நோக்கப்படும். கொள்கைபரப்பலின் மூலம் மதமாற்றத்திற்கு ஏற்படும் எதிர்ப்பானது இக் காரணத்தி

ஞலேயே ஆகும் என்பதை ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். கொள்கைபரப்பலின் அடிப்படையில் தனியன் பெரும்பாலும் குழுப் பொது மாதிரிகளை விட்டுவிடுவதில்லை. கொள்கைபரப்பல் வெற்றி பெற வேண்டுமாஞல் அது குழுப் பொது மாதிரியால் எதிர்க்கப்படாததாக இருக்க வேண்டும் அல்லது அது குழுப் பொது மாதிரியை வலியுறுத்துவதாக இருக்க வேண்டும் என்பதை இது காட்டுகின்றது.

## கொள்கைபரப்பலினின்று பாதுகாப்பு
## (Propaganda prophylaxis)

நாம் இந்த அத்தியாயத்தைக் 'கொள்கைபரப்பலின் ஆற்றலில்' இருந்து மக்களை எவ்வாறு காப்பது என்னும் நடைமுறைச் சமூகச் சிக்கலை விவாதித்து முடிப்போம். கல்வியின் குறிக்கோள் தனியன்களைத் தாங்களாகவே முடிவுகளை அடையும்படி செய்வ தாகுமேயன்றி மற்றவர்கள் என்ன சொல்கிருர்கள் என்பனவற்ருல் வசப்படுத்தப்படும் நிலைக்குச் செல்ல விடுவதன்று. ஒரு சூழ்நிலையை மேற்கொண்டு, ஒரு சூழ்நிலையைப் பாரபட்சமின்றிப் பகுத்து ஆராய்ந்து முடிவுக்கு வருவோரையும், தனித்த மதிப்பீடுகள் செய்வோரையுமே சமுதாயம் மதிக்கும். செய்தித்தாள் ஆசிரியர் நாட்டின், அதனுடன் பன்ஞட்டு, சமுதாய, அரசியல், பொருளா தாரச் சிக்கல்களின் இரு தன்மையையும் செய்தித்தாள்களில் கொடுப்பதுடன், மேலும் அவர்கள் பாரபட்சமற்ற வல்லுநர்கள் மூலம் இப் பிரச்சினைகளைப் பகுத்தாய்ந்து, அவற்றைப் பிரசுரித்து அப் பிரச்சினையின் தன்மையை அறிந்து மக்கள் ஒரு முடிவுக்கு வரச் செய்கின்றனர். மாருக, மஞ்சள் பத்திரிகைகள் என்று சொல்லப்படும் செய்தித்தாள்கள் செய்தியின் ஒரு பகுதியையே கொடுக்க முயலும். இக்காரணத்திஞல்தான் ஜனநாயக நாடுகளில் அரசு பேச்சுரிமையும், பத்திரிகை சுதந்திரமும் அளித்து அதன் மூலம் பல கருத்துகளும், பல கோட்பாடுகளும் கொண்ட மக்கள் தமது கருத்துகளைத் தடையின்றி வெளியிட்டு மக்கள் தம் சொந்தத் தீர்ப்புகளின் மூலம் அதனை ஏற்கவோ மறுக்கவோ விட்டுவிடு கின்றது. மாருக, நாம் முன்பு கண்டதுபோல சர்வாதிகார நாடுகளில் பேச்சுரிமையும், பத்திரிகைச் சுதந்திரமும் இல்லா மையால் ஆளும் கட்சியின் கருத்துகளே வெளியிடப்பட்டு மக்கள் தவருன வழியில் செலுத்தப்படுகிருர்கள்.

கொள்கைபரப்பலை எவ்வாறு நோக்குவது என்று மக்களுக்குக் கற்பித்தால் அவர்கள் கொள்கைபரப்பலின் விளைவுகளுக்கு

உட்படாமல் இருப்பர் என்று நம்பப்பட்டது. ஆனால், இது சரியானதன்று. இந்த மேற்கோள் அடிப்படைக் காரணியான ஊக்கியை முக்கியமானதாகக் கருதவில்லை.

குழுவில் பெரும்பான்மையினரின் சில பொதுத் தேவைகள் இருக்கும் வரைக்கும் கொள்கைபரப்பல் பயன் விளைவிக்கக் கூடியதாக இருக்காது. நாம் மேற்கண்டதுபோல், கொள்கை பரப்பல் தேவைக்குப் பொருந்துவதாக இருக்குமானால் அப் பிரச்சினையின் முடிவை நிறுத்தி, உண்மையைக் காண இயலுவதில்லை. மக்களின் பொதுவான போக்கு, அவர்கள் எவ்வளவு கற்றவர்களானாலும், அவர்களின் தேவைகளுடன் தொடர்புகொண்ட சிலவற்றைத்தான் ஏற்றுக்கொள்வர். சான்றாக, சுதந்திரம் அடைவதற்கு முந்திய நாள்களில் அரசு மேலாண்மையினர் எவ்வாறு நான்கு திக்கிலும் உள்ள மக்கள் ஒரு செய்திக்கு ஒரே மாதிரியான எதிர்வினை செய்கிறார்கள் என்று அடிக்கடி வியந்தனர். அவர்கள் இதற்கெல்லாம் காரணம் கொள்கைபரப்பல் நுண்முறையே என்று எண்ணிச் செய்தித்தாள்களையும் பிற மக்கள் தொடர்பு முறைகளையும் பறிமுதல் செய்தனர். இச் செயல் குழுவின் ஒருமைப்பாட்டை மிகவும் உறுதிப்படுத்தியதைக் கண்டு ஏமாற்றமே அடைந்தனர். இதே போன்று, தலைவர்கள் சிறையிலிடப்பட்டபோது இயக்கம் தளர்ச்சியடையாமல் வலுப்பெற்றதைக் கண்டனர். நாட்டில் எல்லாப் பகுதிகளிலும் உள்ள மக்கள், நகரத்தவரும், கிராமத்தவரும் விழிப்புற்றுச் சுதந்திரத்தைத் திடமாக விரும்பியதனாலேயே இவையெல்லாம் நிகழ்ந்தன. இந்த வன்மையான தேவையே மக்களை அரசின் நடத்தைகளில் மிகவும் உணர்ச்சியுள்ளவர்களாக மாற்றி நாடு முழுவதும் ஒரே மாதிரியான நடத்தையில் ஈடுபடவும் செய்தது.

அதன் பயனாக, கொள்கைபரப்பலின் விளைவுகளைத் தடுக்க மக்களின் தேவையை அறிந்துகொள்வது அடிப்படையானதாகும். இந்த மக்களின் தேவைகளுக்கு நிலையான திருப்தியை அளிக்க முயலவேண்டும். இதுவே ரஷ்யா ஒரு புறமும், அமெரிக்கா மறுபுறமும் கொண்டுள்ள மிக முக்கியமான பிரச்சினைகளில் ஒன்றாகும். ஆசிய, ஆப்பிரிக்க மக்கள் குடியேறியோர் ஆட்சிக்கு மிகவும் எதிர்ப்புத் தெரிவிப்பவர்களாக உள்ளனர். ஆகவே, அவர்கள் குடியேறியோர் ஆட்சியை மிகவும் எதிர்ப்பவர்களாக இருந்தார்கள். மேற்கு ஐரோப்பிய நாடுகள் குடியேறியோர் ஆட்சி நாடுகளாக இருப்பதனாலும், ஐக்கிய அமெரிக்க நாடு ஆசியா, ஆப்பிரிக்க, தென் அமெரிக்கக் குடியேறியோர் ஆட்சி நாடுகளுடன் மிகவும் தொடர்புகொண்டிருப்பதனாலும், ஐக்கிய அமெரிக்க

நாட்டிற்கெதிரான கொள்கை பரப்பல் எளிதில் பயனளிக்கின்றது. இப்பொழுது ரஷ்யா குடியேறியோர் ஆட்சியைத் தாக்கிப் பேசுவதும், மக்களின் நோக்கைக் குடியேற்ற ஆட்சிக்கு எதிராக மாற்றும் பழையமுறை சரியானதன்று என்று அறிந்துகொண்டுமுள் ளது. ஆகவேதான், மேற்கத்திய நாடுகளும் ரஷ்யாவும் உலகில் பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகளுக்குப் பொருளா தார முன்னேற்றத்திற்கு உதவுவதில் மிகவும் கண்ணும் கருத்து மாய் இருக்கிறார்கள். மக்கள் மனமுறிவு அடையாமல் இருந்தாலும், அவர்கள் போதிய வேலை வாய்ப்பு, உடல் தேவை, பண்பாட்டுத் தேவை, அறிவுத் தேவை ஆகியவற்றிற்குத் திருப்தியளிப்பவர் களாயிருந்தால் தவறான கொள்கைபரப்பல் விளைவுகளினால் பாதிக் கப்படமாட்டார்கள். எனவே, கொள்கை பரப்பலை அல்லது அதன் கொடிய விளைவுகளைத் தடுக்க முயலும் எந்த ஒரு செய லாண்மைத்துறையும் ஒரு குழுவிலுள்ள தனியன்களின் தேவை களையும் மனமுறிவுகளையும் நன்கு அறிந்து, அவர்களின் மன முறிவுகளைப் போக்கத் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

தவறாகச் செலுத்தும் கொள்கை பரப்பலுக்கு எதிராகப் பயன்படுத்தும் நுண்முறைகளுள் ஒன்று, கொள்கை பரப்பாளரின் நுண்முறைகளை வெளிப்படுத்துவதேயாம். ஆனால், கொள்கை பரப்பாளர் எந்தத் தேவைக்குத் தம் வேண்டுகோளை விடுத்தாரோ அத் தேவை இருக்கும் வரை அவருடைய முறைகள் தவறு, தவறான வழியில் செலுத்தும் என்னும் எதிர்க் கொள்கை பரப்பல் பயனளிக்காது. இதற்கும் மேலாக, மக்கள் தம் தேவைகளை நன்கு அறிதற்கும், தேவைகளை ஆராய்வதற்கும், அவற்றைப் புரிந்துகொள்வதற்கும் ஓர் 'எதிர் கொள்கை பரப்பல்' இருக்க வேண்டும். அரசோ குழுவோ கொள்கை பரப்பாளரைத் தாக்கிப் பேசுவதைவிட, புதிய நம்பிக்கைகளையும் மனப்பான்மை களையும் தூண்டிவிடுவதற்கு முயற்சி செய்ய வேண்டும். ஆகவே, பயனுள்ள எதிர் கொள்கைபரப்பலானது மக்களைக் குழப்பமடையச் செய்வதாய் இருக்க வேண்டும். அதன் பின் அவர்கள் மற்றவர் எதைச் சொன்னார் என்று சந்தேகப்படத் தொடங்குவர். சந்தேகம் வரும்போது பகுத்தறிவுக்கு உட்பட்ட ஒரு முடிவு ஏற்பட வாய்ப்புள்ளது. எனவேதான் பல கட்சிகளும், பல மதக் குழுக்களும் உலகிலுள்ள பல நாடுகளும் தங்கள் செய்தித் துறை அலுவலகங்களை ஏற்படுத்தி ஒருவருக்கொருவர் ஈடுகட்ட முயலுகின்றார்கள். மக்களைக் கட்டுப்பாடில்லாத சங்கங்களை நிறுவ ஊக்கமளித்து, ஒவ்வொரு வாரமோ ஒவ்வொரு மாதமோ கூட்டி அன்றைய இன்றியமையாத பிரச்சினைகளை விவாதிப்பதன்

மூலம் தீங்கிழைக்கின்ற கொள்கை பரப்பலின் கொடுமையான விளைவுகளிலிருந்து அவர்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள முடியும். இம் மாதிரியான சிறு குழுக்களில் நாட்டு, பன்னாட்டுச் சமுதாயச் சிக்கல்களைப்பற்றிய விவாதம் நடைபெறுமானல், இவ் விவாதங்களில் பங்குகொள்ளும் தனியன்கள் இச் சிக்கலிலுள்ள பல கூறுகளை அறிவதன்மூலம், கொள்கை பரப்பலின் நுண்முறைகளுக்கு அவர்கள் வயப்படமாட்டார்கள்.

## மேற்கோள் நூற்பட்டியல்

1. FREEMAN, — *Social Psychology.*
Holt, 1936.

2. MYERS, J., — *Applied Psychology.*
1921, 5; 26-31.

3. KRECH and CRUTCHFIELD, — *Theory and Problems of Social Psychology.*
McGraw-Hill, 1948.

4. BRIDGES, — *Psychological Monograph.*
1914, 17; No. 1.

5. DUNKER, — *Journal of Abnormal and Social Psychology.*
1938, 33; 489—507.

6. ASCH, BLOCK & HERTZMAN, — *Journal of Social Psychology.*
1940, 12, 433—65.

7. COFFIN, — *Psychological Monograph.*
1941, 53; No. 4.

8. 'Report from Cuttack Rice Research Workers Conference', Feb. 19, 1959. — *Deccan Herald.*

9. HITLER, A., Reynal and Hitchcock, 1939. — *Mein Kampf.*

10. BELLAK, 1942, 37; 496-510. — *Journal of Abnormal and Social Psychology.*

11. NEWCOMB, Dryden, 1950. — *Social Psychology.*

12. STAGNOR, 1944, 20; 121-8. — *Journal of Social Psychology.*

13. STAGNOR, 1946, 24; 187—215. — *Journal of Social Psychology.*

14. HOVLAND and WEISS, 1951, 15; 633-50. — *Public Opinion Quarterly.*

15. ANNIS and MEIER, 1934, 5, 65-81. — *Journal of Social Psychology.*

16. KRIS and SPEIER, Oxford University Press, 1944. — *German Radio Propaganda.*

17. KNOWER, 1936, 30; 522-32. — *Journal of Abnormal and Social Psychology.*

18. KELLEY and VOLKART, 1952, 17; 453-65. — *American Sociological Review.*

19. HOVLAND et al, Yale University Press, 1953. — *Communication and Persuasion.*

# கலைச்சொற்கள்

## A

Ability — திறன்
Abstract — வெற்று நிலை
Achievement — அடைவு, சாதனை
Action Research — செயல் ஆராய்ச்சி
Adaptation — தக அமைதல்
Adaptability — தக அமைத்துக்கொள்ளல்
Adjust — தக அமைத்துக்கொள்ளுதல்
Aggression — ஆக்கிரமிப்புத்தன்மை
Agitation — கிளர்ச்சி
Ambiguous drawing — இருபொருள் மயக்க வரைபடம்
Analysis — பகுப்பாய்வு
Anchorage — ஆதார இடம்
Animal Psychology — விலங்கு உளவியல்
Antagonism — எதிர்ப்பு
Anthropology — மனிதவியல்
Anti semitic — இன எதிர்ப்பு
Anxiety — கவலை
Approach — அணுகுதல்
Aptitude — நாட்டம்
Aspiration — அவாவுநிலை
Assess — மதிப்பிடல்
Attachment — பற்றுதல்
Attitude — மனப்பான்மை
Attitude Test — மனப்பான்மை சோதனை
Attribute — இயல்புக்குணம்
Audience — அவை
Authoritarian Leadership — ஆதிக்கத் தலைமை
Auto kinetic — தானியங்கு நிலைமை

## B

| | | |
|---|---|---|
| Babble | — | மழலை |
| Basic Personality Structure | — | அடிப்படை ஆளுமை அமைப்பு |
| Belief | — | நம்பிக்கை |
| Bias | — | ஒருபுறச் சாய்வு |
| Bill | — | மசோதா |
| Biological Aspects | — | உயிரியல் அம்சங்கள் |
| ,, Heritage | — | உயிரியல்சார் மரபுரிமை |
| ,, Need | — | உயிரினத் தேவை |
| Biology | — | உயிரியல் |
| Bio-Psychic Need | — | உயிரியல் உளத்தேவை |
| Birth order | — | பிறப்பு வரிசை |

## C

| | | |
|---|---|---|
| Caste organization | — | இன நிறுவனம் |
| Caste Prejudice | — | சாதிச் சார்பெண்ணம் |
| Casual | — | தற்செயல் |
| Civic group | — | நாட்டுக் குழு |
| Clinical Method | — | மருத்துவமனைச் சோதனை முறை |
| Club | — | பொழுதுபோக்குக் குழு |
| Co-acting group | — | உடன் செயல்புரி குழு |
| Code | — | விதித்தொகுதி |
| Code of ethics | — | அறச் சட்டம் |
| Coercion | — | வலுக்கட்டாயம் |
| Colonialism | — | குடியேற்ற ஆட்சி |
| Co-operation | — | ஒத்துழைப்பு |
| Common fact | — | பொதுமை வழி |
| Communal need | — | கூடிவாழ் வேட்கை |
| Communication | — | கருத்துப் பரிவர்த்தனை |
| Compact | — | நெருக்கமான |
| Compromise | — | சமரசம் |
| Concept | — | பொதுமைக் கருத்து |
| Conditioning | — | ஆக்கநிலையிருத்தம் |
| Conduct | — | ஒழுக்கம் |
| Conflict | — | உளப் போராட்டம் |
| Congenital idiot | — | பிறவி முட்டாள் |

Conscious — நினைவு நிலை
Constancy — உறுதித்தன்மை அல்லது நிலைத்த தன்மை
Constant — நிலையான
Constitutional Factors — உடல்வாகுக் காரணிகள்
Contact — தொடுகை
Context — இடப்பேறு
Cosmos — அண்டம்
Crime and Delinquency — குற்றமும் நெறிபிறழ்தலும்
Culture — பண்பாடு
Cultural Anthropology — பண்பாட்டு மனிதவியல்
Cultural Pattern — பண்பாட்டுக் கோலம்
Custom — வழக்கம்

D

Debate — வாதம்
Definition — வரையறை
Delight — களிப்பு
Demand — கோரிக்கை
Democratic Leadership — மக்களாட்சித் தலைமை
Dependent Variables — சார்ந்த மாறிகள்
Depression — சோர்வு
Descendant — சந்ததியார்
Despair — மனக் கசப்பு
Detachment — பற்றற்ற நிலை
Deviation — விலக்கம்
Discussion — கலந்தாய்வு
Dissociation — தொடர்பறுத்தல்
Distraction — சிதைவு
Documentary — செய்திப்படம்
Domination — ஆதிக்கம்
Drive — உந்து

E

Efficacy — பயன் நிறைவு
Ego-ideal — இலட்சிய மனம்
Elicite — வெளிக் கொணர்தல்
Emotion — மனவெழுச்சி

